# உலகத் தமிழிலக்கிய வரலாறு

(கி.பி. 901 - கி.பி. 1300)

முனைவர் அ.அ. மணவாளன்






உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# உலகத் தமிழிலக்கிய வரலாறு (கி.பி.901-1300)

முனைவர் அ.அ. மணவாளன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113.

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Ulakat Tamililakkiya Varalāṟu (901-1300 A.D.) |
| Author | : | Dr. A.A. Manavalan |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus, Taramami Post<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 560 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Year of Publication | : | 2006 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | xxiv + 320 |
| No. of Copies | : | 2000 |
| Price | : | Rs. 100/- (Rupees One Hundred Only) |
| Printed by | : | United Bind Graphics<br>189 (101-D), Royapettah High Road<br>Chennai - 600 004 |
| Subject | : | History of Tamil Literature (901-1300 A.D.) |

மு. கருணாநிதி
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை–600 009

நாள் 11.9.2006

## வாழ்த்துரை

உலகத் தமிழ் இலக்கிய வரலாறு எனும் இத்திட்டம் 1999–2000ஆம் ஆண்டு தி.மு.கழக ஆட்சியில் உருவாக்கப்பட்டது. வெவ்வேறு காலப்பகுதிக்குரிய மூன்று நூல்கள் இதுவரை வெளிவந்துள்ளன. எனினும் இப்போது கி.பி.901 முதல் 1300 வரையிலான காலப் பகுதிக்குரிய இந்நூல் வெளிவருவதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

இந்நூல் சோழர் காலத் தமிழகத்தில் தோன்றிய தமிழ் இலக்கிய இலக்கணங்களையும், உரைகளையும், காப்பியங்களையும் ஈழத்தில் தோன்றிய நூல்களையும் பற்றிய விரிவான, ஆழமான ஆய்வுப் புதையலாக இப்போது வெளிவருவது பெருமகிழ்ச்சி அளிக்கிறது.

தேமதுரத் தமிழோசை – உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும் என்றார் பாரதியார். உலக நாடுகளில் வாழும் தமிழர்களின் படைப்புகளையும் ஏற்று உலகத் தமிழ் இலக்கிய வரலாறு வெளிவருகிறது. இது உலகத் தமிழர்களின் படைப்பாற்றலுக்குத் தமிழ்நாட்டில் உரியதோர் இடமுண்டு என்பதற்கான சான்றாகும்.

இந்நூலை அரிதின் முயன்று உருவாக்கியிருக்கிற பேராசிரியர் டாக்டர் அ.அ.மணவாளன் அவர்களுக்கும், இயக்குநருக்கும், வல்லுநர் குழுவினர்க்கும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கும் என் வாழ்த்துகள்.

அன்புடன்

(மு.கருணாநிதி)

முனைவர் ம. இராசேந்திரன்
இயக்குநர் (கூடுதல் பொறுப்பு)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

# திட்ட முன்னுரை

'உலகத் தமிழ் இலக்கிய வரலாறு' எனும் இத்திட்டம் தமிழ் வளர்ச்சித் துறையால் உருவாக்கப்பட்டு அப்போதைய ஆட்சி மொழி அமைச்சர் அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது. அவர், அப்போதைய தமிழக முதல்வரிடம் அஃதாவது ஆட்சிமொழி-தமிழ்ப்பண்பாட்டுத் துறையையும் தமது பணிப்பட்டியலில் ஈடுபாட்டோடு சேர்த்துக் கொண்டு தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறைக்குப் பெருமை தந்துள்ள இப்போதைய மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களிடம் எடுத்துக்கூறி, இசைவு பெற்றார். அதன் அடிப்படையில் 'இதுகாறும் வெளிவந்த தமிழ் இலக்கிய வரலாறு, தமிழ் இலக்கியங்களை மட்டுமே சார்ந்து நிற்கும் நிலையை மாற்றி, இலங்கை, சிங்கப்பூர், மலேசியா ஆகிய நாடுகளின். இலக்கிய வரலாறுகளையும் ஒருங்கிணைத்துப் புதிய தமிழ் இலக்கிய வரலாறு உருவாக்கப்படும்' என்று சட்டப்பேரவையில் 1999-2000ஆம் ஆண்டு தமிழ் வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத் துறையின் மானியக் கோரிக்கையின் போது, மாண்புமிகு அமைச்சர் அவர்களால் அறிவிக்கப்பட்டது.

வடவேங்கடம் தென்குமரி கடந்து இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் என்று தமிழ் இலக்கியத்தின் எல்லைகள் விரிவடைந்த காலத்திலும் ஒவ்வொரு நாட்டிற்குமாகத் தமிழ் இலக்கிய வரலாறு தனித்தனியே எழுதப்பட்டு வந்ததே தவிர ஒட்டுமொத்தத் தமிழ் இலக்கிய வரலாறு உருவாக்கப்படவே இல்லை. இன்றைய நிலையில் உலகின் பல்வேறு நாடுகளிலும் தமிழர்கள் பரந்து வாழ்ந்து வருகின்றனர். இச் சூழ்நிலையில் ஆங்காங்கு வாழும் தமிழர்களின் படைப்பிலக்கியங்களையும் ஆய்வுகளையும் உள்ளடக்கியதாக உலகத் தமிழ் இலக்கிய வரலாறு உருவாக்கப்பட வேண்டுமென்ற காலத்தின் தேவையைத் தமிழ்வளர்ச்சித்துறை நிறைவு செய்திட உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திடம் இப்பணி ஒப்படைக்கப்பட்டது.

உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் அச்சு மற்றும் இணைய ஊடக வழி வெளிவரும் தமிழ்ப்படைப்பிலக்கியங்களையும் ஆய்வுகளையும் கருத்தில் கொள்ளவும் தமிழ்மொழி இலக்கிய ஆய்வுகளுக்குப் பொறுப்பேற்கும் நிலைமை, தமிழ் நாட்டிற்கு இருப்பதை ஏற்றுக் காத்திடவும் உலகத் தமிழ் இலக்கிய வரலாற்று முறைகளை வகைப்படுத்தவும் செயற்படுத்தவும் இப்பணிகளை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் மனமுவந்து மேற்கொண்டது.

இத்திட்டத்தை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சிறப்பாகச் செயற்படுத்திடவும் ஒருங்கிணைக்கவும் மதிப்பீடு செய்யவும் குழுக்கள் அமைக்கப்பட்டன. செயற்பாடுகளைச் சீர்தூக்கி, ஊக்கம் தரவும் உற்றுழி உதவவும் **மாண்புமிகு முதலமைச்சர் அவர்களைத் தலைவராகவும்** மாண்புமிகு ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு இந்துசமயம் (ம) அறநிலையத்துறை அமைச்சர் அவர்களைத் துணைத் தலைவராகவும், தமிழ்நாடு, இலங்கை, சிங்கப்பூர், மலேசியாவைச் சேர்ந்த தமிழறிஞர்களையும், தமிழ் வளர்ச்சி, பண்பாடு மற்றும் இந்துசமய அறநிலையத் துறை அரசு செயலாளர் அவர்களையும் உறுப்பினர்களாகவும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநரை ஒருங்கிணைப்பாளராகவும் தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநரைச் செயல்-உறுப்பினராகவும் கொண்ட உயர்நிலைக்குழு ஒன்று அரசால் அமைக்கப்பட்டது. (தமிழ் வளர்ச்சி, பண்பாடு மற்றும் இந்துசமய அறநிலையத் துறை அரசாணை (2டி) எண்:50, நாள். 3.8.1999.)

இத்திட்டப்பணியைச் சிறப்புற நிறைவேற்ற பதிப்பாசிரியர் குழு அமைக்கப்பட்டது. உலகத் தமிழ் இலக்கிய வரலாறு அமைய வேண்டிய காலப்பிரிவுகள், அவற்றை உருவாக்கிடும் பதிப்பாசிரியர்கள், அவர்களின் உதவியாளர்கள்- இவை பற்றியெல்லாம் அவ்வப்போது கூடிய குழுக்கூட்டங்களில் முடிவுகள் மேற்கொள்ளப்பட்டன.

அவ்வகையில் கி.பி.901 முதல் 1300 வரையிலான மூன்றாவது காலப் பிரிவாகிய 'உலகத் தமிழ் இலக்கியவரலாறு' எனும் இத்தொகுதி **பேரா. முனைவர் அ.அ. மணவாளன்** அவர்களால் உருவாக்கப்பட்டுள்ளது. **பேரா. முனைவர் அ.அ. மணவாளன்** அவர்களின் உழைப்புக்கு ஈடுகொடுக்க உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் கடுமையாக உழைக்க வேண்டியிருந்ததை இத்தொகுதி உருவாகிற நிலையில் உணர்ந்தேன்.

எதிலும் பிசிறின்றிப் பணியாற்றிப் பழக்கப்பட்ட பேரா. முனைவர் அ.அ. மணவாளன் அவர்கள் இத்தொகுதி வழி மற்றவர்களையும் பழக்கப்படுத்த முயன்றிருக்கிறார். உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை.

ஏற்கனவே இருக்கிற இலக்கியவரலாற்று நூல்களை விட இந்நூல் எந்த வகையில் பயன்பாடு மிகுதியுடையது என்பதைப் பொருளடக்கமே வெளிப்படுத்தும்.

இத்தொகுதியில் அடங்கியுள்ள காப்பியங்கள், இலக்கண இலக்கிய உரைகள் எனும் தலைப்பில் உள்ள பகுதிகளில், தமிழிலக்கிய வரலாற்றின் ஆழமும் விரிவும் புதுமையும் வெளிப்படுவதைத் தமிழ் இலக்கிய இலக்கண ஆய்வில் ஆழங்கால் பதித்தவர்கள் உணரமுடியும்.

இந்நிறுவனத்தை 1970இல் உருவாக்கி, வளர்த்தெடுத்து, இப்போது நிறுவனத் தலைவராகவும் விளங்கும் **மாண்புமிகு தமிழக முதல்வர்** அவர்களுக்கு நிறுவனம் என்றென்றும் நன்றிகூறக் கடமைப்பட்டிருக்கிறது.

நிறுவனப் பணிகளுக்கு ஊக்கம் தந்து உதவும் தமிழ் வளர்ச்சி பண்பாடு-மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் **திரு. கற்பூர சுந்தரபாண்டியன் இ.ஆ.ப.** அவர்களுக்கும், இந்நூல் வெளிவர காலநேரம் பார்க்காமலும் வெறும் வேலையாக மட்டும் நினைக்காமலும் பலமுறை நிறுவனத்திற்கு நேரில் வந்தே பிழைகளைத் திருத்தி நூல் செம்மையாக வெளிவர உதவியிருக்கிற பேரா. முனைவர் அ.அ. மணவாளன் அவர்களுக்கும், இந்நூலுக்கு ஒளிஅச்சுக்கோப்புச் செய்த திருமதி பி.கௌசல்யாவிற்கும், அச்சகத்தார்க்கும் மற்றும் நிறுவனத்தின் கல்வி அலுவலர், நிருவகப் பணியாளர் ஆகிய அனைவருக்கும் நன்றி.

சென்னை
15-5-2006

**இயக்குநர் (பொ.)**

# பொது முன்னுரை

தமிழ்ப் பயில்வின் இன்றைய உலகளாவிய நிலை, தமிழின் வளர்ச்சியிலும் பரப்பலிலும் ஈடுபாடு கொண்டுள்ள அரசு நிறுவனங்கள் மீதும், தமிழியல் அறிஞர்கள் மீதும் ஒரு பெரும் பொறுப்பைச் சுமத்துகின்றது.

உலகளாவிய நிலையில் பல்வேறு நாடுகளில், தம் மொழித் தொடர்பும், பண்பாட்டு அடையாளமும் அறாது வாழும், தமிழ் ஆர்வலர்கள், தமிழ் வழிப் படிப்போர், நமது பண்பாட்டின் ஆணிவேரான இலக்கியப் பாரம்பரியத்தைத் தமது மொழியிலேயே வாசித்து அறிந்து கொள்வதற்கான வாய்ப்பை வழங்குவது தமிழ், தமிழியல் வளர்ச்சிக்கான நிறுவனங்களின் கடமையாகிறது.

இத்துறையில் தமிழில், இப்பொழுதுள்ள பெரும்பாலான ஆக்கங்கள், இடைநிலை மாணவத் தேவைகளையும், ஆய்வுத் தேவைகளையும் மனங்கொண்டு எழுதப்பட்டுள்ளனவாக அமைந்துள்ளன. தமிழிலக்கிய வளர்ச்சியினைத் தமிழர் உணர்வுமுறையினதும், சிந்தனைப் போராட்டங்களினதும் ஒட்டுமொத்தமான வெளிப்பாடாக அவை அமையவில்லை.

தமிழ்நாட்டிலும், தமிழ் பயிலும் நாடுகளிலும் தமிழர் வாழும் நாடுகளிலும் வாழும் தமிழ் நிலை ஆர்வலர்களின் இத்தேவையை நிறைவேற்றும் நோக்குடன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறையின் ஆதரவுடனும், வழிகாட்டலுடனும் இதற்கான செயல்திட்டம் ஒன்றை மேற்கொண்டது.

உலகில் தமிழிலக்கியம் தோன்றும் இடங்களிலெல்லாம் காணப்படும் இலக்கிய வளர்ச்சியை, ஒரு பதிகை வட்டத்துக்குள்ளே கொண்டு வந்து, தமிழ் மக்கள் சகலரினதும் ஒட்டு மொத்தமான இலக்கிய வெளிப்பாட்டின் தொகுதியாக அதனை ஒருங்கமைத்து வெளியிடுவது எனத் தீர்மானிக்கப் பட்டது.

இதன் காரணமாகத் தமிழகத்தில் மாத்திரமல்லாமல், இந்தியாவின் பிற மாநிலங்களிலிருந்தும் தமிழ்க் கல்வி பயிலும் நாடுகளான இலங்கை, மலேசியா, சிங்கப்பூரிலும் இன்று தமிழன்

புலம்பெயர்ந்து வாழும் நாடுகளிலும் தமிழிலக்கிய வெளிப்பாடு நடந்தேறியுள்ள முறைமையினை ஒழுங்குபடுத்தித் தொகுதிப் படுத்துவதற்கென முதலில் ஒரு பதிப்பாசிரியர் குழு நியமிக்கப்பெற்றது.

அக்குழு தமிழிலக்கிய வரலாற்றை எவ்வாறு ஒருங்கமைத்துக் கொள்வது என்பது பற்றியும், அதற்கான கால வகுப்புப் பற்றியும், ஒவ்வொரு காலப்பிரிவிலும் எவ்வெப்பெயர்கள் எவ்வாறு எடுத்து நோக்கப்படல் வேண்டுமென்பது பற்றியும் ஒவ்வொரு காலப்பிரிவுக்கும் யார் யார் பொறுப்பாகவிருத்தல் வேண்டும் என்பது பற்றியும், ஒவ்வொரு காலப் பிரிவுகளுள்ளும் வரும் தலைப்புக்கள் ஒவ்வொன்றையும் யார், யார் எழுதவேண்டும் என்பது பற்றியும் தீர்மானித்தது.

இதன்படிக்குக் கால வகுப்பும், பொறுப்பும் பின்வருமாறு ஒழுங்கமைக்கப்பட்டது.

காலப்பிரிவு பொறுப்பாசிரியர்

தொடக்கம் முதல் கி.பி.5ஆம் நூற்றாண்டு வரை
- முனைவர் தமிழண்ணல்

கி.பி.6 முதல் கி.பி.9ஆம் நூற்றாண்டு வரை
- முனைவர் சோ.ந. கந்தசாமி

கி.பி.10 முதல் கி.பி.13ஆம் நூற்றாண்டு வரை
- முனைவர் அ.அ. மணவாளன்

கி.பி.14 முதல் கி.பி.16ஆம் நூற்றாண்டு வரை
- முனைவர் இ. சுந்தரமூர்த்தி

கி.பி.17 முதல் கி.பி.1850 வரை
- முனைவர் இரா. இளவரசு

கி.பி.1851 முதல் கி.பி.2000 வரை
- முனைவர் ச. சிவகாமி

இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் இலக்கிய வளர்ச்சிகளைத் தொகுப்பித்து வழங்கும் பொறுப்பு பேராசிரியர் கா. சிவத்தம்பிக்கு ஒப்படைக்கப்பெற்றது.

திட்டப்பணிப் பொறுப்பாளராக முனைவர் ச. சிவகாமி நியமிக்கப் பெற்றார்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன மேனாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோவும் தமிழக அரசின், தமிழ்

வளர்ச்சித் துறை இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரனும் திட்ட ஒருங்கிணைப்பாளராக நியமிக்கப்பெற்றனர்.

பதிப்பாசிரியர்களாக

முனைவர் தமிழண்ணல்
முனைவர் கா. சிவத்தம்பி
முனைவர் சோ.ந. கந்தசாமி
முனைவர் இ. சுந்தரமூர்த்தி
முனைவர் அ.அ. மணவாளன்
முனைவர் இரா. இளவரசு

ஆகியோர் நியமிக்கப்பெற்றனர்.

27.2.2000 முதல் மூன்று நாட்கள் 29.2.2000 வரை இப்பணிக்கான ஒருங்குசேரல் ஒழுங்கு செய்யப்பெற்றது. தமிழகத்திலும், இலங்கை, சிங்கப்பூர், மலேசியாவைச் சார்ந்த பல்கலைக்கழகங்களிலிருந்தும் புலமையாளர்கள் வரவழைக்கப் பெற்று, எழுதுமுறை பற்றிய பல்வேறு விடயங்கள் நுண்ணிதாக ஆராயப்பெற்றன. பேராசிரியர் தமிழண்ணல் ஒருங்கு சேர்க்கையை வழி நடத்தினார். அதன் இறுதியில் எழுது பணியைத் தொடங்கி ஒருங்கிணைப்பதற்கான பொறுப்பு பொறுப்பாளர்களுக்கு வழங்கப் பெற்றது.

அந்நிலையில், எழுதப்பெறும் இலக்கிய வரலாறு ஒரு தொகுதிக்குள் அடங்குவதாயின் நன்றாக அமையும் என்ற கருத்து ஏற்கப்பட்டிருந்தது.

பின்னர், எழுத்துப்பணி தொடங்கியதும், ஒவ்வொரு காலப்பிரிவினதும் முழுமையான தமிழ் உயிர்ப்பினையும், அவ்வப்பிரிவுகள் பற்றிய ஒட்டுமொத்தமான பார்வையையும் கொண்டு வர வேண்டுமென்பது பதிப்பாசிரியர் குழுநிலையிலே ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதன் காரணமாக முன்னர்க் கருத்திற்கொண்டிருந்த அளவிறுக்கத்தைத் தளர்த்துவதென்றும் முடிவு செய்யப்பெற்றது.

இந்த அடிப்படையில் பணி தொடரப் பெற்று, இப்பொழுது இறுதிநிலையை அடைந்துள்ளது.

இந்நிலையில் ஒவ்வொரு காலப்பகுதியும் ஏறத்தாழ 250-300 பக்கங்களுக்கான தரவுகளையும் விளக்கங்களையும் கொண்டிருப்பது தெரிந்தது. தமிழகத்தின் ஆறு காலப் பிரிவுகளுக்கும், இலங்கை, மலேசியா, சிங்கப்பூரின் இலக்கிய

வரலாற்றுப் பதிவுக்கும், இந்நிலையில் 1500-1700 பக்கங்கள் தேவைப்படும் என்பது புலனாயிற்று.

எழுதப்படுபவை மேலோட்டமான சுருக்கங்களாக அமைந்துவிடக் கூடாது என்பதற்காகவும், வழங்கப்படும் வரலாறு தமிழ்ப் பாரம்பரியத்தின் ஓட்டத்தினை உணர்த்துவதாக அமையவேண்டும் என்பதற்காகவும், நூல் முழுமையையும், ஒரேயொரு தொகுதியாக வெளியிடுவதன் பொருத்தப்பாடு பற்றி மிகவும் விரிவாக நோக்கப்பெற்றது. ஏறத்தாழ 1500 பக்கங்கள் கொண்ட ஒரே தொகுதியாக நூலை அமைக்கும்பொழுது, அதன் அமைப்பும், தன்மையும் அதனைக் கலைக்களஞ்சியப் பாங்குக்குள்ளாக்கி, முதனிலை நோக்கமான அறிமுக உந்துதல் ஓரங்கட்டப்பட்டு விடுமோ எனும் அச்சமும் தெரிவிக்கப்பட்டது.

இப்பின்புலத்தில் உன்னிப்பான, சீர்தூக்கு நோக்கினிறுதியில், எழுதப் பெற்றுள்ள முழுவதையும் ஒரு பெரும் நூலாக வெளியிட்டு அந்நூலின் பெருக்கம் தமிழார்வலர்களைப் பின் தள்ள இடமளிக்காது, இவ்வெளியீட்டை ஒரு தொடராகக் கொண்டு ஆறு தொகுதிகளாக வழங்குவது, ஆக்கியோர் புலமைப் பணிக்கும், வாசகனுக்கும், நூல் வெளியீட்டின் பொருளியல் சிக்கனத்திற்கு உதவுவதாக இருக்குமெனக் கருதியும், இத்தொடரைப் பின்வரும் தொகுதிகளாக வெளியிடுவது இப்பொழுதுள்ள சூழலிற் பொருத்தமுடைத்தாக இருக்குமெனப் பதிப்பாசிரியர் குழு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்துக்குப் பரிந்துரை செய்தது.

தொகுதி 1 - தொடக்கம் முதல் கி.பி.500 வரை

தொகுதி 2 - கி.பி.501 முதல் கி.பி.900 வரை

தொகுதி 3 - கி.பி.901 முதல் கி.பி.1300 வரை

தொகுதி 4 - கி.பி.1301 முதல் கி.பி.1600 வரை

தொகுதி 5 - கி.பி.1601 முதல் கி.பி.1850 வரை

தொகுதி 6 - கி.பி.1851 முதல் கி.பி.2000 வரை

(அவ்வக் காலப்பகுதியுள் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் தமிழிலக்கியங்களும் அடங்கும்)

ஒவ்வொரு காலப்பிரிவுக்குமுரிய எழுத்துருவின் உள்ளடக்கத்துக்கும் அமைப்பிற்கும் அவ்வப்பொறுப்பாசிரியரே பொறுப்பாவர்.

**கா. சிவத்தம்பி**

# நூன்முகம்

பொது முன்னுரையிற் குறிப்பிட்டிருப்பதற்கேற்பக் கி.பி. 901 முதல் 1300 வரையிலான காலப்பிரிவிற்குரிய வரலாற்றைத் தயாரிக்கும் பணியை எனக்கு அளித்தமைக்காக உலகத் தமிழிலக்கிய வரலாற்றின் பதிப்பாசிரியர் குழுவிற்கும், திட்ட ஒருங்கிணைப் பாளர்களான உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் மேனாள் இயக்குநர் டாக்டர் இராமர் இளங்கோ, தமிழ் வளர்ச்சி இயக்குநர் டாக்டர் ம. இராசேந்திரன் ஆகியோர்க்கும் பெரிதும் நன்றியுடையேன்.

உலகத் தமிழிலக்கிய வரலாற்று வரிசையில் மூன்றாவதாக அமையும் இத் தொகுதி, "நூன் முகம்- சோழர்காலத் தமிழகம்" என்னும் ஆய்வு முன்னுரைப் பகுதி, 'காப்பியம்' முதலாக 'மறைந்துபோன தமிழ்நூல்கள்' ஈறாக அமைந்த பன்னிரு பொருண்மைத் தலைப்புகளை உடைய நடுப்பகுதி, நூலடைவு, இலங்கை இலக்கியம் பற்றிய பின்னிணைப்பு மற்றும் சிறப்புப் பெயரகராதி ஆகியவற்றைக் கொண்ட இறுதிப் பகுதி என மூன்று பகுதிகளை உடையதாக அமைக்கப் பெற்றுள்ளது.

இவற்றுள் முதலாவதான நூன்முகப் பகுதி சோழர்காலத் தமிழகத்தில் நிலவிய அரசியல் சூழலையும் சமுதாயச் சூழலையும், இவ்விரண்டின் இயைபிற்கேற்பத் தோன்றிய இலக்கியச் சூழலையும் விளக்கி நிற்கிறது.

இலக்கியச் சூழல் என்னும் இயல் இக் காலப்பிரிவில் தோன்றிய காப்பியம் முதலான இலக்கிய வகைமைகளை இதற்கு முந்தைய காலப்பிரிவோடும் (கி.பி. 501-900) பின்னைய காலப் பிரிவோடும் (கி.பி. 1301-1600) தொடர்புறுத்திப் பேசுகிறது. மேலும் குறிப்பிட்ட இலக்கிய வகைமை அல்லது நூல் தமிழிலக்கிய வரலாற்றிடைவில் பெற்று நிற்கும் இடத்தினையும் பிறமொழி நூல்களோடு பெற்றுள்ள தொடர்பினையும் விளக்குகிறது.

இதனையடுத்து வரும் நடுப்பகுதியில் இடம்பெறும் 'காப்பியம்' முதலான இயல்கள், அவ்வவ் இலக்கிய வகைமையில் தோன்றிய நூல்களின் அமைப்பு, பாடுபொருள், தனிச் சிறப்புகள், பதிப்புகள், மொழிபெயர்ப்புகள் போன்ற விவரங்களைக் கூறுகின்றன.

இறுதிப் பகுதியில் தரப்பெற்றுள்ள பின்னிணைப்புகளுள் முதலாவது இலங்கையில் காணப்பெறும் தமிழ்ச் சாசனங்களை மிக விரிவாகக் கூறுகிறது. இரண்டாவதாக உள்ள பின்னிணைப்பு

இக் காலப்பிரிவில் (கி.பி. 901-1300) தோன்றிய இலங்கைத் தமிழ்ச் சாசன இலக்கியம் பற்றிச் சுருக்கமான தகவல்களைத் தருகிறது.

தமிழிலக்கிய வரலாற்றின் இடைப்பகுதி அல்லது நடுப் பகுதி எனக் கருதுமாறு அமைந்துள்ள இந்தக் காலப்பிரிவில் (கி.பி. 901-1300) தோன்றிய இலக்கியங்களைப் பொறுத்த வரையில் சீவக சிந்தாமணி, கம்பராமாயணம், பெரிய புராணம் என்னும் காப்பியங்களும், கலிங்கத்துப் பரணி, மூவருலா என்னும் சிற்றிலக்கிய வகைகளும் தமிழிலக்கிய வரலாற்றில் அரிமா நோக்கோடு அமைந்த இலக்கியப் படைப்புகள் எனலாம்.

இலக்கணப் படைப்புகளைப் பொறுத்தவரையில், தொன்மைக் காலத்தே மூன்றாக இருந்த இலக்கண அமைப்பு பல்லவர் காலத்தே நான்காக வளர்ந்து, இந்தக் காலப் பிரிவில் ஐவகை இலக்கணம் என்னும் மரபாக மலர்ந்ததைக் காண்கிறோம். இடைக்கால நடைமுறையில் பெருவழக்குப் பெற்று இன்றும் தொடர்ந்து பயிலப்பட்டுவரும் இன்றியமையாத இலக்கண நூல்களாகிய நன்னூல் (எழுத்து, சொல்), அகப்பொருள் விளக்கம் (பொருள்), யாப்பருங்கலக் காரிகை (யாப்பு), தண்டியலங்காரம் (அணி) ஆகியன இந்தக் காலப்பிரிவில்தான் தோன்றின. தொன்மைக் காலத் தொல்காப்பியமும் பல்லவர்காலப் புறப்பொருள் வெண்பா மாலை, இறையனார் களவியல் ஆகியனவும் இன்றுவரை தொடர்ந்து வழக்கில் இருக்கும் அடிப்படையான இலக்கண நூல்கள் என்ற செய்தி இவ் வரலாற்றின் முதலிரு தொகுதிகளில் நன்கு தெளிவிக்கப்பெற்றுள்ளது.

மேற்சுட்டிய புகழ்பெற்ற இலக்கிய, இலக்கணப் படைப்புகள் சோழர் காலத்தே தோன்றினவாயினும் அவற்றிற்குரிய கால்கோள்கள் முன்னைய காலப் பகுதிகளில் இடப்பெற்றிருந்தன எனக் கூறலாம். ஆனால் மூல நூல்களுக்கு உரை இயற்றுதல் என்னும் இலக்கிய முயற்சி சோழர்காலப் பகுதியில் தோன்றிய ஒரு புதிய இலக்கியத் தொண்டாகக் காணப்படுகிறது. தமிழிலக்கிய வரலாற்றில் முதலில் தோன்றிய உரையாகக் கருதப்படும் இறையனார் களவியல் உரை பல்லவர்காலப் பகுதியின் இறுதியில் எழுத்து வடிவம் பெற்றதாகக் கருதப்படுகிறது. எனினும் தமிழிலக்கிய வரலாற்றில் தோன்றிய புகழ்பூத்த இலக்கிய, இலக்கண உரைகள் எல்லாம் இந்த மூன்றாம் காலப் பிரிவாகிய சோழர்காலத்தேதான் தோன்றியுள்ளன என்னும் உண்மை உளங்கொளத் தக்கது. இதற்குரிய ஒரே ஒரு விதிவிலக்கு அடுத்த காலப் பிரிவில் தேன்றிய (கி.பி.14ஆம் நூற்.) உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியரின் உரை மட்டும் தான்.

சங்க நூல்கள் பலவற்றிற்குத் தோன்றிய பண்டைய உரைகளும், சிலப்பதிகார அரும்பத உரையும், திருக்குறளுக்குத் தோன்றிய மணக்குடவர், பரிப்பெருமாள், காலிங்கர், பரிமேலழகர் ஆகியோரின் உரைகளும், யாப்பருங்கலம் மற்றும் காரிகையின் உரைகளும், வீரசோழிய உரையும், தொல்காப்பியத்திற்குத் தோன்றிய உரைகளாகிய இளம்பூரணமும், பேராசிரியமும், சேனா வரையமும், அடியார்க்கு நல்லாரின் சிலப்பதிகார உரையும், வியாக்கியானம் என்னும் மணிப்பிரவாள உரைமரபைத் தோற்றுவித்து ஆழ்வார்களின் அருளிச் செயல்களுக்கு அழியாத ஒளிவிளக்கேற்றிய ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, இருபத்து நாலாயிரப்படி, முப்பத்தாறாயிரப்படி என்னும் பேருரைகளும் இந்த நடுப்பகுதியில்தான் தோன்றின.

படைப்பாண்மையும், திறனாய்வாண்மையும், பன்மொழி அறிவும், பல்துறைப் புலமையும் ஒருங்கே வாய்ந்தோரால் இயற்றப்பெற்ற பேருரைகள் பலவும் தோன்றிய இக் காலப் பிரிவை (கி.பி. 901-1300) **உரையாசிரியர்கள் காலம்** எனக் கூறினும் மிகையாகாது எனத் தோன்றுகிறது.

இக் காலப் பிரிவில் தோன்றிய இலக்கியங்கள், இலக்கணங்கள், உரைகள், பிற துறை நூல்கள் போன்ற தமிழரின் இலக்கிய முயற்சிகளை இந்திய அளவில் நோக்குமிடத்து, சோழர் காலத்தே வளர்ந்து வரா நின்ற வடமொழி மற்றும் வடமொழி நூல்களின் செல்வாக்கைத் தமிழ்ப் படைப்புகள் தன்மயமாக்கிக் கொண்டு, தமிழ்மயப் படுத்தித் தலைநிமிர்ந்து நின்ற, இன்றைக்கும் நிற்கின்ற பாங்கினைக் காணலாம். இந்த இலக்கிய வரலாற்று வரிசையின் முதல் தொகுதியில் டாக்டர் தமிழண்ணல் அவர்கள் அழுத்தம் தந்து குறிப்பிடும் தற்காப்பு முயற்சி (ப.xiv) வெற்றிபெற்றுத் தமிழ்ப் பண்பாட்டையும் தமிழிலக்கிய இலக்கணச் சிறப்புகளையும் வெளிப்படுத்தி நிற்கும் செம்மாப்பை, மேற்சுட்டிய படைப்புகள் தனித்து நின்றும், மொழிபெயர்ந்தும் மெய்ப்பிக்கும் பாங்கினைக் கண்டு மகிழலாம்.

உலக அளவில் தமிழ் மொழியும் தமிழ்ப் படைப்புகளும் பரவி வளர்ந்துவரும் நிலையை உலகத் தமிழிலக்கிய வரலாறு என்னும் நோக்கில் பார்ப்பது போலவே, தமிழர்கள் தமிழ் தவிர பிற இந்திய மொழிகளிலும் (பாலி, பிராக்ருதம், சமஸ்கிருதம்) ஆங்கிலம், பிரஞ்சு முதலான உலக மொழிகளிலும் இலக்கியங்களும் இலக்கணங்களும் படைத்து (பாசன், தம்ம கீர்த்தி, தீபாங்கதேரர், தண்டி, இராமாநுசர், அப்பைய தீட்சிதர் போன்றோர்) அவற்றின் வளர்ச்சிக்கு உதவிய பாங்கினை, "உலக

இலக்கியத்திற்குத் தமிழரின் பங்களிப்பு" என்னும் நோக்கில் ஆராய்ந்தால், தமிழரின் முழு மொழி, இலக்கியப் பரிமாணங்களை உணர்ந்து மகிழலாம்.

இந்த வரலாற்றுக்குரிய தரவுகளைத் திரட்டும் முயற்சியில் சோழர்கால அரசியல் சூழல், சமுதாயச் சூழல் ஆகிய பிரிவுகளுக்கும் சிறுகாப்பியங்கள், சிற்றிலக்கியங்கள், தத்துவ நூல்கள், கல்வெட்டு இலக்கியம் ஆகிய இயல்களுக்கும் உரிய அடிப்படைத் தரவுகளைத் திரட்டி அவற்றிற்குரிய முன்வரைவுகளைத் தயாரித்து உதவிய தொல்லியல் அறிஞர் டாக்டர் மார்க்சிய காந்திக்கும், இந் நூலின் கையெழுத்துப் படிகளைத் தயாரித்தல், மெய்ப்புகளைத் திருத்தல் ஆகிய பணிகளைச் செய்து உதவிய எத்திராஜ் கல்லூரி, தமிழ் முதுநிலை விரிவுரையாளர் டாக்டர் த.வசந்தாள், எம்.ஓ.பி. வைணவக் கல்லூரி, தமிழ் விரிவுரையாளர் டாக்டர் ந.தேவி ஆகியோர்க்கும் என்னுடைய உளமார்ந்த நன்றி உரியது.

இத்திட்டம் தொடங்கிய காலந்தொட்டு, இத் தொகுதியைத் தயாரிப்பதற்கு வேண்டிய புற உதவிகளை வேண்டியபோது வேண்டியாங்கு மனமுவந்து செய்த இந் நிறுவனத்தின் மேனாள் இயக்குநர்கள் டாக்டர் இராமர் இளங்கோ, டாக்டர் சா. கிருட்டினமூர்த்தி ஆகியோர்க்கு மிக்க நன்றியுடையேன்.

இந்தத் தொகுதி அச்சாவதற்குள் இது கடந்து வந்த மேடு பள்ளங்கள் மிகப் பல. கி.பி. 2002இல் தொடங்கி இதுவரை ஏழு மெய்ப்புகளைக் கண்ட தொகுதி என்னும் பெருமை இதற்கு உண்டு. இந் நூல் அச்சேறுமா என்னும் ஐயமும் கவலையும் கவ்வியபோது, எதிர்பாராமல் நிகழ்ந்த மாற்றத்தினால் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனப் பொறுப்பைப் 'பொறுப்பாக' ஏற்றுக் கொண்ட தமிழ் வளர்ச்சி இயக்குநர் டாக்டர். ம.இராசேந்திரன் அவர்களிடம் முறையிட்டுக் கொண்டதன் பயனாக ஒருவாறு இப் பணி முழுமைபெற்று இந்த முன்னுரை எழுதுமளவிற்கு முன்னேறியுள்ளது. விரைவில் முற்றுப்பெற்று நூலாக வெளிவரும் என்று நம்புகிறேன். "பொறுப்பான" இயக்குநர் டாக்டர் ம.இராசேந்திரன் அவர்கட்கு என் உளம் கனிந்த நன்றி என்ஞான்றும் உரியது.

***அ. அ. மணவாளன்***

***சென்னை–113***
***24–04–2006***

# பொருளடக்கம்

| | | பக்கம் |
|---|---|---|
| | வாழ்த்துரை | |
| | திட்ட முன்னுரை | |
| | பொது முன்னுரை | |
| | நூன்முகம் | |
| | அரசியல் சூழல் | 1-20 |
| | சமுதாயச் சூழல் | 21-22 |
| | இலக்கியச் சூழல் | 23-68 |
| | இலங்கையில் தமிழ்க் கல்வெட்டுகள் | 69 |
| | இலங்கைத் தமிழ் இலக்கியம் | 70 |
| 1. | காப்பியங்கள் | 71-84 |
| | (10) சீவகசிந்தாமணி, சூளாமணி, கம்பராமாயணம் | |
| | (12) பெரியபுராணம் | |
| 2. | சிறுகாப்பியங்கள் | 85-95 |
| | (10) குண்டலகேசி, நீலகேசி, வளையாபதி | |
| | (13) நளவெண்பா, யசோதர காவியம், நம்பி திருவிளையாடல். | |
| 3. | சிற்றிலக்கியங்கள் | 96-153 |
| | (10) ஒன்பதாம் திருமுறை | |
| | திருமாளிகைத்தேவர் பதிகங்கள் | |
| | சேந்தனார் பதிகங்கள் | |
| | திருவாலி அமுதனார் பதிகங்கள் | |
| | கண்டராதித்தர் பதிகம் | |
| | வேணாட்டடிகள் பதிகம் | |

பதினோராந் திருமுறை

நக்கீரதேவநாயனார் பிரபந்தங்கள்

கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி
திருஎழுகூற்றிருக்கை
பெருந்தேவ பாணி
கோபப் பிரசாதம்
போற்றிக் கலிவெண்பா
திருஈங்கோய் மலை எழுபது
திருவலஞ்சுழி மும்மணிக்கோவை
கார் எட்டு
திருக்கண்ணப்ப தேவர் திருமறம்

கபிலதேவ நாயனார் பிரபந்தங்கள்

மூத்த நாயனார் திருஇரட்டை மணிமாலை
சிவபெருமான் திருஇரட்டை மணிமாலை
சிவபெருமான் திருவந்தாதி

பரணதேவ நாயனார் பிரபந்தம்

சிவபெருமான் திருவந்தாதி

கல்லாடதேவர் பிரபந்தம்

திருக்கண்ணப்ப தேவர் திருமறம்

பட்டினத்தடிகள் பிரபந்தங்கள்

திருவிடை மருதூர் மும்மணிக்கோவை
திருக்கழுமல மும்மணிக்கோவை
கோயில் நான்மணிமாலை
திருஏகம்பமுடையார் திருவந்தாதி
திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது

நாலாயிர திவ்வியப்பிரபந்தம்-தனியன்கள்

(10) உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி
குருகைக் காவலப்பன், ஈசுவ்ர முனி
திருக்கண்ணமங்கை ஆண்டான்

நூற்றெட்டுத் திருப்பதிக் கோவை

பெரும்பொருள் விளக்கம்

(11) கல்லாடம், திருவள்ளுவமாலை

காடநம்பி திருவிசைப்பா

புருடோத்தமநம்பி திருவிசைப்பா

சேதிராயர் திருவிசைப்பா

கருவூர்த் தேவர் திருவிசைப்பா

நம்பியாண்டார் நம்பி பிரபந்தங்கள்

திருநாரையூர் விநாயகர் திருஇரட்டை
மணிமாலை
கோயில் திருப்பண்ணியர் விருத்தம்
திருத்தொண்டர் திருவந்தாதி
ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி
ஆளுடைய பிள்ளையார்
திருமும்மணிக்கோவை
ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை
விருத்தம்
ஆளுடைய பிள்ளையார் திருஉலாமாலை
ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்
ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை
திருநாவுக்கரசுதேவர் திருஏகாதசமாலை.

நாலாயிர திவ்வியப்பிரபந்தம் - தனியன்கள்

திருக்கச்சிநம்பி, திருவரங்கப் பெருமாளரையர்,
திருமலை நம்பி, சொட்டை நம்பி,
இராமானுசர்

கொப்பத்துப் பரணி

கூடல் சங்கமத்துப் பரணி

(12) கலிங்கத்துப்பரணி

ஒட்டக்கூத்தர் பிரபந்தங்கள்

குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ்
கலிங்கப்பரணி, மூவருலா

தக்கயாகப் பரணி, உத்தரகாண்டம்
அரும்பைத் தொள்ளாயிரம்
நாலாயிரக்கோவை, எதிர் நூல்

அவ்வையாரின் நீதி நூல்கள்

ஆத்தி சூடி, கொன்றை வேந்தன்,
மூதுரை, நல்வழி

தில்லை உலா

திருப்புகலூர் அந்தாதி

வச்சத் தொள்ளாயிரம்

சரசுவதி அந்தாதி, சடகோபர் அந்தாதி,
ஏரெழுபது

கண்டன் அலங்காரம், கண்டன் கோவை

அம்பிகாபதிக் கோவை

அருங்கலச் செப்பு, தீபங்குடிப் பத்து

இராமானுச நூற்றந்தாதி

நாலாயிர திவ்வியப் பிரபந்தம்: தனியன்கள்

இராமானுசர் தாலாட்டு

ஞானசாரம், பிரமேய சாரம்

(13) அறநெறிச்சாரம்

குலோத்துங்க சோழன் கோவை

தஞ்சைவாணன் கோவை

களவியல் காரிகை

கோயில் அந்தாதி

திருநறையூர் அந்தாதி

தில்லை அந்தாதி

மழவை எழுபது

இரணியவதைப் பரணி

நாரைவிடுதூது

4 தத்துவ ( சாத்திர ) நூல்கள் 154-162

(12) சைவம்

திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார்

ஞானாமிர்தம்

(13) சிவஞான போதம், சிவஞான சித்தியார்

இருபா இருபஃது, உண்மை விளக்கம்
வைணவம்
பரமார்த்த தரிசனம் (பகவத்கீதை)
குருபரம்பரா பிரபாவம் ஆறாயிரப்படி

5 கல்வெட்டு இலக்கியங்கள் 163-172

(10) சிராமலை அந்தாதி
கல்வெட்டுப் பாடல்கள்
இராசராசன் மெய்க்கீர்த்தி
(11) இராசராச விசயம்
இராசராசேசுவர நாடகம்
வீரணுக்க விசயம்
வேதவனமுடையான் மீது பாடல்
குலோத்துங்க சோழன் சரிதை
இரண்டாம் இராசரார்சன் மெய்க்கீர்த்தி
(12) சிதம்பரம், திருவதிகைக் கோயில் கல்வெட்டுப் பாடல்கள்
கல்வெட்டு உரைநடை
(13) அருணிலை விசாகன் பாரதம்
சிந்து இலக்கியம்
போர்வஞ்சி
காங்கேயன் பிள்ளைத் தமிழ்
பல்வகைப் பாடல்கள்

6. இலக்கிய உரைகள் 173-222

(10) மணக்குடவர்-திருக்குறள் உரை

(11) சிலப்பதிகார அரும்பதவுரை

பரிப்பெருமாள்-திருக்குறள் உரை

(12) புறநானூற்றுப் பழையவுரை

அடியார்க்கு நல்லார்-சிலப்பதிகார உரை

திருவாய்மொழி ஆறாயிரப்படி வியாக்கியானம்

மைவண்ண நறுங்குறிஞ்சி வியாக்கியானம்

(13) ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு-பழையவுரைகள்

திருக்கோவையார்-பேராசிரியர் உரை

திருவாய்மொழி வியாக்கியானங்கள்

ஒன்பதினாயிரப்படி

இருபத்து நாலாயிரப்படி

ஈடு-முப்பத்தாறாயிரப்படி

திருவாய்மொழி வாசகமாலை

வார்த்தாமாலை

காலிங்கர்- திருக்குறள் உரை

பரிமேலழகர்- திருக்குறள் உரை

பரிமேலழகர்-பரிபாடல் உரை

பரிமேலழகர்-திருமுருகாற்றுப்படை உரை

7. இலக்கண நூல்கள் 223-246

(10) பன்னிரு பாட்டியல்

(11) யாப்பருங்கலம்

யாப்பருங்கலக் காரிகை

வீரசோழியம்

(12) தண்டியலங்காரம்

நேமிநாதம்

வச்சணந்தி மாலை

(13) நன்னூல்

அகப்பொருள் விளக்கம்

8. **இலக்கண உரைகள்** 247-266

(11) யாப்பருங்கல விருத்தியுரை
யாப்பருங்கலக் காரிகையுரை
தொல்காப்பியம்-இளம்பூரணவுரை
(எழுத்து, சொல், பொருள்)

(12) வீரசோழியம் - பெருந்தேவனார் உரை

(13) தொல்காப்பியம் (பொருள்) - பேராசிரியர் உரை
தொல்காப்பியம்-(சொல்) சேனாவரையர் உரை

9. **நிகண்டுகள்** 267-268

(10) பிங்கல நிகண்டு

10. **தழுவல், மொழியாக்கம், மொழிபெயர்ப்பு** 269-271

அ. பிறமொழிகளிலிருந்து தழுவலாகவும் மொழியாக்கமாகவும் தமிழுக்கு வந்தவை:

**இலக்கியம்**

சூளாமணி, குண்டலகேசி, நீலகேசி,
வளையாபதி, சீவகசிந்தாமணி,
கம்பராமாயணம், உத்தரகாண்டம்,
நளவெண்பா, யசோதர காவியம்,
நம்பி திருவிளையாடல்,
அருள்நிலைவிசாகன் பாரதம்.

**இலக்கணம்**

வீரசோழியம், தண்டியலங்காரம்

**பிறதுறை நூல்கள்**

கனாநூல், சித்தராரூடம்,
உள்ளமுடையான் சோதிடநூல்
பரமார்த்த தரிசனம்

ஆ. தமிழிலிருந்து பிறமொழிகளுக்குப் பெரும்பாலும் மொழிபெயர்ப்பாகச் சென்றவை

**இலக்கியம்**

நீலகேசி, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம்

பெரியபுராணம், ஒட்டக் கூத்தரின் கலிங்கப்பரணி,

அவ்வையார் நீதி நூல்கள், நளவெண்பா,

இராமானுச நூற்றந்தாதி

**இலக்கணம்**

வீரசோழியம், நன்னூல்

11. **பிறதுறை நூல்கள்** 272-276

(10) சோதிட நூல்கள்

சினேந்திரமாலை, திரையக்காணம்

(11) கனா நூல், ஓவிய நூல்

(12) --

(13) சித்தராரூடம், உள்ளமுடையான்சோதிட நூல்

12. **மறைந்துபோன தமிழ்நூல்கள்** 277-279

**நூலடைவு** 281-288

**பின்னிணைப்புகள்** 289-308

**சிறப்புப் பெயர் அகராதி** 309-319

# அரசியல் சூழல் (கி.பி. 901-1300)

## 10ஆம் நூற்றாண்டு

### அரசாண்ட மன்னர்கள்

சோழ மன்னன் ஆதித்தனின் 29ஆம் ஆட்சி ஆண்டில் தொடங்கி, முதலாம் இராசராசனின் 15ஆம் ஆட்சியாண்டு வரையான இக்கால (பத்தாம் நூற்றாண்டு) எல்லையில், இடையில் பராந்தகன், கண்டராதித்தன், அரிஞ்சயன், சுந்தரசோழன், ஆதித்த கரிகாலன், உத்தம சோழன் ஆகியோர் ஆட்சி புரிந்துள்ளனர். பாண்டி நாட்டில் இந்நூற்றாண்டு தொடங்குகையில் இரண்டாம் வரகுண பாண்டியனும், அவன் தம்பி பராந்தக வீர நாராயணனும் கி.பி. 911 வரை ஆட்சியில் இருந்தனர். இவர்களை அடுத்து மானாபரணனாகிய மாறவர்மன் இராசசிம்மன் கி.பி. 931 வரை ஆட்சி செய்தான். இவனை அடுத்துப் பெருமுயற்சிக்குப் பின்னர் கி.பி. 938இல் சோழரிடமிருந்து மீண்டும் ஆட்சியைக் கவர்ந்த, சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் கி.பி.959 வரை அரசாண்டான். எனினும் அவனுக்குப் பின்னர் இப் பாண்டிநாடு மீண்டும் சோழர் ஆட்சியிலேயே அடங்கியிருந்தது.

### அரசியல் பின்னணி

தஞ்சையைத் தன் தோள்வலியாலும், நிருபதுங்கனின் உதவியாலும் பெற எண்ணி விசயாலயன் திருப்புறம்பியப் போரில் பாண்டியனை வெற்றி கொண்டான். அவன் மகன் ஆதித்தன் தொண்டை நாடுவரை தன் ஆட்சியை விரிவுபடுத்தியிருந்த நிலையில்தான் சோழப் பேரரசு நிலைபெறத் தொடங்கியிருந்தது. இவனைத் தொடர்ந்து அரியணை ஏறிய முதல் பராந்தகனுடன் பாண்டிய மன்னர்களான இரண்டாம் வரகுணனும் அவன் தம்பியும் (பராந்தக வீரநாராயணனும்) நட்புடனே விளங்கினர். இருப்பினும் வீரநாராயணனின் மகன், மாறவர்மன் ராஜசிம்மன் சிங்கள மன்னனின் துணை கொண்டு பராந்தகனை எதிர்த்தான். எனவே பராந்தகன் அவனோடு போரிட்டுப் பாண்டிநாட்டைப் பிடித்துக் கொண்டான். எனினும் தொடர்ந்து நடந்த போரில்

வீரபாண்டியன் சோழனைக் கொன்று சோழன்தலை கொண்ட வீரபாண்டியன் எனவும், அதன் பின்னர்ப் பாண்டியனைக் கொன்ற ஆதித்த கரிகாலன் பாண்டியன் தலை கொண்ட கோப்பரகேசரி எனவும் தத்தம் வெற்றிகளைக் கூறிக் கொண்டனர். கி.பி. 959-க்குப் பின் பாண்டியர் யாரும் ஆட்சியில் இல்லை. சோழராட்சியே தெற்கிலும் நடைபெற்றது.

தெற்கில் இவ்வாறாக வடக்கில், இராஷ்டிரகூட மன்னன் மூன்றாம் கிருஷ்ணன் முதலில் வடதமிழ் எல்லையில் ஆண்ட கங்கமன்னன் பிருதிவிபதியை வென்று சோணாட்டையும் எதிர்த்தான். எல்லைக் காவலில் இருந்த பராந்தகனின் மகன் இராஜாதித்தனைக் கி.பி. 949-இல் கொன்று மூன்றாம் கிருஷ்ணன் தமிழகத்தில் புகுந்தான். அவனுடன் சமாதானம் செய்து நண்பனாக்கிக் கொண்ட முதல் பராந்தகனின் அரசியல் தந்திரம் தொடர்ந்து ஆட்சிக்கு வந்த இராசராசன் காலம் வரையில் தமிழகத்தின் வடபகுதியில் அமைதியான நிலையை ஏற்படுத்தியது. இந்நூற்றாண்டில் பெரிய போர்கள் எதுவும் இல்லாததால் அடுத்த நூற்றாண்டில் மிகப் பெரிய சோழ அரசு ஏற்படப் போடப்பெற்ற உறுதியான அடிப்படையாக இச்சூழல் அமைந்தது. இந்நூற்றாண்டின் முற்பாதி அதாவது 907 முதல் 954 வரை 47 ஆண்டுகள் முதற் பராந்தகனின் ஆட்சியில் தமிழகம் இருந்தது.

கன்னரதேவன் என்று தமிழ்க் கல்வெட்டுகள் குறிக்கும் மூன்றாம் கிருஷ்ணனும் பராந்தகனும் தமிழகத்தின் தொண்டை நாட்டுப் பகுதியை ஒருங்கே ஆட்சி செய்தனர். தொண்டை மண்டலம் முழுவதும் இவர்கள் அதிகாரம் தொடர்ந்தது. தமிழக வரலாற்றிலேயே இல்லாத ஒரு புதிய முறையாக, பராந்தகனுக்குப் பின் வந்த இந்நூற்றாண்டின் மன்னர்களான கண்டராதித்தன், அரிஞ்சயன், சுந்தரசோழன் மற்றும் இரண்டாம் ஆதித்தன் ஆன கரிகாலன் ஆகிய அனைவருடைய கல்வெட்டுகளும் கன்னரதேவனின் கல்வெட்டுகள் இருக்கும் ஊர்களில் எல்லாம் ஒரே காலத்தில் பொறிக்கப்பெற்றன. கி.பி. 959 வரை மூன்றாம் கிருஷ்ணன் இவ்வாறு தொண்டை மண்டலப் பகுதியில் ஆட்சி செலுத்தினான்.

### விளைவு

இவ்வாறு தமிழகம் முழுவதும் பெரிய எதிர்ப்புகள் எவையுமின்றி பராந்தகன் முதலாகச் சோழர்கள் ஆளத்

தொடங்கினர். பராந்தகனின் நீண்ட கால ஆட்சியில் ஆட்சிப் பரப்பும் விரிந்தது. ஆட்சி முறையும் நெறிப்படுத்தப்பட்டது. எனவே தமிழகம் அமைதியுடன் நிலவியது. எனவேதான் பராந்தகனின் ஆட்சிக் காலம் முதலாகப் பல்வேறு சிறப்புகளைத் தமிழகம் பெற்றது. கண்டராதித்தர் சிறந்த சிவநெறிச் செல்வராயிருந்து பல்வேறு திருப்பணிகளை மேற்கொண்டார். அவரது தேவியான மழநாட்டுச் சிற்றரசர் மகளார் செம்பியன் மாதேவியார் சிவன் கோயில்கள் பலவற்றை எடுப்பித்தார்; இருந்த கோயில்களுக்குப் பெருமளவில் நிவந்தங்கள் அளித்தார். அணிகலன்களாக நிறைந்த செல்வத்தை வழங்கினார். கோயில்களின் நிர்வாகம், திருவிழாக்கள், தினசரி பூசைகள் ஆகியவை சிறப்பாகவும் தொடர்ந்தும் நடைபெறும் வகையில் நிவந்தங்கள் பலவும் அவரால் வழங்கப்பட்டன. இவர் இந்நூற்றாண்டின் இறுதிவரை வாழ்ந்தாரென்பது குறிப்பிடத்தக்கது. இந்த அடிப்படையில் கோயில்களை மையமாகக் கொண்டு அரசியல் நிர்வாகம், வருவாய், சமுதாய வாழ்க்கை ஆகியன உறுதியான அடித்தளத்தைப் பெற்றன.

சோழர்களுக்கு முன் தமிழகத்தின் வட பகுதியினை ஆண்ட பல்லவர்களின் ஆட்சிமொழி சமஸ்கிருதமாக இருந்தது. இறுதிப் பல்லவர்களில் நந்திவர்மன் தொடங்கித் தமிழ் சிறப்பிடம் பெறத் தொடங்கியது. தெள்ளாறெறிந்த நந்திவர்மன் தானே தமிழ்ப் புலவனாக விளங்கியதோடு, தமிழில் தன்பெயரால் கலம்பகம் பெறும் அளவிற்குத் தமிழ்ப்பற்றில் சிறந்து விளங்கினான். இவ்வாறு 9-ஆம் நூற்றாண்டின் இறுதியில் தமிழகத்தில் மீண்டும் தமிழ் அரசவையில் இடம் பெறத் தொடங்கியது. சமயத்தொடர்பாக நோக்குகையில், பல்லவர் காலந் தொடங்கிப் பல சமண இலக்கியங்கள் எழுதப்பட்டன. அச்சமயத்திற் கெதிராக எழுந்த தேவாரப் பதிகங்கள், பாமரர்களை அரவணைக்கும் நோக்கில் ஆடலும், பாடலும், பண்ணும், இசையும் அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பெற்றன. சமுதாயத்தில் சமய எழுச்சியும், பக்தி உணர்வும் ஊட்டும் வகையில் சிறந்து விளங்கிய நாயன்மார்களைச் சுந்தரர் தொகுத்துத் திருத்தொண்டத் தொகை என்னும் பதிகம் பாடினார். இவர் தன் பதிகங்களைப் பல்லவர் வீழ்ச்சிக்கும், சோழர் எழுச்சிக்கும் பின்னும் முன்னுமான காலப்பகுதியில் பாடினார். சைவ சமய எழுச்சி மிகுந்த சோழராட்சிக்கு இவை அடிப்படையாய் அமைந்தன.

இதே காலத்தில் பாண்டி நாட்டில் இரண்டாம் வரகுணன் சிவநெறிச் செல்வனாய்த் திகழ்ந்தான். திருவாதவூரில் சிறந்த

சிவபக்தராக விளங்கியவரும், பலகலைகளையும், சாத்திரங்களையும் அறிந்தவருமாகிய வாதபுரி நாயகர் என்னும் மாணிக்க வாசகர் அவனுக்கு உதவினார். அச் சிவநெறிச் செல்வன் இழந்த தன் பாண்டிய ஆட்சியினை மீண்டும் பெற்றான். பிள்ளைப் பிறைச்சடைக்கணிந்த பினாகபாணி எம்பெருமானை உள்ளத்தில் இனிதிருத்தி உலகம் காத்தான் என்று வரகுணனை அவன் தம்பி பராந்தக வீரநாரர்யணன் கி.பி.911 இல் குறிப்பிடுகிறான் (தளவாய் புரச் செப்பேடு). வரகுணன் என்னும் தென்னவன் ஏத்தும் சிற்றம்பலம் என்றும் சிற்றம்பலம் புகழும் மயல் ஓங்கு இருங்களியானை வரகுணன் என்றும் அவனை மாணிக்கவாசகர் தம் திருக்கோவையாரில் கூறுகிறார். சோணாட்டில் சிறந்த சிவத்தலங்களுக்குத் தானே நேரில் சென்று அரனை வணங்கி, தானங்கள் பல ஈந்த சிவச்செம்மலாக இவன் விளங்கினான். இந்நூற்றாண்டில் வாழ்ந்த பட்டினத்தார் தம் திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில் 'புரிகுழல் தேவியைப் பரிவுடன் கொடுத்த பெரிய அன்பின் வரகுணதேவர்' என்று அவனது சிவநெறியைப் பாராட்டுகிறார். எனவே தமிழகம் இந்நூற்றாண்டில், சைவ சமயத்திலும், தமிழ் மொழியிலும் மீண்டும் தன் முத்திரையினைப் பதிக்கத் தொடங்கியது எனலாம்.

### 11ஆம் நூற்றாண்டு

### அரசாண்ட மன்னர்கள்

சோழர்களில் முதலாம் இராசராசனின் 16ஆம் ஆட்சியாண்டு தொடங்கி முதலாம் குலோத்துங்கனின் 30ஆம் ஆட்சியாண்டு வரை இந்நூற்றாண்டு அமைகிறது. இவ்விரண்டு ஆட்சியாளர் களுக்கிடையே முதலாம் இராசேந்திரன், அவன் மக்களான முதலாம் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன், இராச மகேந்திரன், வீர ராசேந்திரன், அதிராசேந்திரன் ஆகியோர் ஆட்சி புரிந்துள்ளனர். பாண்டியர்களில் சடையவர்மன் ஸ்ரீவல்லபன் என்ற மன்னன் சோழர்களிடம் இருந்து நாட்டைப் பெற்றுக், கி.பி. 1014 முதல் 1031 வரை சிறிது காலம் ஆண்டான். ஆனால் அவனுக்குப் பின்னர் முதலாம் இராசேந்திரன் தன் மக்கள், நெருங்கிய உறவினர்கள் ஆகியோரைச் சோழ பாண்டியர் என்ற பெயரில் முடிசூட்டிப் பாண்டிய நாட்டில் அரசாளச் செய்தான். இவர்களது ஆட்சி கி.பி. 1021இல் தொடங்கிக் கி.பி.1079 வரை பாண்டிநாட்டில் நிலவியது. அதன் பின்னர் முதலாம் குலோத்துங்கனின் நேரடி ஆட்சியில் பாண்டி நாடு இந்நூற்றாண்டின் இறுதிவரை இருந்தது.

## அரசியல் பின்னணி

பதினோராம் நூற்றாண்டு தமிழக வரலாற்றிலேயே, ஏன் இந்திய வரலாற்றிலேயே குறிப்பிடத்தக்க ஒன்றாகத் திகழ்ந்தது. தமிழகத்தின் முப்பெரும் குடிகளில் சோழரைத் தவிர வேறெவருமே சிறுபகுதியில் கூட அதிகாரம் செலுத்த இயலாது போயினர். தமிழகத்தின் சிற்றூர் தோறும் சோழராட்சியின் வேர்கள் பரவி ஊடுருவி நிலைபெற்ற நூற்றாண்டு இது ஒன்றே. இந்நூற்றாண்டு பேரரசனான இராசராசன் ஆட்சியில் தொடங்கியது.

சேரநாடு, பாண்டிநாடு, வேங்கை நாடு, கங்கபாடி, தடிகைபாடி, நுளம்பபாடி, குடமலைநாடு, வேங்கை நாடு, கொல்லம், கலிங்கம், ஈழமண்டலம், இரட்டபாடி எழரை இலக்கம், முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரம் ஆகிய பல்வேறு பகுதிகளும் சோழராட்சியின் கீழ் இருந்தன. பாண்டி நாட்டை இராசராசப் பாண்டி மண்டலம் என்றும், தொண்டை மண்டலத்தை ஜெயங் கொண்ட சோழ மண்டலம் என்றும், ஈழநாட்டை மும்முடிச் சோழ மண்டலம் என்றும், சேலத்தின் வடபகுதியுள்ளிட்ட மைசூர்ப் பகுதியான கங்கபாடியை முடிகொண்ட சோழமண்டலம் என்றும், கிழக்கு மைசூர், பெல்லாரி உள்ளிட்ட பகுதிகளைக் கொண்ட நுளம்பபாடியை நிகரிலிசோழ மண்டலம் என்றும் கொங்கு நாட்டை அதிராசராச மண்டலம் என்றும் குடிப்பெயரால் பெயரிட்டுத் தமிழகம் முழுவதையும் அதைச் சுற்றியுள்ள பகுதிகள் அனைத்தையும் சோழ மயமாக்கினர். சோழர் ஆட்சிக்குட்பட்ட பகுதிகள் அனைத்தும் அளக்கப்பட்டுப் புதிதாக வரிநிர்ணயம் செய்யப்பட்ட நிலையில் அரசின் வருவாய் பெருமளவு உயர்ந்தது.

### விளைவு

சென்ற நூற்றாண்டிலே வாழ்ந்து, இராசராசனை வளர்த்து ஆளாக்கிய இராசராசனின் பாட்டியார் செம்பியன் மாதேவியார், மற்றும் தமக்கையார் குந்தவையார் ஆகியோரின் அரவணைப்பில் இராசராசன் பெரும் சிவபக்தனாக விளங்கினான். அவன் காலத்தில் மறந்தும், மறைந்தும் போயிருந்த திருமுறைப் பதிகங்கள் தேடி எடுக்கப்பட்டன என்பதைத் திருமுறைகண்ட புராணம் மூலம் அறிகிறோம். மேலும், அவன் பெருவேந்தனாகி வட இந்தியாவிலும் சிறப்படைந்திருந்த காரணத்தால் லாட, கௌட, ஆரிய தேசங்களைச் சேர்ந்த சைவ சமய ஆச்சாரியார் பலரும் சோழ நாட்டிற்கு வந்தனர். இராசராசனே முறைப்படி தீட்சை பெற்று அரசவையில் தனக்கென ஒரு சமய குருவை வைத்துக் கொண்டான்.

அவன் முதலாக ஆட்சிக்கு வந்த சோழ அரசர்கள் அனைவரும் தத்தமக்கென ஒரு ஆச்சாரியரைத் தம்முடனேயே வைத்துக் கொண்டனர். அதன் காரணமாகச் சித்தாந்த நூல்கள் பல எழுதப்பட்டன. வைதிகச் சடங்குகளும் முறையான ஆகம வழிபாடுகளும் கோயில்கள் தோறும் தவறாது நடைமுறைப் படுத்தப்பெற்றன.

நம்பியாண்டார் நம்பிகள் தில்லையிலிருந்து பதிகங்களை மீட்டெடுத்துத் திருமுறைகளாகத் தொகுத்தார். சைவத் திருத்தலங்களில் விடுபட்டவைகள் பலவற்றுக்கும் அரசர் கண்டராதித்தர் உள்ளிட்ட பல பக்தர்களால் பதிகங்கள் பாடப்பட்டன. கருவூர்த் தேவர், இராசேந்திரன் எடுத்த கங்கை கொண்ட சோழீஸ்வரர் மீது திருவிசைப்பா பாடினார். பூந்துருத்தி நம்பி, காட நம்பி, சேதிராயர் போன்றோர் சைவ இலக்கியங்கள் பலவற்றை இயற்றினர்.

இராசராசன் தான் எடுத்த தஞ்சைக்கோயிலில் மிகச் சிறந்த முறையில் ஆகம வழிபாடுகள் நிகழச் செய்தான். அதனையொட்டி இசை, நாடகம், நடனம் ஆகிய கலைகள் புத்துயிர் பெற்றன. அவற்றைத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்த நாடக நிருத்த மாராயர்கள், தேவரடியார்கள் ஆகியோர் பலரைக் கல்வெட்டுகள் குறிக்கின்றன. இவர்கள் தத்தம் கலைகளில் சிறந்த புலமையும் தேர்ச்சியும் உடையோராய் மேம்பட்டனர். இதனை ஒட்டியே தமிழ்க் காப்பியமான சிலப்பதிகாரத்திற்குப் பல கலைத்துறைச் செய்திகள் நிறைந்த மிக நுணுக்கமான அரும்பத உரை எழுதுவதற்குரிய சூழல் உருவாயிற்று.

பேரரசனான இராசராசன் அரசியல் பெருந்தன்மையோடு சமண, பௌத்த மதங்களையும் ஆதரித்தான். வடார்க்காடு மாவட்டம் திருமலையில் குந்தவையின் பெயரால் ஜினாலயம் ஒன்று எடுக்கப்பட்டது. மிகப்பெரிய தீர்த்தங்கரர் சிலையினைக் கொண்டுள்ளது இக்கோயில். இராசராச சதுர்வேதி மங்கலமான தாராபுரத்திலும் இதுபோல் சிவன், விஷ்ணு, சினன் ஆகியோருக்குப் பெருங்கோயில்கள் எடுக்கப்பட்டன. இவ்விடங்களிலெல்லாம் சைவ, சைன, பௌத்த மடங்களும் நிறுவப்பெற்றிருக்க வேண்டும். யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை போன்ற இலக்கண நூல்கள் சைனர்களால் இந்நூற்றாண்டில் எழுதப்பட்டன. சமய சித்தாந்தங்கள் எழுதப்பட்ட காரணத்தாலும், அனைத்துச் சமயங்களிலும், வட இந்தியாவிலிருந்து வந்த ஆச்சார்யர்களின் பங்கு இருந்ததாலும் தமிழில் வட மொழியினைக் கலந்து எழுதும்

நிலை ஏற்பட்டது. இந்த அடிப்படையினாலேயே இந்நூற்றாண்டில் வீரசோழியம் போன்ற இலக்கண நூல்கள் எழுதப்படும் சூழல் விளைந்தது. இளம்பூரணர் போன்ற இலக்கண உரையாசிரியர்களும் வாழ்ந்து அறிவுப் பெட்டகமாகத் திகழ்ந்தனர்.

வைணவத்திலும் மிகச்சிறந்த சித்தாந்திகள் தோன்றினர். இவ்வகையில் இராமானுசரைக் கண்ட பெருமை இந் நூற்றாண்டுக்கு ஏற்பட்டது. முதலாம் இராசேந்திரன் தன் புதல்வர்கள் நால்வரை இழந்துதான் கங்கையும் கடாரமும் கொண்டவன் என்ற விருதினைப் பெற்றான். இவ்வாறு அவன் புதல்வர்கள் கண்ட போர்க்களங்கள் பல. கொப்பத்தில் நடந்த போரில் முதலாம் இராசாதிராசன் மாண்டான். எனினும் அப்போர் வெற்றியே கொப்பத்துப் பரணிக்குக் கருவாயிற்று. மேலைச் சாளுக்கியருடன் கூடல் சங்கமத்தில் நடந்த பெரும் போரில் வீரராஜேந்திரன் மாண்டான். இவன் மீது பாடப்பட்டதே கூடல் சங்கமத்துப் பரணி. இன்று பெயர் மட்டுமே தெரியுமாயினும் அடுத்த நூற்றாண்டில் எழுதப்பட்டுப் பெரிதும் பாராட்டப்பட்ட பிரபந்த இலக்கியங்கள் பலவற்றிற்கு இந் நூற்றாண்டு கால் கோளாய் அமைந்தது. வீரர்கள், மன்னர்கள், அரசியல் தலைவர்கள், ஏன் இறைவன் மீதும் பல்வகைப் பிரபந்தங்கள் பாடுவதற்கு முன்னோடியான பரணிகள் இந்நூற்றாண்டில் எழுந்தன. அரசனைப் பாராட்டு முகமாகக் கலைநயமும், பக்திப் பெருக்கும் பொருந்திய நாடகங்கள் எழுதிக் கலை வல்லோரால் நடிக்கப்பட்டமைக்கு, இந்நூற்றாண்டில் எழுதப்பட்ட இராஜராஜ விஜயம் என்ற இசை நாடகம் சான்றாகும். இந்நூற்றாண்டில் நிலவிய அரசியல் நிலைபேற்றுத் தன்மை காரணமாகப் பல்வேறு துறைகளில் நூல்கள் எழுதப்பட்டன.

இவற்றுள் ஆழ்ந்த சிந்தனைக்குரிய சித்தாந்த நூல்கள், ஆகம (சடங்குவிதிகள்) நூல்கள், வாஸ்து (கட்டடக்கலை) நூல்கள், பிற கலை நூல்கள், இலக்கியத்துறையில் புதிய சிற்றிலக்கிய வடிவங்கள், புதிய இலக்கண நூல்கள் ஆகியன அடங்கும். அடுத்த நூற்றாண்டின் இலக்கிய, இலக்கண வளர்ச்சிக்கும் இந்த நூற்றாண்டின் அமைதியான வளம் மிக்க சூழல் பெரிதும் உதவியது.

### 12ஆம் நூற்றாண்டு

#### அரசாண்ட மன்னர்கள்

சோழர்களில் முதலாம் குலோத்துங்கனின் 31ஆம் ஆட்சியாண்டு தொடங்கி, மூன்றாம் குலோத்துங்கனின் 22ஆம்

ஆட்சியாண்டு வரை அமைந்த இந்நூற்றாண்டுக் கால இடைவெளியில், விக்கிரம சோழன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் இராசராசன், இரண்டாம் இராசாதிராசன் ஆகிய மன்னர்கள் ஆட்சி செலுத்தியுள்ளனர். பாண்டியர்களில் கி.பி. 1101-இல் சடையவர்மன் ஸ்ரீவல்லபன் 70 ஆண்டு சோழராட்சிக்குப் பின்னர் மீண்டும் அரியணை ஏறினான். இந்த ஸ்ரீவல்லபன் முதல், முதலாம் சடையவர்மன் குலசேகரன் வரை 10 பாண்டிய மன்னர்கள் இந்நூற்றாண்டில் ஆட்சி செலுத்தியுள்ளனர்.

## அரசியல் பின்னணி

இந்த நூற்றாண்டில் சோழ பாண்டிய அரசுகள் இடைவிடாது ஒன்றையொன்று எதிர்த்த வண்ணமே இருந்தன. ஒரு மன்னர் ஆட்சி என்ற நிலையின்றி, ஒரே காலத்தில் இரு மன்னர்கள் மதுரையையும், திருநெல்வேலியையும் தலைமையிடமாகக் கொண்டு சில நேரங்களில் ஒற்றுமையுடனும், சில நேரங்களில் மாறுபட்டும் ஆட்சி நடத்தும் நிலை பாண்டிய நாட்டில் நிலவியது. இவ்வாறான பூசல்களுக்கு நடுவே இவர்களுடைய தேவைக்கும் வேண்டுதல்களுக்கும் ஏற்பத் துளுநாட்டு மன்னர், இலங்கை மன்னர்கள், போசளர்கள், கொங்குச் சோழர், ஆகியோரும் தமிழக அரசியலில் தலையிட்டனர்; போர்களில் பங்கேற்றனர்; மண உறவு கொண்டனர். இவ்வாறு போரிலும், வெற்றி தோல்வியிலுமாகவே இந்நூற்றாண்டு கழிந்தது.

கி.பி.1117இல் போசள மன்னன் விஷ்ணுவர்தனன், தலைக்காட்டைச் சோழர்களிடம் இருந்து கைப்பற்றினான். பின்னர் காஞ்சிபுரத்தையும் மதுரையையும் கைப்பற்றி, இராமேஸ்வரம் வரை சென்றுள்ளான். இவனைப் பாண்டிய மன்னன் மானாபரணன் சுந்தர பாண்டியன், அவனது மருமகனான துளுவ மன்னன் ஆளுபேந்திரன் ஆகியோர் எதிர்த்தனர். மேலும் இந்நூற்றாண்டில் கி.பி. 1165 முதல் சுமார் 20 ஆண்டுக்காலம் பாண்டியரிடையே உள்நாட்டு அரசுடைமைப் போர் நடைபெற்றது. இவர்களில் ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு கிளையினருக்கு மாறி மாறிச் சோழரும், இலங்கை மன்னரும் உதவி செய்தனர். எந்தக் கிளையினைச் சேர்ந்த பாண்டியரும் தொடர்ந்து எந்த ஒரு அரசிடமும் நம்பிக்கையுடன் இருக்க வில்லை. இலங்கைத் தளபதிகள் பாண்டியருள் ஒருவரை வென்று சோணாடுவரைகூட படையெடுத்தனர். கி.பி.1186-இல் இலங்கை மன்னர்கள் இராமேஸ்வரத்தில் கோட்டை கட்டிக் கொண்டனர். எனினும் கி.பி. 1188-இல் மூன்றாம் குலோத்துங்கன் அதனை மீட்டு

இலங்கையினுட் புகுந்து பெருஞ்சேதம் விளைத்தான். இவன் காலத்தில் இலங்கை மீது மூன்று முறை படையெடுப்பு நிகழ்ந்தது. பாண்டியர், கொங்கர், ஈழவர் அனைவரையும் வெற்றி கொண்டதால் மூன்றாம் குலோத்துங்கன் தன்னை மதுரையும் ஈழமும் கருவூரும் பாண்டியர் முடித்தலையும் கொண்டருளியவன் என்று கூறிக் கொண்டான்.

## விளைவு

இந்நூற்றாண்டில் ஆட்சி புரிந்த மன்னர்கள் அவர்தம் வாழ்நாள் முழுவதையும் பெரும்பாலும் போரிற் கழித்தனர். இருப்பினும் அப்போர்க்கள வெற்றிகள் அவர்கள் மீது பல பிரபந்தங்களைப் பாட அடிப்படையாய் அமைந்தன. பெரும்பாலும் போர் என்ற நிலை இருந்ததால் பல குறுநிலத் தலைவர்களும், சேனைத் தலைவர்களும் அரசின் பெருந்தூண்களாயினர். முதற் குலோத்துங்கன், சீனம், கடாரம் காம்போசம், கன்னோசி ஆகிய நாடுகளோடு வணிகத் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டான். வணிகத்திற்கு ஆதரவாகச் சுங்கம் தவிர்த்ததும், மீண்டும் நிலம் அளந்ததும் இவனது நிர்வாகச் சிறப்பிற்குச் சான்றுகளாக விளங்குகின்றன. பல்கலைத் துறை நாவில் உறைந்தவன் (கலி.பரணி:319) என்றும், அறிஞர்தம்பிரான் (கலி.பர.100) என்றும் சயங்கொண்டாரால் பாராட்டப் பெற்றவன். இசையிலும் வல்லவன். இவன் காலம் முதல் சோழ அரசிற்கு அரசவைப் புலவர் ஒருவர் அமர்த்தப்பட்டது குறிப்பிடத்தக்க செய்தி. அரசர்க்குரிய மெய்க்கீர்த்திகள் பலவும் மிக நல்ல தமிழில் நீண்ட கவிதைகளாக அமையும் வாய்ப்பு ஏற்பட்டது. இந்நூற்றாண்டில் வாழ்ந்த மன்னர்கள் அனைவரும் சிறந்த வீரர்களாக மட்டும் இன்றித் தமிழ்ப் புலமை உடையோராகவும் திகழ்ந்தனர். அவர்கள் மீது உலா, பிள்ளைத்தமிழ், பரணி, கோவை போன்ற பல்வேறு வகையான சிற்றிலக்கியங்கள் பெருமளவில் எழுதப் பெற்றன. விக்கிரமசோழன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் இராசராசன் ஆகிய மூன்று மன்னர்கள் காலத்திலும் வாழ்ந்த ஒட்டக்கூத்தர் இம்மூவர் மீதும் உலாபாடியது இந்நூற்றாண்டில்தான். முதற் குலோத்துங்கனின் சேனைத் தலைவனாகிய அரும்பாக்கிழான் மணவிற்கூத்தன் எனும் நரலோகவீரன் தில்லையில் தேவாரத்தினைச் செப்பேட்டில் எழுதி வைத்ததை அங்குள்ள கல்வெட்டு சுட்டுகிறது. கி.பி. 1134-இல் இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில், சேக்கிழார் பெரியபுராணம் பாடித் தில்லையில் அரங்கேற்றமும் செய்தார். தில்லை நடராசப்

பெருமானைப் பெரிதும் மதித்த இவர்கள் சாக்த சமயத்திலும் (தேவி வழிபாடு) ஈடுபாடு கொண்டோராய் விளங்கினர். இரண்டாம் இராசராசன் தாராசுரத்தில் எடுத்த இராசராசேஸ்வரம் கோயிலில் வீற்றிருக்கும் இறைவனைப் பாடுமுகத்தான் தக்கயாகப் பரணி என்ற மிகச் சிறந்த இலக்கியம் உருவாயிற்று. தல புராண இலக்கியங்கள் எழுதும் வழக்கமும் சிறப்புப் பெற்றது. அவ்வகையில் திருப்பாதிரிப்புலியூர், சிதம்பரம் ஆகியவற்றைப் பாராட்டும் கன்னிவனபுராணம், பூம்புலியூர் நாடகம் ஆகிய இலக்கிய நூல்கள் உருவாயின. மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் கும்பகோணத்தை அடுத்த திரிபுவனத்தில் திருபுவன வீரேஸ்வரம் என்ற கோயில் எடுக்கப்பெற்றது. அங்குச் சோழர்களின் சமயக் குருக்கள் செய்த வடமொழி நூல்களைக் குறிக்கும்செய்திகள் கல்வெட்டுகள் மூலம் அறியப்படுகின்றன. இதன்வழி, இக்கால அரசர்கள் தொடர்ந்து வடமொழி அறிந்த சமயக் குருக்களை ஏற்றிருந்தனர் எனவும், மன்னர்கள் வடமொழியிலும் வல்லவர்களாய் இருந்தனர் எனவும் அறிகிறோம். இக் கால கட்டத்தில் சமய குருக்கள் பலரும் பல சமய சித்தாந்த நூல்களை வடமொழியில் எழுதினர்.

இந்நூற்றாண்டில்தான் குணவீரபண்டிதர் நேமிநாதம், வச்சணந்திமாலை (வெண்பாப் பாட்டியல்) ஆகிய இலக்கண நூல்களை ஆக்கினார். இக் கால கட்டத்தில் அரும்பாக்க முடையான் அருள்நிலை விசாகன் திரைலோக்ய மல்லன் வத்சராயன், மகாபாரதத்தைத் தமிழிற் செய்தான். பல்வேறு சிற்றிலக்கியங்கள் தோன்றியமையால், பல்வேறு அணிகளும் கவிதையில் இடம் பெற்ற நிலையில், தண்டியலங்காரம் என்ற அணியிலக்கண நூல் தமிழில் எழுந்தது. அரசர்கள் மீது சிற்றிலக்கியங்கள் எழுந்ததுபோல, திருப்புகலூர் அந்தாதி, சரஸ்வதி அந்தாதி போன்ற சமயச் சிற்றிலக்கியங்களும் தோன்றும் நிலை ஏற்பட்டது. புறநானூற்று உரை, சிலப்பதிகார அடியார்க்கு நல்லார் உரை, திருக்கோவையாருக்குப் பழைய உரை ஆகிய புகழ் பூத்த உரைகள் பலவும் எழுதப்பெற்றது இக்கால எல்லையில்தான்.

இக்காலத்தில் தமிழகத்தில் கோயில்களின் எண்ணிக்கை பெருகியது. அவற்றுக்கு அரசர்களும், தானைத் தலைவர்களும், பல்வேறு திருப்பணிகள் செய்தனர். அவையும் கவிதை இலக்கியங்களாகக் கோயிற் சுவர்களில் பொறிக்கப்பட்டன. மணவிற்கூத்தன் காலிங்கராயன் செய்த திருப்பணிகள் பலவும் வெண்பாக்களாகத் தில்லை, திருவதிகைக் கோயிற் சுவர்களில்

பொறிக்கப்பட்டுள்ளன. தமிழ் ஆர்வலர்கள் ஆதலின், பல்வேறு சிறுநிலத் தலைவர்களும் தம் அறப்பணிகளைப் பாக்களாகவே எழுதிக் கல்லில் பொறிக்கும் சூழ்நிலை உருவாகியது. பெருந்தொகை என்ற தொகுப்பில் உள்ள கவிதைகளில் பலவும் கல்வெட்டுப் பாடல்களே.

சமய இலக்கியங்களைக் கேட்கும் ஆர்வம் சாதாரண மக்களிடையேயும் எழுந்தது. அதன் காரணமாகவே பல்வேறு வைணவ உரைகள் எழுந்தன. பெரிய புராணமும் இவ்வகையில் எழுந்ததேயாகும். சமயப் பெரியார்களின் வாழ்க்கை வரலாறு சமுதாய நல்லிணக்கத்திற்குப் பெரிதும் உதவியது. பல்வேறு பிரிவினராகச் சமுதாயத்தில் மக்கள் இருப்பினும், அவர்களிடையே பொதுமை காண்பதற்கும் இத்தகைய முயற்சிகள் பேருதவி செய்தன.

இவ்வாறு தமிழக வரலாற்றில் அதிக அளவில் இலக்கியம், இலக்கணம், உரைநடை ஆகிய பல்வேறு இலக்கிய வடிவங்கள் கிளைத்துச் செழிக்கும் சூழல் இந்த நூற்றாண்டில் அமைந்தது.

## 13ஆம் நூற்றாண்டு

### அரசாண்ட மன்னர்கள்

சோழர்களில் மூன்றாம் குலோத்துங்கனின் 23ஆம் ஆட்சியாண்டு முதல் சோழப் பரம்பரையில் இறுதிமன்னனான மூன்றாம் இராசேந்திரன் ஆட்சிக்காலம் (கி.பி. 1279) வரையிலான இந்த நூற்றாண்டின் இடையில் மூன்றாம் இராசராசனின் ஆட்சியும் அமைந்தது. பாண்டியர்களில் கி.பி.1190இல் அரியணை ஏறிய முதலாம் சடையவர்மன் குலசேகரனின் 11ஆம் ஆட்சியாண்டில் தொடங்கிக் கி.பி. 1297இல் ஆட்சி ஏற்ற மூன்றாம் சடையவர்மன் வீரபாண்டியனின் ஆட்சித் தொடக்கம் வரை இக்காலப் பகுதியில் அமைகிறது. இடையில் 13 பாண்டிய மன்னர்கள் ஒருவர்பின் ஒருவராகவும், இணையாட்சி செலுத்தியும் வந்துள்ளனர். தொண்டை மண்டலப் பகுதியில் பல்லவர் குலத் தோன்றலான கோப்பெருஞ்சிங்கன் காடவராயனும் தனியாட்சி செலுத்தியுள்ளான்.

### அரசியல் பின்னணி

தமிழகத்தில் சோழர்களும் பாண்டியர்களும் தொடர்ந்து போரிட்டுக் கொண்டனர். பாண்டியர் குலத்தில் அரசுரிமைப் போர் தொடர்ந்த வண்ணம் இருந்தது. இவ் இரு கிளையினரில் ஒருவரை

ஆதரித்தும், ஒருவரை எதிர்த்தும் சோழர் அரசர்கள் இப்பகைமையில் பங்கு பற்றினர். ஆனால் இந்நூற்றாண்டில் சோழப் பேரரசு முழுவதுமாக முடிவுக்குக் கொண்டு வரப்பெற்றது. பாண்டிய அரசு பேரரசாகத் திகழ்ந்தது. இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் சோழ அரசன் மூன்றாம் குலோத்துங்கன், மாறவர்மன் விக்கிரம பாண்டியனைப் பாண்டிய நாட்டுக்கு அரசனாக்கினாலும், அவன்மகன் குலசேகரன், குலோத்துங்கனுக்கு அடங்காமையால், அவன் மீண்டும் பாண்டியருடன் போரிட்டான்; வென்றான். இருப்பினும், பாண்டியன் தன் அரசி, மகன் ஆகியோருடன் சோழனிடம் அடைக்கலம் என்று வந்ததால், "சினம் மறந்து திருவுள்ளமாய்த் தென்னவனாமென மொழிந்து பட்டொளியும் திவ்யாசனமும் பரிசட்டமும் மிக நல்கி அரசும் ஆண்மையும் அவர்க்களித்து அணிமதுரை அவர்க்காக்கி விடைகொடுத்தான்". (புதுக்: 163, 166) மேலும் மதுரை ஆலவாய் அமர்ந்தான் கோயிலில் குலோத்துங்கன் பல்வேறு சிறப்புகள் செய்தான். இருப்பினும் கி.பி. 1218-இல் முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன், மூன்றாம் இராசராசன் காலத்தில் சோணாட்டின் மீது படையெடுத்துச் சென்று, உறையூரையும், தஞ்சாவூரையும் தரைமட்டமாக்கி, எரியும் ஊட்டினான். பழையாறையில் ஆயிரத்தளியில் வீராபிஷேகம் செய்து கொண்டான். சிற்றம்பலத்தை வணங்கிப் பொன்னமராவதிக்கு வந்தபோது, அபயம் என்று வந்த சோழனுக்குச் சோணாட்டைத் திருப்பி அளித்தான். எனவே 'சோணாடு கொண்ட' 'சோணாடு வழங்கிய' என்னும் பட்டங்களைச் சுந்தர பாண்டியன் தரித்துக் கொண்டான். இவனும் தில்லைச் சிற்றம்பலத்திற்குப் பெருஞ்சிறப்புச் செய்தான்.

மீண்டும் கி.பி. 1227இல் பாண்டியன் சோணாட்டின் மீது போர் தொடுத்தான். இப்போரில் போசள மன்னர், சோழருக்கு உதவினர். காஞ்சிபுரத்தில் போசள நிலைப்படை ஒன்றையும் நிறுவினர். எனவே பெரும் வெற்றியைப் பாண்டியனால் பெற முடியவில்லை. ஆனால் கி.பி. 1230-இல் பாண்டியன் சோழர் தலைநகரைப் பிடித்தபோது, மூன்றாம் இராசராசன் போசளப்படை இருக்குமிடமான காஞ்சியை நோக்கிச் செல்கையில், இடையில் சேந்தமங்கலத்தைத் தலைநகராகக் கொண்டு தனியாட்சி புரிந்த காடவர்கோன் கோப்பெருங்சிங்கனால் சிறைபிடிக்கப்பட்டான். செய்தி அறிந்த போசளர் விரைந்து வந்து, கோப்பெருஞ்சிங்கனை முறியடித்ததோடு, சோழர்தலைநகரில் இருந்த சுந்தர பாண்டியனையும் விரட்டினர்.

## தமிழகத்தில் போசளர்கள் (கன்னடியர்)

சோழருக்கு ஆதரவாக வந்து கி.பி. 1231-இல் தமிழக அரசியலில் தலையிட்ட போசளர்கள், திருச்சிக்கு வடக்கேயுள்ள கண்ணனூரைத் தம் தலைநகராக்கினர். அங்குப் போசளேஸ்வரர் என்ற சிவன் கோயிலையும் எடுப்பித்தனர். போசள வீரநரசிம்மனைச் சோழமண்டல ஸ்தாபனாச்சார்யன் என்றும், சர்ப்பமாகிய பாண்டியருக்குக் கருடன் போன்றவன் என்றும் கன்னடக் கல்வெட்டுகள் வருணிக்கின்றன. இராமேஸ்வரம் சென்ற போசள சேனைத் தலைவர்கள், தமக்கு மன்னன் கொடுத்த பரிசான சிற்றூர்களை அந்தணர்களுக்குத் தானமாக்கினர். இந்நிலையில் பாண்டியர், போசளரின் மேலாதிக்கத்தை ஏற்றுக் கொண்டனர். பின்னர் பாண்டியர்களுடன் மண உறவும் ஏற்பட்டது. மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களில் உள்ள பல்வேறு கல்வெட்டுகள், இவ்விருவர் உறவினைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. இருப்பினும் கி.பி.1250 இல் முடிசூடிய இரண்டாம் மாறவர்மன் விக்ரம பாண்டியன், கர்நாடக யானைக்குச் சிங்கம் போன்றவன் (கர்நாடக கரிகல்ப கந்தீரவ) என்று கூறுவதிலிருந்தும், முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன், வீர சோமேஸ்வரனைப் போரில் கொன்றான் என்ற ஸ்ரீரங்கம் கல்வெட்டுச் செய்தியிலிருந்தும் போசளரின் தமிழக ஆதிக்கம் கி.பி. 1262-இல் முடிவுற்றதென அறிகிறோம்.

## பாண்டியர் மேலாதிக்கம்

இரண்டாம் மாறவர்மன் விக்கிரமன் (கி.பி.1250-76), முதலாம் சடையவர்மன் சுந்தரன் (கி.பி. 1250-84), முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1253-83), இரண்டாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1254-65), முதலாம் மாறவர்மன் குலசேகரன் (கி.பி. 1268-1318) ஆகிய பாண்டிய மன்னர்கள் பெருவீரர்கள். இவர்களில் சுந்தர பாண்டியன், எம்மண்டலமுங் கொண்டருளியவன் என்றும் அனைத்துலகும் கொண்டருளியவன் என்றும் பெயர் பெற்றவன். முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன் “கொங்கீழம் கொண்டு கொடுவடுகு கோடழித்து, வல்லாளனை வென்று காடவனைத் திறைகொண்டு” ஆட்சி நடாத்தியவன் என்று அவன் மெய்க்கீர்த்தி குறிக்கிறது. மாறவர்மன் குலசேகரன், மலைநாடும் சோணாடும் இருகொங்கும் ஈழமும், தொண்டை மண்டலமும் கொண்டருளியவன் என்று தன்னைக் கூறிக்கொள்கிறான். இவ்வாறு வெற்றிகளைக் குவித்த பாண்டிய

மன்னர்கள், தமிழிலும் வடமொழியிலும் வல்லவர்கள் என்பதை அவர்தம் தனித்தனியான தமிழ், வடமொழி மெய்க்கீர்த்திகள் மெய்ப்பிக்கின்றன.

### விளைவு

சோழப் பேரரசின் இறுதிப் பெருமன்னனாக விளங்கியவன் மூன்றாம் குலோத்துங்கனே எனலாம். இவன் காலத்தில் பல்வேறு சிறப்புப் பணிகள் நடைபெற்றுள்ளன. சிதம்பரத்தில் தன் குரு சாமிதேவரான சோமேஸ்வர தேவரைக் கொண்டு சரஸ்வதி பண்டாரம் (நூலகம்) ஒன்றை நிறுவினான். பல்வேறு நூல்கள் அங்குப் பாதுகாக்கப்பட்டன; மீட்டெழுதப்பட்டன. எனவே அறிவுப் பெட்டகமாக இம் மன்னன் இருக்க விரும்பியிருக்கின்றான் என அறிகிறோம்.

இந் நூற்றாண்டில் சங்க நூல்கள் பலவற்றுக்கும் உரைகள் எழுதப்பெற்றறன. இவ்வுரைகள் எழுதும் பணியில் எல்லாச் சமயத்தைச் சார்ந்தவர்களும் ஈடுபட்டிருந்தனர். எனவே ஆங்காங்கு சமய மடங்கள் நிலைபெற்று இப்பணிகளை மேற்கொண்டிருத்தல் வேண்டும். குலோத்துங்கனுக்குப் பின்னர் பெருவெற்றி பெற்ற பாண்டிய மன்னர்களும் கல்விக்குப் பெருஞ்சிறப்பு அளித்தனர். முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனைத் தென்திருப்பேரைக் கல்வெட்டு “ஞானசமுத்திரம்” என்று கூறுகிறது. கி.பி. 1206இல் நெல்லை மாவட்டம் ஆத்தூர் சோமநாதர் கோயிலில் பாண்டிய அதிகாரி பஞ்சவன் பிரம்மாதிராயனால் திருமுறைகள் ஏழும் செப்பேடுகளில் எழுதி வைக்கப்பட்டன. குலோத்துங்கனால் சிதம்பரத்தில் அமைக்கப்பட்ட சரஸ்வதி பண்டாரத்தில் கி.பி. 1203 இல் அங்குள்ள புத்தகங்களைப் பழுது பார்க்கவும், அவிழ்த்துக் கட்டவும், திவ்ய ஆகமத்தை வாசிக்கவும், புராணம், சோதிடம் போன்றவற்றைப் படிக்கவும், அவற்றை எழுதவும் பணியாளர்கள் 20 பேர் சுந்தரபாண்டியனால் நியமிக்கப்பட்டனர். புதிய நூல்களைச் சேர்க்கவும், படியெடுக்கவும் நிவந்தங்கள் அளித்தான். ‘விக்கிரமசோழன் திருக்கை ஒட்டி’ என்னும் கோயிற் பகுதியில், வடமொழியிலும், தமிழிலும் உள்ள நூல்களைத் தேசாந்திரிகட்கும், வேண்டுவோர்க்கும் எழுதிக் கொடுக்கவும், ஒக்கப் பார்க்கவும் பண்டிதர்களை நியமித்தான். பணியாளர்கட்கும், பண்டிதர்கட்கும் பல நிவந்தங்கள் அளிக்கப்பட்டன. இரண்டாம் மாறவர்மன் விக்கிரம பாண்டியனின் சிதம்பரம் கல்வெட்டுகள் அனைத்தும் அவன் வெற்றிகள் குறித்த பாடல்களாகவே அமைந்துள்ளன. முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனின் வெற்றிகளும்

தில்லையில் துலாபாரம் ஏறிய செய்தியும், பாடல்களாகவே பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றைப் புவனேக வீரன் என்ற புலவன் எழுதியுள்ளான்.

இந்நூற்றாண்டில் ஆட்சி புரிந்த பாண்டிய மன்னர்கள், வடமொழியிலும், தமிழிலும் நல்ல புலமை யுடையோராய்த் திகழ்ந்துள்ளனர். மதுரையில் வீற்றிருக்கும் ஆலவாய்ச் சொக்கனாகிய சிவனின் திருவிளையாடல்களைக் குறிக்கும் திருவிளையாடற் புராணத்தை முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியன் தன்னாட்சிக் காலத்தில் பெரும்பற்றப் புலியூர் நம்பியைக் கொண்டு எழுதச் செய்துள்ளான். சோழ மன்னன் குலோத்துங்கன்மீது ஒருகோவையும், இரண்டாம் இராசாதிராசன் மீது சங்கர சோழனுலாவும், பாடப்பெற்றுள்ளன. சிற்றரசனான சீய கங்கனின் ஆதரவால் பவணந்தி முனிவர் இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் நன்னூல் என்னும் சிறந்த இலக்கண நூலை இயற்றினார். சென்ற நூற்றாண்டிலிருந்து தொடர்ந்து வந்த சோழர்தம் தமிழ்ப் பற்றினுக்குச் சான்றாக இந்நூல்கள் திகழ்கின்றன. இக் காலகட்டத்தில்தான் பாரதத்தின் கிளைக்கதையான நளன் தமயந்தி பற்றிய நளவெண்பா என்னும் சிறுகாப்பியமும் இயற்றப்பெற்றது.

வடமொழிப் பயிற்சியும், சைவ சமயத்தில் நம்பிக்கையும் உடையோராய் மன்னர்கள் திகழ்ந்தனர். எனவே சமய மடங்கள் ஆதரவு பெற்றன. மெய்கண்டார், அவர்தம் மாணாக்கர் அருள்நந்தி சிவம் ஆகியோரின் மெய்கண்ட சாத்திரங்கள் பலவும் எழுதப்பெற்றது இந் நூற்றாண்டில்தான். சைவ மடங்கள் பல்கிப் பெருகியதால், சந்தான ஆச்சார்யர்கள் மூலம், சித்தாந்த நூல்கள் பலவும் எழுதப் பெறும் சூழ்நிலை அமைந்தது. வைணவ சமயத்திலும், பல உரைவிளக்க நூல்கள் எழுந்தன. பகவத் கீதை தமிழில் மொழிபெயர்க்கப் பெற்றது. சைனர்களும் அறநெறிச்சாரம் போன்ற சாத்திர நூல்களை எழுதினர். திருக்குறள், நாலடியார், தொல்காப்பியம், அவிநயம், வச்சணந்தி மாலை, போன்ற பல இலக்கண நூல்களுக்கும் உரை தோன்றும் வாய்ப்பு ஏற்பட்டது. பிம்பிசாரக்கதை, சித்தாந்தத் தொகை போன்ற நூல்களும், இலக்கண உரைகளும் இக் காலப்பகுதியில் இயற்றப் பெற்றன.

13ஆம் நூற்றாண்டில் மிகப்பெரிய நூல்கள் தோன்றாவிடினும் பண்டைய நூல்களைப் போற்றிப் பாதுகாக்கவும், அவற்றுக்கு விளக்கம் அளிக்கவுமான உரை முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட நிலையினைக் காண்கிறோம்.

# சோழஅரசர் மரபுவழிப் பட்டியல்

(850-871) விசயாலயன்

(871-908) ஆதித்யன்

(906-954) பராந்தகன்

இராசாதித்தன் (950-58) கண்டராதித்தன் (953-60) அரிஞ்சயன் உத்தமசீலி

(971-988) உத்தம சோழன் (957-973) சுந்தர சோழன்

(960-965) ஆதித்தகரிகலான் (985-1014) இராசராசன் I

(1012-43) இராசேந்திரன் I குந்தவை + விமலாதித்தன் (கீழைச்சாளுக்கியர்-வேங்கி)

இராசாதிராசன் I (1018 - 54)
இராசேந்திரன் II (1052-64)
இராசமகேந்திரன் (1059-63)
வீரராசேந்திரன் (1063-70)
ஆதிராசேந்திரன் (1068-71)
அம்மங்கா + இராசராச நரேந்திரன்

(1070-1122) குலோத்துங்கன் I

(1118-35) விக்ரமசோழன்

(1133-50) குலோத்துங்கன் II

(1146-72) இராசராசன் II

(1166-80) இராசாதிராசன் II

(1178-1218) குலோத்துங்கன் III

(1216-60) இராசராசன் III

(1246-79) இராசேந்திரன் III

## சோழர் குடிவழி அரசர் பட்டியல்

விசயாலயன் (கி.பி. 850-871)

ஆதித்தன் (கி.பி. 871-908)

முதற் பராந்தகன் (கி.பி. 906-954)

கண்டராதித்தன் (கி.பி. 949-958)

அரிஞ்சயன் (கி.பி. 953-960)

சுந்தர சோழன் (கி.பி. 957-973)

உத்தம சோன் (கி.பி. 971-988)

முதலாம் இராசராசன் (கி.பி. 985-1014)

முதலாம் இராசேந்திரன் (கி.பி. 1012-1043)

இராசாதிராசன் (கி.பி. 1018-1054)

இரண்டாம் இராசேந்திரன் (கி.பி. 1052-1064)

இராச மகேந்திரன் (கி.பி. 1059-1063)

வீர ராசேந்திரன் (கி.பி. 1063-1070)

அதிரசேந்திரன் (கி.பி. 1068-1071)

முதலாம் குலோத்துங்கன் (கி.பி. 1070-1122)

விக்கிரம சோழன் (கி.பி. 1118-1135)

இரண்டாம் குலோத்துங்கன் (கி.பி. 1133-1150)

இரண்டாம் இராசராசன் (கி.பி. 1146-1172)

இரண்டாம் இராசாதிராசன் (கி.பி. 1166-1180)

மூன்றாம் இராசராசன் (கி.பி. 1216-1260)

மூன்றாம் இராசேந்திரன் (கி.பி. 1246-1279)

## பாண்டியர் குடிவழி அரசர் பட்டியல்

இடைக்காலப் பாண்டியர்

கடுங்கோன் (சுமார் கி.பி. 550)

மாறவர்மன்' அவனிசூளாமணி

செழியன் சேந்தன்

மாறவர்மன் அரிகேசரி (கி.பி. 624-674)

கோச்சடையன் இரணதீரன் (கி.பி.674-725)

மாறவர்மன் இராசசிம்மன் (கி.பி.725-768)

வரகுண நெடுஞ்சடையன் பராந்தகன் (கி.பி. 768-811)

ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் (கி.பி. 811-860)

வீரபாண்டியன் (கி.பி. 860-863)

இரண்டாம் வரகுணன் (கி.பி. 863-911)

பராந்தக வீர நாராயணன் (கி.பி. 866-911)

மாறவர்மன் இராசசிம்மன் (கி.பி. 911-931)

சடையவர்மன் வீரபண்டியன் (கி.பி. 938-959)

சடையவர்மன் விக்கிரம பாண்டியன் (கி.பி. 958-978)

முதலாம் சடையவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி. 1014-1031)

## பிற்காலப் பாண்டியர்

இரண்டாம் சடையவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி. 1101-1124)

சுந்தர பாண்டியன் மானாபரணன் (கி.பி. 1104-1131)

மூன்றாம் சடையவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி. 1131-1143)

மாறவர்மன் பராக்கிரமன் (கி.பி. 1143-1166)

மாறவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி. 1145-1162)

சடையவர்மன் குலசேகரன் (கி.பி. 1162-1177)

சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1170-1195)

நான்காம் சடையவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி. 1158-1185)

மாறவர்மன் விக்கிரம பாண்டியன் (கி.பி. 1181-1190)

முதலாம் சடையவர்மன் குலசேகரன் (கி.பி. 1190-1218)

முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் (கி.பி. 1216-1244)

முதலாம் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் (கி.பி. 1218-1232)

இரண்டாம் சடைய வர்மன் குலசேகரன் (கி.பி. 1237-1266)

இரண்டாம் மாறவர்மன் சுந்தரன் (கி.பி. 1238-1255)

முதலாம் சடையவர்மன் விக்கிரமன் (கி.பி. 1241-1254)

இரண்டாம் மாறவர்மன் விக்கிரமன் (கி.பி. 1250-1276)

முதலாம் சடையவர்மன் சுந்தரன் (கி.பி. 1250-1284)

முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1253-1283)

இரண்டாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1254-1265)

முதலாம் மாறவர்மன் குலசேகரன் (கி.பி. 1268-1318)

இரண்டாம் சடையவர்மன் சுந்தரன் (கி.பி. 1277-1294)

மூன்றாம் சடையவர்மன் சுந்தரன் (கி.பி. 1278-1301)

மூன்றாம் மாறவர்மன் விக்கிரமன் (கி.பி. 1281-1289)

மூன்றாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1297-1342)

நான்காம் சடையவர்மன் சுந்தரன் (கி.பி. 1303-1322)

மூன்றாம் மாறவர்மன் சுந்தரன் (கி.பி. 1303-1322)

ஐந்தாம் சடையவர்மன் சுந்தரன் (கி.பி. 1304-1319)

முதலாம் மாறவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி. 1308-1344)

சடையவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி. 1308-1341)

சடையவர்மன் இராசராசன் சுந்தரன் (கி.பி. 1310-1332)

நான்காம் மாறவர்மன் விக்கிரமன் (கி.பி. 1298-1302)

இரண்டாம் மாறவர்மன் குலசேகரன் (கி.பி. 1314-1362)

முதலாம் சடையவர்மன் பராக்கிரமன் (கி.பி. 1315-1334)

ஆறாம் சடையவர்மன் சுந்தரன் (கி.பி. 1318-1336)

ஐந்தாம் மாறவர்மன் விக்கிரமன் (கி.பி. 1323-1330)

ஏழாம் சடையவர்மன் சுந்தரன் (கி.பி. 1329-1341)

எட்டாம் சடையவர்மன் சுந்தரன் (கி.பி. 1330-1347)

ஆறாம் மாறவர்மன் விக்கிரமன் (கி.பி. 1337-1343)

முதலாம் மாறவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1333-1367)

நான்காம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1337-1378)

இரண்டாம் மாறவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1341-1388)

முதலாம் மாறவர்மன் பராக்கிரமன் (கி.பி. 1335-1362)

ஒன்பதாம் சடையவர்மன் சுந்தரன் (கி.பி. 1340-1364)

இரண்டாம் சடையவர்மன் விக்கிரமன் (கி.பி. 1344-1352)

# சமுதாயச் சூழல் (கி.பி. 901-1300)

*சமுதாயம்*

இக் காலப்பகுதியில் மன்னன் இறைவனாகவே கருதப்பட்டான். அவன் திருமாலின் அவதாரம் என்ற கருத்து நிலவியது. உடையார், ஆழ்வார், பெருமாள் ஆகிய சொற்கள் இருவருக்கும் பொதுவாக வழங்கப்பட்டன. பெரும்பாலான மன்னர்கள் சிவதீட்சை பெற்று வழிபாட்டையும் அரச கடமையையும் நிகழ்த்தினர். சமய குருக்கள் அரசவையிலே இருந்து சமய கடமைகளில் துணைபுரிந்தனர். அவர்களுக்கும் உடையார் எனப் பெயர் வழங்கியது குறிப்பிடத் தக்கது.

கல்வி உயர்மட்டத்திலிருந்த குடிமக்களுக்கே உரியதாக இருந்தது. வேதம், புராணம், இலக்கணம், தர்க்கம் போன்ற வடமொழிக் கல்வியே நிறுவனங்களில் அளிக்கப்பட்டது. பிற தொழில் நுட்பங்கள், கலைகள் ஆகிய அனைத்துத் துறைக் கல்வி அறிவும் குலமரபில் வழிவழியாகவே கற்றுக் கொடுக்கப்பட்டது. இவற்றைக் கற்றுத் தரும் நிறுவனங்க்ள் இல்லை. பரம்பரையினர் தவிர ஏனையோர் கற்கவும் இல்லை.

மக்களில் வேளாண் பெருமக்களும், வணிகப் பெருமக்களும், பிராமணர்களும், தேவரடியார்களும் சமுதாயத்தின் மேல்தட்டிலும், உழுவோர், படைவீரர்கள், தொழில் வினைஞர்கள் ஆகியோர் அடுத்த நிலையிலும் விளங்கினர். நிர்வாகமும் இதன் அடிப்படையில் ‘நாடு’, ‘நகரம்’, ‘சபை’ ஆகியவற்றின் கைகளில் இருந்தது. ஏனையோர் அனைவரும் இம் மூன்றைச் சார்ந்து வாழ்ந்தனர். வேளாளரில் இருந்தும் பிராமணரிலிருந்தும், அரசியல் அதிகாரிகளும், படைத்தலைவர்களும் தோன்றியுள்ளனர். வேந்தர்கள் குலங்களையும், பிராமணர்கள் கோத்திர, சூத்திரங்களையும் கொண்டிருந்தனர்.

கோயில்கள் பொருளாதார மையங்களாக விளங்கின. அரச கருவூலமும், கோயிற் பண்டாரமும் அன்றைய சேமிப்பு நிறுவனங்களாக விளங்கின. அரசின் வருவாய் முழுவதும் நிலங்களிலிருந்தும், தொழிலாளர்களிடம் இருந்தும்

பெறப்பட்டது. 300க்கும் மேற்பட்ட சோழர்கால வரிப்பெயர்கள் இருந்ததைத் தெளிவாகக் கல்வெட்டுகள் காட்டுகின்றன.

சாதிகள் தொழிலடிப்படையில் வகுக்கப்பட்டிருந்தன. அவரவர்க்குத் தனியான குடியிருப்புகளும் இருந்தன என்பதைக் கம்மாளச்சேரி, பறைச்சேரி, தளிச்சேரி போன்ற பெயர்கள் காட்டும். மனுவின் நெறி நின்று சாதியொழுக்கத்தைக் காப்பதை அரசர்கள் தம் பெருமையாகக் கருதியதைப் பல மன்னர்களின் மெய்க்கீர்த்திப் பகுதிகள் காட்டும். அவ்வச் சாதியினர் தம் பெருமையினைப் பறை சாற்றிக் கொள்ள இலக்கியங்களையும் படைத்துக் கொண்டனர் என்பதை இந்நூற்றாண்டின் இலக்கியங்கள் தெளிவாகக் காட்டுகின்றன.

சைவமும், வைணவமும் பெருஞ்சமயங்களாக விளங்கின. சமணமும் அரச ஆதரவினை ஓரளவு பெற்றிருந்தது. பல்வேறு சமணக்கோயில்கள் எடுக்கப்பட்டன. பள்ளிச் சந்தங்கள் வழங்கப்பட்டன. அவை சார்ந்த மடங்களும் காலூன்றி வளர்ந்தன. சைவ, வைணவக் கோயில்கள் ஏராளமாக எடுக்கப்பட்டன. அவையே சமுதாயத்தின் முதுகெலும்பாக விளங்கின.

மொழி நிலையில் மிகுதியான வடமொழி தமிழோடு கலக்கும் நிலை உருவாயிற்று. இலக்கியங்களிலும், உரைகளிலும் ஏன் அரசாங்க ஆவணங்களிலும் வடமொழிச் சொற்களின் கலப்பு மிகுதியானது. சமஸ்கிருதம் உயர்ந்தோர் மொழியாகவும் அகில இந்திய மொழியாகவும் வளர்ந்தது. அக் காலகட்டத்தில்தான் மன்னர்களின் செப்பேட்டு ஆணைகளில் வடமொழிப் பகுதியொன்று தவறாது இடம்பெற்றது. மக்களும் தமிழையும் வடமொழியையும் கலந்தே எழுதவும், கல்வி அறிவுடையோர் அனைவரும் அதனைப் புரிந்து கொள்ளவுமான நிலை இருந்ததையே ஆவணங்களும், இலக்கிய உரைகளும் எடுத்துக் காட்டுகின்றன. வீரசோழியம் போன்ற இருமொழிக் கலப்பிற்குரிய இலக்கண நூல்கள் தோன்றுமளவிற்கு இந்நிலை இருந்தது. சமய தத்துவங்களும், சித்தாந்தக் கருத்துகளும் வடமொழியும் தமிழும் கலந்த நடையில் எழுதப் படலாயின.

# இலக்கியச் சூழல் (கி.பி.901-1300)

இந்தத் தமிழிலக்கிய வரலாற்றின் ஒவ்வொரு காலப் பகுதியும் ஒவ்வொரு அம்சத்தில் சிறப்புடையதாக விளங்கியது. முதற் பகுதி (கி.பி. 500 வரை) தமிழ்மொழி, இலக்கியம், பண்பாடு ஆகியவற்றின் அடிப்படை அலகுகள் நிலைபெற்றுச் செம்மாந்த வளர்ச்சியினைப் பெற்றிருக்கக் காண்கிறோம். இந்த இலக்கியப் பண்பாட்டுச் செம்மாப்பின் தளர்நிலையை இப்பகுதியின் இறுதிக் காலம் கோடிட்டுக் காட்டுகிறது. வேற்றுப் பண்பாட்டின் மேலாதிக்க வரவினால் தொடக்கத்தே தளர்ந்ததாயினும், ஓரிரு நூற்றாண்டுகளில் வேற்று வரவைச் செரித்துத் தன்மயமாக்கிக் கொண்ட தமிழ்ப் பண்பாட்டு மரபு மேலும் வளர்ச்சியுற்றுத் தன் விழுமிய பழமையின் மறுமலர்ச்சியாகவும், தன் உடன்கால அரசியல், சமுதாயச் சூழல்களை நெறிப்படுத்துவதாகவும் விளங்கியதை இரண்டாம் பகுதி (கி.பி. 501 முதல் கி.பி. 900 வரை) எடுத்துக்காட்டுகிறது.

சங்க காலத்தையடுத்து நிகழ்ந்த வேற்றுப் பண்பாட்டு ஆதிக்கத்தை மடைமாற்றம் செய்து தமிழ்ப் பண்பாட்டின் தனிக்கூறுகள் பல மறுமலர்ச்சி பெற்று நின்ற நிலையில் மூன்றாம் காலப்பகுதி (கி.பி. 901 முதல் கி.பி.1300 வரை) தொடங்குகிறது. அரசியல் அரங்கில் பேரரசுகள் தோன்றி ஓரளவு நிலையான அமைதியான சமுதாய வாழ்க்கை தமிழ்நாட்டில் இக் காலப் பகுதியில் நிலவியிருந்த காரணத்தால் தமிழிலக்கிய வரலாற்றுக்கு வளம் சேர்க்கும் படைப்புகள், இலக்கியப் பணிகள் பல இப்பகுதியில் தோன்றின. இக்காலப்பகுதியில் தோன்றிய இலக்கியப் படைப்புகளைக்

காப்பியம், சிறுகாப்பியம், சிற்றிலக்கியம், தத்துவநூல்கள், கல்வெட்டு இலக்கியம்,

இலக்கணம், நிகண்டு, இலக்கிய உரைகள், இலக்கண உரைகள், மொழிபெயர்ப்பு இலக்கியம்

என இலக்கிய வகைமையின் அடிப்படையில் பத்து வகையாகவும், பிற துறை நூல்களை ஒரு தனிப் பகுப்பாகவும் பகுத்து ஆராயலாம்.

முந்தைய இரு பகுதிகளின் தொடர்ச்சியாகவும், பின்னைய வரலாற்றுப் பகுதிகளில் நிகழ்ந்த இலக்கிய முயற்சிகள் பலவற்றுக்குத் தோற்றுவாயாகவும் விளங்கும் இக் காலப்பகுதியைத் தமிழிலக்கிய வரலாற்றின் இடைப்பகுதி அல்லது நடுப்பகுதி என்று கூறலாம்.

## காப்பியம் : பெருங்காப்பியம், சிறுகாப்பியம்

நூலின் அளவு, இலக்கிய வரலாற்று வளர்ச்சியில் பெறும் பங்கு, இலக்கியச் சுவை ஆகிய கூறுகளின் அடிப்படையில் காப்பியங்களைப் பெருங்காப்பியம், சிறுகாப்பியம் என இருவகையாகப் பகுத்து ஆராய்வது தமிழிலக்கண மரபாக இருந்து வருகிறது. இந்த அடிப்படையில் சீவக சிந்தாமணி, சூளாமணி, கம்பராமாயணம், பெரிய புராணம் என்னும் நான்கினையும் இக் காலப்பகுதியில் தோன்றிய பெருங் காப்பியங்களாகவும், நீலகேசி, குண்டலகேசி, வளையாபதி, நளவெண்பா, யசோதர காவியம், நம்பி திருவிளையாடல் ஆகியவற்றை இக் காலப்பகுதியில் தோன்றிய சிறுகாப்பிய நூல்களாகவும் அறிஞருலகு கருதுகிறது.

பௌத்த, சமண நூல்களைச் சமய ஆர்வத்தோடு கற்று, கற்பித்து வந்த அறிஞர்களில் யாரோ ஒருவர் அவர்காலத்திருந்த தமிழ்க் காப்பியங்களை ஐம்பெரும் காப்பியம், ஐஞ்சிறு காப்பியம் எனப் பாகுபடுத்தினார். இப் பாகுபாட்டைச் செய்தவர் இன்னார் என அறிய இயலாவிடினும் ஐம்பெருங் காப்பியம் என்னும் பெயரை நன்னூலின் முதல் உரையாசிரியராகிய மயிலைநாதர் எடுத்தாளக் காண்கிறோம். எனவே அவர்க்கு முன்னரே இப் பாகுபாடு வழக்கில் இருந்திருக்கலாம் எனக் கருதவேண்டியுளது. அதன்படி சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகிய ஐந்தினையும் ஐம்பெருங் காப்பியங்கள் என்றும், உதயணகுமார காவியம், நாககுமார காவியம், யசோதர காவியம், நீலகேசி, சூளாமணி என்னும் ஐந்தினையும் ஐஞ்சிறு காப்பியங்கள் என்றும் அழைத்தனர். சென்ற நூற்றாண்டுவரையில் இவ்வகைப்பாடு வழக்கில் இருந்து வந்தது. காப்பியம் என்னும் இலக்கிய வகைமைக்குரிய அடிப்படைகளை ஆராய்ந்து இந்தப் பாகுபாடு செய்யப் பெறவில்லை. வளையாபதி, குண்டலகேசி இரண்டையும் பெருங்காப்பியங்களாகக் கருதியதும், சூளாமணியைச் சிறுகாப்பியமாகக் கருதியதும் பொருந்தாத சிந்தனையின் விளைவே. ஒன்று, இக்கருத்து காவியாதரிசம் அல்லது தண்டியலங்காரத்திற்கு முன்னர்த் தோன்றியிருக்க வேண்டும்; அல்லது சைவ, வைணவ சமயங்களைச் சாராத நூல்களின்மீது

ஏற்பட்ட ஆர்வத்தால் தோன்றியிருக்க வேண்டும். மேலும் பெருங்கதை என்னும் சமணப் பெருங்காப்பியத்தை இப்பாகுபாடு புறக்கணித்தமைக்குரிய காரணமும் விளங்கவில்லை. எனவே இலக்கிய ஆய்வுகள் பெருகிக் கூர்மைப்பட்ட இருபதாம் நூற்றாண்டில் இப் பாகுபாட்டைத் தமிழாய்வு புறக்கணித்து ஒதுக்கியது ஏற்றுக்கொள்ளத் தக்கதுதான்.

தமிழில் தோன்றிய தலைக்காப்பியங்களாகிய சிலப்பதிகாரமும், மணிமேகலையும் இந்த இலக்கியவரலாற்றின் முதற் பகுதியில் ஆராயப்பெறுகின்றன. இரண்டாம் பகுதியில் (கி.பி. 501-கி.பி. 900) தகடூர் யாத்திரை, பிம்பிசாரக்கதை, பெருங்கதை, பாரத வெண்பா ஆகிய நான்கு காப்பியங்கள் ஆராயப் பெறுகின்றன. இவற்றின் தொடர்ச்சியாகச் சீவகசிந்தாமணி, சூளாமணி, நீலகேசி, குண்டலகேசி, வளையாபதி, கம்பராமாயணம், பெரியபுராணம், நளவெண்பா, யசோதர காவியம், நம்பி திருவிளையாடல் ஆகிய பத்துக் காப்பியங்கள் இந்த மூன்றாம் பகுதியில் (கி.பி. 901-கி.பி.1300) ஆராயப்பெறுகின்றன.

தனிப்பாடல் நிலையில் புறத்திணைச் செய்திகள் போற்றிப் பாடல்களாகவும் (odes), திணைநிலைப் பாடல்களாகவும் (idylls), அகத்திணைக் கூறுகள் நாடகத் தனிமொழிகளாகவும் (dramatic monologues) சங்க காலத் தமிழிலக்கியம் படைக்கப்பட்டு வழங்கி வந்தது. ஒரு சில பாடல்கள் நெடியனவாக அமைந்திருப்பினும் இலக்கண அமைதியிலும் இலக்கிய அமைப்பிலும் அவை தனிப்பாடல்களாகக் கருதத் தக்கனவே. சங்க இலக்கியப் படைப்புகளுக்குரிய இலக்கணமாக அமைந்துள்ள தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் காப்பியம் என்னும் இலக்கிய வகைமை பற்றிய வெளிப்படையான இலக்கண வரையறை கூறப்பெறவில்லை. தொன்மை, தோல் என்னும் வனப்புறுப்புகள் காப்பிய இலக்கிய மரபினைச் சுட்டுவன எனச் சில அறிஞர்கள் கருதுகின்றனர். ஆனால் காப்பிய வகைமையைச் சுட்டும் இந் நூற்பாக்கள் தோன்றக் காரணமாயிருந்த, தொல்காப்பியத்திற்கு முந்திய காப்பியங்கள் எவையெனத் தெரியவில்லை. இளம்பூரணர் முதலான உரையாசிரியர்கள் காட்டும் எடுத்துக்காட்டுகள் எல்லாம் பிற்காலத்தன. மேலும் அவர்கள் காட்டுவன பெரும்பாலும் தமிழ்ப்பண்பாட்டுக் கதைகள் அல்ல: தமிழர்களுக்குரிய தொன்மக் கதைகள் எனவும் அவற்றைக் கருத இயலவில்லை. அவர்கள் பாடற்பொருளைக் (பழமையான கதை) கருத்திற்கொண்டு இந்நூற்பாக்களுக்கு உரை வகுத்துள்ளனர் எனக் கருதத்

தோன்றுகிறது. காப்பியம் என்னும் இலக்கிய வகைமை பாடற்பொருள், பாடல்முறைமை, கிளத்தல் உத்திகள், பாவிகம் எனப் பல்வேறு கூறுகளால் வரையறுக்கப்படுவது. வெறும் பாடற் பொருளால் மட்டும் ஓர் இலக்கிய வகைமை உருவாவதில்லை. எனவே இந் நிலையில் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் தமிழிலக்கிய வரலாற்றில் நிகழ்ந்த புத்தாக்கமாகக் கொள்ளக் கிடக்கின்றன. இதிகாசக் கருத்துகளும், புராணங்கள், பஞ்ச தந்திரம் முதலான பிற வடநூற் கருத்துகளும் சிலப்பதிகாரத்தில் காணப்படினும் அவற்றை அடியொற்றிச் சிலப்பதிகாரக் காப்பியம் எழுந்தது எனக் கொள்ள இயலவில்லை. காப்பியத் தலைமைக்கு ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்தல், கற்பென்னும் திண்மையைக் காப்பிய வீரமாக்குதல், படை வீரத்தினும் ஒழுக்க வீரமே சிறந்தது என்பதைப் பாவிகப் பொருளாக்குதல் ஆகியன வேறெந்தக் காப்பியத்திலும் காணப்பெறாத புதுமைகள். எனவே இளங்கோவடிகளின் புத்தாக்க முயற்சியே சிலப்பதிகாரம் எனக் கருதவேண்டியுள்ளது. காப்பியக் கட்டமைப்பில் ஓரளவு குறைபாடுடையதாயினும் காப்பியப் புதுமைகள் சில சிலப்பதிகாரத்தை யொட்டி மணிமேகலையிலும் காணப்படுகின்றன.

தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து
அதர்ப்பட யாத்தலோடு அனைமர பினவே
(தொல்.பொருள்.இளம்.643)

என வழிநூல் வகைகளுள் மொழிபெயர்ப்பையும் ஒன்றாகத் தொல்காப்பியர் கூறுவதால், அவருக்கு முன்னரும் அவர் காலத்திலும் பிறமொழி நூல்கள் தமிழாக்கம் பெற்று வழங்கிவந்தமை தெளிவாகிறது. எனினும் அக் காலகட்டத்தில் மொழிபெயர்ந்து வந்து தமிழகத்தே உலவி வந்த நூல்கள் எவையென அறிய இயலவில்லை. இன்றைய நிலையில் நமக்குக் கிடைத்துள்ள தரவுகளின்படி கி.பி. நான்கு அல்லது ஐந்தாம் நூற்றாண்டளவில் மொழியாக்கம் பெற்ற இலக்கியங்களாகப் பெரும்பாலும் காப்பியங்கள் கிடைத்துள்ளன. இந்த இலக்கிய வரலாற்றின் இரண்டாம் பகுதிக்கு உரியனவாக மேலே குறித்த பெருங்கதை, பிம்பிசாரக்கதை, பாரத வெண்பா ஆகியன இவற்றுள் அடங்கும்.

கி.பி. ஐந்தாம் நூற்றாண்டளவில் சங்க நூல்கள் சிலவற்றைத் தொகுத்த பெருந்தேவனார் என்னும் புலவர் 'பாரதம் பாடிய' என்னும் அடைமொழியால் குறிப்பிடப் படுவதாலும், "மகாபாரதம்

தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்" எனவரும் சின்னமனூர்ச் செப்பேட்டுக் குறிப்பாலும்(கி.பி. 10ஆம் நூற்.) வடமொழியில் இயன்றுள்ள வியாச பாரதம் தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட செய்தி புலனாகிறது. எனினும் இந்தத் தமிழ்ப் பாரதம் இன்று கிடைக்க வில்லை. இவ்வாறே இளம்பூரணர் குறிப்பிடும் இராமசரிதை, பாண்டவர் சரிதை என்னும் நூல்களும் இன்று வழக்கில் இல்லை.

இனி, இவ் வரலாற்றின் மூன்றாம் பகுதிக்குரிய காப்பியங்களின் பொதுஇயல்புகளைச் சுருக்கமாகக் காணலாம். பக்தி இயக்கம் தமிழகத்தே கால்கொண்டு இயங்கிவந்த காலகட்டத்தில் சமண மதத்தைத் தழுவிநின்ற தமிழறிஞர்கள் பலர் அமைதியாக இலக்கியப் பணிகளில் ஈடுபட்டு வந்தனர். சமண சமயத்தைச் சார்ந்திருந்தனராயினும், இந்த அறிஞர்கள் எல்லாம் தமிழ் நாட்டினராதலின் தமிழிலக்கியப் பின்புலத்தை அடிப்படையாகக் கொண்டு இலக்கியம் படைத்தனர். பாடுபொருள் சமண சமயச் சார்புடையதாயினும், இவர்தம் படைப்புகளில் பழந்தமிழ் இலக்கண, இலக்கிய மரபுகள் செறிந்திருக்கக் காண்கிறோம். இம் மரபுகள் பின்பற்றப்படாமல் வெறும் சமயக் கருத்துகளை மட்டுமே கூற எழுந்த பல சமண இலக்கியங்கள் வழக்கொழிந்து மறையவும், பெருங்கதை, சீவகசிந்தாமணி, சூளாமணி போன்ற நூல்கள் தொடர்ந்து தமிழிலக்கிய வரலாற்றில் இடம்பெற்றுவந்தமைக்கு இம் மரபு திரியாத மாட்சியே காரணமாக அமைந்தது. தமிழிலக்கிய, இலக்கண மரபுத் தொடர்ச்சிக்கும் வளர்ச்சிக்கும் சமணக் காப்பியங்கள் பெருந்தொண்டாற்றியுள்ளமையை அறிஞருலகு மறவாது போற்றி வந்துள்ளது.

### சீவகசிந்தாமணி

சமண சமயச் சார்பு கொண்டு எழுந்த தமிழ்க் காப்பியங்களுள் பெருங்கதை, சீவக சிந்தாமணி, சூளாமணி என்னும் மூன்றும் தமிழிலக்கிய வரலாற்றில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. இவற்றுள் பெருங்கதை இவ் வரலாற்றின் இரண்டாம் பகுதியில் மிக விரிவாகப் பேசப்பட்டுள்ளது. ஏனைய இரண்டும் பத்தாம் நூற்றாண்டில் முன் பின்னாகத் தோன்றியனவாகக் கருதப்பெறுகின்றன. சோழ அரசர் மரபினராகக் கருதப்பெறும் திருத்தக்க தேவரால் சீவக சிந்தாமணி என்னும் விருத்தக் காப்பியம் இயற்றப்பட்டது. தொடர்ந்து இலக்கிய வாழ்வும் சமய வாழ்வும் பெற்றுநிற்கும் ஒரு சில தமிழ்க் காப்பியங்களுள் சிந்தாமணியும் ஒன்று. தமிழிலக்கிய, இலக்கண

மரபுகள், மானுட வாழ்வியல் கருத்துக்ள் மற்றும் தத்துவங்கள் ஆகியன இலக்கியப் பதிவுபெறும் பாங்கு போன்ற சிந்தனைகள் ஆராயப்பெறும் நிலையில் ஒரு சிறந்த சான்றாதாரமாக அறிஞர்கள் சிந்தாமணியைச் சுட்டிக்காட்டுவர். தொல்காப்பியம், பத்துப்பாட்டு, கலித்தொகை போன்ற சங்ககால இலக்கியங்கட்கு உரையெழுதி உதவிய உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் சீவகசிந்தாமணிக்கும் உரையெழுதியுள்ளமையும், சமண சமயம் சார்ந்த யாப்பிலக்கண உரைகாரர் மட்டுமின்றி மணக்குடவர், பரிமேலழகர் போன்ற பிற சமய அறிஞர்களும் இக்காப்பியத்தை மேற்கோளாகப் பலவிடங்களில் காட்டிப் போந்தமையும், சிந்தாமணியெனும் செழுங்கடலுள் ஓர் அகப்பை முகந்து கொண்டேன் எனக் கம்பர் கூறியதாக வரும் மரபுவழிச் செய்தியும் சிந்தாமணியின் இலக்கியச் சிறப்பிற்குச் சான்று பகர்வனவாக உள்ளன.

இத்தகைய சிறப்புடைய சீவக சிந்தாமணி என்னும் செந்தமிழ்க் காப்பியம் தனக்கு முந்திய காப்பிய மரபின் தொடர்ச்சியாகவும், தனக்குப் பின்னர்த் தோன்றும் காப்பியங்களுக்குச் சில அம்சங்களில் தோற்றுவாயாகவும் அமைந்திருக்கக் காண்கிறோம். நீண்ட நெடிய வளமான வரலாற்றினைப் பெற்றிருக்கும் எந்த ஓர் இலக்கியப் பாரம்பரியத்திலும் இத்தகைய மரபுத் தொடர்ச்சி அமைந்திருப்பது இயல்புதான். உயிர்களின் வரலாற்றில் காணப்படும் உள்ளது சிறத்தல் என்னும் பரிணாமவளர்ச்சி இலக்கிய வரலாற்றிலும் காணப்படுதலைச் சாட்விக், பௌரா, வைஸ்டைன், ரீமக், லெவின் போன்ற புகழ்பெற்ற ஒப்பிலக்கிய அறிஞர்கள் எடுத்துக் காட்டியுள்ளமை இதன்தொடர்பில் சிந்திக்கத்தக்கது.

நானில வருணனை, இசை, நடனம் போன்ற நுண்கலைகள், ஒப்பனைக் கலைகள் போன்ற பண்டைத் தமிழ் மரபுகளைப் பெருங்கதை போற்றிப் பின்பற்றியுள்ளது. இத்தகைய மரபுத் தொடர்ச்சி சீவக சிந்தாமணியில் காண்பப்படுவதற்குப் பெருங்கதை முன்னோடியாக இருத்தலைக் காண்கிறோம். இனித் தன்னேரில்லாத் தலைவனொருவனைப் பாடுபொருளாகக் கொள்ளும் காப்பியம் அவனுடைய வாழ்க்கை முடிவில் துறவறம் கொள்வதாக வரும் மரபினை முதன்முதலாகப் பெருங்கதையில் காண்கிறோம். பெருங்கதையின் இறுதிப்பகுதி கிடைக்காமற் போயினும், அதனுடைய முதனூல்களெனக் கருதப்படும் பைசாச மொழியில் குணாட்டியரால் செய்யப்பெற்ற பிருகத் கதா (கி.பி. முதல் நூற்) கங்க நாட்டரசன் துர்விநீதன் (கி.பி. 6ஆம் நூற்.)

வடமொழியில் மொழிபெயர்த்த பிருகத் கதா, மற்றும் பெருங்கதைக்குப் பின்னர்த் தோன்றிய உதயணகுமார காவியம் ஆகிய நூல்களில் துறவுக்காண்டம் என்றொரு பகுதி காணப்படுவதால், பெருங்கதையிலும் இறுதிப் பகுதியாகத் துறவுக் காண்டம் இருந்திருக்க வேண்டும் என உ.வே. சாமிநாதையர் தம் பெருங்கதைப் பதிப்பின் முகவுரையில் குறிப்பிடுகிறார். எனவே, சீவக சிந்தாமணியின் முத்தி இலம்பகம் என்னும் பகுதிக்கும் கொங்குவேளிரின் மாக்கதை முன்னோடியாக அமைந்தது எனக் கருதலாம். நிலையாமையை எடுத்துக் காட்டித் துறவினை வற்புறுத்துவது சமணசமயக் குறிக்கோளாதலின் திருத்தக்க தேவர் தாமாகவே முத்தி இலம்பகத்தைப் படைத்திருக்கலாமெனினும், காப்பிய மரபில் பெருங்கதை இதை முதலில் செய்து காட்டியுள்ளதாலும், வேறு பல காப்பிய உத்திகளைப் பெருங்கதை முதலில் பயன்படுத்தியுள்ளமையாலும் பெருங்கதையின் செல்வாக்கு குறித்த இக்கருத்து இவ்வாறு சுட்டப்பெறுகிறது.

இனி, மேற்சுட்டிய முதனூல்களின் குறிப்பின்றியே, பண்டைத் தமிழிலக்கண மரபினையொட்டித் தலைமக்களின் துறவு வாழ்க்கையைத் தமிழ்க் காப்பியக் கவிஞர்கள் படைத்துக் காட்டியுள்ளனர் எனக் கொண்டு,

காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே

என்னும் தொல்காப்பியக் களவியல் நூற்பாவைக் காட்டுதலும் உண்டு. இக்கருத்துக்கு அரண் செய்வதாக இறந்ததன் என்பதற்குச் 'சென்ற இல்லறத்தின்' என்வும் சிறந்தது பயிற்றல் என்பதற்கு வீட்டின்பம் கருதித் 'துறவறம் மேற்கொள்ளல்' எனவும் வரும் நச்சினார்க்கினியர் உரையைக் கொள்வர். இளம்பூரணரோ சிறந்தது பயிற்றலாவது அறத்தின்மேல் மனநிகழ்ச்சி எனக் குறிப்பிட்டு, சூத்திரத்தாற் பொருள் விளங்கும் என்று கூறுவதோடு அமைந்துவிட்டார். இனி, இறந்ததன் என்பதற்குப் பொருளீட்டச் செல்வதன் பயன் அறம் செய்தலே எனக் கொண்டு துறவறக் கருத்தை மறுப்பதாக ஒரு புதிய விளக்கமும் அண்மையில் கூறப்பட்டு வருகிறது. இந்த நூற்பா அகப்பொருள் கோட்பாட்டோடு பொருந்தாமை ஒருபுறம் இருக்க, இக் கருத்தையே தெளிவாகக் கூறும் நம்பியகப்பொருளும் இந்த விளக்கத்தை முன் வைக்கும் நச்சினார்க்கினியரும்

தொல்காப்பியருக்கு முந்திய அல்லது உடன்கால இலக்கியம் எதனையும் மேற்கோளாகக் காட்டாமையின் இந்த நூற்பாவின் தோற்றம் மற்றும் இடப்பொருத்தம் பற்றிய பல்வேறு ஐயங்களை இந்தக் கருத்து தோற்றுவிக்கும் அபாயமும் உண்டு. எனவே முதனூல் கருத்தை அடியொற்றியே கொங்குவேளிரும், திருத்தக்க தேவரும் துறவுப் பொருண்மையைத் தம் காப்பியங்களுள் படைத்துக்காட்டினர் எனக் கொள்ளுதலே நேரிதாகத் தோன்றுகிறது.

பக்தி இலக்கியத்தில் தன்னுணர்ச்சிக் கவிதையின் வடிவமாக வழங்கத் தொடங்கிய விருத்தம் என்னும் பாவினமும், திருத்தக்க தேவரின் சீவக சிந்தாமணியில் காப்பியம் என்னும் இலக்கிய வகைமையின் வடிவமாகப் பயன்படத் தொடங்கியது. இப்பாவினத்தின் பல்வேறு வடிவங்களைத் தேவர் பயன்படுத்தியுள்ள பாங்கின் சிறப்பால் பின்னர் எழுந்த எல்லாத் தமிழ்க் காப்பியங்களும் விருத்தப்பாவினைப் பயன்படுத்திப் பயன்பெற்றுள்ளன. விருத்தமெனும் ஒண்பாவிற்கு உயர்கம்பன் என்னும் போற்றுதலுக்கு அடிப்படையாகிய கம்பராமாயணமும் இவ்வகையில் சிந்தாமணியை முன்னோடியாகக் கொண்டதெனில் அது மிகையாது. இவ்வாறு தமிழ் யாப்பியல் வளர்ச்சியில் சிந்தாமணியின் பங்கு குறிப்பிடத் தக்கதாக அமைந்துள்ளது.

மேலும் காப்பிய வீரம் (epic heroism) என்னும் பாடுபொருள் வகையிலும் சிந்தாமணி முன்னோடியாகத் திகழக் காண்கிறோம். இந்திய நாட்டு இதிகாசங்களும் பெரும்பாலான மேலைநாட்டுக் காப்பியங்களும் (மில்டனின் காப்பியம் தவிர்த்து) தலைமக்களது போர் வீரத்தையே பாடுபொருளாகக் கொண்டு சிறப்பித்துப் பாடியிருக்கின்றன. தன் தந்தையின் பகைவனையும் தன் பகைவர்களையும் சீவகன் போர் செய்து வென்றதாகப் பாடினாலும், வெறும் உடல்வலியாலும் போர்ப் பயிற்சியாலும் கருவிகளாலும் வெல்லுவதாகக் காட்டும் வீரத்தை இகழ்ந்து கூறுவதை.

நல்லவை புரியும் மாந்தர் நாந்தகம் பிழைத்து வீழா
அல்லவை புரியும் மாந்தர்க்கு அத்திரம் ஒன்றும் வாயா
வெல்வதோர் குணத்தின் மிக்கார் வெற்றிலை விடினும்
வேலாம்
இல்லையே வென்றி தீமை இடங்கொண்ட
மனத்தினார்க்கே (சி.815)

எனவரும் தேவரின் பாட்டு விளக்கி நிற்கிறது. அறத்தின் வழி ஒழுகும் ஒருவனே வெற்றிபெற இயலும்:எத்துணை

ஆற்றலுடையவனும் அறமற்ற உள்ளத்தனாயின் வெற்றிபெற இயலாது எனக் காப்பிய வீரத்திற்குப் புது இலக்கணம் வகுத்த சிந்தாமணி பின்னர் வரும் பல காப்பியங்களுக்கு இவ்வகையில் முன்னோடியாகத் திகழ்கிறது. கவிச்சக்கரவர்த்தி என்று தகுதியுடன் புகழப்பெறும் கம்பரும் இக்கருத்தை ஏற்று அறத்தின் நாயகனான இராமனின் வீரத்தையும் இராவணனின் வீரமின்மையையும் மிக அழகாகக் கீழ்வருமாறு படைத்துக் காட்டுகிறார்.

*அறத்தினால் அன்றி அமரர்க்கும் அருஞ்சமம் கடத்தல்*
*மறத்தினால் அரிது என்பது மனத்திடை வலித்தி;*
*பறத்தி நின்நெடும் பதிபுகக் கிளையொடும், பாவி*
*இறத்தி : யான்அது நினைக்கிலென் தனிமை கண்டு*
*இரங்கி.* (VI, *14:251*)

அறம் கடந்து மறவாழ்க்கை மேற்கொண்டு ஒழுகிய காரணத்தால், வாரணம் பொருத மார்பையும், வரையினை எடுத்த தோளையும், சங்கரன் கொடுத்த வாளையும் உடைய மாவீரனாகிய இராவணன், தன் வீரத்தையும் போர்க்களத்தே போட்டுவிட்டு வெறுங்கையனாய்த் திரும்பிச் சென்றான் என்னும் கம்பசித்திரம் தேவரின் கருத்தை எதிரொலிக்கக் காணலாம்.

இவ்வாறு தன் பண்டைய தமிழ் மரபினையும், முதனூல் மரபுகளையும் பேணிப் போற்றும் சீவக சிந்தாமணி பாவின வகையிலும் பாவிக வகையிலும் சில புதுமைகளையும் படைத்துப் பின்னின்ற காப்பியங்களுக்கு நல்லதோர் முன்னோடியாகவும் விளங்குகிறது.

### சூளாமணி

சீவக சிந்தாமணியை அடுத்துப் பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய சூளாமணி என்னும் சமணக் காப்பியமும் விருத்தப் பாவால் இயன்றது. வடமொழியில் உள்ள, அருகதேவனே சொல்லியதாகக் கருதப்படும் மகாபுராணத்தில் வரும் ஒரு கதையை முதனூலாகக் கொண்டு சூளாமணி எழுதப்பெற்றது என்பர். நூல் அமைப்பிலும் பாடுபொருளிலும் பாவிகத்திலும் சீவக சிந்தாமணியைப் பின்பற்றி அமைந்ததாகக் காணப்படும் சூளாமணியில் காப்பிய உத்திகள் செவ்வையாகப் பின்பற்றப் படவில்லை. சமய நீதிகளையும் உலகியல் நீதிகளையும் மிகவும் சுவைபடக் கூறினாலும் சரியான கட்டமைப்பும், கிளத்தல் முறையும் (narrative mode) காணப்படாமையால் இதனைக் காப்பியம் எனக் கூறுவதைவிட ஒரு கதையின் மூலமாக நீதிகளை

அழகாகக் கூறும் நீதிநூல் என்று கூறுவதே பொருத்தமாக இருக்கும். சிலப்பதிகாரம், சிந்தாமணி, தேவாரம் ஆகிய தமிழ் நூல்களின் செல்வாக்கை இந்நூலுள் பல இடங்களில் காணமுடிகிறது. தமிழ்க் காப்பியங்களுள் ஒன்றென்னும் பெருமையைத் தவிர, காப்பிய வரலாற்று வளர்ச்சிக்குச் சூளாமணியின் பங்கு குறிப்பிடத் தக்கதாக அமையவில்லை.

## குண்டலகேசி, நீலகேசி, வளையாபதி

சற்று முன்பின்னாகப் பத்தாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் தோன்றிய முதல் இரு நூல்களுள் முன்னது பௌத்த சமயத்தைச் சார்ந்தது; பின்னது சமண சமயத்தைச் சார்ந்தது. விருத்தப் பாவால் இயன்று இனிய செய்யுட்கள் பலவற்றைக் கொண்டுள்ளன என்பது தவிர இவையிரண்டுக்கும் உரிய இலக்கியச் சிறப்புகளாக எவையும் இவற்றுள் காணப்பெறவில்லை. குண்டலகேசி நூல் இன்று வழக்கில் இல்லை. குண்டலகேசியின் பௌத்த சமயக் கருத்துகளை மறுத்துரைப்பதற்காக எழுந்த நீலகேசியின் வழியாகவும், யாப்பருங்கல விருத்தியுரை, வீரசோழியவுரை, சிவஞான சித்தியாருரை, புறத்திரட்டு போன்றவற்றில் எடுத்தாளப் பெறும் பாடல்கள் வழியாகவும் மட்டுமே குண்டலகேசியைப் பற்றிய சில செய்திகள் புலனாகின்றன. இதனுடைய ஆசிரியர் பெயரையும், நூல் எழுந்த காலத்தையும் அறிய இயலவில்லை.

குண்டலகேசியில் வைக்கப்பெறும் விவாதங்களுக்கு மறுப்புக் கூறவென்றே எழுந்த நீலகேசி என்னும் சிறுகாப்பியத்தின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. ஏறக்குறைய 900 பாடல்களைக் கொண்ட இந்நூலின் ஆசிரியர் விருத்தப் பாவின் பல்வேறு வகைகளை இயற்றுவதில் வல்லவர் என்பதும் தமிழிலக்கிய மரபிற்கேற்ப வருணனைகளைப் படைப்பதில் வல்லவர் என்பதும், தொல்காப்பியம், திருக்குறள், சீவக சிந்தாமணி போன்ற நூல்களிலிருந்து தொடர்களையும், கருத்துகளையும் எடுத்தாள்வதால் பண்டைத் தமிழிலக்கியப் புல்மையும் பற்றும் உடையவர் என்பதும் இந்நூலால் புலனாகின்றன. எனினும் காப்பியப் பண்புகள் எவையும் இந்நூலில் காணப்பெறவில்லை. காப்பியம் என்னும் இலக்கிய வகைமையின் வரலாற்றுத் தொடர்ச்சிக்கு நீலகேசியின் சிறப்பான பங்களிப்பாக எதனையும் குறிப்பிட இயலவில்லை.

வளையாபதி என்னும் சமண சமயச் சார்புடைய நூலும் இக் காலப்பகுதியில் தோன்றியது. இடைக்காலத்தில் வழக்கில்

இருந்து பின்னர் மறைந்துபோன குண்டலகேசி போன்று இந்த நூலும் மறைந்துபோயிற்று. இளம்பூரணர் முதலான உரையாசிரியர்களால் மேற்கோளாகக் காட்டப்பெற்ற சில பாடல்களும், புறத்திரட்டில் உள்ள 66 பாடல்களுமாகச் சேர்த்துச் சுமார் 70 பாடல்களே இந்நூலுக்கு உரியனவாக எஞ்சியுள்ளன. எனவே இதில் அமைந்துள்ள காப்பியக் கூறுகள் இவையென விதந்து ஆராய வாய்ப்பு இல்லை.

### கம்பராமாயணம்

கி.பி. பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்து நன்னூலுக்குச் சிறப்பான முதலுரை எழுதிய மயிலைநாதர் ஐம்பெருங் காப்பியங்கள் என்னும் வழக்கினை முதலில் கையாள்கிறார். அவர் தமக்கு முன்னர்த் தோன்றியிருந்த கம்பராமாயணம், பெரியபுராணம் என்னும் இரண்டையும் புறக்கணித்தது ஏன் என்று அறிய இயலவில்லை. சமண சமயச் சார்பு இப் புறக்கணிப்புக்குக் காரணமாக இருந்திருக்கலாமோ என்று கருதவேண்டியுள்ளது. எனினும் தமிழ்க் காப்பிய வரிசையில் கம்பராமாயணம் தனித்ததோர் இடத்தைப் பெற்று நிற்கிறது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மதுரையில் நிறுவப்பெற்ற நான்காம் தமிழ்ச் சங்கம் தமிழுக்குக் கதி என்று கம்பராமாயணத்தையும் திருக்குறளையும் போற்றியமை, இந்தக் காப்பியம் பற்றிய தமிழக அறிஞர்களின் கருத்தைப் புலப்படுத்துகிறது.

இராமாயணக் கதைக் குறிப்புகள் சங்க இலக்கியம் முதற்கொண்டு தமிழிலக்கிய வரலாறு நெடுகக் காணப்படுகின்றன. வான்மீகியின் காப்பியமும், பௌத்த, சமண சமயங்கள் படைத்துக் காட்டியுள்ள இராமாயணக் கதைகளும் தமிழ் நாட்டில் பண்டுதொட்டே வழங்கி வந்துள்ளன. பக்தி இயக்கக் காலத்தில் ஆழ்வார்கள் இராமனைப் புகழ்ந்து பல பாசுரங்களை அருளிச் செய்துள்ளனர். தேவாரப் பாடல்கள் இராவணனின் இசைப் புலமையையும் தோள்வலிமையையும் புகழ்ந்து பாடியுள்ளன. இக் கதைக்கருவைக் கொண்டு பத்தாம் நூற்றாண்டு வரை இராமகாதையைச் சிறப்பிக்கும் பெருங்காப்பியம் எதுவும் தோன்றவில்லை. இராமசரிதை, இராமாயண வெண்பா என இருநூல்கள் இருந்ததாகத் தொல்காப்பிய உரைகளின் வழி அறிகிறோம். ஆனால் அவற்றிலிருந்து மேற்கோளாகக் காட்டப்பெற்ற சில பாடல்கள் மட்டுமே இன்று எஞ்சியுள்ளன. நூல்கள் கிடைக்கவில்லை. எனவே அவற்றின் அமைப்பு, ஆசிரியர்கள், காலம் போன்ற செய்திகளை அறிய இயலவில்லை.

இந்நிலையில் கம்பரால் இயற்றப்பெற்ற இராமகாதை மட்டுமே தமிழில் எழுந்த முதல் இராமாயணக் காப்பியம் என்று கருதப்படுகிறது.

வான்மீகத்தை முதனூலாகக் கொண்ட வழிநூல் கம்பராமாயணம் என்பது வெள்ளிடைமலை. வழிநூலுக்கு உரியனவாகக் கூறப்பெற்ற தொகுத்தல், விரித்தல் என்னும் முறைகள் மொழிபெயர்த்து அதர்ப்பட யாத்தலுக்கும் ஒக்குமாகலின், கம்பரும் முதனூலைப் பல இடங்களில் தொகுத்தும், சில இடங்களில் விரித்தும் உரைப்பதோடு நில்லாது சிலவற்றை மாற்றியும், புதியனவாகச் சிலவற்றைச் சேர்த்தும் தம் காப்பியத்தை இயற்றியுள்ளார். எனவே கம்பராமாயணத்தை வெறும் மொழிபெயர்ப்பு என்று கூறாமல் மொழியாக்கப் படைப்பு (transcreation) என்று அறிஞர்கள் கருதுவர்.

வான்மீகத்தோடு, கம்பராமாயணத்தை ஒப்பிட்டுக் கூறுகையில் தரவாதாரமில்லாத சில பிழைபட்ட கருத்துகள் தமிழாராய்ச்சியில் காணப்பெறுகின்றன. இவை பெரும்பாலும் கம்பர்மீது ஏற்பட்ட பேரார்வம் காரணமாக விளைவன. சான்றாக ஒன்றைக் கூறலாம். வால்மீகி ஓரிரு சுலோகங்களில் வருணித்து விடுத்த கோசலநாட்டின் இயற்கை வளம், நகரச் சிறப்பு மற்றும் மனித மாண்புகளைக் கம்பர், ஆற்றுப்படலம், நாட்டுப்படலம், நகரப்படலம் என மூன்று படலங்களை அமைத்து மிக விரிவாகப் பாடியுள்ளார் என்னும் கருத்தைப் பல அறிஞர்கள் முன்வைத்துள்ளனர். பாடல்களின் எண்ணிக்கையைப் பொறுத்தவரையில், கம்பர் 20 பாடல்களில் ஆற்றுப் படலத்தையும், 61 பாடல்களில் நாட்டுப் படலத்தையும் 75 பாடல்களில் நகரப்படலத்தையும் அமைத்துள்ளார். இவற்றுள் ஆற்றுப் படலம் கம்பரின் படைப்பு. மூலநூலில் இப்படியொரு வருணனை இல்லை. வான்மீகத்தில் மட்டுமல்ல ; தமிழ்க் காப்பிய மரபிலும் கம்பனுக்கு முன்னர் இத்தகைய தனிவருணனை காணப்பெறவில்லை. இது கம்பரின் புதுமை என்பதில் ஐயமில்லை.

ஏனைய இரண்டு படலங்களிலும் 136 பாடல்களில் கோசல நாட்டையும் அயோத்தி நகரையும் கம்பர் வருணிக்கிறார். வால்மீகி பால காண்டத்தின் ஐந்தாவது, ஆறாவது சருக்கங்களில் 47 சுலோகங்களால் நாட்டையும், நகரையும் மக்களையும் விரிவாக வருணிக்கிறார். சுலோகங்களின் எண்ணிக்கை குறைவாயினும் கம்பரின் வருணனைச் சிறப்புகளாகக் கூறப்படுவன பலவும் வான்மீகத்திலேயே காணப்படுகின்றன என்னும் ஆய்வுச் செய்தி

முன்னரே வெளியிடப்பெற்றுள்ளது. "ஆங்கவன் புகழ்ந்த நாட்டை மூங்கையான் பேசலுற்றான் என்ன யான் பேசலுற்றேன்" என்று வான்மீகியின் வழிநின்று இவற்றைக் கூறுவதாகக் கம்பரே கூற, இத்தகைய நிதானமற்ற கருத்துகளைக் கூறிக் கம்பரைப் புகழ எண்ணுவது நேரிதாகப்படவில்லை.

காப்பியக் கட்டுக்கோப்பு, நிகழ்ச்சிகளை நாடகப் பாணியில் நடத்திச் செல்லுதல், மூல பாத்திரங்களுக்கு ஒப்புயர்வற்ற பண்புகளை ஏற்றிக் கூறல், அற்புதமான, அறிவொடுபட்ட கற்பனைகள், விருத்தப் பாவினைக் கையாளும் கலைச் சிறப்பு, வடமொழிப் பெயர்களைச் செந்தமிழாக மாற்றிப் படைத்து வழங்கும் மொழியார்வம், மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் என்னும் சங்க காலக் கோட்பாட்டை மாற்றி 'உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்' எனக்கூறும் அரசியல் விவேகம், உயிரினங்கட்கெல்லாம் பொதுவான சகோதரத்துவம் என்னும் வாழ்க்கைத் தத்துவம், மானுடம் போற்றும் வாழ்வியல் பார்வை, வையத்துள் வாழ்வாங்கு வாழும் மானுடன் வானுறையும் தெய்வமும் ஆகலாம் என்னும் உள்ளது சிறக்கும் ஆன்மீகப் பார்வை என்பன போன்ற எண்ணற்ற காப்பியச் சிறப்புகள் கம்பராமாயணத்துள் பொதிந்து கிடக்கின்றன.

கம்ப நாடன் கவிதையிற்போல், கற்றோர்க்கு இதயம் களியாதே என்னும் இடைக்காலச் சுவைஞர்களின் பாராட்டு உண்மைதான்; வெறும் புகழ்ச்சியில்லை.

மனிதர்களைப் போலவே இலக்கியங்களும் வாழ்வு-தாழ்வு என்னும் ஏற்ற இறக்கங்களைச் சந்திக்கும் நிலையை உலக இலக்கிய வரலாறுகளில் காண்கிறோம். இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சில சமுதாயக் காரணிகளால் கம்பராமாயணமும் சில எதிர்ப்புகளைக் கண்டது. இராவண காவியம், கீமாயணம் போன்ற படைப்புகளும், வால்மீகி வாய்மையும் கம்பன் புளுகும், கம்பரசம் போன்ற கட்டுரைகளும் இத்தகைய எதிர்ப்பின் இலக்கிய வெளிப்பாடுகளாகத் தோன்றின. இந்த எதிர்நூல்களைப் படைத்தவர்கள் எல்லாம் கம்பரை நன்றாகக் கற்ற பேரறிஞர்கள்; பார்வைதான் வேறுபட்டது.

இப் படைப்புகள் ஒருவகையில் கம்பராமாயண ஆய்வுகள் மிகுதிப்படவும், கம்பராமாயணப் பதிப்புகள், கம்பன் கழகங்கள் போன்ற கம்பனைப் பயிலும் முயற்சிகள் மேற்கொள்ளப்படவும் உதவி செய்தன. கம்பராமாயணத்தை ஓரிலக்கியமாகக் கருதாமல் ஒரு சமுதாய ஆவணமாகக் கருதியமையால் இத்தகைய எதிர்

அலைகள் தமிழகத்தே தோன்றின. எனினும் கம்பராமாயணச் செல்வாக்கையோ, தமிழக மக்களிடையே மரபு சார்ந்து பதிவாகியுள்ள இராம காதையின் செல்வாக்கையோ இவை எந்த வகையிலும் பாதித்ததாகத் தெரியவில்லை. ஹோமர், மில்டன் போன்ற பெருங்கவிஞர்களின் காப்பியங்களும் தம் உடன்காலத்தும் பிற்காலத்தும் இந் நூற்றாண்டிலும் இத்தகைய எதிர்ப்புகளைக் கண்டன. எனினும் அவற்றால் நற்பயன்களே விளைந்தன.

பழந்தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகள் ஆழ்வார் பெருமக்களின் அருளிச்செயல்கள், சிந்தாமணியின் சில காப்பியக் கூறுகள் போன்ற தமிழ் இலக்கிய மரபின் செல்வாக்கைக் கம்பராமாயணத்தில் காண்கிறோம். அவ்வாறே கம்பராமாயணத்தின் செல்வாக்கும் அதன்பின்னர் எழுந்த பல இலக்கியங்களில் படிந்திருக்கக் காண்கிறோம். கம்பருக்குப் பின்னர்த் தோன்றிய தக்கை ராமாயணம் போன்ற காப்பியங்களிலும், எதிர்ப்பினைக் கண்ட இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய இரட்சணிய யாத்திரிகம், பாரதசக்தி மகாகாவியம், காந்தி மகான் கதை, இயேசு காவியம், ஏன், எதிர் நூல் எனக் கருதப்படும் இராவண காவியம் போன்ற காப்பியங்களிலும் கருத்து, உவமை, கற்பனை, நடை, ஓசைநயம் போன்ற பல கவிதைக் கூறுகளில் கம்பராமாயணச் செல்வாக்கு படிந்திருப்பதை ஆய்வுகள் பல வெளிப்படுத்தியுள்ளன.

வான்புகழ் வள்ளுவரின் திருக்குறளுக்கு அடுத்த நிலையில் மிகுதியான, சுமார் 650க்கும் மேற்பட்ட திறனாய்வு நூல்களையும் கட்டுரைகளையும் பெற்று நிற்பது கம்பராமாயணம். ஒப்பிலக்கிய ஆய்வில், வால்மீகி, துளசிதாஸ் (இந்தி), கிருத்தி வாசன் (வங்காளி), மாதவ கந்தலி (அசாமி), பம்ப, தொரவ (கன்னடம்). எழுத்தச்சன், கண்ணச பணிக்கர் (மலையாளம்), ரங்கநாத, பாஸ்கர, மொல்ல (தெலுகு) போன்ற இந்தியக் கவிஞர்களின் இராமாயணங்களோடும், மலேசியா, தாய், லாவோசிய, பர்மா, சீனா, சப்பான், கம்போடியா ஆகிய தெற்காசிய மொழி ராமாயணங்களோடும், ஹோமர், வெர்ஜில், தாந்தே, தாசோ, கெமோவான், ஸ்பென்சர், மில்டன் போன்ற ஐரோப்பியக் கவிஞர்களோடும் பன்னாட்டு அறிஞர்கள் பலரால் ஒப்பிட்டு ஆராயப்பெற்ற பெருமையுடையது கம்பராமாயணம். இவ்வகையில் முன்னோடியாக வ.வே.சு. ஐயரின் ஒப்பாய்வைக் குறிப்பிடலாம்.

ஒப்பிலக்கிய ஆய்வில் செல்வாக்குக் கோட்பாடு (influence study) என்பது மிகவும் பரவலாகச் செய்யப்படும் ஓர் ஆய்வுநெறி. அரசியல் செல்வாக்கு, பண்பாட்டுச் செல்வாக்கு, இலக்கிய ஆர்வம்

என்னும் காரணங்களால் ஒரு மொழியிலுள்ள இலக்கியங்கள் பிற மொழிகளுக்கு மொழிபெயர்ப்பாகவும், தழுவலாகவும் செல்வதுண்டு. இத்தகைய இலக்கியக் குடியேற்றம் உலக இலக்கியங்கள் பலவற்றில் காணப்படும் ஒரு பொதுநெறியாக அமைந்துள்ளது.

இத்தகைய செல்வாக்குகளில் ஏதேனும் ஒன்றாலோ பலவற்றாலோ பெறுமொழிக்குச் (receptor's language) சென்ற ஓரிலக்கியம் மிக்க செல்வாக்கடைந்து நாளடைவில் தன் மூல இலக்கியத்தின் மீதே தன் தாக்கத்தைச் செலுத்துவதும் உண்டு. இவ்வாறான அரியதொரு தாக்கத்தைக் கம்பராமாயணம் வால்மீகி இராமாயணத்தின் மீது செலுத்தியிருப்பதைச் சில அண்மைக்கால ஆய்வுகள் வெளிப்படுத்தியுள்ளன (ஒப்பியல் முன்னுரைகள், **கம்பராமாயணம்:** பால, அயோத்தியா காண்டங்கள், கோவை கம்பன் கழகம், 1993, 1994). பால காண்டத்தில் உள்ள திருஅவதாரப் படலத்தில் வரும் இராமன் முதலான நால்வரின் பிறப்பின் போது இருந்த கிரக நிலைகளும், கௌதமன் அகலிகையைக் கல்லாகச் சபித்தான் என்ற விவரமும் மூல வான்மீகத்தில் இல்லாத செய்திகள். ஆனால் தென்னகத்தே பெயர்த்தெழுதி வாராநின்ற கிரந்த, மலையாள, தெலுகு எழுத்துகளில் உள்ள தென்புல வழக்கு (Southern Recension) வான்மீகங்களில் அவை காணப்படுகின்றன. இத்தகைய எதிர்த் தாக்கத்தை ஏற்படுத்திய செய்திகளைக் கம்பர் தாமே புதியனவாகப் படைத்துக் கூறினார் எனக் கூற இயலாது. அவருடைய மரபாகிய தமிழ்ப் பண்பாட்டில் இதற்குரிய அடிப்படைத் தரவுகள் நூல் வடிவிலோ, வாய்மொழி மரபிலோ இருந்திருக்கலாம். எனினும் கம்பராமாயணம் வழக்கிற்கு வந்த பின்னரே வான்மீக ஏடுகள் திருத்தப்பெற்றன என்பது உண்மை. வடபுல வழக்கு வான்மீகங்களில் இத் திருத்தங்கள் காணப்படவில்லை என்னும் செய்தி மேற்குறித்த கருத்தை வலியுறுத்துகிறது. இத்தகைய எதிர்த்தாக்கம் வேறெந்த மூல இலக்கியத்திற்கும் ஏற்பட்டதாக ஒப்பிலக்கிய ஆய்வுகளில் இதுவரை வெளிப்படவில்லை. இது போன்றே அயோத்தியா காண்டம் முதலான பிற காண்டங்களிலும் இத்தகைய எதிர்த்தாக்கக் கூறுகள் காணப்படுகின்றன.

இவ்வாறு, தமிழ்க் காப்பியநிலை, தமிழ்ப் பண்பாட்டு நிலை, இந்தியக் காப்பிய வளர்ச்சி நிலை, காப்பியம் பற்றிய உலக அளவிலான ஒப்பாய்வு நிலை, கற்கும் தோறும் இனிக்கும் கவிதைநிலை எனப் பலநிலைகளிலும் கம்பராமாயணம் சிறப்புற்று விளங்குகிறது.

## பெரியபுராணம்

இந்த இலக்கிய வரலாற்றின் இரண்டாம் பகுதியில் (கி.பி. 6-கி.பி.9ஆம் நூற்.) தோன்றித் தமிழ்ப் பண்பாட்டின் மறுமலர்ச்சிக்குப் பேருதவி செய்த பக்தி இலக்கியத்தின் காப்பிய வாரிசாகச் சேக்கிழார் பெருமானால் இயற்றப்பெற்ற, பெரிய புராணம் என்று பரவலாக அறியப்பெற்ற திருத்தொண்டர் புராணம் தோன்றியது. புராணம் என்னும் பெயரால் தமிழில் தோன்றிய இலக்கியங்களுள் காப்பியம் என்று கருதத் தக்க சிறப்புடையது பெரிய புராணம் மட்டும்தான்.

சான்றோருடைத்து என்று புகழப்பெற்ற தொண்டை நாட்டில் உள்ள குன்றத்தூரில், சேக்கிழார் என்னும் சைவப் பெருங்குடியில் தோன்றிய அருண்மொழித்தேவர் சைவப் பற்றும் தமிழ்ப் புலமையும் அரசியல் ஆட்சித் திறமும் கொண்ட மாமனிதராக விளங்கிய பின்னர் அவர்தம் இயற்பெயர் மறைந்து சேக்கிழார் என்னும் குடிப்பெயரே நிலைத்துவிட்டது. இரண்டாம் குலோத்துங்க சோழனின் தலைமை அமைச்சராகப் பொறுப் பேற்றிருந்த சேக்கிழார் நாட்டின் பல பகுதிகளுக்கும் சென்று திருக்கோயில்களைக் கண்டு வணங்கும் வாய்ப்பினையும் அங்குப் பாடப்பெற்றுவந்த தேவாரப் பதிகங்களைக் கேட்டும் அவற்றைத் தாங்கிய ஏடுகளைப் படித்தும் மகிழும் வாய்ப்பினையும் பெற்றிருந்தார். சுந்தர மூர்த்தி நாயனார் அருளிய திருத்தொண்டத் தொகையிற் குறிக்கப்பெற்ற நாயன்மார்களைப் பற்றிய பெருநூல் ஒன்று எழுதக் கருதித் திருத்தொண்டத் தொகையை முதல்நூலாகவும் நம்பியாண்டார் நம்பிகள் அருளிய திருத்தொண்டர் திருவந்தாதியை வழி நூலாகவும் கொண்டு, திருத்தொண்டர் புராணம் என்னும் காப்பியத்தைச் சேக்கிழார் இயற்றினார். சோழப் பேரரசனின் ஆதரவால் இயற்றப்பெற்ற இந்நூல் அவனுடைய முன்னிலையில் தில்லையில் கி.பி. 1140 இல் அரங்கேற்றப் பெற்றது. பெரியபுராணம் கூறும் அடியார் சிறப்புகளையெல்லாம் சேக்கிழாரே விரித்துக் கூறக் கேட்டு மகிழ்ந்த குலோத்துங்க சோழன் அவருக்குப் பலவகையான சிறப்புகள் செய்து தொண்டர்சீர் பரவுவார் என்னும் சீரிய, பொருத்தமான பட்டத்தையும் வழங்கிப் பாராட்டினான்.

தமிழ் இலக்கியப் புலமையும், சிவநெறிப் பற்றும், பண்பட்ட உள்ளமும் கொண்டிருந்த சேக்கிழார் சமண சமயக் காப்பியங்கள் பல தமிழில் தோன்றி அறிஞர்களால் பாராட்டப் பெற்று வந்த நிலையில் சிவனடியார்களின் பெருமையை உலகுக்கு எடுத்துரைக்க

விரும்பிய சூழலில் தம் காப்பியத்தைப் படைத்தார். உமாபதி சிவாசாரியரால் எழுதப்பெற்றதாகக் கருதப்பெறும் சேக்கிழார் புராணம், "சோழன் அனபாயன் முதலானோர் சீவக சிந்தாமணியைப் பலகாலும் கற்றுப் பாராட்டுவதைக் கேட்டு உள்ளம் வருந்திய சேக்கிழார், சிந்தாமணி மிகவும் குறைபாடுடைய நூல் என்றும் அதனைக் கற்போர் கரும்பிருக்க இரும்பு கடித்தோர் போல்வர் என்றும் கூறி அறிவுறுத்தவும், அதனைக் கேட்ட சோழன் இதனினும் சிறந்த நூல் உண்டாயின் அதனைக் கூறும் என, நாயன்மார் பெருமைகளைச் சேக்கிழார் விரித்துக் கூறிய அளவில், சிவனடியார்களின் பெருமையைக் கூறும் நூல் ஒன்றை நீரே இயற்றும் என்று அரசன் பணிக்க, சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் செய்தார்" என்று கூறுகிறது.

சமண சமயத்தை எதிர்க்கவும், சீவக சிந்தாமணியைத் தூற்றவும் கருதிச் சேக்கிழார் தம் நூலை எழுதினார் என்று கூறும் மேற்சுட்டிய கருத்து பிழைபட்டது, உண்மைக்கு மாறானது என்பதைத் திரு.வி.க., அ.ச. ஞானசம்பந்தன் போன்ற சைவச் சான்றோர்கள் திட்டவட்டமாகக் கூறியுள்ளனர். (**திருத்தொண்டர் புராணம்** (ப.ஆ.) அ.ச. ஞானசம்பந்தன், முன்னுரை, பக்.12,20). இத்தகைய காழ்ப்புணர்வு சேக்கிழாரின் காப்பியத்துள் எங்கும் காணப்பெறவில்லை என்பதும் இதன் தொடர்பில் சிந்திக்கத் தக்கது.

இனிய எளிய ஆற்றொழுக்கான கவிதைநடை, வரம்பிகவாத வருணனைகள், பாடுபொருளுக்கேற்ற பாத்திரப் படைப்புகள், நிகழ்ச்சிகளை நாடகப்படுத்தி நடத்தும் கிளத்தல் முறைமை போன்ற காப்பியக் கூறுகள் நிறைந்திருப்பதோடு, பெரியபுராணம் பக்திக் காப்பியம், வரலாற்றுக் காப்பியம் என்னும் இருவேறு சிறப்புகளையும் பெற்றுள்ளது.

### பக்திக்காப்பியம்

புத்தரைப் போற்றுவதாக மணிமேகலையும், அருகனை வணங்குவதாகச் சீவக சிந்தாமணியும், சூளாமணியும் சில பகுதிகளில் படைத்துக்காட்டினும் இந்தக் காப்பியங்களின் பாடுபொருள் பக்தியன்று; இவை துறவினை வற்புறுத்திப் பாவிகமாக்கியுள்ளன. சிவன், திருமால், அருகன் ஆகியோரைப் போற்றி வணங்கும் பகுதிகள் சிலப்பதிகாரத்துள் காணப்படினும் அதன் பாவிகமும் பக்திச் சுவை அன்று. தேவார, திருவாசக, நாலாயிரங்கள் பக்தியையே உள்ளடக்கமாக உடையன எனினும் அவை காப்பியங்களல்ல. இவற்றை யடுத்துத் தோன்றிய கந்த

புராணம், திருவிளையாடற் புராணம் போன்றனவும், இதிகாச வழிவந்த கம்பராமாயணம், வில்லிபாரதம் போன்றனவும் முறையே சைவ, வைணவ சமயங்களைச் சார்ந்தனவாயினும் இவற்றின் மையப் பொருளாகிய பாவிகமும் பக்தியன்று; எனவே இவற்றைப் பக்திக் காப்பியம் என்று இலக்கிய வரலாறு கூறுவதில்லை.

பக்திக் காப்பியம் என்பது இரண்டு நோக்கங்களை உடையது. ஒன்று, வீடும் வேண்டா விறலினர்களாகிய அடியார்கள் இறைவன்பால் செலுத்தும் தன்னலமற்ற பக்தியைப் பாடுவது; மற்றொன்று, இத்தகைய அடியார்களை மட்டுமே காப்பியத் தலைமை மாந்தர்களாகப் படைத்துக்காட்டுவது.

நாற்பொருள் பயக்கும் நடையென்னும் காப்பிய மரபையும் கடந்து நிற்பது பக்தியுணர்வு. அப்பால் எட்டே மெய்ப்பாடு என்னும் எண்சுவையையும், சாந்தம் அல்லது சமநிலை என்னும் ஒன்பதாவது சுவையையும் கடந்து நிற்கும் பத்தாவது சுவைதான் பக்தி என்பது. இத்தகைய பயன்தூக்காத் தன்மைத்தாகிய பக்தியை, தன்னை மறந்து தன்நாமம் கெட்டுத் தலைவன் தாளினையே பற்றி நிற்கும் பக்தியுணர்வைக் காப்பியத்தின் தலைமைச் சுவையாக்கிப் பாடுவது பெரிய புராணம் ஒன்றுதான். 'பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவ' என்று சேக்கிழார் பிள்ளைத் தமிழ் போற்றுவதும் இந்தப் பண்பைத்தான்.

நாயன்மார் பாடல்களிலும், ஆழ்வார்களின் அருளிச் செயல்களிலும் பக்திச் சுவை நிரம்பித் ததும்புகின்றது என்பது உண்மையே. திருவாசகமும் திருவாய்மொழியும் முறையே மணிவாசகப் பெருமானையும் குருகூர்ச் சடகோபனையும் மட்டுமே உருகச்செய்ய வில்லை; அவற்றைச் சேவிக்கும் நம்மையும் பக்தி வெள்ளத்துள் ஆழ்த்துகின்றன. எனினும் இவையெல்லாம் தோடுடைய செவியனையும் திருவளர் மார்பனையும் போற்றுவனவே தவிர நாயன்மார்களையோ ஆழ்வார்களையோ பாடுவனவல்ல. பெரிய புராணமோ அறுபான் மும்மை அடியார்களைத் தலைமை மாந்தராகப் பாடும் முதல் தமிழ்க் காப்பியம். பெரியபுராணத்துள் வரும் ஒவ்வொரு அடியாரின் வாழ்க்கையிலும் இறைவன் தொடர்புறுவதாகக் கதை செல்லும்; எனினும் அக்கதை இறைவனுடையதன்று; அவனுடைய அடியார்களைப் பற்றியதுதான். இறைவன் தமக்கு அடியார் பெருமையை உணர்த்தியருளிய பின்னரே, சுந்தர மூர்த்தி நாயனார் திருத்தொண்டத் தொகை பாடினார் என்பதும், கம்பர் அரங்கன் சந்நிதியில் தம் காப்பியத்தை அரங்கேற்ற முற்படுகையில்

அவையோர் முதலில் நம் சடகோபனைப் பாடினையோ என்று வினவி அவரைப் பாடச் செய்தனர் என வரும் மரபுவழிச் செய்தியும் தொண்டர்தம் பெருமையைக் கூறும் வரலாற்று நிகழ்வுகள். தன் இயற்பெயரையே மறந்து, மறைத்துத் தம்மைத் தொண்டர் அடிப்பொடி என்று அழைத்து மகிழ்ந்த ஆழ்வாரின் திருவுள்ளமே இந்தக் கோட்பாட்டின் வெளிப்பாடாகக் கொள்ளக்கிடக்கிறது.

இவ்வாறு பெரிய புராணம் பக்திச் சுவையைப் பாவிகமாகவும், அடியார் பெருமையைப் பாடுபொருளாகவும் கொண்டு தனிச் சிறப்புற்று விளங்குவதால் பக்திக் காப்பியம் என்று அழைக்கப்பெறுகிறது.

### வரலாற்றுக் காப்பியம்

சோழ நாட்டின் அமைச்சராக விளங்கிய காரணத்தால் தமிழ் நாட்டுப் பகுதிகள் பலவற்றிற்கும் நேரிற் செல்லும் வாய்ப்பினையும், தமக்கு முற்பட்ட காலத்து வரலாற்று நிகழ்ச்சிகளை அறிந்து கொள்ளும் வாய்ப்பினையும் சேக்கிழார் பெற்றிருந்தார். அக்காலத்தில் வழக்கில் இருந்த வரலாற்று மூலங்களாகிய ஆவணங்கள், கல்வெட்டுகள், செப்பேடுகள், ஆணை ஓலைகள் என்பனவெல்லாம் அமைச்சரின் பார்வைக்கு உட்பட்டவை. மேலும், தாம் பாடப்புகுந்த திருத்தொண்டர்களில் பெரும்பாலோர் பக்தி இயக்கக் காலத்தவர்கள். அவர்களுடைய இயக்கமும் தொண்டும் சமயம் சார்ந்தனவாதலால் கோயில்களைச் சுற்றியே அவர்களுடைய தொண்டு வாழ்க்கை அமைந்தது. வரலாற்றுத் தலங்களாக விளங்கிய இத்தகைய கோயில்கள் எல்லாம் அரசின் மேற்பார்வையில் இருந்து வந்தன. எனவே, அடியார்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை அறிந்துகொள்ள விரும்பிய சேக்கிழார்க்கு அவை எளிதில் கிடைப்பனவாயின. திருத்தொண்டர்களைப் பற்றிய வரலாற்று மூலங்களாகிய திருமுறைகள் திருக்கோயில்களில் பாதுகாத்து வைக்கப்பட்டிருந்தன. ஆதலின் அவையும் சேக்கிழார்க்கு எளிதில் கிடைக்கும் வாய்ப்பமைந்தது. மேலும், நாயன்மார்களில் பலர் வரலாற்றுச் சிறப்புடைய அரசர்களாகவும், குறுநில மன்னர்களாகவும், அமைச்சர்களாகவும், படைத் தலைவர்களாகவும் விளங்கியுள்ளனர். அவர்களைப் பற்றிய வரலாற்று மூலங்களும் அமைச்சர் என்ற முறையில் சேக்கிழாரின் வரலாற்றுப் பார்வைக்கு எளிதிற் கிடைப்பனவாக இருந்தன. இத்தகைய வரலாற்றுச் சான்றுகளைப் பின்புலமாகக் கொண்டு சேக்கிழார் தம் காப்பியத்தைப் பாடியுள்ளமையால் அக்காலத் தமிழகத்தின் வரலாற்றை உள்ளவாறு அறிவதற்குப் பெரிய புராணம் பெருந்துணையாகப் பயன்படுகிறது.

தேவார ஆசிரியர்களான அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரும் தலங்கள் தோறும் சென்று இறைவனை வழிபட்டுத் திருப்பதிகங்கள் பாடிய செய்திகளை விரித்துரைக்கும் பாங்கில் அவர்கள் சென்ற வழியின் தன்மை, வழியில் காணும் தலங்கள், கடந்து சென்ற ஆறுகள், காடுகள், ஒவ்வொரு தலத்தையும் பற்றிய குறிப்புகள் ஆகியவற்றை இலக்கிய நயம்பட விளக்கும் இக் காப்பியம் இத் திருத்தலங்களைக் காண விரும்புவோர்க்கு இன்றும் நல்லதொரு வழிகாட்டியாகவும் தலவரலாற்றுக் களஞ்சியமாகவும் விளங்குகிறது.

நாட்டு வரலாற்றை மட்டுமின்றி நாயன்மார்கள் திருப்பதிகங்கள் பாடிய சூழலையும், அவற்றின் அமைப்பையும் அறிந்து கொள்ளவும் பெரியபுராணம் பயன்படுகிறது. நாயன்மார்கள் பதிகம் பாடும் நிகழ்ச்சியை விவரிக்கும்போது அதற்கு முன்னரும் பின்னரும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைச் சேக்கிழார் கோவையாகக் கூறுகிறார். சேக்கிழார்தரும் இந்த விவரங்கள் இல்லையேல் திருப்பதிகங்களுக்குரிய காரண காரியங்களையும், அவற்றின் முறைவைப்பையும் நம்மால் உணர்ந்து கொள்ள முடியாமற் போயிருக்கும். எந்தெந்த நாயன்மாரைப் பாடுகிறாரோ, அந்தந்த நாயன்மார்களின் பதிக முதற் குறிப்புகளைத் தம் பாடலுள் சேர்த்துப் பாடுகிறார். காட்டாகக் காரைக்கால் அம்மையார் பேய்வடிவம் பெற்ற பின்னர் அற்புதத் திருவந்தாதியைப் பாடியதாகவும், இறைவனது திருநடனத்தைத் திருவாலங்காட்டில் கண்டு மகிழ்ந்த நிலையில் மூத்த திருப்பதிகம் பாடியதாகவும் சேக்கிழார் கூறுகிறார். நாயன்மார்களின் பதிகத் தொடக்கச் சொற்களையும் தொடர்களையும் அவ்வாறே குறிப்பிடுகிறார். மேலும் அவர்கள் எந்தெந்தப் பண்களால் தம் திருப்பதிகங்களைப் பாடினார்களோ, அந்தந்தப் பண்களாலேயே அந்தந்த நாயன்மார்களின் வரலாற்றைப் பாடியுள்ளார். இவையெல்லாம் வரலாற்று மூலங்களின் அடிப்படையிலேயே தம் நூலைச் சேக்கிழார் பாடியுள்ளார் என்பதை விளக்கும் அகச்சான்றுகளாக உள்ளன.

இதனால் வரலாற்று ஆதாரங்களின் அடிப்படையிலேயே சேக்கிழார் தம் காப்பியத்தை இயற்றியுள்ளார் என்பதும், அக்கால அரசியல், சமுதாய நிலைகளையும் நாயன்மார்களின் வாழ்க்கை மற்றும் திருப்பதிகங்கள் பாடிய சூழலையும் உள்ளவாறு அறிந்தகொள்ள உதவும் வரலாற்றுப் பெட்டகமாகப் பெரியபுராணம் அமைந்துள்ளது என்பதும் பெறப்படுகின்றன.

## காப்பிய இலக்கணமும் பெரிய புராணமும்

பெரிய புராணம் வகைமைக் கட்டுக்கோப்புடைய (architectonics) ஒரு காப்பியமா? பொதுவாக ஆய்வுலகம் ஏற்றுக்கொண்டுள்ள காப்பிய இலக்கணங்களை உடையதா? அன்றிப் பல கதைமாந்தர்களின் தனிக்கதைகளாக அமைந்த பல புராணங்களின் தொகுப்பா? என்ற விவாதம் தமிழாராய்ச்சி உலகில் நிலவி வருகிறது.

தன்னேரில்லாத ஒரு தலைவனின் வாழ்க்கையைக் கூறுவதாக அமைந்து அவனுடைய வாழ்க்கையின் வெற்றி தோல்விகளை விளக்கி நூல் முழுவதும் ஒரே பாவிகப் பண்பினை (epic theme) உடையதாக ஒரு காப்பியம் அமைய வேண்டும் என்னும் காப்பியக் கோட்பாட்டின் அடிப்படையில் பெரிய புராணம் ஒரு காப்பியம் அன்று எனக் கருதப்படுகிறது. பெரிய புராணம் பல நாயன்மார்களின் புராணமாக இருப்பினும், காப்பிய நிகழ்ச்சி (epic action), சுந்தரர் வாழ்ந்த திருக்கயிலையில் தொடங்கி அவர் நிலவுலகில் அவதரித்துத் தடுத்தாட் கொள்ளப்பெற்ற வரலாற்றைக் கூறிப் பின்னர்த் தில்லைவாழ் அந்தணர் முதலாக எல்லா நாயன்மார்களையும் பாடி முடிவில் வெள்ளை யானை மீதேறிச் சுந்தரர் கயிலை திரும்புவதாக முதலும் முடிவும் சுந்தரர் புராணமாக அமைந்திருப்பதால் அவரே தன்னேரில்லாத் தலைவனாகப் பாடப் பெற்றுள்ளார். எனவே தூது, திருமணம், இகல், வென்றி போன்ற காப்பியக் கூறுகள் அவர்மேல் வைத்துக் கூறப்பட்டுள்ளன. நாயன்மார்களின் கதைநெடுக அவற்றின் உயிரோட்டமாக அமைந்துள்ள பக்திச் சுவைதான் பெரிய புராணத்தின் பாவிகப் பண்பு. எனவே பெரிய புராணம் ஒரு காப்பியந்தான் என்று அறிஞர் பலர் கருதுகின்றனர் (மு.அ.12/237-244).

சிறந்த பாத்திரப் படைப்பு, இனிய வருணனைகள், எண்வகை மெய்ப்பாடுகள் போன்ற கவிதைச் சுவையெல்லாம் நிரம்பியதாயினும், தன்னேரில்லாத ஒரு தலைவனின் கதையாகப் பெரிய புராணம் அமையவில்லை என்பது உண்மைதான். திருத்தொண்டத் தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி ஆகிய முதல் நூலும் வழிநூலும், சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணமும் 'தொண்டர்கள்' என்று பன்மைத் தலைமக்களைத்தான் நூற்பெயருக்குச் சூட்டியுள்ளன. தொண்டர்சீர் பரவுவார் எனச் சோழ அரசன் அளித்த பட்டமும் இந்நூல் தொண்டர்கள் பலரைப் பற்றிய புராணம் என்பதையே சுட்டுகிறது.

இந்தத் தடைவிடைகளுக்கான அடிப்படைக் காரணம் தண்டியலங்காரம் கூறும் தன்னேரில்லாத் தலைவன் என்னும் கருத்துதான். பெரும்பான்மையான காப்பியங்களின் அடிப்படையில் தன்னேரில்லாத் தலைமையைக் காப்பிய இலக்கணமாகத் தண்டி கூறினாரேனும் எல்லாக் காப்பியங்களும் அவ்வாறே அமையவேண்டும் என்னும் படைப்புக் கட்டாயம் இல்லை; எல்லாக் காப்பியங்களும் அவ்வாறு அமையவும் இல்லை.

நமது இதிகாசங்கள் பெருங்காப்பியங்களா என்று யாரும் விவாதிப்பதில்லை. உலக அளவில் அவை தலைசிறந்த காப்பியங்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன. ஆனால் மகாபாரதம் என்னும் இதிகாசத்தில் தன்னேரில்லாத் தலைவன் யார்? தருமனா, வீமனா, அருச்சுனனா, அல்லது பாரதக் கதையை நகர்த்திச் செல்லும் சூத்திரதாரியாகிய கண்ணனா? இவர்களுள் யாருடைய பெயரையும் இக் காப்பியம் தன்பெயராகக் கொள்ளவில்லை. இனி, வீரர்கள் தோற்பதும் உண்டு என்ற கிரேக்கக் கோட்பாட்டையும், சுவர்க்க நீக்கம் (Paradise Lost) என்னும் அருங்காப்பியத்தைப் படைத்த மில்டனின் நோக்கையும் கருதிப் பார்த்தால், மகாபாரதத்தில் வீழ்ச்சியுற்றவனாகக் காட்டப்பெறும் கொடைமடம்பட்ட கர்ணனையோ அன்றிச் செருக்கின் சின்னமான துரியோதனனையோ தலைமைப் பாத்திரமாகக் கொள்ள இயலுமா? இதற்குரிய விடை வெளிப்படை. இவர்களுள் யாருமே பாரதக்கதையின் தன்னேரில்லாத் தலைவன் இல்லையென்றால், மகாபாரதம் தலைவனற்ற காப்பியமா? தலைவனே இல்லாமல் ஒரு காப்பியம் எழுந்திருக்க இயலாது. பின்னர் யார்தான் இதன் தலைவன்?

பாரதப்போரில் ஐவரில் யார் ஒருவர் இறக்க நேர்ந்தாலும் மற்றவர்களும் தாமே இறந்துபடும் கோட்பாடுடையவர்கள் என்பதைத் தருமன் பலவிடங்களில் சுட்டிக் காட்டுகிறான். கண்ணன் சகாதேவனின் அன்புத் தளையால் கட்டுண்டு மீளவியலாத நிலையில், உனக்கு என்ன வரம் வேண்டும் என்ற கண்ணனிடம் சகாதேவன் எங்கள் ஐவரையும் தேவியொடு காத்தருள வேண்டும் என்று வேண்டுகிறான். இந்திய மொழிகள் பலவற்றில் பாண்டவர் கதை, பாண்டவர் சரிதை என்றே பாரதக் கதையாகிய காப்பியம் வழங்குகிறது. எனவே பாண்டவர் ஐவரையும் சேர்த்து ஒன்றாகக் கருதும் கூட்டுத்தலைமையே பாரதக் கதையின் தலைமைப் பாத்திரம் என்பது தெளிவாகிறது. ஐரோப்பாவில் இத்தாலிய மொழியிலும், ஆங்கில மொழியிலும் முறையே தாசோ,

எட்மண்ட் ஸ்பென்சர் ஆகியோரால் இத்தகைய கூட்டுத் தலைமையுடைய காப்பியங்கள் இயற்றப் பெற்றுள்ளன.

எனவே, பாரி ஒருவனுமல்லன், மாரியும் உண்டு என்னும் கருத்துக்கேற்பத், தண்டி ஒருவனுமல்லன், காப்பிய இலக்கணிகள் பிறரும் உண்டு எனக் கொண்டு, 63 நாயன்மார்களின் அருள்தொண்டைப் (பக்தியை) பாவிகமாக உடைய பெரிய புராணமும் கூட்டுத் தலைமையை உடைய ஒரு சிறந்த காப்பியம்தான் என்று கொள்ளுவதே பொருத்தமான கோட்பாடாகக் கொள்ளலாம்.

### மாணிக்கவாசகரைப் பாடாதது ஏன்?

சைவ சமயக் குரவர் நால்வருள் அப்பர், சம்பந்தர், சுந்தரர் என்னும் மூவரையும் தனியடியார்கள் அறுபதின்மரையும், தொகையடியார்கள் எனப் பலரையும் தம் புராணத்துள் பாடிச் சிறப்பித்த சேக்கிழார் மணிவாசகப் பெருமானைப் பாடாது விடுத்தது ஏன் என்று விளங்கவில்லை. அவருடைய திருவாசகத்தை எட்டாம் திருமுறையாக நம்பியாண்டார் நம்பியின் காலத்திலேயே சேர்த்திருக்கவும் இவ்விடுபாடு ஏன் என்னும் வினா எழுகிறது. மேலும், சேக்கிழாருக்கு உடன்காலத்தவரான திருவியலூர் உய்யவந்த தேவ நாயனார் தம்முடைய திருக்களிற்றுப் படியார் என்னும் சாத்திர நூலில் (49, 52, 73, 88, 95 பாடல்கள்) மணிவாசகரை மற்ற மூவரோடும் சேர்த்துக் கூறுகிறார் என்பதும், சேக்கிழாருக்குச் சற்றுப் பின்னர் வாழ்ந்த பெரும்பற்றப் புலியூர் நம்பியின் திருவிளையாடலில் நான்கு படலங்களில் திருவாதவூரார் புராணமும், ஒரு பாடலில் (21) நால்வர் துதியும் இடம்பெற்றிருப்பதும் இவ் வினாவைக் கூர்மையாக்குகின்றன.

### யசோதர காவியம்

மேற்சுட்டிய குண்டலகேசி முதலான மூன்று சிறு காப்பியங்களையடுத்துப் பதின்மூன்றாம் நூற்றாண்டில் யசோதர காவியம் என்னும் சமண நூல் தோன்றியது. யசோதரன் என்னும் தலைமகனைப் பற்றி வாதிராச சூரி அல்லது புட்ப தந்தன் என்பவர்களால் எழுதப்பெற்ற வடமொழி நூல்களின் தழுவலாக அமைந்த இந்த நூல் சமணசமயக் கருத்துகளைப் பரப்புவதாக அமைந்துள்ளது. புலால் உண்ணாமை, கொல்லாமை போன்ற அறங்களை வற்புறுத்தும் இந்நூல், பெண்களைப் பழித்தும், இல்லறத்தைக் கடிந்தும் கூறித் துறவறமே மேற்கொள்ளத் தக்கது

என்றும் இசை முதலாய நுண்கலைகள் தவிர்க்கற்பாலன என்றும் கூறுகிறது.

இந்நூலில் காப்பியப் பண்புகள் எவையும் காணப்பெறவில்லை. யசோதரனைப் பற்றிக் கூறும் கதைநெடுகிலும் இலக்கியச் சுவைக்குரிய பகுதிகளும் இல்லை. இங்கொன்றும் அங்கொன்றுமாகச் சில செய்யுட்கள் அணிநலம் அமையப் பாடப்பெற்றுள்ளன. காவியம் என்னும் பெயரால் இந்நூலை அழைப்பது சொல்லுக்குச் செய்கிற அபசாரம் என்று மு. அருணாசலம் அவர்கள் கூறுவதில் (13/379) சற்றுக் கடுமை தோன்றினும் உண்மை அதுதான்.

பெருங்கதை, சிந்தாமணி, சூளாமணி, நீலகேசி போன்ற காப்பியங்கள் சமண மதச் சார்புடையனவேனும், அவையெல்லாம் இசை, நடனம், ஒப்பனை போன்ற கலைகளைப் பலபடப் பாராட்டிக் கூறுகின்றன; பெண்களையும், அவர்தம் கற்பின் திறத்தையும் புகழ்ந்து பேசுகின்றன. இறுதியில் துறவறத்தை நோக்கிச் செல்லுவதாகத் தலைமக்களைப் படைத்துக் காட்டினாலும் இல்லறம் புகுந்து வாழ்ந்து மகிழ்ந்த வாழ்க்கையினைப் பலபட உயர்த்திக் கூறுகின்றன. இத்தகைய காப்பியங்களுக்குப் பின்னர் எழுந்த நூல்மட்டும் களப்பிரத் தன்மையுடையதாய்த் தமிழ்ப் பண்பாட்டிற்கு முரண்பட்டதாய் இயற்றப்பட்டிருப்பது வேடிக்கையாக உள்ளது.

## நளவெண்பா

சங்க காலத்திலிருந்தே இராமாயண, பாரதக் கதை நிகழ்ச்சிகளும் பாத்திரப் பெயர்களும் நேரிடையாகவும், உவமை, உருவகம் முதலியன அணிகள் வாயிலாகவும் தமிழில் எடுத்தாளப் பெற்று வந்துள்ளன. இவ்விரு இதிகாசங்களைத் தமிழ்ப்படுத்தும் முயற்சியும் அக் காலத்திலிருந்தே மேற்கொள்ளப்பட்டிருக்கலாம் என்பதற்குரிய குறிப்புகள் பல காணப்படுகின்றன என மேலே கண்டோம்.

இதிகாசங்களை முழுமையாகத் தமிழ்ப்படுத்தும் முயற்சியோடு அவற்றில் இடம்பெற்றுள்ள கிளைக்கதைகளை மட்டும் தழுவி எழுந்தனவாகப் பல நூல்கள் தோன்றியுள்ளன. கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் தோன்றிய நளவெண்பா இத்தகைய முயற்சியால் விளைந்த மிக நல்லதொரு கிளைக்காப்பியம். புலவர்க்கு வெண்பா புலி என மருட்டப்பெற்ற

வெண்பா யாப்பில் இயன்ற இந்நூலின் சிறப்புக் கருதித் தமிழுலகு வெண்பாவிற் புகழேந்தி என்று இதனைப் புகழ்ந்து பாராட்டி வருகிறது. கதைபொதி பாடல்களின் வடிவமாக வெண்பா யாப்பு புகழேந்திக்கு முன்னரும் பின்னரும் பலரால் பயன்படுத்தப் பெற்றிருப்பினும், வகையுளி செய்யாமல் சீர்பிரித்த அளவிலேயே செம்பாகமாகப் பொருளுணர்த்துமாறு வெண்பாவைக் கையாண்டவர் வேறு யாருமில்லை. கதைப் பொருளைக் கிளந்துரைத்தல், வருணனைகள், பாத்திரப் பண்புகள், உலக நீதிகள் போன்றவற்றை எடுத்துரைத்தல் என்னும் பல்வேறு கூறுகளிலும் இலக்கியச் சுவை ததும்ப இயற்றப் பெற்ற நளவெண்பா புகழேந்தியின் பெயரைத் தமிழிலக்கிய வரலாற்றில் நிலைபெறச் செய்துவிட்டது. பிற்காலத்து எழுந்த பல்வேறு நாட்டுப்புறப் பாடல்கள் புகழேந்தியின் பெயரால் வழங்குவதும் அவருடைய நூலால் விளைந்த தாக்கமே எனலாம். இதே நளன் கதையை மிக விரிவான ஒரு காப்பியமாக நைடதம் என்னும் பெயரால் அதிவீரராம பாண்டியன் நானூறு ஆண்டுகளுக்குப் பின்னர் இயற்றினார். நைடதம் புலவர்க்கு அவுடதம் என உடன்காலத்தும் பின்னரும் இந்நூல் புகழப் பெற்றிருப்பினும், நளவெண்பாவைப் போன்று நைடதம் பெருவழக்குப் பெறவில்லை.

## நம்பி திருவிளையாடல்

பழைய வரலாறு என்னும் பொருளுடைய புராணம் என்னும் பெயரில் பலவகையான நூல்கள் தமிழில் படைக்கப்பட்டுள்ளன. இறைவனைப் பற்றியன, அடியார்களைப் பற்றியன, சமய ஆசாரியர்களைப் பற்றியன, தனித் தலைவர்களைப் பற்றியன எனப் பல பொருள்களைப்பற்றிப் புராணங்கள் பாடப்பெற்றுள்ளன. இவ்வகையில் தோன்றியவற்றுள் பன்னிரண்டாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் தோன்றிய திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணமே மிகச் சிறந்த நூல். சிவனடியார்களைப் பற்றிக் காப்பிய அமைப்பில் சேக்கிழாரால் செய்யப்பெற்ற இதனையடுத்து சிவபெருமானின் திருவிளையாடல்களைப் பற்றிய புராணமொன்று பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் தோன்றியது. வேம்பத்தூர் நம்பி எனவும் பெரும்பற்றப் புலியூர் நம்பி எனவும் பெயர்பெற்ற ஒரு கவிஞரால் இயற்றப்பெற்ற இந்தத் திருவிளையாடல்புராணம், நம்பி திருவிளையாடல் எனப் பொதுவாக அழைக்கப்படுகிறது. தலபுராணம் என்னும் இலக்கிய மரபில் தோன்றிய முதல் நூல் இதுவே. மதுரைப் பேராலவாயர் என்னும் இறைவனது

திருவிளையாடல்களைப் பற்றிய நூலாதலின் **மதுரைத் திருவிளையாடல்** எனவும் இந்நூல் வழங்கப்படுகிறது.

திருமாலின் அவதாரக் கவிதைகளையும், கண்ணபிரானின் இளமைக்காலத் திருவிளையாடல்களையும் கூறும் பாகவதமும் பெருவழக்காகச் சங்க காலத்திலிருந்தே வழங்கி வந்த நிலையில் சிவனைப் பற்றியும், சிவபெருமானது அருட் செயல்களைப் பற்றியும் திருவிளையாடல் என்னும் அழகான பெயரால் தமிழில் நூல்கள் எழத் தொடங்கின. இவ்வகையினும் முதலில் தோன்றியது நம்பி திருவிளையாடல் என்னும் இலக்கியமே ஆகும். பெரும்பாலான திருவிளையாடல்கள் மதுரையை நிகழிடமாகக் கொண்டவை; அல்லது தமிழகத்தின் பிற பகுதிகளை மையமாகக் கொண்டவை. மதுரையைப் பற்றிய செய்திகளை அறிந்து கொள்வதற்கு இந்நூல் பெரிதும் பயன்படுகிறது. பிற்காலச் சோழராட்சியின் இறங்கு முகமான காலகட்டத்தே பாண்டிய நாட்டு அரச மரபினரால் ஆதரிக்கப்பெற்ற புலவரொருவரால் இயற்றப்பெற்றதாதலின் பாண்டிநாட்டின் சிறப்புகள் பல இந்நூலுள் விரிவாகப் பேசப்பெறுகின்றன.

தேவார, திருவாசகங்களில் காணப்பெறும் சிவபெருமானின் அருட்செயல்கள் பலவற்றை இந்நூல் விவரித்துப் பாடுகிறது. திருத்தொண்டர் புராணம் எனப் பெயர் பெற்ற பெரிய புராணத்தில், மாணிக்க வாசகரின் வரலாறு வெளிப்படையாகக் கூறப்பெறவில்லை. மூவர் முதலிகள் மட்டுமே அதில் இடம்பெறுகின்றனர். ஆனால் நம்பி திருவிளையாடல் நால்வருக்கும் துதிப்பாடல்கள் அமைத்திருப்பதோடு, மாணிக்க வாசகரின் வரலாற்றை மட்டும் தனியே நான்கு படலங்களில் 241 விருத்தங்களில் விரித்துக் கூறுகிறது. திருவாசகப் பதிகங்கள் இயற்றப்பெற்ற சூழ்நிலையையும் இந்நூல் விளக்குகிறது.

எனினும் நானூறு ஆண்டுகளுக்குப் பின்னர்ப் பரஞ்சோதி முனிவரால் இயற்றப்பெற்ற திருவிளையாடற்புராணமே மிகவும் புகழ்பெற்ற நூலாகக் கருதப்படுகிறது. காப்பிய அமைப்பைத் தழுவியதுபோல அமைந்துள்ளமை, மிகவும் தெள்ளிய இனிய தமிழ் நடையில் இயன்றுள்ளமை, நாடகப் பாங்கில் கதையை நடத்திச் செல்லும் பாங்கு, இலக்கியச் சுவை குன்றாத பாடல்கள் போன்ற கூறுகளால் பரஞ்சோதி திருவிளையாடல் மிகுதியும் வழங்கப் பெற்ற காரணத்தால் நம்பி திருவிளையாடல் நாளடைவில் செல்வாக்கு இழந்தது எனக் கருதலாம்.

நம்பி திருவிளையாடலின் பாடலொன்று (முதல் திருவிளையாடல், 35)

ஓதரிய உத்தரமா புராணந் தன்னுள் உண்மைதரு
சாரசமுச் சயத்து முன்னம்
மேதகு நன்கதை

என்று கூறுகிறது. சார சமுச்சயம் என்பது உத்தர மாபுராணத்தின் ஒரு பகுதி. இப்போது இப்புராணம் வழக்கில் இல்லை. இக்குறிப்பினைக் கொண்டு இது மேற்கூறிய வடமொழி நூலின் தழுவல் எனக் கருதப் பெறுகிறது. தழுவல் நூல் வழக்கில் இருக்க, மூல நூல் மறைந்து போவதென்பது புதுமையான செய்தி. இந்நூலின் கதைகள் தமிழகத்தையும், தமிழ் அடியார்களையும், தமிழ்ச் சமுதாய மரபுகளையும், தமிழ்ப் பெயர்களையும் கொண்டுள்ளமையால் இது மதுரை மாநகரின் தலபுராணமாக விளங்குகிறது. இது தழுவலாயின், இதற்குரிய மூலநூல் தமிழகத்தே இருந்த வடமொழி அறிஞரால் பிற்காலச் சோழர்களின் ஆதரவு மிக்கிருந்த காலத்தே இயற்றப் பெற்றிருக்க வேண்டும். மேலும் வடபுலப் பண்பாட்டில் இத்தகைய திருவிளையாடல்கள் தலபுராணமாக எழுவதற்குரிய வாய்ப்புகள் இல்லை. இனி இத் திருவிளையாடல்களில் பல தேவார ஆசிரியர்களால் முன்னரே பாடப்பெற்றுள்ளன என்பதும் சிந்தித்தற்குரியது. எனவே மொழி மூலமா, பண்பாட்டு மூலமா என்னும் வினா இதன் தொடர்பில் இன்னும் ஆழமாகவும் கூர்மையாகவும் ஆராயத் தக்கதாக அமைகிறது.

### பிரபந்தங்கள் : சிற்றிலக்கியங்கள்

கூற்று, துறை என்னும் இலக்கிய வகைமைக் கூறுகளின் (aspects of literary genres) அடிப்படையில் மலர்ந்த பண்டைய தமிழ்க் கவிதை மரபு சங்க காலத்திற்குப் பின்னர் தொடர்நிலைச் செய்யுளாக வளர்ந்தது. அவ்வகையில் ஒரு புறம் காப்பியங்களும் மற்றொரு புறம் அற நூல்களும் தோன்றின. நாளடைவில் ஒரு தலைவனின் அல்லது தலைவியின் வாழ்க்கை முழுவதையும் கூற எழுந்த காப்பியங்களிலிருந்து சற்றே வேறுபட்டு வாழ்க்கையின் சில கூறுகளை மட்டும் விளக்கும் வகையில் சிறு சிறு நூல்கள் தோன்றலாயின. அதாவது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருள்களுள் ஏதேனும் ஒன்றை மட்டுமே பாடும் நூல்கள் எழலாயின. இவ்வகையில் தோன்றியன பலவும் மேற்சுட்டிய கூற்று அல்லது கிளவி, துறை என்னும் கூறுகளின் விரிந்த வடிவமாக

உருப்பெற்றன. இத்தகைய சிறு நூல்களுக்கான பொதுப் பெயராகப் பிரபந்தம் என்னும் சொல் பாட்டியல் நூல்கள் தோன்றிய காலத்தில் வழங்கத் தலைப்பட்டது. பின்னர், 19ஆம் நூற்றாண்டு முதல் அதுவே சிற்றிலக்கியம் என வழங்கப் பெற்றது.

இத்தகைய பிரபந்தப் படைப்புகள் இந்த இலக்கிய வரலாற்றுத் தொடரின் இரண்டாம் காலப்பகுதியில் முதன் முதலாக மலரத் தொடங்கின. கோவை, கலம்பகம், உலா, மும்மணிக்கோவை, எழுகூற்றிருக்கை, மடல், திருப்பள்ளியெழுச்சி, பாவைப்பாடல், பிள்ளைத்தமிழ் ஆகிய சிற்றிலக்கிய வடிவங்கள் இரண்டாம் காலப் பகுதியில் (கி.பி. 6-9ஆம் நூற்.) முதன் முதலாகத் தோன்றின.

### சிற்றிலக்கிய வகைகள்

கி.பி. 10-13ஆம் நூற்றாண்டுக் காலப்பகுதியில் மிகப் பல சிற்றிலக்கிய நூல்கள் தோன்றின. இவற்றுள் சில முன்னைய வரலாற்றுப் பகுதியில் தோன்றியவை; பல இந்தக் காலப்பகுதியில் தோன்றியவை.

அந்தாதி, இரட்டை மணிமாலை, பதிகம், மும்மணிக் கோவை, எழுகூற்றிருக்கை, தொள்ளாயிரம், கோவை, உலா, கலம்பகம், தூது, விருத்தம் ஆகிய பிரபந்த வகைகள் பக்தி இலக்கிய காலத்தில் தோன்றியவை.

திருமறம், ஒருபா ஒருபஃது, நான்மணி மாலை, திருவிசைப்பா, தனியன்கள், ஏகாதச மாலை, அலங்காரம், தாலாட்டு, பிள்ளைத் தமிழ், பரணி, நாடகம், சிந்து, விசயம், சரிதை, எதிர்நூல், நீதிநூல் போன்றவை முதன் முதலாக இந்தக் காலப்பகுதியில் தோன்றிய சிற்றிலக்கிய நூல்கள்.

பக்தி இலக்கிய காலத்தைத் தொடர்ந்து வந்தமையாலும், பிற்காலச் சோழப் பேரரசர்கள் வைதிகச் சமயங்களுக்குப் பெரும் ஆதரவினை அளித்து வந்தமையாலும் இந்தக் காலப் பகுதியில் தோன்றிய சிற்றிலக்கியங்களின் பாடுபொருள் பெரும்பாலும் சமயம் பற்றியதாக அமைந்தது. முதற் குலோத்துங்கனுக்குப் பிறகு தோன்றிய சிற்றிலக்கியங்களுள் பரணி, பிள்ளைத்தமிழ், உலா, சரிதை, நாடகம், விசயம் என்பன மன்னர்களையும், சிற்றரசர்களையும் பாடுவனவாக அமைந்துள்ளன.

திருமுறைகளாக வகுக்கப்பட்டமையாலும், எண்ணிக்கையாலும், புதிய வடிவங்கள் பலவற்றை

உருவாக்கியமையாலும் ஒன்பதாம் திருமுறை நூல்களும் பதினோராம் திருமுறை நூல்களும் சிற்றிலக்கிய வரலாற்றில் சிறப்பானதோர் இடத்தைப் பெற்றிருக்கின்றன. எனினும் தமிழிலக்கிய வரலாற்றின் பொதுவான ஓட்டத்திற்குச் சிற்றிலக்கிய மரபின் நன்கொடையாக இந்தக் காலப்பகுதி நமக்கு வழங்கிய அழியாப் புகழுடையனவாகச் சயங்கொண்டாரின் கலிங்கத்துப் பரணி, ஒட்டக்கூத்தரின் மூவருலா, குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழ், அவ்வையாரின் நீதி நூல்கள், அமுதனாரின் இராமானுச நூற்றந்தாதி, பொய்யாமொழிப் புலவரின் தஞ்சைவாணன் கோவை, சத்திமுற்றப் புலவரின் நாரை விடு தூது ஆகியவற்றைக் குறிப்பிடலாம். இந்த நூல்கள் எல்லாம் அந்தந்த இலக்கிய வகைக்கு எடுத்துக்காட்டாகக் கூறப்படுவன; மேலும் தோன்றியநாள் தொட்டு இன்று வரையும் தொடர்ந்து பயிலப்பட்டும் வரும் சிற்றிலக்கியங்களாக வாழ்ந்து வருவன எனலாம்.

### தத்துவ நூல்கள்

இலக்கியங்கள் தோன்றிய பின்னர் அவற்றை அடிப்படையாகக் கொண்டு இலக்கணங்கள் எழும் என்னும் தமிழ் மரபினுக்கு ஏற்ப, சமயத் துறையிலும் தோத்திர நூல்களாகிய திருமுறைகளும் நாலாயிரமும் தோன்றிய பின்னர் ஆச்சாரியப் பெருமக்கள் தோன்றிச் சாத்திரங்கள் எனப்பெறும் தத்துவ நூல்களை இயற்றினர். இவ்வகையில் பன்னிரண்டு, பதின்மூன்றாம் நூற்றாண்டுகளில் திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், ஞானாமிர்தம், சிவஞானபோதம், சிவஞான சித்தியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம் ஆகிய சைவ சித்தாந்த நூல்களும், பகவத்கீதையின் தமிழாக்கமாகத் தோன்றிய பரமார்த்த தரிசனம், குருபரம்பரையின் ஆறாயிரப்படி என்னும் வைணவ நூல்களும் தோன்றின.

தத்துவ நூல்கள் என்னும் பார்வையில் நோக்குமிடத்துச் சைவ சித்தாந்த நூல்களாக மேலே குறிக்கப்பெற்றவை மிகவும் ஆழமானவை; அவை யாவும் இறை தத்துவம், ஆன்ம தத்துவம், பிரபஞ்ச தத்துவம் என்னும் முத்திறக் கூறுகளையும் தருக்க நூல் முறைப்படி ஆராய்ந்து மிகவும் நுட்பமாக எடுத்துரைக்கும் தன்மையின. வைணவ குருபரம்பரை நூல்கள் இத் தன்மையினவல்ல. நாராயணனை முன்னிட்டு நாதமுனிகள் தொடக்கமாக வரும் ஆச்சாரியப் பெருமக்களின் வைபவங்களை எடுத்துக் கூறுமிடத்து இடைமடுத்து உபதேச மார்க்கமாக வைணவ

தத்துவக் கருத்துகள் குருபரம்பரைகளில் ஆங்காங்கே கூறப்பட்டு ஆளவந்தார் போன்றோரால் மிக விரிவாக ஆராயப் பெறுகின்றன என்பது உண்மையே. எனினும் அவை தத்துவ நூல்கள் என்னும் வகைமைக்கு உரியனவாகக் காணப்பெறவில்லை. ஆழ்வார் பெருமக்களின் அருளிச் செயல்களில் காணப்பெறும் தத்துவக் கூறுகள் எடுத்துக் காட்டப்பெற்று விளக்கப் படினும், இறையியல், ஆன்மவியல், பிரபஞ்சவியல் என்னும் கூறுகளைத் தத்துவங்களாகப் பிரித்து வரையறுக்கும் நிலையை அவற்றுள் காண இயலவில்லை. இலக்கிய வரலாற்றின் அடுத்த காலப் பகுதியில் (கி.பி. 14-17ஆம் நூற்.) பிள்ளை உலகாரியர் போன்றோரால் இத்தகைய தத்துவ நூல்கள் அருளப்பட்டமையை அந்தப் பகுதியில் கண்டு மகிழலாம்.

தத்துவ நூல்களின் மொழி நடையில் வடசொற் கலப்பு மிகுதியாகக் காணப்படுகிறது. பக்தி இயக்கக் காலம் முதலே தமிழர்களுக்கு வடமொழித் தொடர்பு மிகுதியாகித் தமிழ்மொழி நடையில் மாற்றம் ஏற்பட்டதாயினும், பல்லவர் காலத்தைவிடப் பிற்காலச் சோழராட்சியில்தான் வடமொழிச் செல்வாக்கு பல்வேறு துறைகளிலும் கால்கொள்ளலாயிற்று. இதன் விளைவாக வடமொழிப் பயிற்சியும் வடநூற் கருத்துகளும் வடமொழிச் சொற்களும் தமிழர்தம் வாழ்வின் பல்வேறு துறைகளில் இடம்பெறலாயின.

## கல்வெட்டு இலக்கியங்கள்

தமிழகத்தே இடம்பெற்றுள்ள கல்வெட்டுகளும் செப்பேடுகளும் அரசியல், சமுதாய ஆவணங்களாகப் பயன்படுவதோடு தமிழிலக்கிய வரலாற்றுக்கும் துணை செய்துள்ளன. இவற்றில் காணப்படும் மொழிநடை தமிழ் உரைநடையின் வளர்ச்சியை அறிந்துகொள்ளப் பெரிதும் உதவுகிறது. அவ்வக் காலப் பேச்சு மொழியின் இயல்பை அறிந்து கொள்ள உதவும் வரலாற்றுக் கருவியாக இருப்பது கல்வெட்டுகளும் செப்பேடுகளும்தான். சோழர், பாண்டியர், சிற்றரசர்கள் மற்றும் இலங்கைத் தமிழ் மன்னர்கள் ஆகிய தமிழ் வழங்கும் பல பகுதிகளிலும் உள்ள ஆட்சியாளர்களால் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளிலிருந்து அவ்வக்காலத் தமிழ் உரைநடை மற்றும் பேச்சு நடையின் தன்மையையும், பல்வேறு அருஞ்சொற்களையும் நாம் தெரிந்து கொள்கிறோம்.

இவ்வாறே இலங்கையிலும் கிறிஸ்துவுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே தமிழ்ச்சாசனங்கள் தோன்றிச் சோழப் பேரரசுக் காலம்வரை பலவாகப் பொறிக்கப்பட்டுள்ளமையை அறிகிறோம்.

தமிழ் மொழியின் இருவகை வழக்கையும் உணர்ந்து கொள்ள இவை பெரிதும் பயன்படுகின்றன. இவற்றின் விவரத்தை இந்நூலின் உள்ளே கல்வெட்டுப் பகுதியில் காணலாம்.

இனி, வேறு மூலங்களால் அறிந்து கொள்ள முடியாத தமிழ் இலக்கியங்கள் பலவற்றையும் கல்வெட்டுகளின் வழியாக நாம் அறிந்து கொள்ள முடிகிறது. இவ்வகையில் சிராமலை அந்தாதி, இராசராச விசயம், இராச ராசேசுவர நாடகம், வீரணுக்க விசயம், குலோத்துங்க சோழன் சரிதை, அருணிலை விசாகன் பாரதம், சிந்துப் பிரபந்தம், போர் வஞ்சி, காங்கேயன் பிள்ளைத் தமிழ் ஆகிய நூல்களைக் குறிப்பிடலாம். இவற்றுள் பல நூல்கள் இன்று வழக்கில் இல்லை. இந் நூல்களைப் பற்றிய பிற விவரங்களை அந்தந்தத் தலைப்புகளின் கீழ்க் கண்டுகொள்ளலாம்.

## இலக்கண நூல்கள்

தொல்காப்பியத்தைத் தொடர்ந்து வந்த தமிழிலக்கண மரபு பக்தி இலக்கியக் காலத்தில் சில தனி நூல்களாக வெளிப்பட்டது. இறையனார் களவியலுக்கு உரை வகுக்கப்பெற்ற காலத்தில் தொல்காப்பியப் பொருளதிகாரம் வழக்கு மங்கியிருந்ததாகத் தெரிகிறது. எனவே அக்குறையை நீக்குவதன் பொருட்டுப் புறப்பொருள் வெண்பா மாலை, இறையனார் களவியல், தமிழ் நெறி விளக்கம் என்னும் நூல்கள் கி.பி. எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுகளில் தோன்றலாயின. இவற்றைப் பற்றிய விவரமும் ஆய்வுரைகளும் இவ் இலக்கிய வரலாற்றின் இரண்டாம் பகுதியில் (கி.பி. 501-900) மிக விளக்கமாகத் தரப்பட்டுள்ளன.

இவ்வரலாற்றின் மூன்றாம் பகுதியில் (கி.பி. 901-1300) பத்தாம் நூற்றாண்டளவில் பன்னிரு பாட்டியலும், பதினொன்றாம் நூற்றாண்டில் யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, வீரசோழியம் என்னும் மூன்று நூல்களும், பன்னிரண்டாம் நூற்றாண்டில் தண்டியலங்காரம், நேமிநாதம், வச்சணந்தி மாலை என்னும் மூன்று நூல்களும், பதின்மூன்றாம் நூற்றாண்டில் நன்னூல், அகப்பொருள் விளக்கம் என்னும் இரு நூல்களும் ஆக மொத்தம் ஒன்பது இலக்கண நூல்கள் தோன்றித் தமிழிலக்கண மரபின் தொடர்ச்சிக்கும் வளர்ச்சிக்கும் பெருந்தொண்டாற்றின. (தொல்காப்பியத்திற்குப் பின்னர்த் தமிழிலக்கண மரபு தொடர்ந்து வளர உதவிய இலக்கண நூல்களின் விவரத்திற்குக் கீழ்வரும் ஐந்திலக்கண நூல் அட்டவணையைக் காண்க).

இந்த ஒன்பது நூல்களில் பன்னிரு பாட்டியலும் வச்சணந்தி மாலையும் பிரபந்தங்களின் இலக்கணம் கூற எழுந்த பாட்டியல் வகையைச் சார்ந்தவை. நேமி நாதமும் நன்னூலும் எழுத்து, சொல் சார்ந்த தமிழிலக்கணக் கூறுகளை விளக்குவன. யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை என்னும் இரண்டும் தமிழ்க் கவிதை வரலாற்றில் பயன்பட்டுவரும் யாப்பியல் மரபுகளைக் கூறுவன. தண்டியலங்காரம் அணியிலக்கணம் பற்றி எழுந்தது. நம்பியகப்பொருள் சங்க அகப்பொருள் மரபுகளைக் கிளவித்தொகைகளாக வகுத்துக் கோவைப்படுத்திக் கூறுவது. வீரசோழியம் ஐந்திலக்கணம் என்னும் புது மரபினைத் தோற்றுவிக்க முயன்ற முதல் இலக்கண நூல்.

இவற்றுள் யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, தண்டியலங்காரம், நன்னூல், நம்பியகப் பொருள் ஆகிய ஐந்தும் தாம் தோன்றிய காலந்தொட்டு இன்றுவரை பலராலும் பயிலப்பட்டு வருகின்றன. ஏனைய நான்கும் ஆய்வுலகில் மட்டும் வழங்கிவருவன.

யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, அகப்பொருள் விளக்கம், நேமிநாதம் ஆகிய நான்கும் தமிழ் யாப்பு, தமிழ் அகப்பொருள், தமிழ் மொழியமைப்பு பற்றிய செய்திகளைத் தருவன. பிறமொழி இலக்கண உறவுகளோ குறிப்புகளோ இவற்றுள் இல்லை. பதவியல் என்னும் ஒரு சில பகுதியைத் தவிர, நன்னூலும் தமிழ்மொழியின் எழுத்தமைப்பு, சொல்லமைப்பு என்பனவற்றை மட்டும் பிறமொழித் தொடர்பின்றிக் கூறுகிறது. வீரசோழியம் ஐந்திலக்கணம் என்னும் ஒரு புது மரபைத் தோற்றுவிக்கும் முயற்சியாகத் தமிழிலக்கணக் கூறுகளைச் சமஸ்கிருத இலக்கணக் கூறுகளோடு இணைத்துத் தமிழறியாதோர்க்குத் தமிழ் கற்பிக்கும் நோக்கில் இயற்றப்பட்டது. இதன் ஆசிரியராகிய புத்தமித்திரரின் சமுதாயத்தில் பன்மொழிச் சூழல் இருந்த காரணத்தால் இத்தகைய நூலைப் படைத்திருக்கலாம் என்று கருதப்படுகிறது. எவ்வாறாயினும் இந்நூல் பரவலான ஆட்சியைப் பெறாமல் வழக்கு வீழ்ந்தது.

தண்டியலங்காரம் வடமொழித் தண்டியின் காவியாதரிசத்தின் மொழிபெயர்ப்பாகச் செய்யப்பெற்றது. வடமொழி அலங்காரங்களையும் தமிழ் மரபிலிருந்து உவமை, உருவகம், தன்மை நவிற்சி என்னும் அணிகளையும் சேர்த்து இந்நூல் தக்க எடுத்துக்காட்டுப் பாடல்களோடு விளக்குகிறது. தமிழ்

இலக்கண, இலக்கிய மரபில் இந்நூல் இன்றுவரை பெருவழக்காக நிலவிவருகிறது.

பன்னிரு பாட்டியலும், வச்சணந்தி மாலையும் சங்கம் மருவிய காலத்தையடுத்துத் தோன்றிவராநின்ற பல்வேறு புதிய இலக்கிய வடிவங்களுக்குப் பிரபந்தங்கள் எனப் பெயரிட்டு இலக்கணம் வகுத்துக் கூறும் பயனுள்ள நூல்கள். எனினும் இந்நூல்களின் தொடக்க இயல்களில் கூறப்படும் எழுத்துகளின் இனப் பொருத்தம், முதன்மொழிப் பொருத்தம், தலைமக்களின் பெயர்ப் பொருத்தம் முதலானவற்றிலும், பாவகைகளைக் கூறுமிடத்தும் நால்வகைச் சாதிப் பாகுபாடுகளைத் தொடர்புபடுத்திக் கூறுகின்ற காரணத்தால், இவை பயில்வாரற்று வழக்கு வீழ்ந்தன. இலக்கண ஆய்வை விடுத்து, அக்காலத்துச் சமுதாயத்தில் நிலவிய சாதி வேறுபாட்டுக் கூறுகளை ஆராயும் சமூகவியல் ஆய்வாளர்கட்கு இவை பெரிதும் பயன்படக்கூடும் எனக் கூறலாம்.

மேலே சுட்டிய இலக்கண நூல்களின் அமைப்பு, தமிழிலக்கண வரலாற்றுக்கு அவற்றின் பங்களிப்பு, சிறப்புக் கூறுகள் போன்ற விவரங்கள் உள்ளே அவ்வவற்றிற்குரிய இடங்களில் விரிவாகத் தரப்பட்டுள்ளன.

தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை, இறையனார் களவியல் ஆகிய முற்கால நூல்களைத் தவிர, இன்றுவரை பெருவழக்காய் ஆட்சி பெற்றிருக்கும் தமிழ் இலக்கண நூல்களெல்லாம் இந்தக் காலப் பகுதியில்தான் தோன்றின என்னும் பெருமை, கி.பி. 10முதல் 13ஆம் நூற்றாண்டுவரையான பிற்காலச் சோழப் பேரரசின் காலத்திற்கு உரியது என்பதில் ஐயமில்லை.

ஐந்திலக்கண நூல் அட்டவணை

| இலக்கணப் பிரிவு | நூற்பெயர் | ஆசிரியர் | காலம் நூற்றாண்டு | விளக்கம் |
|---|---|---|---|---|
| ஐந்திலக்கணம் | வீரசோழியம் | புத்தமித்திரனார் | 11 | வடமொழியைத் தழுவிச் செய்தார். தமிழுலகத்தில் ஆட்சி இல்லை. |
| ,, | இலக்கண விளக்கம் | வைத்தியநாத தேசிகர் | 17 | முந்திய நூல்களைத் தழுவிச் செய்தார், குட்டித் தொல்காப்பியம் என்று பெயர் பெற்றதாயினும், ஆட்சி இல்லை. |
| எழுத்தும் சொல்லும் | நேமிநாதம் | குணவீர பண்டிதர் | 12 | சின்னூல் என்றும் பெயர் பெறும். ஆட்சி இல்லை. |
| ,, | நன்னூல் | பவணந்தி முனிவர் | 13 | மிகச் சிறந்த நூல். இன்றுவரை ஆட்சியில் உள்ள பெருநூல் இதுவே. |
| பொருள் இலக்கணம் -புறப்பொருள் | பன்னிரு படலம் | பன்னிரு ஆசிரியர் | ? | தொல்காப்பியர் முதலா பன்னிருவர் ஆசிரியர் என்பர்; நூல் இல்லை; இதை இளம்பூரணர் மறுப்பர். |
| ,, | புறப்பொருள் வெண்பாமாலை | ஐயன் ஆரிதனார் | 9 | அதிகம் ஆட்சியிலுள்ளது. பன்னிரு படலத்தின் வழிச் செய்யப்பட்டது என்பர். |
| பொருள் இலக்கணம் - அகப்பொருள் | களவியல் | இறையனார் | 10 | நூல் சங்ககாலம் என்பர் உரையாசிரியர் நக்கீரனார் என்பர். ஆனால் உரை ஏட்டில் எழுதப் பெற்ற காலம் பத்தாம் நூற்றாண்டு. |
| ,, | தமிழ் நெறி விளக்கம் | தெரியவில்லை | 10 | பொருளியல் என்ற ஒரு பகுதி மட்டும் அச்சாகியுள்ளது. |

| | | | | |
|---|---|---|---|---|
| ,, | அகப்பொருள் விளக்கம் | நாற்கவிராச நம்பி | 13 | மிகச் சிறந்த அகப்பொருள் இலக்கணமாக இன்று வரை ஆட்சியிலுள்ளது. |
| ,, | களவியற்காரிகை | தெரியவில்லை | 14 | சிறந்த உரை, பெரிதும் சிதைவு. |
| ,, | மாறனகப்பொருள் | திருக்குருகைப் பெருமாள் கவிராயர் | 16 | இலக்கியமாக, திருப்பதிக் கோவை என்ற நூலை உடையது |
| யாப்பிலக்கணம் | யாப்பருங்கலம் | அமித சாகரர் | 11 | விரிந்த நூல், மிக விரிந்த உரையுடையது. சிறப்பான ஆட்சி இல்லை. |
| ,, | யாப்பருங்கலக் காரிகை | | 11 | சுருங்கிய நூல் இன்று வரை சிறந்த ஆட்சி பெற்றிருக்கிறது. |
| ,, | பா-பாவினம் | திருக்குருகைப் பெரு-மாள் கவிராயர் | 16 | நூல் உள்ளது, ஆட்சி இல்லை. |
| அணி இலக்கணம் | அணியியல் | தெரியவில்லை | ? | நூல் இல்லை. சில மேற்கோள்கள் மட்டும் காணப்படுகின்றன. |
| ,, | தண்டி யலங்காலம் | தண்டியாசிரியர் | 12 | இன்று வரை ஆட்சியிலுள்ள மிகச் சிறந்த நூல் |
| ,, | மாறனலங்காரம் | திருக்குருகைப் பெருமாள் கவிராயர் | 16 | மிக விரிந்த நூல், ஆட்சியில்லை |

இவ்வட்டவணையில், இறந்துபோன நூல்களான அவிநயம் முதலியவற்றைச் சொல்லவில்லை. பாட்டியல் வளர்ச்சி, உவமான சங்கிரகம், நிகண்டுகளின் வளர்ச்சி, முத்து வீரியம் போன்ற பிற்கால நூல்கள் ஆகிய பொருள்களைக் குறிப்பிடவில்லை (மு. அருணாசலம் தமிழிலக்கிய வரலாறு : பதினொன்றாம் நூற்றாண்டு, பக். 106-107)

## உரைகள்

இக்காலப் பகுதியில் தோன்றிய உரைகளைக் கீழ்வருமாறு பட்டியலிட்டுக் காணலாம்.

### இலக்கிய உரைகள்

| நூற்றாண்டு | நூல் | உரையாசிரியர் |
|---|---|---|
| 10 | திருக்குறள் | மணக்குடவர் |
| 11 | சிலப்பதிகாரம் | அரும்பதவுரை |
| 11 | திருக்குறள் | பரிப்பெருமாள் |
| 12 | புறநானூறு | பழையவுரை |
| 12 | சிலப்பதிகாரம் | அடியார்க்கு நல்லார் |
| 12 | திருவாய்மொழி, ஆறாயிரப்படி | திருக்குருகைப் பிரான் பிள்ளான் |
| 13 | ஐங்குறுநூறு | பழையவுரை |
| 13 | பதிற்றுப்பத்து | பழையவுரை |
| 13 | அகநானூறு | பழையவுரை |
| 13 | திருக்கோவையார் | பேராசிரியர் |
| 13 | திருவாய்மொழி, ஒன்பதினாயிரப்படி | நஞ்சீயர் |
| 13 | திருவாய்மொழி, இருபத்து நாலாயிரப்படி | பெரிய ஆச்சான்பிள்ளை |
| 13 | திருவாய்மொழி,ஈடு - முப்பத்- தாறாயிரப்படி | வடக்குத் திருவீதிப்பிள்ளை |
| 13 | திருவாய்மொழி வாசகமாலை | கோனேரி தாஸ்யை |
| 13 | வார்த்தா மாலை | பின்பழகிய பெருமாள்சீயர் |

| | | |
|---|---|---|
| 13 | திருக்குறள் | காலிங்கர் |
| 13 | திருக்குறள் | பரிமேலழகர் |
| 13 | பரிபாடல் | பரிமேலழகர் |

**இலக்கண உரைகள்**

| நூற்றாண்டு | நூல் | உரையாசிரியர் |
|---|---|---|
| 11 | யாப்பருங்கலம் விருத்தியுரை | பெயர் தெரியவில்லை |
| 11 | யாப்பருங்கலக் காரிகை | குணசாகரர் |
| 11 | தொல்காப்பியம்(எழுத்து, சொல், பொருள்) | இளம்பூரணர் |
| 12 | வீரசோழியம் | பெருந்தேவனார் |
| 13 | தொல்காப்பியம்(பொருள்) | பேராசிரியர் |
| 13 | தொல்காப்பியம்(சொல்) | சேனாவரையர் |

**இலக்கிய உரைகள்**

இந்தப் பட்டியலை நோக்குமிடத்துத் தமிழிலக்கிய வரலாற்றின் மூன்றாம் காலப்பகுதியை **உரையாசிரியர்களின் காலம்** எனக் கூறுமளவிற்குப் பேருரைகள் பல 10-13ஆம் நூற்றாண்டுகளில் தோன்றியுள்ளன. இலக்கியத்தைப் பொறுத்த வரையில் சங்க நூல்களுள் புறநானூறு, பதிற்றுப் பத்து, அகநானூறு, ஐங்குறுநூறு, பரிபாடல் என்னும் ஐந்து தொகை நூல்களுக்குப் பழைய உரைகள் இயற்றப்பட்டுள்ளன. சங்கம் மருவிய நூல்கள் இரண்டிற்கும் உரைகள் தோன்றியுள்ளன. அதிலும் சிலம்பிற்கு ஆழமும் அகலமும் கொண்ட அரும்பதவுரையும், அடியார்க்கு நல்லார் உரையும் தோன்றித் தமிழின் தலைக் காப்பியத்தின் அருமை பெருமைகளையெல்லாம் தெள்ளிதின் உணர்ந்து கொள்ள உதவியுள்ளன.

திருக்குறளைப் பொறுத்தவரையில், பதின்மர் உரை செய்ததாகக் கூறப்படினும் இதுவரை ஐந்து உரைகளே கிடைத்துள்ளன. இவற்றுள் முதல் உரையாகிய மணக்குடவர் உரையும் அவரையடுத்துப் பரிப்பெருமாள், காலிங்கர் ஆகிய இருவரது உரைகளும், இக் காலப்பகுதியின் இறுதியில் தோன்றிப்

பொன்றாப் புகழ் பூத்த பரிமேலழகரின் உரையும் ஆக நான்கு உரைகள் இப்பகுதியில் தோன்றின. இவற்றுள் பரிமேலழகரின் குறளுரை, மூலநூலாகிய திருக்குறளோடும், திருவாசகம், தொல்காப்பியம், திருத்தொண்டர் புராணம், சிவஞான சித்தியார் ஆகிய பலதிறப்பட்ட மூல நூல்களோடும் ஒக்கவைத்து எண்ணப்பட்ட பெருமையுடையது. மூல நூலைப் போன்றே சிக்கனமான சொற்செட்டும் திட்ப நுட்பமும் செறிந்த சிறப்புடையது எனப் பலராலும் பாராட்டப்பெறும் பொற்புடையது எனின் மிகையாகாது.

இனிப் பக்தி இலக்கியத்தின் பெருங்கனியாக விளைந்த நாலாயிரத்துள் நாரணற்கு ஞானத் தமிழ் புரிந்த ஆழ்வார்களின் மரபில் வந்து, அவனால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற, செந்தமிழ்த் தென்பாண்டித் திருக்குருகூர் நன்மாறனாகிய நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழிக்குப் பல பேருரைகள் எழுந்ததும் இக் காலப்பகுதியில்தான். காலச் சூழலுக்கேற்ப மணிப்பிரவாளம் என்னும் கலப்பு நடையில் எழுதப்பட்டனவாயினும், இப்பேருரைகள் மிகமிக ஆழமானவை; அகலமானவை. பிற்காலச் சோழப் பேரரசின் நிலையான, வளமான ஆட்சியின்கீழ்த் தமிழ்ச் சமுதாயமும் தமிழகச் சமயங்களும் பெற்றிருந்த வீறார்ந்த நிலையினை இவ் உரைகளின் வாயிலாக நன்கு உணர்ந்து கொள்ளலாம். வடமொழி வாய்பாடுகளை உடையனவாக இவ் உரைகள் காணப்பெறினும், இத்தகைய அற்புதமான வியாக்கியானங்கள் வடமொழி, தென்மொழி இரண்டிலும் விளைந்த வேறெந்த நூலுக்கும் தோன்றவில்லை என்பதும், தோன்றியிருப்பினும் அறிஞரிடையே தொடர்ந்து வழங்கவில்லை என்பதும் ஆரவாரமின்றிச் சிந்திக்கற்பாலன.

இத்தகைய பேறுடைய திருவாய்மொழியின் சிறப்பை விளக்குவதற்காகப் பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் திருவாய்மொழி வாசகமாலை என்னும் சிறியதோர் நூல்தோன்றியது. இதனை இயற்றியவர் கோனேரி தாஸ்யை என்னும் வைணவப் பெண்மணி. திருவாய்மொழியின் முதற்பாடலாகிய, "உயர்வற உயர்நலம் உடையவன்" என்னும் பாசுரத்தின் மையப்பொருளையும் கருத்தையுமே திருவாய் மொழியின் ஏனைய பாசுரங்கள் விளக்குகின்றன என்னும் கருத்தை விளக்குவதாக இந்த உரை நூல் அமைந்துள்ளது. திருஅதரித் தோன்றிய திருமந்திரமும், 'அவன் அவள் அது' எனத் தொடங்கும் சிவஞானபோதச் சூத்திரமும் அவ்வச் சமய தத்துவங்களின் பிரணவ மந்திரங்கள் என்னும் கருத்தை அறிஞர்கள் இதன் தொடர்பில்

சிந்தித்துப் பார்க்கலாம். வியாக்கியான மரபில் இத்தகையதொரு புதிய முயற்சியை மேற்கொண்ட இந்நூலைப் பற்றிய செய்திகள் சம்பிரதாய வரலாறுகளில் காணப்பெறவில்லை. ஆச்சாரியப் பாரம் பரியத்தைச் சேராத அம்மையாரால் இயற்றப்பட்டது என்பதால் இந்நூல் பிரபலப்படுத்தப் படவில்லை போலும்! பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டல் உகந்தருளிய திவ்விய தேசத்தில் தன்னை மறந்து தன் நாமம் கெட்டுத் 'தாஸ்யை' எனும் தாசா நாமத்துடன் திருவாய்மொழிக்கு ஒரு மூலபாடத் திறனாய்வு செய்த அம்மையார் நூலுக்கு இந்த நிலை! வாழ்க உடையவர் திருநாமம்.

## இலக்கண உரைகள்

எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐவகை இலக்கணக் கூறுகளுக்கும் இந்தக் காலப்பகுதியில் இலக்கணங்கள் தோன்றின. இவற்றுள் பொருள் பற்றியெழுந்த அகப்பொருள் விளக்கத்திற்கும்,அணியியல் பற்றியெழுந்த தண்டியலங்காரத்திற்கும் நூலாசிரியர்களே உரை இயற்றியுள்ளனர். எழுத்து, சொல் குறித்து எழுந்த நேமிநாதம், நன்னூல் ஆகியவற்றிற்கு இந்தக் காலப் பகுதியில் உரைகள் எழவில்லை. எஞ்சிய வீர சோழியத்திற்கும் யாப்பிலக்கண நூல்களுக்கும் உரிய விரிவான உரைகள் மூலநூல்களையடுத்துப் பதினொன்று, பன்னிரண்டாம் நூற்றாண்டுகளிலேயே தோன்றிவிட்டன. ஆக இவ் இலக்கிய வரலாற்றின் மூன்றாம் பகுதியில் தோன்றிய இலக்கணங்களில் பெரும்பாலானவற்றிற்கு உரைகளும் இதே காலப் பகுதியில் தோன்றின என அறிகிறோம்.

இவற்றுள் யாப்பருங்கலத்திற்கு இயற்றப்பெற்ற விருத்தியுரையும், வீரசோழியத்திற்குச் செய்யப்பெற்ற பெருந்தேவனாரின் உரையும் தமிழிலக்கிய வரலாற்றிற்கு மிகவும் இன்றியமையாதனவாக அமைந்துள்ளன. பயில்வார் அற்றமையினாலோ, வேறு பிற காரணங்களாலோ காலவெள்ளத்தில் மறைந்துபோன பல தமிழ் நூல்களையும், இடைக் காலத் தமிழ்ப் பண்பாட்டின் பல்வேறு சூழல்களில் பயன்பட்டு வந்த தமிழ்மொழி மரபுகளையும், சொற்களையும், அவை நுதலும் சமுதாய மரபுகளையும் அறிந்துகொள்ள இந்த உரைகள்தாம் நமக்கு உறுதுணையாக உள்ளன. இந்த வகையில் நூற்பொருளை அறிந்துகொள்ள உதவுவதோடு சமுதாய வரலாற்றை மீட்டுருவாக்க முறையில் தெரிந்து கொள்ளவும் உதவும் இந்த உரைகளை ஆழ்ந்து கற்றலும் இவற்றைப் பேணிப் பாதுகாத்தலும் நம் கடமையாகிறது.

இக் காலப்பகுதியில் தோன்றிய இலக்கண உரைகளுள் வரப்பிரசாதமாக நமக்குக் கிடைத்தவை தொல்காப்பிய உரைகள்தான் எனில் அது மிகையாகாது. ஏறக்குறைய பதினைந்து நூற்றாண்டு காலமாக உரைபெறாமலும், இடையிடையே பண்பாட்டுக் கிரகணங்களால் மறைந்தும் மறைக்கப்பட்டும் வந்த தமிழ்ப்பண்பாட்டின் தலைசிறந்த இலக்கணமாகிய தொல்காப்பியம், இளம்பூரணர் என்னும் அருளாளப் பெருமகனாரால் முதன்முதலாக வெளிச்சத்திற்கு வந்து இரத்தினச் சுருக்கமானதோர் உரையினையும் பெற்றது தமிழர்களின் தவப் பயனேயாகும். இளம்பூரணரின் உரை முதலுரையாக மட்டுமின்றி நூல் முழுமைக்குமான முழு உரையாகவும் விளங்குகிறது. தொல்காப்பியம் என்னும் நூலின் மூல பாடத்திற்கு நமக்குக் கிடைத்துள்ள முதல் ஏட்டு வடிவம் இளம்பூரணருடையதுதான். இவருக்குப் பின்னரே வேறு ஏடுகளும் பாடங்களும் தோன்றலாயின என அறியுமிடத்துத் தொல்காப்பியப் பயிற்சியே இளம்பூரணருக்குப் பின்னர்தான் மிகுதியாயிற்று எனவும் உணரக்கிடக்கிறது. இக் கருத்தையே தொல்காப்பிய மூலவருக்கு இளம்பூரணர்தான் முதல் உற்சவ மூர்த்தியாகச் செயல்பட்டுள்ளார் என உருவகமாக்கியும் கூறலாம்.

இளம்பூரணரையடுத்துத் தொல்காப்பியப் பொருளதிகாரத் திற்குப் பேராசிரியர் என்னும் பெயரிய பேரறிஞர் ஒருவர் பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மிக விரிவானதோர் உரை வகுத்துள்ளார். இந்நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் சொல்லதிகாரத்திற்குச் சேனாவரையரின் ஒப்பற்ற உரை தோன்றியது. இவருக்குப் பின்னர் ஐவர் சொல்லதிகாரத்திற்கு உரை இயற்றியதாக அறியப் படினும் சேனாவரையர் உரையே மிகச் சிறந்ததாக அறிஞர்களால் போற்றப்பட்டு வருகிறது.

இவ்வாறு உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் என்னும் உரைவேந்தர் ஒருவரைத் தவிர, ஏனைய பண்டைய உரைகாரர்கள் எல்லாம் இந்த மூன்றாம் காலப் பகுதியில் வாழ்ந்து தமிழையும் அதன் பண்பாட்டுச் சின்னமாகிய இலக்கிய இலக்கணங்களையும் போற்றிப் பாதுகாத்துள்ளனர் என அறிகிறோம்.

மேலே குறித்த இலக்கிய, இலக்கண உரையாசிரியர்களின் உரைச்சிறப்புகள். தனித்தன்மைகள் தமிழ்மொழியாகிய பயிருக்குத் தக்கதோர் இலக்கண வேலியமைத்து அதனைப் பேணிக் காப்பதில்

அவர்கள் ஆற்றிய தொண்டு போன்ற செய்திகள் அந்தந்தத் தலைப்பின்கீழ் விரிவாகக் கூறப்பெற்றுள்ளன.

இதுவரையில் மேலே பேசப்பெற்ற உரைவேந்தர்கள் எல்லாம் வெறும் தமிழ்ப் புலவர்களோ, இலக்கியப் புலவர்களோ மட்டுமல்ல; வடபுல மொழிகளான பாலி, பிராகிருதம், சமஸ்கிருதம் ஆகிய மொழிகளிலும் அவற்றில் உள்ள இலக்கிய இலக்கணங்களிலும் புலமையும் ஆட்சியும் பெற்றிருந்தமையோடு, கணிதம், மருத்துவம், சோதிடம், தருக்கம், இராசநீதி, வடமொழி வேதம், உபநிடதம், புராணம், ஸ்மிருதிகள் போன்ற பல்வேறு துறைகளிலும் தேர்ந்த புலமையாளர்களாகவும் விளங்கினர் என்னும் உண்மையை நாம் அவர்களுடைய உரைகளின் வாயிலாகவே அறிகிறோம். மொழிக் காழ்ப்போ, பிறபுல வெறுப்போ, புறக்கணிப்போ அவர்களுடைய உரைகளில் காணப்பெறவில்லை என்பதும் நாம் அறிந்து மகிழத்தக்கது. பெருமைப்படத் தக்கது; பின்பற்றத் தக்கதுமாகும்.

### நிகண்டுகள்

தொல்காப்பியம் தமிழ்மொழியின் அமைப்பைப் பற்றி முதலிரண்டு அதிகாரங்களிலும் தமிழில் நூல்கள் தோன்றுதற்குரிய கவிதையியல் (Poetics) அடிப்படைகளை மூன்றாம் அதிகாரத்திலும் விரித்துக் கூறும் ஒரு முழுநூலாகத் திகழ்கிறது. இதற்குப் பல நூற்றாண்டுகள் கழித்து வந்த இலக்கணிகள் இடையிட்ட காலப்பகுதியில் நேர்ந்த மொழி மாற்றங்களைக் கருத்திற் கொண்டோ, தொல்காப்பியமாகிய பெருநூலை எளிதிற் பயில இயலாமையைக். கருத்திற் கொண்டோ, தொல்காப்பியம் கூறும் இலக்கணப் பகுதிகளைத் தனித்தனியே கூறக் கருதிச் சிறு நூல்களை உரிய மாற்றங்களோடு இயற்றலாயினர். பொருள் பற்றித் தோன்றிய இறையனார் களவியலும், புறப்பொருள் வெண்பாமாலையும், தமிழ்நெறி விளக்கமும் இவ்வகையில் தோன்றிய கிளையிலக்கணங்களாகும். இவ்வாறே தொல்காப்பியச் சொல்லதிகார இடையியல் உரியியல், பொருளதிகார மரபியல் என்னும் பகுதிகளில் கூறப்பெறும் சொற்கள் பொருளுணர்த்தும் முறைமையை அடியொற்றித் தமிழ்மொழியில் வழங்கப்பெறும் சொற்கோவையைப் (Lexis) பலவாறாகப் பாகுபடுத்தி விளக்கும் நூல்கள் தோன்றலாயின. இத்தகைய நூல்கள் முதலில் 'உரிச்சொல்' எனவும் 16ஆம் நூற்றாண்டு முதல் நிகண்டு எனவும் வழங்கப்பெற்றன. கால அடைவில் நிகண்டு என்னும் பெயரே இந் நூல்களுக்கு நிலைத்துவிட்டது.

தமிழ் மொழியின் சொல்வளத்தையும், காலந்தோறும் சொற்கள் தமிழில் தோன்றிய அல்லது வந்து சேர்ந்த வரலாற்றையும், அவற்றின் வழியாகப் புலப்படும் அவ்வக்காலத் தமிழ்ச் சமுதாயத்தின் பண்பாட்டு வரலாற்றையும் அறிந்துகொள்ள இத்தகைய நிகண்டுகள் பெரிதும் பயன்படுகின்றன. சொற்கள் எல்லாம் மானுட எண்ணங்களின் அல்லது வாழ்க்கை நிகழ்வுகளின் ஒலிக் குறியீடுகளே யாதலின் சொற்களின் வரலாறு அவ்வச் சமுதாய மக்களின் கருத்து வரலாறாகச் (History of Ideas) செயற்படுகிறது. எனவே தமிழினத்தின் கருத்து வரலாற்றையும், மொழி வரலாற்றையும், இவ் இரண்டையும் தன்மயப்படுத்திய தமிழ்ப் பண்பாட்டு வரலாற்றையும் விளக்கும் கருவி நூல்களாக இந் நிகண்டுகள் தொழிற்படுகின்றன எனலாம்.

தமிழில் தோன்றிய முதல் நிகண்டாகிய திவாகரம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் திவாகர முனிவரால் இயற்றப்பெற்றது. நம் வரலாற்றுக்குரிய பத்தாம் நூற்றாண்டில் பிங்கலந்தை, பிங்கலம் எனப் பலவாறு வழங்கப்பெறும் பிங்கல நிகண்டு தோன்றியது. பெரும்பாலும் திவாகரத்தை ஒட்டிச் செய்யப்பெற்ற பிங்கல நிகண்டு தன் முதனூலைவிட விரிவான அளவில் அமைந்து, 4000க்கும் மேற்பட்ட சூத்திரங்களில் 14,700 சொற்களுக்குப் பொருள் கூறுகிறது. எனினும் நூலமைப்பு, பொருள் வரிசை போன்றவற்றில் செய்யப்பெற்ற சில மாற்றங்கள் காரணமாகவோ பிற காரணத்தாலோ, பிங்கலத்திற்குப் பின்னர் வந்த நிகண்டுகள் எல்லாம் திவாகரத்தைப் பின்பற்றியே அமைக்கப்பட்டுள்ளன.

தமிழில் அகராதிகள் தோன்றிச் செழிப்பதற்குத் தமிழ்மொழியில் தோன்றியுள்ள பத்துக்கும் மேற்பட்ட நிகண்டுகள் இன்றும் அடிப்படைத் தரவுகளாகப் பயன்படுகின்றன. மேற்சுட்டிய இரண்டினைத் தவிர ஏனைய முக்கியமான நிகண்டுகள் யாவும் இவ் வரலாற்றின் நான்காம் பகுதிக்குரிய கி.பி.14-17ஆம் நூற்றாண்டுகளில் தோன்றித் தமிழுக்கு வளம் சேர்த்தன. அவற்றின் சிறப்புகளையெல்லாம் அப்பகுதியில் கண்டு கொள்ளலாம்.

## மொழிபெயர்ப்பு

பிற மொழிகளிலிருந்து தமிழுக்கு மொழிபெயர்ந்து வந்த இலக்கியங்கள் தொல்காப்பியர்க்கு முன்னரேயே வழக்கில் இருந்தன. இம்மரபை உட்கொண்டு தமிழில் தோன்றும் வழிநூல் வகைகளுள் ஒன்றாக மொழிபெயர்ப்பு நூல்களைத் தொல்காப்பியர் மரபியலில் குறிப்பிடுகிறார். அவருக்குப் பின்னரும் பல நூல்கள் தமிழில் மொழியாக்கமாகவோ, தழுவலாகவோ தோன்றியவண்ணம்

இருந்தன. இவ்வகையில் இவ் வரலாற்றுக்குரிய நம்காலப் பகுதியில் தோன்றிய மொழிபெயர்ப்புப் பணிகளைப் (அ) பிற மொழிகளிலிருந்து தமிழுக்கு வந்தவை, (ஆ) தமிழ் மொழியிலிருந்து பிறமொழிகளுக்குச் சென்றவை என இருவகையாகப் பகுத்துணரல்ாம்.

## அ. பிற மொழிகளிலிருந்து வந்தவை

இலக்கியத்தைப் பொறுத்தவரையில் பெரிய புராணம் தவிர்ந்து இக் காலப்பகுதியில் தோன்றிய எல்லாக் காப்பியங்களும், சிறுகாப்பியங்களும் பாலி, பிராகிருதம், அபப்பிரம்ஷம், பைசாசம், அர்த்தமாகதி, சமஸ்கிருதம் போன்ற வடபுல மொழிகளிலிருந்து மொழிபெயர்ந்து வந்தனவேயாகும். இவ்வாறே வீரசோழியம், தண்டியலங்காரம் என்னும் இலக்கண நூல்களும், கனா நூல், சித்தராரூடம், பரமார்த்த தரிசனம் போன்ற பிற துறை நூல்களும் தமிழுக்கு மொழிபெயர்ப்பு வாயிலாக வந்த நூல்கள்தான்.

மொழிபெயர்ப்பு நூல்கள் என்பதனாலேயே இவற்றைக் குறைத்து மதிப்பிட இயலாது. இன்றியமையாத மானுட வாழ்க்கைக் கூறுகளுள் இலக்கிய நயமும் மொழிச்செப்பமும் குன்றாது படைக்கப்பட்டிருக்குமாயின், அத்தகைய மொழியாக்கப் படைப்பு தன் மூலத்தோடு ஒத்த மதிப்பினை அறிஞரிடையே பெறுவது உறுதி. கருத்து மூலம், கதைப்பின்னல் கரு, பாத்திரப் பெயர்கள் என்பவற்றால் மட்டும் இலக்கியப் படைப்புகள் புகழ்பெறுவதில்லை. அவற்றை இலக்கியப் படுத்தும் கவிஞனின் கவிதைக் கலைதான் அவன் படைப்புக்கு உயிர்நாடி. கம்பனின் காப்பியம் ஒன்றே இதற்குத் தக்கதோர் எடுத்துக்காட்டு. உலகப் புகழ்பெற்ற ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் எல்லாம் (ஒன்றே ஒன்றுதவிர) பிற பண்பாடுகளிலிருந்தும் பிற மொழிகளிலிருந்தும் அவரால் ஆங்கிலத்தில் படைக்கப்பட்டுப் புத்துயிர் பெற்றவைதான் என்ற அங்கை நெல்லிக்கனி உண்மையும் இதன் தொடர்பில் சிந்திக்கத் தக்கது.

## ஆ. தமிழிலிருந்து பிற மொழிகளுக்குச் சென்றவை

சங்க இலக்கிய அகப்பொருட் பாடல்களும், தேவாரம், நாலாயிரம் ஆகிய பக்தி இலக்கியப் பாடல்களும் தமிழக அரசுகளோடு தொடர்புபட்டிருந்த பிராகிருதம், தெலுகு, கன்னட மொழிகளில் தழுவலாகவும் மொழியாக்கமாகவும் சென்றுள்ளன என அறிகிறோம். ஆனால் இங்கு ஆய்வுக்கு உட்பட்ட மூன்றாப்

காலப் பகுதியில் எழுந்த இலக்கியங்கள் இடைக்காலத்தே பிறமொழிகளில் மொழிபெயர்க்கப் பட்டதாகச் செய்திகள் இல்லை. கம்பராமாயணத்தின் செல்வாக்கு கன்னட, தெலுகு, அசாமி மற்றும் இந்தி மொழிகளில் தோன்றிய இராமாயணங்களில் காணப்படுகிறதாயினும், முறையான மொழியாக்கங்கள் செய்யப்பட்டதாகத் தெரியவில்லை. பெரிய புராணப் பகுதிகள் சில தெலுங்கானாப் பகுதியில் உள்ள தெலுகு மொழியில் செய்யப்பட்டதாகச் சில குறிப்புகள் கிடைத்துள்ளன. பெரியபுராணம் பற்றிய ஒரு குறிப்பு மட்டும் சான்றோடு கிடைத்துள்ளது. அதன்படி கி.பி.1532இல் சீனிவாச கவி என்பவரால் **சிவபக்த விலாசம்** என்னும் பெயரில் பெரிய புராணம் சமஸ்கிருத மொழியில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளதாகக் கல்வெட்டொன்றில் குறிப்பிடப் பெற்றுள்ளது.

தமிழ் நூல்கள் பிறமொழிகளுக்குச் செல்லும் மொழிபெயர் பயணம் ஐரோப்பியரின் வருகைக்குப் பின்னர்த் தொடங்கியது. கி.பி.19,20ஆம் நூற்றாண்டுகளில் பிற மொழியிலிருந்து தமிழுக்கும் தமிழிலிருந்து பிற மொழிகளுக்குமான இருவழி இலக்கியப் பயணங்கள் மிகுதியாயின. இவ்வகையில் இக்காலப் பகுதியில் தோன்றிய காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள், இலக்கணங்கள் எனப் பல வகையான தமிழ் இலக்கியங்கள் பல்வேறு மொழிகளில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. இவற்றின் விவரம் நூலினுள்ளே இதே தலைப்பில் இயன்ற வரை திரட்டித் தரப்பட்டுள்ளது.

### பிற்துறை நூல்கள்

இலக்கிய, இலக்கண நூல்களேயன்றிப் பல்வேறு பிறதுறை நூல்களும் இக்காலப் பகுதியில் தமிழில் தோன்றியுள்ளன. இவற்றைப் பற்றிய குறிப்புகள் கல்வெட்டுகளிலும், யாப்பருங்கல விருத்தி, அடியார்க்கு நல்லார் உரை போன்ற உரைநூல்களிலும் காணப்படுகின்றன. சோதிடம், மருத்துவம், கனா, ஓவியம், பாம்புகள், குதிரைகள் போன்று பல்வேறு பொருள்களைப் பற்றிய நூல்கள் மொழிபெயர்ப்பாகவும், மூலநூல்களாகவும் தமிழகத்தே தோன்றியுள்ளன. அக்காலச் சமுதாயத்தின் தேவைக்கேற்பவும், ஆர்வம் காரணமாகவும் இத்தகைய பயன்பாட்டு நூல்கள் (pragmatic texts) பலப்பல தோன்றியிருக்கக் கூடும். பரந்து விரிந்து மேலாண்மை செலுத்தி வாராநின்ற சோழப் பேரரசின் குடிமக்களுக்குப் பல நாட்டாரோடும் மொழியினரோடும் பழகும் வாய்ப்புகள் மிகுதியாகக் கிடைத்திருக்கும். கோயிற்கலை, சிற்பக்

கலை, நடனம், இசை, போன்ற நுண்கலைகள் ஆகியன வளமாகப் போற்றப்பட்ட அக்காலத்தில் இவற்றைப் பற்றியும் பல நூல்கள் தோன்றியிருக்கலாம். அவையெல்லாம் இன்று நம்மிடையே வழக்கில் இல்லை.

பார்வைக்கும் குறிப்பீட்டுக்கும் கிடைத்த பிறதுறை நூல்கள் சிலவற்றைப் பற்றிய விவரங்கள் நூலினுள்ளே இயன்றாங்கு தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

### மறைந்துபோன தமிழ் நூல்கள்

உரையாசிரியப் பெருமக்களால் சுட்டாகவும், எடுத்துக் காட்டுகளாகவும், உவமைகளாகவும் குறிப்பிடப்பெற்றுள்ள பல நூல்கள் இன்று நம்மிடையே வழக்கில் இல்லாமல் மறைந்து போயின. இவ்வாறு மறைந்து போன தமிழ் நூல்களைப் பற்றி மயிலை. சீனி. வேங்கடசாமி போன்ற அறிஞர்கள் ஆராய்ந்து தொகுத்து அளித்துள்ளனர். அவற்றின் அடிப்படையிலும், கல்வெட்டுகளில் குறிப்பிடப்பெற்றுப் பின்னர் மறைந்து போனவையாகக் கண்டறியப்பட்ட குறிப்புகளின் அடிப்படையிலும் மறைந்து போன தமிழ் நூல்கள் நூற்றண்டுவாரியாகத் தொகுத்தும் இயன்றவிடத்து விவரித்தும் இந்நூலின் இறுதியில் தரப்பட்டுள்ளன. குறிப்பிடப்பெற்ற நூற்றாண்டுகள், நூலைப்பற்றிய விவரம் கூறும் நூல்களுக்குரிய நூற்றாண்டுகளே தவிர, அவ்வந் நுற்றாண்டில்தான் அவை மறைந்துபோயின என்னும் குறிப்பினைத் தருவனவல்ல. அதாவது, பதினோராம் நூற்றாண்டின்கீழ்த் தரப்படும் நூல்கள் அந்த நூற்றாண்டு வரை ஆட்சியில் இருந்து பின்னர் மறைந்து போயிருக்கலாம் என்பது கருத்து.

மறைந்து போன தமிழ் நூல்களாக நமக்கு இன்று தெரியவருவனவற்றைத் தவிர இன்னும் எத்துணையோ நூல்கள் ஒரு காலத்தே வழக்கில் இருந்திருக்கக் கூடும். அவையெல்லாம், “வாரணம் கொண்டதந்தோ வழிவழிப் பெயரும் மாள” என ஓர் அறிஞர் வருந்துவதுபோலக் கடல்கொண்டிருக்கும் எனத் துணிய இயலவில்லை. தொல்காப்பிம், சங்கப் பாடல்கள், அற இலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள், பெருங்காப்பியங்கள் போன்றனவெல்லாம் பல நூற்றாண்டுகள் பயணம் செய்து வாழ்க்கையின் மேடு பள்ளங்களையெல்லாம் சந்தித்துக் கடந்துவந்து நம் இலக்கியப் பெருமையைக் காப்பாற்றியிருக்க, இலக்கிய இலக்கணங்கள் சிலவும், அன்றாட வாழ்க்கைக்குப்

பயன்படும் பிறதுறை நூல்கள் பலவும் மட்டும் மறைந்து போனது எவ்வாறு? தேர்ந்தெடுத்து இவற்றை மட்டும் கடல் கொள்வானேன்? என்னும் ஐயங்கள் இயல்பாக நம்மிடையே எழுகின்றன.

இரண்டு காரணங்கள்-யூகங்களாகவேனும்-நமக்குத் தோன்றுகின்றன. ஒன்று, இத்தகைய நூல்கள் மொழி பெயர்ப்புகளாக இருந்திருப்பின் நாளடைவில் மூலங்கள் வழக்கில் நிற்க மொழிபெயர்ப்புகள் பயில்வாரற்று மறைந்திருக்கலாம். அல்லது, அதே பொருள்கள் பற்றிய மேலும் சிறந்த நூல்கள் தோன்றவே அவை வழக்கிழந்திருக்கலாம். அல்லது தமிழர் ஆட்சி குன்றிப் பிறமொழியினராட்சி தமிழகத்தே தோன்றியபோது, தமிழ் மூலங்கள் மொழிபெயர்ந்து வடமொழி, தெலுகு, மராத்தி போன்ற பிறமொழிகளுக்குச் செல்லவே வழங்குவாரற்று மூலங்கள் மறைந்துபோயிருக்கலாம். தமிழகத்தும் பிறமாநிலங்களிலும் பிற நாடுகளிலும் உள்ள சமஸ்கிருதம், தெலுகு, மராத்தி ஆகிய மொழிகளில் எழுதப்பெற்ற தமிழகம் தொடர்பான ஓலைச் சுவடிகளையெல்லாம் தொகுத்துத் தமிழ்ப்படுத்தினால், மறைந்து போனவையாகக் கருதப்படும் பல நூல்கள் வெளிச்சத்திற்கு வரலாம். தமிழிலிருந்து வடமொழிக்குச் சென்று மீண்டும் தமிழுக்குப் புதுவரவுபோல் வந்த நூல்கள் சில உண்டு. அதன் அடிப்படையில் இந்த யூகம் இங்கு முன்வைக்கப்படுகிறது.

எனினும், ஆய்வுலகம் இக்கருத்தினை மேலும் ஆழமாகச் சிந்தித்துக் களப்பணி மூலமாகத் தெளிவுபடுத்தும் என வேண்டுவோமாக.

இதுவரை மேலே குறிக்கப்பெற்ற செய்திகளைத் தொகுத்துக் காணுமிடத்துப், பரவலாக அறியப்பெற்று மிகுதியாகப் பயிலப்பட்டுவரும் தமிழ்க் காப்பியங்களும், இன்றுவரை வழக்கிலிருக்கும் பலவகை இலக்கண நூல்களும், தமிழிலக்கிய இலக்கணங்களின் தலையாய படைப்புகளுக்கான பண்டைய உரைகளில் பெரும்பாலனவும், பெரும்புகழ் பெற்று வழங்கும் சிற்றிலக்கியங்கள் சிலவும் இந்த இலக்கிய 'வரலாற்றின் மூன்றாம் காலப் பகுதியில், அதாவது பிற்காலச் சோழப் பேரரசுகளின் காலத்தில் இயற்றப்பட்டுத் தமிழிலக்கிய வரலாற்று மரபின் தொடர்ச்சிக்கும், வளமான பிற்கால வளர்ச்சிக்கும் பெருந் தொண்டாற்றியுள்ளன என அறிகிறோம்.

# இலங்கையில் தமிழ்க் கல்வெட்டுகள்

## (கி.பி. 13ஆம் நூற்றாண்டுவரை)

தமிழகத்தைப் போன்று இலங்கையிலும் மிகப் பழங்காலம் தொட்டே தமிழர்கள் வாழ்ந்து வந்தமையால் அங்கும் சமுதாயத்தின் பல நிலைகளிலும் தமிழ்மொழி வழக்கில் இருந்து வந்துள்ளது. இலங்கையிலுள்ள தமிழ்ச் சாசனங்கள் எல்லாம் கி.பி. எட்டாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவை என்ற கருத்து அண்மைக் காலம் வரையில் நிலவி வந்தது. ஆனால் அண்மையில் கண்டெடுக்கப்பெற்ற கல்வெட்டுகள், இலங்கையில் பொறிக்கப்பெற்ற பிராமிச் சாசனங்களில் தமிழ்ப்பிராமி எழுத்துகள் காணப்படுவதையும், கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த அநுராதபுரச் சாசனம் ஒன்றில் தமிழ்ச் சங்கத்தார் பற்றிய குறிப்பு காணப்படுவதையும் வெளிப் படுத்தியுள்ளன. மிக அண்மைக் காலத்திலே தமிழரின் பெயர் பொறித்த நாணயங்கள் தென்னிலங்கையில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. அநுராதபுரம், பொலநறுவை, பதவியா என்னும் நகர்களில் அமைந்துள்ள கல்வெட்டுகள் இலங்கையில் வாழ்ந்த தமிழரின் அக்கால அரசியல், சமுதாயம் மற்றும் இலக்கியப் பண்பாடுகளை நன்கு விளக்குவனவாய் உள்ளன.

இனி, கி.பி. பத்து முதல் பதின்மூன்றாம் நூற்றண்டு வரையிலான, "சோழராட்சிக் காலத்தில் இலங்கையில் எழுதப்பெற்ற சாசனங்கள் எல்லாம் தமிழ்ச் சாசனங்களாகவே உள்ளன. . . . சாசனங்களின் மொழிநடையும் சொல்வளமும் தமிழகச் சாசனங்களில் உள்ளவற்றை ஒத்தனவாகும். இச் சாசனங்கள் இந்து கலாசார அம்சங்களையும் பௌத்த கலாசார அம்சங்களையும் பிரதிபலிக்கின்றன. பூர்வ குடிகளான இலங்கைத் தமிரது சமுதாய வழமைகளும், பண்பாட்டு மரபுகளும் சோழர் காலத் தமிழகத்துப் பண்பாட்டு மரபுகளோடு கலப்புற்றமையினை இச் சாசனங்கள் பிரதிபலிக்கின்றன".

இலங்கைத் தமிழ்ச் சாசனங்களின்வழி அறியலாகும் பண்டைய தமிழ்மொழி, தமிழிலக்கியம், தமிழ்ச் சமுதாயம் ஆகியவற்றின் சிறப்புகளையெல்லாம் இப்பகுதியின் இறுதியில் காணும் பின்னிணைப்பு ஒன்றில் தரப்பெற்றுள்ள சி. பத்மனாதன் அவர்களின் கட்டுரையின் வாயிலாக விரிவாக அறிந்து கொள்ளலாம்.

# இலங்கைத் தமிழிலக்கியம்
## (கி.பி. 9–13ஆம் நூற்றாண்டுகள்)

இலங்கையில் முறையான தமிழிலக்கிய முயற்சிகள் கி.பி. 13ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் யாழ்ப்பாண அரசுக் காலத்தில்தான் கால்கொண்டதாக அறிகிறோம். இலங்கையின் தொடக்க கால நூல்கள் எல்லாம் புத்த சமயத்தின் செல்வாக்குக் காரணமாகப் பாளி மொழியிலேயே எழுதப்பெற்றன. எனினும் தமிழில் கவிதை யாக்கும் முயற்சிகள் மிகப் பழங்கால முதலே இலங்கையில் மேற்கொள்ளப் பெற்றிருத்தல் வேண்டும் என ஊகித்தற்கு இடமளிக்கும் வகையில் சில சாசனச் செய்யுட்கள் காணப்படுகின்றன. கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டளவில் அநுராதபுரத்தில் வாழ்ந்த தமிழ் வணிகக் கணம் ஒன்று பௌத்த விகாரை எடுப்பித்ததைக் குறிக்கும் கல்வெட்டு ஒன்றில் கீழ்வரும் வெண்பா பொறிக்கப் பெற்றுள்ளது:

**போதி நிழலமர்ந்த புண்ணியன்போல் எவ்வுயிர்க்கும்**
**தீதில் அருள்சுரக்கும் சிந்தையான்–ஆதி**
**வருதன்மங் குன்றாத மாதவன்மாக் கோதை**
**பொருதர்ம பாலன் உளன்.**

இந்த வெண்பாவைப் படைத்த ஒரு சமுதாயம் பல நூற்றாண்டுகள் இலக்கியப் புலமை நடாத்தியதால் வேண்டும் என்பதைத் தமிழகத் தமிழிலக்கிய வரலாறு நமக்குக் காட்டுகிறது. அரசியல் மற்றும் பண்பாட்டுப் படையெடுப்புகளின் காரணமாக அக் காலகட்டத்தே மலர்ந்த இலக்கியப் படைப்புகள் அழிந்தொழிந்தன போலும் (ஆ. வேலுப்பிள்ளை, 1988:3).

பதவியாவிலே உள்ள கி.பி. 12ஆம் நூற்றாண்டுக்குரிய கல்வெட்டுக் கவிதை ஒன்றும், தம்பதேனியாவுக்கு அருகில் உள்ள பண்டுவஸ்துவரையில் கிடைத்த 13ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுக் கவிதை ஒன்றும் அண்மையில் அறிஞர்களின் பார்வைக்குக் கிடைத்துள்ளன. இவற்றின் இலக்கியச் செவ்வியை நோக்குமிடத்து இவைபோன்ற பல சாசனக் கவிதைகள் இக் காலப்பகுதியில் (கி.பி. 10-13ஆம் நூற்றாண்டுகள்) எழுதப்பட்டிருக்கலாம் எனக் கருத வேண்டியுள்ளது. ஆனால் அவை எவையும் கிடைக்கவில்லை.

இக் காலப்பகுதியில் தோன்றிய ஈழத் தமிழிலக்கியச் செயற்பாடுகளின் முழு விவரங்களை அறிய, இப் பகுதியின் இறுதியில் உள்ள பின்னிணைப்பு இரண்டின்கீழ் அமைந்த மனோன்மணி சண்முகதாஸ் அவர்களின் கட்டுரையைக் காண்க.

# 1. காப்பியங்கள்

### *10 ஆம் நூற்றாண்டு*

### *சீவக சிந்தாமணி*

ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகக் குறிக்கப்பெறும் சீவக சிந்தாமணி திருத்தக்க தேவர் என்னும் சமண முனிவரால் இயற்றப் பெற்றது. பழைய இலக்கிய உரைகளிலும், இலக்கண உரைகளிலும் உரையாசிரியர்களால் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டுள்ள பிரமாண நூல்களில் இதுவும் ஒன்று. வடமொழியில் உள்ள மகாபுராணத்தின் ஒருபாகத்திலும், மணிப்பிரவாளமாகிய ஸ்ரீபுராணத்தின் ஒருபாகத்திலும், சீவகனுடைய சரிதம் கூறப்பட்டுள்ளது. இருப்பினும், க்ஷத்திர சூடாமணி என்ற நூலே இதற்கு முதனூல் என்று கூறுவர். இதற்கு மண நூல் என்ற மற்றொரு பெயரும் உண்டு. இந்நூல் கி.பி.900-க்குப் பிற்பட்டது என்று அறிஞர் கருதுவர்.[1]

இந்நூல் கடவுள் வாழ்த்திற்கும் பதிகத்திற்கும் பின்னர் நாமகளிலம்பகம் தொடங்கிப் பதின்மூன்று இலம்பக உறுப்புகளாகப் பகுக்கப் பெற்றுள்ளது. இந்நூலில் 3145 செய்யுள்கள் இருப்பினும், நச்சினார்க்கினியர் 3143-ஆம் பாடலுக்கெழுதிய உரையில் திருத்தக்க தேவர் இயற்றிய பாடல்கள் 2700 என்று கூறுவதால் ஏனையவை இடைச்செருகல்களாய் இருக்கும் என்று கருத வேண்டியுள்ளது.

சிந்தாமணி என்பது இந்நூலுக்குத் தன்மையால் வந்த பெயர் என்பர். சீவகனின் தாய் விசயை அவன் பிறந்தவுடன் சிந்தாமணி என்று பாராட்டியதால் அப்பெயர் அவனுக்கமைந்து பின் அவன் சரிதம் உரைக்கும் நூலுக்காயிற்று என்றும் கூறுவர். சீவகன் மகளிர் எண்மரைத் திருமணம் செய்து கொண்டது, தன் நண்பன் பதுமனுக்குக் கோவிந்தையைத் திருமணம் செய்து வைத்தது, நாமகள், மண்மகள், பூமகள், முக்தி மகள் என்ற

---

1. து.அ. கோபிநாத ராவ் - செந்தமிழ் தொகுதி 5, பக்.95-102.

இவர்களை மணந்தது என்று மணங்களைப் பற்றியே அமைந்திருத்தலின் மணநூல் என்ற பெயர் இந்நூலுக்கு உரியதாயிற்று.

நாடு நகரம் முதலியவற்றை வருணிக்கும் முறையிலும், ஐந்திணையாகப் பகுக்கப்படும் நிலங்களின் இயற்கையழகுகளை விளக்கும் முறையிலும், இசை முதலிய கலைகளை விளக்கும் முறையிலும், இந்தக் காப்பியம் சிறந்து விளங்குகின்றது. பலபகுதிகளில் காதல் சுவை மேலோங்கி நின்ற போதிலும் எண்வகைச் சுவைகளும் இக்காப்பியத்தில் நிரம்பியுள்ளன எனலாம்.

சீவகனின் தாய் சீவகனை அமைச்சனின் சூழ்ச்சி காரணமாக நகருக்கு வெளியே உள்ள சுடுகாட்டில் பெற்றெடுத்தாள். அரண்மனையில் பெரிய ஆடம்பரமான விழாக்களுக்கும், பாராட்டுகளுக்கும் உரியவனாய்ப் பிறந்திருக்க வேண்டிய அரசக் குழந்தை, சுடுகாட்டில் பிறக்க நேர்ந்ததை எண்ணித் தாய் புலம்பும் பின்வரும் பாடல் அவலச்சுவைக்கு நல்லதோர் எடுத்துக்காட்டு:

வெவ்வாய் ஓரி முழவாக விளிந்தார் ஈமம் விளக்காக
ஒவ்வாச் சுடுகாட்டு உயர்அரங்கின் நிழல்போல்
நுடங்கிப் பேயாட
எவ்வாய் மருங்கும் இருந்திரங்கிக் கூகை குழறிப் பாராட்ட
இவ்வாறாகிப் பிறப்பதோ இதுவோ மன்னர்க்கு இயல்
வேந்தே.

நானில வருணனை கூறுதல், இசை முதலிய நுண்கலைகளைப் போற்றுதல் போன்ற கூறுகளில் பெருங்கதையின் செல்வாக்கு இதில் காணப்பட்ட போதிலும், மானுட இயற்கை, மானுட வாழ்க்கையின் கூறுகள், ஆகியவற்றைச் சமயக் கோட்பாடுகளுடன் இணைத்துக் கூறுவதில் சிந்தாமணி தனித்தன்மை உடையதாக விளங்குகிறது. இனி, விருத்தம் என்னும் பாவினத்தைக் காப்பியப் படைப்புக்குப் பயன்படுத்தி வெற்றி பெற்ற முதற்காப்பியம் சிந்தாமணி என்பதையும் பின்னர் வந்த சூளாமணி, கம்பராமாயணம் போன்ற காப்பியங்களில் இதன் செல்வாக்கு காணப்படுவதையும் அறிஞருலகு ஏற்றுப் போற்றியுள்ளது.

### பதிப்பு

(1887) 1969, உ.வே. சாமிநாதையர் (ப.ஆ). சீவக சிந்தாமணி நச்சினார்க் கினியர் உரையுடன், சென்னை.

மொழியாக்கம்

(ஆங்கிலம்)

*1868* The Chintamani (Namagal Ilampagam) trans. H. Bower and E. Muthaiya Pillai, Madras: Christian Knowledge Society Press.

(பிரஞ்சு)

*1883* Un episode du poeme epique Sindamani. trans; Julien Vinson, Paris.

சூளாமணி

பெருங்கதை, சீவக சிந்தாமணி என்னும் சமணக் காப்பியங்களைத் தொடர்ந்து எழுந்த சூளாமணி என்னும் காப்பியம், விருத்தப்பாவால் இயன்ற இரண்டாவது நூலாகக் கருதப்படுகிறது.

ஆசிரியர் இந்நூலுக்கு இட்டபெயர் 'செங்கண் நெடியான் சரிதம்' என்பதே. நூற்பெயர் சூளாமணி என்றும், ஆசிரியர் பெயர் தோலாமொழித் தேவர் என்றும் தோலா மொழி தொகுத்த சூளாமணி எனவரும் ஒரு பழம்பாடல் தொடரால் அறிகிறோம். கன்னட நாட்டிலுள்ள சிரவண பெள்குளக் கல்வெட்டு மூலம் சூடாமணி என்ற காவியத்தைச் செய்த ஸ்ரீவர்த்த தேவர் ஒருவரை அறிகிறோம். அவரே தோலாமொழித் தேவர் ஆகலாம் என்று கருதப்படுகிறது (மு.அ. 10/44)

இக் காப்பியம் பாயிரமும், 12 சருக்கங்களும், 2131 விருத்தப்பாக்களும் உடையது. பாயிரத்தின் முதற் பாடலில் அருகன் துதியும், இரண்டாம் பாடலில் 'செங்கண் நெடியான் சரிதம் செப்பல்' என நூல் நுதலிய பொருளும், மூன்றாம் பாடலில் அவையடக்கமும், நான்காம் பாடலில் 'திருமால் நெடுஞ் சேந்தன்' என்னும் தூமாண் தமிழின் கிழவன் அவை'யுள் அரங்கேற்றப் பட்டது என்னும் செய்தியும் கூறப்படுகின்றன. 'திங்கள் மறுவும் சிலர் கைதொழச் செல்வது போல்வது, செங்கண் நெடியான் திறம் பேசிய இந்நூல்' என்று ஐந்தாம் பாடலும், 'செஞ்சொற் புராணத்து உரையின் வழி இது வந்தது' எனச் சைன மகாபுராணத்தின் உரையினைத் தழுவி எழுதப்பெற்றதென ஆறாம் பாடலும் கூறுகின்றன.

பரத கண்டத்தில், சுரமை நாட்டின் தலைநகரான போதன மாநகர் மன்னன் பயாபதி, அவன் மக்கள் விசயன், திவிட்டன், இவர்கள் திருமணம், இவர்களுக்குப் பிறந்த குழந்தைகளான இருவர் ஆகியோர் திருமணம் வரை காப்பியக் கதை நீண்டு

செல்கிறது. பயாபதி தன் தேவியர் மிகாபதி, சசி ஆகியோருடன் துறவு பூண்டதாக இறுதியில் முடிகிறது. விசயன், திவிட்டன் ஆகியோரது வீரம், படைச்சிறப்பு, வெற்றி, திருமணம் ஆகியவையே காப்பியத்தில் பெரிதும் பேசப்படுகின்றன. விசயனைப் பலராமனாகவும், திவிட்டனை வசுதேவனாகவும் உருவகித்து இக்காப்பியம் பேசுகிறது.

காவியப் பண்பு நலன்கள் குறைவாக அமைந்த நூலாயினும், கவிதைப் பண்பு மிக்குள்ள காவியமாக இந்நூல் போற்றப்படுகிறது. கதையின் ஒருமைப்பாட்டு அடிப்படையிலும் இந்நூல் சிறப்பாக அமையவில்லை எனலாம். காவியத் தலைவனாகிய பயாபதியை விட அவன் மக்களுள் ஒருவனான திவிட்டனின் சிறப்பே பெரிதும் பேசப்படுகின்றது. இருப்பினும் முழுவதுமாக நோக்கினால், 'கவிதைச் சுவையில், சிந்தாமணியிலும் சிறந்ததாக மதிக்கப்பெறும் சூளாமணி என்ற அருங்காப்பியம்' என்று திரு. எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களால் பாராட்டப்பெற்றது.

இயற்கை வருணனை, போர் வருணனை, உலக நீதிகள், நிலையாமை, அரசியற் கருத்துகள் ஆகியவற்றைப் பாடுவதில் தோலாமொழித் தேவர் மிக வல்லவராகத் திகழ்கிறார். நாட்டுச் சருக்கம் 29 பாடல்களும் நானில வருணனை, திணை மயக்கம் பற்றி இனிது பாடுகின்றன. மூத்தவன் விசயன், தம்பி திவிட்டனுக்கு இயற்கை வளங்களைக் காட்டிச் செல்வதாக வரும், 87 பாடல்கள், நெய்தல் தவிர்ந்த நானில வளங்களை மிகச் சிறப்பாக வருணிக்கின்றன. தோலாமொழித் தேவருக்கு இய்ற்கையழகை வருணிப்பதில் ஈடுபாடும், தாவர நூலில் மிகச் சிறந்த புலமையும் இருப்பது தெளிவாகிறது. சான்றாக மயிலின் ஆட்டம் குறித்துப் பாடும் கீழ்வரும் பாடலைக் காட்டலாம்.

**தும்பிவாய் துளைக்கப் பட்ட கீசகம் வாயுத் தன்னால்**
**வம்பவாங் குழலினேங்க மணியறை அரங்க மாக**
**உம்பவான் மேக சாலம் ஒலிமுழாக் கருவி யாக**
**நம்ப! தேன்பாட மஞ்ஞை நாடகம் நவில்வ காணாய்**
**(766)**

அரசியற் சருக்கத்தில், போர்ச் செய்திகளை அதிகமாகக் கூறும் ஆசிரியர், நால்வகைப் படைகளைப் பற்றிய செய்திகளை மிகச் சிறப்பாகப் பாடுகின்றார். நிலையாமையை நிலைபெற்ற ஒன்றாகப் பாடுகின்றமை கண்டு இன்புறத்தக்கது. போரில் அச்சுவகண்டன் இறந்தபோது,

கொலையானை மேலோர் குளிர்வெண் குடைக்கீழ்ப்
பலயானை மன்னர் பலர்போற்ற வந்தான்
மலையாகம் போழாக மற்றவனோ சாய்ந்தான்
நிலையாமை சால நிலைபெற்ற தன்றே

எனவரும் பாடல் இக் கருத்தமையப் பாடப்பெற்றது.

உலக நீதிகளையும், அரச நீதிகளையும் எடுத்துச் சொல்லும் இடங்களில் இவரது கவிதை மிகச் சிறப்பாக அமைந்துள்ளதைப் பின்வரும் ஒரு பாடலால் அறியலாம்.

எரியும் ஆணையால் குளிரும் ஈகையால்
பெரியன் மாண்பினால் சிறியன் அன்பினால்
அரியன் வேந்தர்கட்கு எளியன் மாந்தர்கட்கு
உரியன் ஓங்குதற்கு ஓடை யானையான்

இந் நூலின்கண் வரிப்பாடல்கள் பல உள்ளன. மகளிர் வள்ளைப்பாட்டுப் பாடுவதாகக் கூறும் பாடல் (1660) சிலப்பதிகாரத்தை நினைவூட்டுகிறது. அதுபோலவே சிலப்பதிகாரக் கானல்வரியில் உள்ள 'மருங்கு வண்டு சிறந்தார்ப்ப' என்று தொடங்கும் பாடல்போல, அடிமடக்காக இவர் பாடும்,

அடிமருங்கின் அரசிறைஞ்ச ஆழியாள்வான் பெருந்தேவி
கொடிமருங்கின் எழில்கொண்டு குழையல்வாழி
குருக்கத்தி
கொடிமருங்கின் எழில்கொண்டு குழைவாயாயிற்
பலர்பறிப்பக்
கடிமருங்கிற் புக்கலரே காண்டிவாழி குருக்கத்தி (1127)

போன்ற பாடல்களும் சிலப்பதிகாரத்தைத் தழுவிச்செய்தன போலத் தோன்றுகின்றன. ஆசிரியர் இயற்கை வளங்களை வருணிக்குமிடத்து, மூன்று பாடல்களின் சீர்களில் இறுதி மடக்கு, முதல் மடக்கு, இடை மடக்கு என்ற யாப்பிலக்கண விசேடங்களையும் அமைத்துப் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது.

திருஞான சம்பந்தருடைய தேவாரக் கருத்தையும், தொடர்களையும் எடுத்துக் கீழ்வரும் பாடலில் பயன்படுத்துகிறார்.

வாழ்கநம் மன்னவன் வாழ்க வையகம்
ஆழ்கநம் அரும்பகை அலர்க நல்லறம்
வீழ்கதண் புனல்பயிர் விளைக மாநிலம்
தாழ்கமற் றருந்துயர் சாற்றக் கேண்மினே (1765)

இத்தகைய சிறந்த கவிதைப் பண்பு நிறைந்த பாடல்கள் இக்காப்பியத்தின் சிறப்பிற்கு மேலும் மெருகூட்டுகின்றன.

**பதிப்பு:**

1889. சி.வை. தாமோதரம் பிள்ளை (ப.ஆ) தோலாமொழித் தேவரியற்றியருளிய **சூளாமணி.**

1944. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், **சூளாமணி பாட்டும் உரைநடையும்** (முதல் நான்கு படலம், 238 பாடல் மட்டும்)

1953. இராமசாமிப்புலவர் - **சூளாமணி, சோமசுந்தரனார் உரை,** சென்னை: கழகம்

1954, உ.வே. சாமிநாதையர் (ப.ஆ) **சூளாமணி,** சென்னை: சாமிநாதையர் நூல்நிலையம்.

**கம்பராமாயணம்**

இராம சரிதம் இந்தியா முழுவதும் பழங்காலந்தொட்டு மக்களிடையே பரவி வழங்கி வரும் ஒரு கதை. பல கவிஞர்கள் பல காலங்களில் இதனைத் தனி நூலாகவும் நாடகமாகவும், இதன் கதைப் பகுதிகளில் சிலவற்றைத் தனி நூலாகவும் செய்திருக்கின்றனர். அகநானூற்றிலும் (70/13-16), புறநானூற்றிலும் (378/18-21) உள்ள குறிப்புகள் இக்கதை தமிழகத்திலும் நெடுங்காலமாக அறியப்பட்ட ஒன்று என்பதைக் காட்டும் சான்றுகளாக விளங்குகின்றன. சிலப்பதிகார ஊர்காண் காதை (46-49), மற்றும் ஆய்ச்சியர் குரவைப் (35) பகுதிகள் இராமனைத் திருமாலின் அவதாரமாகக் கருதியதைக் காட்டி நிற்கின்றன.

திவ்வியப் பிரபந்தத்தில் கிருஷ்ண அவதார நிகழ்ச்சிகளே பெரிதும் இடம் பெற்றுள்ளன. ஆனால் ஆச்சாரியர்கள் காலத்தில் இராம சரிதம் பெரும் புகழினை அடைந்திருந்தது. பழைய உரைகளில் வெண்பாவிலும் ஆசிரியத்திலும் அமைந்த சில இராம சரிதப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. 'ஆசிரியமாலை'யிலிருந்து தொகுக்கப் பெற்ற புறத்திரட்டுப் பாடல்கள் நான்கு இராமசரிதம் பற்றியவை. இவையெல்லாம் கம்பனுக்கு முன்னர் எழுந்த இராம சரிதம் பற்றிய இலக்கியத்திலிருந்து எடுத்தாளப் பட்டவை எனலாம்.

தமிழகத்தில் இராமனோடும், இராமாயணத்தோடும் தொடர்புடைய பெயர்கள் பல ஊர்கள், மலைகள், தீர்த்தங்கள், ஆகியவற்றுக்கு வழங்கி வருகின்றன. இராமன், இலக்குவன், சீதை ஆகிய பெயர்களும், இரகுபதி, சானகி, மைதிலி, இராகவன் ஆகிய

பரியாயப் பெயர்களும் நெடுங்காலமாகத் தமிழகத்திலிருப்பதைக் காண்கிறோம். எனவே இராம சரிதம் தமிழகத்தில் நன்கு பரவி நிலைபெற்றிருந்த காலத்தில் இந்நூல் கம்பரால் இயற்றப் பெற்றது எனலாம்.

இராமாயணத் தனிப்பாடல்களில் இருந்து, கம்பர் திருவழுந்தூரில் பிறந்தவர்; ஆதித்தன் புதல்வன், வெண்ணெய் நல்லூர்ச் சடையனால் ஆதரிக்கப் பெற்றவர் என்றறிகிறோம். சோழ மன்னனை ஒன்றிரண்டு இடங்களில் குறித்த போதிலும், தன்னை ஆதரித்த சடையப்ப வள்ளலைத் தன்பெருங் காப்பியத்தில் பலமுறை போற்றிப் புகழ்ந்துள்ளார். எனவே கம்பருக்கு அரச ஆதரவு அதிகமிருந்ததாகக் கருத இயலவில்லை.

வால்மீகி இயற்றிய வடமொழி இராமாயணத்தை ஒட்டிக் கம்பர் தம் காப்பியத்தை எழுதிய போதிலும், இது மொழிபெயர்ப்பும் அல்ல; வெறும் தழுவலும் அல்ல. ஒரு புதுக் காப்பியம் போலவே, தம் கற்பனைத் திறத்தினால் படைத்துத் தந்துள்ளார். வால்மீகியில் உள்ள சிலவற்றை விரிவாக்கியுள்ளார். சொல்லாத சிலவற்றைத் தாமே படைத்துள்ளார். எப்படிப் பட்ட பாத்திர நிகழ்ச்சிகளாயினும் கம்பர் காவியத்தில் அவை புதுமெருகு பெறுகின்றன.

கம்பரின் மாயாசனகப் படலம் வால்மீகியில் இல்லாதது; வாலி இறந்தபின் அவன் மனைவி தாரையைச் சுக்கிரீவன் தன் மனைவியாக்கிக் கொண்டதாக வால்மீகி கூறுகிறார். கம்பர், தாரையை உயர்த்திச் சுக்ரீவனையும் குற்றமில்லாதவனாகக் காட்டுகிறார். இரணியன் பற்றிய கதை வால்மீகியில் இல்லை. கம்பர் அதனைத் தனிப் படலமாகப் பாடுகிறார். திருமணத்திற்கு முன் இராமனும் சீதையும் வால்மீகியில் சந்திக்கவில்லை. தமிழ் வழக்குக்கு ஏற்ப இருவரும் பார்வையால் சந்தித்துக் காதல் கொண்டதாகக் கம்பர் கூறுகிறார். இன்னும் பல வேறுபாடுகள். இத்தகைய வேறுபாடுகள் எல்லாம். காப்பியத்தின் கதைச்சுவையையும், பண்பாட்டுச் சிறப்பையும் மேம்படுத்துகின்றன.

இயற்கைக் காட்சிகளை வருணிப்பதில் கம்பரின் திறம் பெரிதும் வியக்கத்தக்கது. மருதநிலம், ஓர்அரசன் அல்லது அரசி கலைமண்டபத்தில் வீற்றிருப்பது போல் அமைந்திருக்கிறது என்கிறார். கோசல நாட்டின் வளமான வாழ்க்கையைக் கூறும் வருணனை வெறும் வருணனையாக இல்லாமல், ஒருநாட்டின் எதிர்காலத்தைப் பற்றிய ஒரு பெரும் கற்பனையாகவே அமைந்திருக்கிறது எனலாம். ஒரு நல்ல நாட்டுக்கு வகுக்கப் பெற்ற இலக்கணமாகவே கீழ்வரும் பாடல் அமைகிறதெனலாம்.

**வண்மை இல்லையோர் வறுமை இன்மையால்**
**திண்மை இல்லை நேர் செறுநர் இன்மையால்**
**உண்மை இல்லை பொய் உரைஇ லாமையால்**
**ஒண்மை இல்லைபல் கேள்வி ஓங்கலால்' (நாட்டுப் 53)**

கதை மாந்தர்களின் உணர்ச்சிகளுக்கும் பண்புகளுக்கும் ஏற்றவாறு பாடல்களின் ஓசைகள் பல்வேறு வகையாக வேறுபடுதலைக் காப்பியம் முழுவதும் காண்கிறோம். சூர்ப்பணகையின் அழகுநடையும், கவர்ச்சி மயக்கமும் பாடலிலேயே வெளிப்படும் நிலையினைப் பின்வரும் பாடல் காட்டும்.

**பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவம் அனுங்க**
**செஞ்செவிய கஞ்சநிமிர் சீறடியள் ஆகி**
**அஞ்சொலின மஞ்ஞைஎன அன்னமென மின்னும்**
**வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள் (சூர்ப்ப. 31)**

இலக்குமணனின் ஆத்திரம், கொதிப்பு, குகனுடைய ஆர்வம் வீரம், பரதனின் பக்தி, பணிவு முதலியவற்றை விளக்கும் இடங்களில் கம்பனின் பாடல்கள் சொற்களால் ஆக்கப்படவில்லை; உணர்ச்சிகளாலேயே ஆக்கப்பட்டிருக்கின்றன எனலாம்.

தமிழ்மொழியின் வளத்தை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டவர் கம்பர். ஓசை வளத்தையும், பொருள் வளத்தையும் நன்றாகப் பயன்படுத்தி வெற்றி கண்டவர் அவர். வீரம், வெகுளி அழுகை போன்ற பல சுவைகளுக்கும் ஏற்றவாறு தமிழ்ச் சொற்களின் ஓசையும் பொருளும் இணைந்து வெளிப்படுவதை இந்நூற் பாடல்களில் காணலாம். இராமன் எறிந்த அம்பு, தாடகையின் வலிமையை உருவிச் சென்றது என்று கூறும் பின் வரும் பாடலில் உரு, உருவி என்ற சொற்கள் பலமுறையும் வந்து, அக் காட்சியைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

**அலைஉருவக் கடல்உருவத் தாண்டகைதன் நீண்டுயர்ந்த**
**நிலைஉருவப் புயவலியை நீஉருவ நோக்கையா**
**உலைஉருவக் கனல்உமிழ்கண் தாடகைதன் உரம்உருவி**
**மலை உருவி மரம்உருவி மண்உருவிற்று ஒருவாளி**
**(கார்முக.26)**

இதுபோலவே, இராவணன் போர்க்களத்தில் அனைத்தும் அடங்கி வீழ்ந்து கிடந்த காட்சியை வருணிக்குமிடத்து 'அடங்க' என்ற சொல்லை மீண்டும் மீண்டும் பயன்படுத்தி, நெஞ்சில் பதியச்

செய்யும் பின்வரும் பாடல் கம்பரின் மொழி ஆளுமைக்கு மற்றுமோர் எடுத்துக்காட்டு.

> வெம்மடங்கல் வெகுண்டனைய சினம் அடங்க
> மனம் அடங்க வினையும் வீயத்
> தெம்மடங்கப் பொருதடக்கைச் செயல் அடங்க
> மயல் அடங்க ஆற்றல் தேயத்
> தம் அடங்கு முனிவரையும் தலைஅடங்க
> நிலை அடங்க சாய்த்த நாளின்
> மும்மடங்கு பொலிந்தஅம் முறைதுறந்தான்
> உயிர்துறந்த முகங்கள் அம்மா
> (இராவணன் வதைப்.199)

இவ்வாறு கம்பராமாயணத்தின் ஒவ்வொரு பகுதியும் சொல் நயமும், பொருள் நயமும், கற்பனை வளமும் நிரம்பிச் சுவைமிகுந்த தமிழின் தன்னேரில்லாத் தமிழ்க் காப்பியமாய்த் திகழ்கிறது. ‘கம்ப நாடன் கவிதையிற் போல் கற்றோர்க்கு இதயம் களியாதே’ என்னும் கூற்று இன்றைக்கும் பொருந்துவதேயாகும்.

பதிப்பு (சில முக்கியமான முழுப் பதிப்புகள் மட்டும்)

*1840-1843* பாலகாண்டம்-யுத்தகாண்டம்: மூலம் (ப.ஆ) திருவேங்கடாசல முதலியார், சென்னை.

*1894-1932* பாலகாண்டம் - யுத்தகாண்டம்: மூலமும் உரையும் வை.மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், சென்னை.

*1929* பாலகாண்டம் - யுத்தகாண்டம்: மூலமும் உரையும், வித்வான் ராமசாமி நாயுடு.

*1942-1954* பாலகாண்டம் - யுத்தகாண்டம்: மூலம் (ஆழ்வார்திருநகரிப் பிரதிகளின்படி பதிப்பிக்கப் பெற்றது). பட்சி ராஜ அய்யங்கார் மகர பூஷணம்.

*1952-1970* கம்பராமாயணம், (பாடவேறுபாட்டுப் பதிப்பு) அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

*1958-1959* கம்பராமாயணம், சென்னை: மர்ரே ராஜம் பதிப்பு.

*1967* கம்பராமாயணம், (ப.ஆ) உ.வே. சாமிநாதையர், சென்னை.

*1976* கம்பராமாயணம், சென்னை: கம்பன் கழகம்.

*1993-1999* கம்பராமாயணம், மூலமும் உரையும் - எட்டுத் தொகுதிகள் (ப.ஆ) அ.ச. ஞானசம்பந்தன், கோவை கம்பன் கழகம்.

## 12 ஆம் நூற்றாண்டு

### திருத்தொண்டர் புராணம் (பெரிய புராணம்)

இரண்டாம் குலோத்துங்கனின் ஆட்சிக் காலத்தில் (1133-50) சேக்கிழாரால் இந்த நூல் இயற்றப்பெற்றது. கி.பி.1139 ஏப்ரல் 4ஆம் தேதி சித்திரை ஆதிரை நாளில் தொடங்கி 1140 ஏப்ரல் 22 ஆம் தேதி சித்திரை ஆதிரை நாள்வரை இந்நூல் சிதம்பரத்தில் சேக்கிழாரால் விரித்துரைத்து அரங்கேற்றப்பட்டது என்பது அண்மைக் கால முடிபு.[2] பெரிய புராணம் என்று இந்நூல் பொதுவாக வழங்கப் பெற்றாலும், ஆசிரியர் இதற்கு இட்ட பெயர், 'திருத்தொண்டர் புராணம்' என்பதே. 9ஆம் நூற்றாண்டில் எழுந்த சுந்தரரின் தொகைநூலுக்குக் கி.பி.11ஆம் நூற்றாண்டில் நம்பி ஆண்டார் நம்பி, திருத்தொண்டர் திருவந்தாதி எனும் வகைநூல் பாட, அதற்கு விரிநூலாகத் திருத் தொண்டர் புராணம் இயற்றப்பெற்றது.

தாம் கொண்ட காப்பிய வகைக்கு ஏற்ப, சுந்தரமூர்த்தி நாயனாரைப் பாட்டுடைத் தலைவராக்கி, அவர் முற்பிறவி இடமான திருமலைச் (திருக்கயிலை) சிறப்பு, பிறந்த திருநாடான சோணாட்டுச் சிறப்பு, பின் பிறந்த ஊரான திருநகரச் சிறப்பு (திருவாரூர்), அறுபத்து மூன்று நாயன்மார்களான திருக்கூட்ட அடியார்களின் சிறப்பு, தடுத்தாட்கொண்ட புராணம் என்று ஐந்து பகுதிகளாகத் திருமலைச் சருக்கம் அமைந்துள்ளது. அதுதொடங்கி மொத்தம் 12 சருக்கங்கள் நூலில் உள்ளன. திருத்தொண்டத் தொகையின் 11 பாடல்களில் சொல்லப்பட்ட வரலாறுகளை அந்த வரிசையிலையே 11 சருக்கங்களாகப் பாடியுள்ளார். சருக்கத்தின் பெயர்கள், திருத் தொண்டத்தொகைப் பாடல்களின் தொடக்கத் தொடர்களாகவே அமைந்துள்ளன. இறுதியில் சுந்தரர் அவர் பெற்றோரான சடைய நாயனார், இசைஞானியார் ஆகிய இருவரையும் சேர்த்துச் சுந்தரர் பாடிய அறுபது என்ற தொகையினை 63 ஆகப் பெருக்கினார் சேக்கிழார். ஏறக்குறைய 4250 பாடல்களில் இந்நூல் அமைந்துள்ளது. (பல பாடல்கள் இடைச் செருகல் என்று கருதப் படுவதாலும், அவை எவை என அறியக் கூடாமையாலும் சரியான எண்ணிக்கை கூற இயலவில்லை).

---

2. N. Sethuraman, **The cholas**, p.*169*.

சேக்கிழார் சோழ மன்னனிடம் அமைச்சராகப் பணியாற்றியவர். அதனால் தமிழகம் முழுவதையும் நன்கறிந்தவர். பல்வேறு ஊர்களுக்கும் தாமே செல்லும் வாய்ப்பினைப் பெற்றிருந்தவர். எனவே ஆங்காங்கு மக்களிடையே வழங்கிய அடியார்களைப் பற்றிய செய்திகளைக் கேட்டறிந்திருந்தார். பல்வேறு வரலாறுகளை ஊன்றிக் கற்றிருந்தார். இத்தகைய பரந்துபட்ட அறிவோடு இந்தநூல் செய்யப்பெற்றுள்ளதால், சிறந்த வரலாற்றுக் களஞ்சியமாகவும் திகழ்கிறது. சைவத்தின் மீதும், சோழப் பரம்பரை மீதும் பக்தியும் பாசமும் கொண்ட சேக்கிழாரால் எழுதப்பட்ட இக் காப்பியத்தில் பக்திச் சுவையும் சிவனடியார்களின் தொண்டும், இறைப்பற்றும் முதன்மையிடம் பெறுகின்றன. எனவேதான் காவிரி ஆறுகூட தொண்டு செய்யும் அன்பராவதைப் பின்வரும் பாடல் கூறுகிறது:

**வம்பு லாமலர் நீரால் வழிபட்டுச்**
**செம்பொன் வார்கரை எண்ணில் சிவாலயத்து**
**எம்பி ரானை இறைஞ்சலின் ஈர்ம்பொன்னி**
**உம்பர் நாயகர்க்கு அன்பரும் ஒக்குமால் (57)**

சிவ பக்தர்களைப்பாடும் புராணத்தில் அமைந்துள்ள தொண்டர்தம் தன்மையினைக் கீழ்வரும் பாடல் குறிக்கிறது :

**நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும்**
**மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் இமைத்தாலும்**
**மன்றாடும் மலர்ப்பாதம் ஒருகாலும் மறவாமை**
**குன்றாத உணர்வுடையோர் தொண்டராம் குணமிக்கார்**
**(4158)**

இறைவனின் அருளைத் தன் சிறுவயதில் பெற்ற சம்பந்தர் பாலொடு பெற்ற ஞானத்தைச்

**சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்**
**பவமதனை அறமாற்றும் பாங்கினிலோங் கிய ஞானம்**
**உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்**
**தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்**
**(1973)**

என்று பாடுகிறது.

தமிழ் வளர்த்த மதுரையைப் பாடும்போது, தமிழின் மீதுள்ள பற்றால், மதுரையைத் தமிழோடு சேர்த்துப் பாடுகின்றது.

**மெய்ம்மைப் பொருளாம் தமிழ்நூலின் விளங்குவாய்மைச்**
**செம்மைப் பொருளும் தருவார்திரு ஆலவாயில்**
**எம்மைப் பவந்தீர்ப் பவர்சங்கம் இருந்ததென்றால் *(979)***

இந் நூல் நாடகத்தன்மை மிக்க காப்பியம் என்பதைத் தடுத்தாட்கொண்ட புராணம், திருநீலகண்டர் புராணம், மெய்ப்பொருள் நாயனார் புராணம், எறிபத்த நாயனார் புராணம், அப்பூதி அடிகள் புராணம் ஆகிய பகுதிகளால் அறியலாம். இறைவனே கதைப் பாத்திரமாய் வந்து இப்புராணங்களில் நடிக்கிறார். தொடர்புடைய மற்றொரு பாத்திரமான அடியார் அது நடிப்பென அறியாது வாதிடுவது, படிக்கும் ஆர்வலர்கட்கு மிகச் சிறந்த நாடகமாக அமைகிறது.

அகத்துறையில் அமையத்தக்க கதை நிகழ்ச்சிகள் இந்நூலகத்தும் உள்ளன. எனினும் அதிலும் சிவனருள் கூட்டியதன் விளைவு என்றே அந்நிலையை வருணிக்கின்றார். காதலிலும் இறையருளை முன்னிறுத்தி, சுந்தரரும் பரவையும் முதன்முதலாகச் சந்திப்பதைக் கூறும் பின்வரும் பாடல் இத்தன்மைக்கு நல்லதோர் எடுத்துக்காட்டு.

**கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ**
**பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து**
**விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ**
**அற்புதமோ சிவனருளோ அறியேன் என்றதிசயித்தார்**
***(286)***

இந்நூலின் சிறப்பினைத் திரு.வையாபுரிப் பிள்ளையவர்கள் கூறுவது கருதத் தக்க ஒன்றாகும். "முதலாவது, சேக்கிழார் ஊட்டும் தமிழின்பம் தனிச்சுவையுடையது. இரண்டாவது, தொடர்களின் இன்பம். இது பல இடங்களிலும் தோன்றி நம்மைப் பரவசப்படுத்துகிறது. மூன்றாவது, வருணனையின்பம் உயர்ந்த தரத்ததாய் அமைந்துள்ளது. நான்காவது, தமிழாட்சியில் ஆசிரியர் காட்டும் தன்னடக்கம் கரைகடவாது செல்லும் தெளிந்த ஆற்றொழுக்குப் போலச் செய்யுட்கள் இனிதொழுகி நம்மையும் மன அமைதியுடையவராய்ச் செய்து சாந்தச் சுவையை ஊட்டுகிறது. இவை போன்ற நெறிகளிற் சேக்கிழார் காட்டும் இலக்கியச்சுவை பெரிதும் வியக்கற் பாலதேயாகும்".

சேக்கிழார் பெரியபுராணம் அன்றைய வரலாற்றினை அறியஉதவும் கருவிநூல். ஓவியம், சிற்பம், கட்டிடக்கலை,

இசைக்கலை, கூத்து ஆகியவற்றை ஆராயவும் இந்நூல் களம் அமைக்கிறது. அரசியல், பொருளியல் ஆகியவற்றோடு அன்றைய சமுதாய நிலையினையும் படம் பிடித்துக் காட்டுகிறது. பெண்களின் நிலை, சாதியுணர்வு, தீண்டாமை ஆகியன அன்றைய நிலையில் எவ்வாறிருந்தன என்றறியவும் துணை நிற்கும் அரிய இலக்கியமாகப் பெரியபுராணம் திகழ்கிறது.

பெரியபுராணத்தின் தனிச்சிறப்புகளாகக் கூறத்தக்கன சிலவுள. அவை வருமாறு:

அ. காப்பிய வகைமையில் கூட்டுத்தலைமையைப் படைத்துக் காட்டிய முதல் தமிழ்க் காப்பியம்.

ஆ. கதை, கதைமாந்தர், கதை நிகழிடம் போன்ற கூறுகள் எல்லாம் தமிழகத்தைச் சேர்ந்தவை. முழுவதும் தமிழகக் கதையாக அமைந்த காப்பியம்.

இ. ஒன்பான் சுவையைக் கடந்து பக்தி என்னும் புதுச்சுவையைக் காப்பியத்தின் தலைமைப் பண்பாக்கி வெற்றி கண்ட முதல் தமிழ்க் காப்பியம்.

ஈ. பக்திச் சுவையைத் தலைமைப் பொருளாகக் கொண்டிருப்பினும் தொண்டர்களைப் புறக்கணித்து இறையன்பைப் பெறஇயலாது என்பதை-மானுடம் போற்றும் மாண்பைக் - காட்டும் காப்பியம்.

உ. இறையன்பில் அரசன் முதல் ஆண்டி ஈறாக, அந்தணர் முதல் திருக்குலத்தார் ஈறாக அனைவரும் சமம் என்பதைக் காட்டிச் சமுதாய ஒருமைப் பாட்டை வற்புறுத்தும் காப்பியம்.

ஊ. உடன்கால வரலாற்றை அறியத் துணைபுரியும் வரலாற்றுக் காப்பியமாகவும் திகழும் தமிழ்க் காப்பியம்.

**பதிப்பு:** எண்ணற்ற பதிப்புகள் வெளிவந்திருப்பினும், வரலாற்றுக்கும் ஆராய்ச்சிக்கும் பயன்படத்தக்க பதிப்புகள் வருமாறு :

1859, 1870 - காஞ்சி சபாபதி முதலியார் (ப.ஆ) மூலம்.

1884 (முதல் பதிப்பு) - ஆறுமுக நாவலர் (ப.ஆ) மூலம்.

1934-திரு.வி. கலியாண சுந்தரனார் (அரும்பதக்குறிப்புடன்) (ப.ஆ)

1934-சைவசித்தாந்த மகாசமாஜப் பதிப்பு.

1950-மூன்றாம் பதிப்பு - ம. பாலசுப்பிரமணிய முதலியார் எழுதிய அரிய குறிப்புகளுடன் (மூலம்).

1847-மகாலிங்கையர் பொழிப்புரையுடன் - திருக்குறிப்புத் தொண்டர் புராணம் வரை.

ஆறுமுகத் தம்பிரான் உரை - சுப்பராயலு நாயக்கர் உரை - நூல் முழுமைக்கும்.

ஆலாலசுந்தரம் பிள்ளை உரை - முதல் மூன்று சருக்கங்கள் மட்டும்.

1937 - கோவை வழக்கறிஞர் சி.கே. சுப்பிரமணிய முதலியார் பேருரை.

1993 - அ.ச. ஞானசம்பந்தன் (ப.ஆ) திருத்தொண்டர் புராணம் (அரும்பதவுரை) சென்னை : சேக்கிழார் ஆராய்ச்சி மையம்.

# 2. சிறுகாப்பியங்கள்

### 10ஆம் நூற்றாண்டு

### குண்டலகேசி

ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றாக வைத்துப் போற்றப் பெறும் குண்டலகேசி மணிமேகலைக்குப் பின்னர்த் தமிழில் எழுந்த ஒரு பௌத்தக் காப்பியம் ஆகும். நூல் முழுவதுமாகக் கிடைக்கவில்லை. 16ஆம் நூற்றாண்டுவரை இருந்து பின்னர் மறைந்து போன இலக்கியங்களுள் இதுவும் ஒன்று.

இந்நூல் 'சுருண்ட கூந்தலுடைய' காவியத் தலைவியின் பெயரால் அமைந்தது. 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நீலகேசி உரைதான் தமிழில் குண்டலகேசியின் வரலாற்றை விளக்கமாகக் கூறுகின்ற நூலாகும். யாப்பருங்கல விருத்தி நான்கிடங்களில் இதன் பெயரையும், இதன் ஒரு கடவுள் வாழ்த்துப் பாடலையும் தருகின்றது. வீரசோழிய உரை இரண்டிடங்களில் இதன் பெயரையும், ஒரு பாடலையும் தருகின்றது. புறத்திரட்டில் இதன் பாடல்கள் 19 தொகுக்கப்பட்டுள்ளன. நீலகேசி ஏறக்குறைய 100 குண்டலகேசிப் பாடல்களின் முதற்குறிப்பையும், 4 முழுப்பாடல்களையும் குறிப்பிடுகிறது. அதன் உரை 24 முழுப்பாடல்களையும், பல அடிகளையும், பல பாடல்களின் முதற்குறிப்பையும் தருகின்றது. சிவஞான சித்தியார் பரபக்கவுரையில் திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் இதன் பாடல்கள் பலவற்றைக் குறிப்பிடுகின்றார். தக்கயாகப் பரணி ஆசிரியரும், இந்நூலில் இருந்து சில தொடர்களை எடுத்துக் காட்டுகிறார்.

வீரசோழிய உரையின்மூலம், இது குண்டலகேசி விருத்தம் எனப்பெயர் கொண்டிருந்தது என்றும், யாப்பருங்கல விருத்தியின்மூலம், இது ஒரு தருக்க நூல் என்றும் தெரிகிறது. வீரசோழிய உரைகாரர், இதனை 'அகலக்கவி' என்றும் குறிப்பிடுகிறார். வித்தாரகவி என்ற சொல்லுக்கு ஏற்ப விரிந்த பொருள் பற்றிப் பாடப்பட்டது. இந்நூல் தருக்க நூலாகவும், குறிப்பாகச் சமய மறுப்பு நூலாகவும் எழுதப் பெற்றமையால்,

இக்காப்பியத்துள் அரிய சொல்லும் பொருளும் வந்துள்ளன என்று அவ்வுரைகாரர் குறிப்பிடுகிறார்.

புறத்திரட்டில் காணப்படும் குண்டலகேசிப் பாடல்கள், உலக நீதிகளான தீவினையச்சம், யாக்கை நிலையாமை, கூடா ஒழுக்கம், புணர்ச்சி விழையாமை, தூயதன்மை, இறைமாட்சி, குற்றங்கடிதல், இடுக்கண் அழியாமை ஆகிய தலைப்புகளில் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இந்நூலின் கவிதைச் சிறப்புக்கு எடுத்துக்காட்டாகவும், பிற்காலத்தே பலரால் மேற்கோளாக எடுத்தாளப்பெறும் பாடலாகவும் விளங்கும் யாக்கை நிலையாமை பற்றிய கீழ்வரும் பாடலைச் சுட்டலாம்.

**பாளையாம் தன்மை செத்தும் பாலனாம் தன்மை செத்தும்**
**காளையாம் தன்மை செத்தும் காமுறும் இளமை செத்தும்**
**மீளும் இவ் வியல்பும் இன்னே மேல்வரும் மூப்பு மாகி**
**நாளும்நாள் சாகின் றாமால் நமக்குநாம் அழாத**
**தென்னோ**

இந்நூலின் காலத்தை அறுதியிட்டு வரையறுக்கத் தக்க சான்று ஏதும் இல்லை. எனினும், நீலகேசி இந்நூற் கருத்துகளைப் பாடல்பாடலாக எடுத்துக் கூறி மறுப்பதால், நீலகேசிக்கு முற்பட்ட காப்பியமாகக் குண்டலகேசியைக் கூறலாம்.

### நீலகேசி

இந்நூல் தமிழில் உள்ள ஐஞ்சிறு காப்பியங்கள் என்ற தொகுப்பில் இடம்பெற்றது. விருத்தப்பாவால் இயன்றது. குண்டலகேசி என்ற பௌத்த காப்பியத்திற்கு மறுப்பாக எழுதப் பெற்ற சைனநூலாக நீலகேசி அமைந்துள்ளது.

அழகிய கருங்கூந்தலையுடைய காப்பியத் தலைவி என்ற பொருள்பட அமைந்த பெயரால் இந்நூல் பெயர் பெற்றுள்ளது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. நீலகேசித் திரட்டு அல்லது நீலகேசித் தெருட்டு என்ற பெயர்களும் இந்நூலுக்கு வழங்கின.

நீலகேசி பாயிரமும் பத்துச் சருக்கங்களும் 894 பாடல்களும் உடையது. இந் நூலுள் தொல்காப்பியம், திருக்குறள், நாலடியார், சீவக சிந்தாமணி ஆகிய நூல்களில் இருந்து கருத்துகளும், தொடர்களும் எடுத்தாளப்பட்டுள்ளன. யாப்பருங்கல விருத்தியுரையின் ஆசிரியர் இந்நூலைக் குறிப்பிடுகிறார். எனவே சிந்தாமணியின் காலமான கி.பி.10ஆம் நூற்றாண்டுக்குப் பின்னும்,

யாப்பருங்கல விருத்தியுரையின் காலமான 11ஆம் நூற்றாண்டுக்கு முன்னும் இந்நூல் இயற்றப் பெற்றிருத்தல் வேண்டுமெனக் கருதலாம்.

பாஞ்சால தேசத்தின் தலைநகரான புண்டவருத்தன நகரில் அரசன் சமுத்திர ராசனுக்கு ஆண்மகவு பிறந்தது. அதற்கு நன்றிக் கடனாக, நகர்ப்புறத்தே இருந்த காளிக்கு ஆடுகளைப் பலியிடச் சென்றவிடத்து, ஆங்கிருந்த முனிச் சந்திரன் என்ற சமணமுனிவரின் உபதேசத்தால் மக்கள் பலியினை நிறுத்தி விட்டனர். அதனால் கோபம் கொண்ட காளி, பழையனூர் நீலியிடம் சென்று முறையிட, அம் முனிச்சந்திரன் என்ற முனிவரிடம் சென்ற நீலியும் அவர் உபதேசத்தால் மாறி சமண சமயத்தை ஏற்றாள். அவளே நீலகேசி எனப் பெயர் பெற்று, பௌத்தம், ஆசீவகம், சாங்கியம், வைசேடிகம், வேதவாதம், பூதவாதம் ஆகிய சமய தத்துவங்களை வாதில் வென்று, அரசனாலும் மக்களாலும் பெரிதும் மதிக்கப்பெற்றதாகக் கதை முடிகிறது.

நீலகேசிப் பாடல்கள் சுவையுடையன அல்ல என்பது அறிஞர்களின் கருத்து. பல்வகைச் செய்யுள் விகற்பங்கள் இந்நூலுள் உண்டு. நீலகேசி அருகதேவனைச் சென்று ஆயிரத்தெட்டு நாம நல்லிசை தொடுத்து வழிபடுகிறாள் என்று பல பாடல்களில் சொல்லப்பட்டுள்ளன. அதில் வரும், 'வீரர்தம் வீரர்க்கும் வீரா', அறிவர்தம் அறிவிற்கும் அறிவா', 'இறைவர்தம் இறைவர்க்கும் இறைவா', 'தலைவர் தம் தலைவர்க்கும் தலைவா' என்று வருவன போன்ற விளிகள் குறிப்பிடத்தக்கன. பிற காப்பியங்களில் காணற்கரியனவான கட்டளைக் கலித்துறைப் பாடல்களும் (75-90) இதில் இடம் பெறுகின்றன. சுவையான கருத்துகளும், தொடர்களும் இந்நூலிலும் இடம் பெற்றுள்ளன. நானில வருணனையாக வரும் பாடல்களில், மருதநில வளத்தைப் பாடும் கீழ்வரும் பாடல் மிக்க சந்த நயம் உடையதாக அமைந்துள்ளது.

வருபுனலன் வளவயலிடை மறிவனவின வாளை
மருவினியன மகிழ்தகையன மலர்சிறையன நாரை

கருவரியன கடுநடையன கனைகுரலன கம்புள்
திருவுருவின் தெரிகதிரின திசைதிசைதொறு செந்நெல் (12)

உச்சயினி நகரில் அருக்க சந்திரனை வெல்லும் நோக்கில் நடத்திய வாதத்தில் உலக துக்கங்களைப் பாடும் கீழ்வரும் பாடலையும் குறிப்பிடலாம்.

பேனறாக் கூறை பெருமுடுகு நாறுமேல் துக்கந் துக்கம்
மானறா நோக்கி மணற் சுமையும் தான்பெரிதால்
துக்கந்துக்கம்
கூனிறாக் கண்டாலும் கொள்ள முடியாதேல், துக்கந் துக்கம்
தானறாப் பல்தொழிலும் தான்துக்க மாதலால் சருவ்வந்
துக்கம்

## பதிப்பு

1936; நீலகேசி; அ. சக்கரவர்த்தி நயினார் (ப.ஆ.) சமயதிவாகர முனிவர் விருத்தியுரைடன்.

மொழியாக்கம் : 1936(ஆங்கிலம்). அ.சக்கரவர்த்தி, கும்பகோணம்.

## வளையாபதி

ஐம்பெருங் காப்பியங்கள் என்று வகைப்படுத்தப் பெற்றனவற்றுள் வளையாபதியும் ஒன்று. சென்ற நூற்றாண்டு வரை இருந்து இறந்துபோன நூல்களில் இதுவும் ஒன்று. இந்நூலிலிருந்து கிடைத்துள்ள பாடல்களின் நடை, சொல்லமைப்பு, பொருளமைதி, கருத்துகள், யாப்பு முதலிய தன்மைகளினால் இந்நூல் 9ஆம் நூற்றாண்டுக்குரியது என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர். (மு.அ. 9/79). எனினும் அதற்கு வேறு ஆதாரம் இன்மையின் 10ஆம் நூற்றாண்டு என்பதே பல அறிஞர்களின் முடிபு ஆகும்.

இந்த நூல் சைன சமயம் சார்ந்தது என்பதை, இளம்பூரணருரை, யாப்பருங்கல விருத்தியுரை, நச்சினார்க்கினியருரை ஆகியவற்றில் எடுத்துக் காட்டப்பெறும் இந்நூலின் கடவுள் வாழ்த்துப் பாடல் மூலம் அறிகிறோம். புறத்திரட்டுத் தொகுப்பினுள், 30 தலைப்புகளில் இந்நூலில் இருந்து 66 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அடியார்க்கு நல்லாரின் சிலப்பதிகார உரை இந்நூலில் இருந்து மூன்று பாடல்கைளத் தருகின்றது. இவையே இந்நூலைப் பற்றி அறிய நமக்குக் கிடைக்கும் ஆதாரங்கள்.

புறத்திரட்டில் உள்ள 66 பாடல்களில் 30 சிற்றின்பத்தை வெறுத்துப் பாடுவன. புலால் மறுத்தல், கொல்லாமை, நிலையாமை, வினை, பொதுமகளிர் முதலிய தலைப்புகளில் உள்ள பாடல்கள் சைன சமயக் கருத்துகளை எடுத்துக் கூறுவன. காப்பியத் தகுதிக்கேற்ப இது ஒருகதையை உள்ளடக்கியது; நாட்டு வருணனை முதலிய பகுதிகளைக் கொண்டது எனத் தெரிகிறது.

பெண்களை இழித்துரைக்கும் பாடல்கள் பல இருந்தாலும், கற்புடைய பெண்டிரை இந்நூல் சிறப்பித்தே பாடியுள்ளது என்பதைப் பின்வரும் பாடல் காட்டும்.

> நாடும் ஊரும் நனிபுகழ்ந் தேத்தலும்
> பீடுறும் மழை பெய்யெனப் பெய்தலும்
> கூட லாற்றவர் நல்லது கூறுங்கால்
> பாடுங் கால்மிகு பத்தினிக் காவதே.

இதுபோன்று இல்லற வாழ்க்கையையும் இவர் புகழ்ந்து பாடுகிறார்.

இந்நூல் அழகுமிக்க பாடல்களைக் கொண்டது எனத் தக்கயாகப் பரணி உரைகாரரும் குறிப்பிடுகிறார். இந்நூலில் வரிப்பாடல்கள் பல இடம் பெற்றுள்ளன. சிலப்பதிகாரம், சிந்தாமணிபோல வளையாபதியின் கதைப் போக்கிலும் பாத்திரங்கள் கூற்றாக வரிப்பாடல்கள் இருந்தன என ஊகிக்கலாம். இசைகுறித்த செய்திகளையும் சில பாடல்களில் காண்கிறோம்.

### 13ஆம் நூற்றாண்டு

### நளவெண்பா

அரசியல் வரலாற்றில் சோழராட்சி முடிவுக்கு வந்த காலம் இதுவாதலின் சிற்றரசர்கள் பலர் பெருகினர். பாண்டியர் தலையெடுத்த காலம். பேரிலக்கியங்கள் ஏதும் தோன்றவில்லை. குறுநிலத் தலைவர்களின் ஆதரவால் ஓரளவு இலக்கியம் வளம் பெற்றது. சோழ மன்னர்கள் கட்டிய கோயில்கள், சமய உணர்வு ஆகியவற்றால் மக்கள் மனம் சமயத்தின்பால் ஈர்க்கப் பட்டிருந்ததால், பல்வேறு சித்தாந்த நூல்கள் எழத் தொடங்கின. சமய ஆச்சாரியர்களின் பரம்பரைகள் இந்நூற்றாண்டில் தோன்றின. இறைவனின் திருவிளையாடல்கள் என்று கூறி மக்களைச் செம்மைப் படுத்தும் முயற்சியாக இவை அமைந்தன. எனவே சிறிய நூல்கள், சித்தாந்த நூல்கள், பண்டைய நூல்களுக்கு உரையெழுதும் முயற்சி ஆகியனவே இந்நூற்றாண்டில் நடைபெற்றன எனலாம்.

நளவெண்பாவை இயற்றியதன் மூலம் தமிழ் இலக்கிய உலகில் தனக்கென ஒரு இடத்தினைப் பெற்றவர் புகழேந்தி. இது 'வெண்பாவிற் புகழேந்தி' என்று போற்றிக் கூறுமளவுக்கு மிகவும் புகழ் பெற்ற இலக்கியம். வெண்பாவினாலேயே பெரிய நூல்கள் செய்வதற்கு முன்னோடியாய் இருந்தவர் புகழேந்தி. தொண்டை மண்டல சதகப் பாடல்களின் (35,63) மூலம் இவர் பொன்விளைந்த களத்தூரில் பிறந்தவர் என்றும், நளவெண்பாப் பாடலின் மூலம்

மள்ளுவ நாட்டு முரணை நகர் சந்திரன் சுவர்க்கி என்ற தலைவனால் ஆதரிக்கப்பட்டவர் என்றும் அறிகிறோம்.

புகழேந்தி ஈழநாடு சென்று அந்நாட்டு அரசன் ஆரியசேகரன் என்பானைப் பாடிப் பரிசில் பெற்றார் என்ற தமிழ் நாவலர் சரிதைச் செய்தியிலிருந்து அம்மன்னன் ஆண்ட காலமான (கி.பி.1268-1311) 13ஆம் நூற்றாண்டு பிற்பகுதியில் இவர் வாழ்ந்திருக்கலாம் என்று கருதுவர். இந்நூல் குறிப்பிடும் மள்ளுவ நாடும் முரணை நகரும் எங்குளவென அறிய இயலவில்லை.

நளவெண்பா 424 வெண்பாக்கள் கொண்ட சிறிய தமிழ்க் காப்பியம். மகாபாரதத்தின் கிளைக் கதைகளுள் ஒன்றான நளோபாக்கியானத்தைத் தழுவிப் புகழேந்தி நளவெண்பாவை இயற்றினார். இது சுயம்வர காண்டம், கலிதொடர் காண்டம், கலிநீங்கு காண்டம் என்று மூன்று காண்டங்களைக் கொண்டது. பாயிரப் பகுதியில் விநாயகர், திருமால், சிவபெருமான், முருகன் ஆகியோர் துதியும், ஆசிரியர் பெயர் கூறும் கீழ்வரும் பாடலும் இடம் பெறுகின்றன.

பாரார் நிடதபதி நளன்சீர் வெண்பாவால்
பேரார் புகழேந்தி பேசினான்

பாண்டவர்கள் நாடு துறந்து காட்டிலிருந்த காலத்தில் வியாசர், சூதாட்டம் எவ்வாறு வாழ்வினைக் குலைக்கும் என்று அறிவுறுத்தும் முகமாக நளதயமந்தி கதையை அவர்களுக்குக் கூறுவதாக இந்நூல் அமைகிறது. நிடத நாட்டு மன்னன் நளன், விதர்ப்ப நாட்டரசன் வீமனது மகள் தமயந்தியின் பண்புகளை ஓர் அன்னத்தின் மூலம் அறிந்து இருவரும் காதல் கொள்ள, அவளது தந்தை ஏற்பாடு செய்த சுயம்வரத்தால் தமயந்தி நளன் மீது கொண்ட காதலை அறிந்த இந்திரன், வருணன், யமன், அக்கினி ஆகிய நால்வருமே, நளனோடு சேர்ந்து நளனின் உருக்கொண்டு கலந்து கொண்டனர். எனினும் தேவர்கட்கு உரிய கண் இமையாமை, கால்நிலம் தோயாமை ஆகிய குறிகளைக் கொண்டு, உண்மையான நளனைத் தேர்வுசெய்து மாலையிட்டு நளனை மணந்தாள் தமயந்தி.

தேவர்கள் தாம்பெற்ற அவமதிப்பினைத் துடைக்கக் கலிபுருடனிடம் வேண்டி அதனுதவியால், நளனுக்குப் பல துன்பங்களை விளைவித்தனர். நளன் புட்கரனோடு சூதாடி நாடு தோற்றது, நள தமயந்தி பிரிவு, கார்க்கோடகன் என்ற பாம்பு தீண்ட அவன்தன் உருவம் இழந்தது, அயோத்தி மன்னன் ருதுபர்ணனிடம்

தேர்ப்பாகன் தொழிலும் மடைத்தொழிலும் செய்து துன்புற்றது, இறுதியில் மீண்டும் தன்னுருவம் பெற்றுத் தமயந்தியோடு கூடியது, மீண்டும் சூதாடித் தன் நாட்டைப் பெற்றது ஆகிய நள தமயந்தியின் வாழ்க்கையே இந்நூலின் கதையாயிற்று.

ஓசை, தொடைநயம், எளிமை ஆகிய செய்யுட் பண்புகள் செறிந்த நளவெண்பா பிற்கால நூலாசிரியர் பலருக்கும் சிறந்த முன்மாதிரியாய் அமைந்தது. நூலுள் ஆங்காங்கு பண்டை நூற்கருத்துகளும், தொடர்களும் பயில்கின்றன. மிகவுயர்ந்த நீதிகளையும் எளிமையாகப் புகட்டும் ஒரு சிறந்த காவியம் இது. சூதாட்டத்தின் தீமையை எடுத்துரைக்க எழுந்த காப்பியமான இந்நூலில் சூதாடலின் தீமையைக் குறிக்கும் பின்வரும் பாடல் குறிப்பிடத்தக்கது:

**அறத்தை வேர்கல்லும் அருநரகிற் சேர்க்கும்**
**திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும் – மறத்தையே**
**பூண்டுவி ரேர்தஞ்செய் பொய்ச்சூதை மிக்கோர்கள்**
**தீண்டுவரோ என்றார் தெரிந்து.**

தமயந்தியின் கற்பின் திண்மையைக் கூறி அவளது பெண்மை நலத்தைச் சுட்டும் கீழ்வரும் பாடல், எல்லோராலும் பெரிதும் பாராட்டப்படுவதும், பயன்படுத்தப் படுவதும் ஆகும்.

**நாற்குணமும் நாற்படையா ஐம்புலனும் நல்லமைச்சா**
**ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா – வேற்படையும்**
**வாளுமே கண்ணா, வதன மதிக்குடைக்கீழ்**
**ஆளுமே பெண்மை அரசு.**

கற்பனையும் தொடை நயமும் கலந்து செம்பாகச் சொற்களால் ஆற்றொழுக்காகச் செல்லும் புகழேந்தியின் வெண்பா யாப்புக்குச் சில எடுத்துக்காட்டுகள் வருமாறு:

அன்னம் எடுத்துரைக்கும் நளனின் மாண்புகள்

**செம்மனத்தான் தண்ணளியான் செங்கோலான்**
**மங்கையர்கள்**
**தம்மனத்தை வாங்கும் தடந்தோளான் மெய்ம்மை**
**நளன்என்பான் மேல்நிலத்தும் நானிலத்தும் மிக்கான்**
**உளன்என்பான் வேந்தன் உனக்கு.**

**அறம்கிடந்த நெஞ்சும் அருள்ஒழுகு கண்ணும்**
**மறம்கிடந்த திண்தோள் வலியும் திறம்கிடந்த**

செங்கண்மால் அல்லனேல் தேர்வேந்தர் ஒப்பரோ
அங்கண்மா ஞாலத்து அவற்கு.

உரையாடல் வடிவத்திற்கும் வெண்பா யாப்பு இசைந்து பயன்படுவதை நளனும் அவன் மக்களும் உரையாடும் பாடல்களில் காணலாம்.

மக்களைமுன் காணா மனம்நடுங்கா வெய்து உயிரா
புக்கெடுத்துவீரப் புயத்து அணையா, 'மக்கள் நீர்
என்மக்கள் போல்கின்றீர் யார்மக்கள்' என்றுரைத்தான்
வன்மக் களியானை மன்.

"மன்னன் நிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யாம்
அன்னைதனைக் கான்விட்டு அவன்ஏக இந்நகர்க்கே
வாழ்கின்றோம்; எங்கள் வளநாடு மற்றொருவன்
ஆள்கின்றான்" என்றார் அழுது.

வாய்மையின் சிறப்பு, தூதின் இலக்கணம், ஊழ்வினையின் வலிமை போன்ற பல பொருள்களை ஆசிரியர் உணர்த்துகிறார். சொற்களைச் சிதைக்காத தொடையினானும், எளிய மொழிகளாலும், புகட்டும் நிலைத்த நீதிகளாலும், இச்சிறு காப்பியம் தமிழிலக்கியத்தில் தனக்கெனச் சிறப்பானதோர் இடத்தினைப் பெற்றுள்ளது.

### பதிப்பு

1870 நளவெண்பா (மணிவிளக்கு உரையுடன்) தி.ஈ. ஸ்ரீநிவாசாசாரியார், சென்னை.

1957 நளவெண்பா சென்னை : மர்ரே ராஜம் பதிப்பு

மொழிபெயர்ப்பு : (1950) 1997 ஆங்கிலம்: **Nala Venba**. The Story of King Nala and Princess Damayanti.Maurice Langton. Madras: CLS. rpt. Madras: IITS.

### யசோதர காவியம்

சிந்தாமணி, சூளாமணி ஆகிய இலக்கியங்களைச் சமணர்கள் இயற்றினர். ஐஞ்சிறு காப்பியம் என்ற வழக்கில் இடம்பெறும் காப்பியமான யசோதர காவியம் 13ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்கலாம். வாதிராச சூரியால் வடமொழியில் எழுதப் பெற்ற யசோதர காவியமே இதற்கு மூலம் என்று கருதப்படுவதால், அது எழுதப்பட்ட காலம், மற்றும் இந்நூலில் உள்ள சீரமைப்பு ஆகியவற்றின் அடிப்படையிலும் இதனை 13ஆம் நூற்றாண்டு எனக் கருதுவர் (மு.அ.13/386).

இந்நூலின் ஆசிரியர் வெண்ணாவலூருடையார் வேள் என்றும், புட்பதந்தன் என்பார் வடமொழியிற் சொன்னதைச் செந்தமிழில் அவர் செய்தார் என்றும் ஒரு பாடல் மூலம் தெரிகிறது (ஔவை,14).

இந்நூல் 320 விருத்தப்பாக்களால் இயன்றது. அறுசீர், எழுசீர் விருத்தங்களாலும், கலிவிருத்தம், சந்தக்கலி விருத்தங்களாலும் ஆகியது. தீவினை தொடரும் வழியினை உணர்த்தி, அதனின்று நீங்கி நல்வினை செய்து அதனால் வரும் போகத்தையும் புண்ணியத்தையும் அடையச் செய்யுமுகத்தான் இந்நூல் செய்யப்பட்டதாக 'நூற்பொருள்' கூறுகிறது.

உயிர்க்கொலை பெரும் பாவம்; அது கீழான பிறவியைக் கொடுக்கும்; இசை மக்களை உலக இன்பத்தை நாடச்செய்வதுடன் தீயவழியில் செலுத்துவதாலும் வெறுக்கத் தக்கது; துறவு பூண்டு தருமங் கேட்டு மனிதன் மேனிலை அடையவேண்டும் என்ற மூன்று கருத்துகளையும் இக்காவியம் வலியுறுத்துகிறது.

பெருங்காப்பியங்களை ஒத்த செம்மையான நடையை உடையதல்ல இக்காவியம். இருப்பினும் எளிய இனிய பாடல்களும் இக் காப்பியத்திலுள்ளன என்பதற்குப் பின்வரும் இளவேனிலை விவரிக்கும் பாடல் ஓர் எடுத்துக்காட்டு:

**செந்தளிர் புனைந்த சோலைத் திருமணி வண்டுந் தேனும்**
**கொந்துகள் குடைந்து கூவுங் குயிலொடு குழுமி யார்ப்பச்**
**செந்துணர் அளைந்து தென்றல் திசைதிசை சென்று வீச**
**வந்துளம் மகிழ்ந்த தெங்கும் வளர்மதுப் பருவம் மாதோ.**

பதிப்பு : 1887 - காஞ்சி பாகுபலி நயினார் (ப.ஆ)
1908 - தில்லையம்பூர் வேங்கட்ராமய்யங்கார் (ப.ஆ) (மூலம் மட்டும்)
1944 - ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (ப.ஆ) (விரிவுரையுடன்)
1965 - வீடூர் பூர்ண சந்திர நயினார் (ப.ஆ) (உரையுடன்)

## நம்பி திருவிளையாடல்

புராணம் என்பது பழங்கதை. அப்பர் பதிகங்களில், இலிங்க புராணம், தசபுராணம் ஆகிய சிவனின் வீரச்செயல்களை அடிப்படையாகக் கொண்ட கதைகள் சொல்லப்பட்டுள்ளன. எனவே ஒரு தெய்வத்தின் வீரச்செயலைப் பாடுவதாகவோ ஒரு தலத்தில் உள்ள இறைவனை அத்தலத்தோடு சேர்த்து அதன்

வீரத்தைப் பாடுவதாகவோ, சமயப் பெரியார் வரலாற்றைக் கூறுவதாகவோ புராணங்கள் அமைந்துள்ளதைக் காண்கிறோம். இவ்வகையில் 12ஆம் நூற்றாண்டிலேயே, அட்டாதச புராணம், கன்னிவன புராணம் ஆகிய நூல்கள் இருந்ததைக் கல்வெட்டுகள் வாயிலாக அறிகிறோம். சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணமும் இவ்வகைத்ததே. அதன்வழி இந்நூற்றாண்டில் எழுதப் பெற்று நமக்குக் கிடைக்கும் முதல்நூல், பெரும்பற்றப் புலியூர் **நம்பி திருவிளையாடல்** என்னும் மதுரைத் தல புராணமாகும்.

இந்நூல் பழைய திருவிளையாடல் என்று வழங்குகிற **திருவால வாயுடையார் திருவிளையாடல்**. இது நம்பி திருவிளையாடல் எனவும் வழங்கப் பெறும். நூலின் இறுதியில் உள்ள இரு பாடல்களின் மூலம், இந்நூலாசிரியர் செல்லி நகரத்தவர்; வேம்பத்தூர்க் கவுணிய கோத்திரத்துப் பிராமணர்; மதுரைக்கருகேயுள்ள கம்பிஞ்சி என்ற நாட்டில், பாண்டியர் குலசேகரன் வேண்டுகோளுக்கிணங்க இந்நூலைச் செய்தார் என அறிகிறோம். இவர் வாழ்ந்த செல்லிநகரை இந்நூலுக்காக முற்றூட்டாகப் பெற்றார் என்று அறிஞர் கூறுவர். இந்நூற்பாயிரத்தின் மூலம் தில்லையில் உள்ள மாளிகைமடத்து முனிவர் விநாயகர் இவரது ஆசிரியர் என்றும் அறிகிறோம். வடமொழி உத்தர மாபுராணத்தில் உள்ள சாரசமுச்சயம் என்னும் பகுதியை அடிப்படையாகக் கொண்டு இந்நூல் செய்தாரென்பதை "ஓதரிய உத்தர மாபுராணந்தன்னுள் உண்மைதரு சாரசமுச்சயத்து முன்னம் மேதகு நன்கதை" எனவரும் முதல் திருவிளையாடலின் இறுதிப் பாடலால் அறிகிறோம். திருப்புத்தூர்க் கோயிற் கல்வெட்டு மாறவர்மன் குலசேகரனின் 36ஆம் ஆட்சியாண்டில் (கி.பி.1303) பெரும்பற்றப் புலியூர் நம்பிக்கு இக் கோயில் மகேஸ்வரர்கள் (அருச்சகர்கள்) நிலம் தானம் வழங்கினர் என்று கூறுவதால் இந்நூல் எழுதப்பெற்ற காலம் 13ஆம் நூற்றாண்டெனக் கருதலாம்.

இந்நூல் 1753 விருத்தப்பாடல்களைக் கொண்டது. பாயிரம், கடவுள் வாழ்த்து, அவையடக்கம், பதிகம், நூல்வரலாறு, திருநகரச் சிறப்பு, நூற்பயன் ஆகிய பகுதிகளுக்குப் பின் சிவனின் 64 திருவிளையாடல்களும் சொல்லப் பட்டிருக்கின்றன. துதிக்கப்பெறும் தலம் அல்லது மூர்த்தியின் பெயர்களைக் கூட சந்தத்திலேயே ஆசிரியர் அமைத்துள்ளது, இவருக்குச் சந்தத்தின் மேலுள்ள விருப்பினைக் காட்டும். நூலினிடையே நிறைய துதிப் பாடல்களை யாத்துள்ளார். சிவ சின்னங்களாக உருத்திர அக்கம், வெண்ணீறு, நமச்சிவாய வென்னும் திருநாமம் ஆகியவற்றைப்

போற்றியுரைக்கிறார். புராணத்தில் வரும் கதைகளை ஒட்டிச் சில இலக்கியச் செய்திகளையும் கூறுகிறார்.

வாதவூரர் சரிதத்தை மட்டும் தனியே நான்கு படலங்களில் 241 பாடல்களில் இந்நூலாசிரியர் கூறுகிறார். இதில் திருவாசகப் பதிகங்கள் எந்தச் சூழ்நிலையில் இயற்றப் பெற்றன என்றும் குறிப்பிடுகிறார். இசை இலக்கணம், மணிகளின் இலக்கணம், குதிரை இலக்கணம் போன்ற பலதுறைச் செய்திகளைக் கூறுகிறார். சுந்தரன் என்ற வடமொழிப் பெயரைச் சொக்கன் என்று அழகாக மொழிமாற்றித் தருகிறார்.

இவர் சொல்லணிகளையும், மடக்கணிகளையும் பெரிதும் பயன்படுத்துகிறார். ஒரு கருத்தினைச் சொல்ல வரும்போது அதனோடு தொடர்புடைய பல கருத்துகளைச் சொற்பொருள் நயத்தோடு பாடுவது இவரது இயல்பு என்பதற்குப் பின்வரும் யானை பற்றிய பாடல் சிறந்ததோர் எடுத்துக்காட்டு:

**யானையாழ் துயரந் தீர்த்தோன் யானைதாங் கண்டங் கண்டோன்**
**யானைவா கனத்தோன் போற்ற யானையா லயத் திருந்தோன்**
**யானையா னனனைத் தந்தோன் யானைவந்தனை உவந்தோன்**
**யானையை யுரித்த தன்றி யானையை எய்தான் அன்றே**

பட்டினத்தார் வரலாறு இவர் பாடிய ஒரு படலத்தாலேயே நன்கு விளக்கம் பெறுகிறது. பதிகங்களின் முதல் நினைப்பைக் கடைசியில் ஒரு பாடலாகப் பாடிச் சேர்த்திருப்பதில் இருந்து, இந்நூல் சைவர்களால் பாராயணம் செய்யப்படும் வகையில் அமைந்திருந்ததெனக் கருதலாம்.

இதே பெயரில் பின்னர் எழுந்த பரஞ்சோதி திருவிளையாடலுக்கும் இதற்கும் சில வேறுபாடுகள் உள்ளன. ஆராய்ச்சிக்குப் பயன்படும் பல செய்திகளை இந்நூல் கொண்டுள்ளது. எத்தனையோ பழஞ்செயல்களும் மதுரை பற்றிய அரிய செய்திகளும், அரிய சொற்களும், தொடர்களும் இந்நூலால் தெரியவருகின்றன.

பதிப்பு

(1906) 1927 **நம்பி திருவிளையாடல்**. உ.வே. சாமிநாதையர் (ப.ஆ) சென்னை.

# 3. சிற்றிலக்கியங்கள்

*10ஆம் நூற்றாண்டு*

*9ஆம் திருமுறைப் பாடல்கள்*

தமிழிலக்கியங்களில் பல தொகைநூல்கள் காணப் படுகின்றன. பத்துப் பாட்டு, எட்டுத் தொகை ஆகிய இரு சங்ககாலத் தொகை நூல்கள் போல, இலக்கணம், சமயம் ஆகிய துறைகளிலும் தொகை நூல்கள் காலந்தோறும் எழுந்துள்ளன. சமயத்துறையில் முதன்முதலாக வைணவத் தொகை நூலான நாலாயிர திவ்வியப் பிரபந்தம் அமைகிறது. அவ்வகைத் தொகைநூல் தொடரில் வரும் சைவ சமயத் தொகை நூல்கள் திருமுறைகள் எனப்படும்.

காலத்தால் முற்பட்ட 7ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சம்பந்தர், அப்பர் பாடல்களும், அவர்கட்குப் பின்னர் வாழ்ந்த சுந்தரர் பதிகங்களும், மாணிக்க வாசகர் பதிகங்களும் சைவசமயத் துதிப்பாடல்களாக இசைத்தமிழில் அமைந்துள்ளன. இவை முதல் 8 திருமுறைகளாகத் தொகுக்கப் பெற்றன. அதன் பின்னர் ஒன்பதாம் திருமுறையும் இசைப்பாடல்கள் என்ற அமைதியில் இத்துடன் சேர்க்கப்பெற்றுள்ளன.

ஒன்பதாம் திருமுறையாய்த் தொகுக்கப்பெற்ற இப்பாடல்களின் ஆசிரியர்களும் ஒன்பதின்மர் ஆவர். இது பன்னிரு திருமுறைகளுள் அளவால் சிறியது. 301 பாடல்கள் கொண்டது. சோழமன்னர் கண்டராதித்தர் (950-958) பதிகமும், முதலாம் இராசேந்திரனால் கட்டப்பெற்ற கங்கை கொண்ட சோழீசுவரத்தைப் பாடிய கருவூர்த் தேவரின் பதிகமும் இதில் உள்ளன. இத்தொகுப்பு பதினோராம் நூற்றாண்டினதே ஆயினும், 10ஆம் நூற்றாண்டில் இயற்றப்பெற்ற பதிகங்களும் இதில் உள்ளன. இவை அனைத்தும் **திருவிசைப்பா** என்ற பெயரில் வழங்கப்படுகின்றன.

**திருமாளிகைத் தேவர் பதிகங்கள்**

திருமாளிகைத் தேவரைச் சித்தர் என்றும், திருவாவடுதுறை, திருவீழிமிழலை ஆகிய ஊர்களில் பூசித்து வாழ்ந்தவரென்றும்

பல்வேறு தனிப்பாடல்கள் கூறுகின்றன. எனினும் திருமுறையில் உள்ள திருவிசைப்பாப் பாடிய திருமாளிகைத் தேவர் குறித்த வரலாற்றுக் குறிப்புகள் ஏதும் கிடைத்தில. தில்லையில் வாழ்ந்தவர் என்று மட்டுமே கருதலாம்.

தஞ்சைப் பெருங்கோயிலில் நாட்டியப் பணிக்குக் குடியமர்த்தப் பெற்ற தேவரடியார் பெண்களில் ஒருத்திக்கு 'நீறணி பவளக் குன்றம்' என்று பெயர் உள்ளது. இத்தொடர், திருமாளிகைத் தேவர் திருவிசைப்பாவிலிருந்து எடுத்தாளப் பெற்றது. எனவே இராசராசனுக்கு முன்பே இவர் பதிகங்கள் பாடியிருந்தார் என்ற அடிப்படையில் இவர்காலம் 10ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்று கருதலாம் (மு.அ. 10/466).

இவர் பாடிய பதிகங்கள் நான்கும் தில்லையைக் குறித்துப் பாடப் பெற்றவை. 'உயர்கொடியாடை' என்னும் பதிகம் சிற்றம்பலத்தாட வல்லானைப் பாதாதிகேசமாய் வருணித்துப் பாடப்பெற்றது. 'உறவாக்கிய யோகம்' என்னும் பதிகம் அகத்துறையில் அமைந்தது. இணங்கிலா ஈசன் என்னும் பதிகம் தில்லைப் பெருமானிடத்தும், அவன் அடியாரிடத்தும் அன்பு செய்யாதவரை இழித்துப் பேசி, அவரைக் காணுதலும், பேசுதலும் ஆகாது என்று உணர்த்தும் வகையில் அமைந்துள்ளது.

### சேந்தனார் பதிகங்கள்

திருவிசைப்பாப் பாடிய ஆசிரியர்களுள் இரண்டாமவர் சேந்தனார். திருவீழிமிழலை, திருஆவடுதுறை, திருவிடைக்கழி ஆகிய தலங்களுக்குத் திருவிசைப்பாவும், தில்லைக்குத் திருப்பல்லாண்டும் பாடியவர். திருவிடைக்கழி, திருப்பல்லாண்டு பதிகங்களில் 'செப்புறைச் சேந்தன்' என்று தன்னைக் கூறுவதிலிருந்து இவர் செப்புறை என்ற ஊரையோ அல்லது குடியையோ சேர்ந்தவர் எனக் கருதலாம். ஏழையான நந்தனார் குலத்துப் பிறந்த இவர் சிவன் மீது கொண்ட பற்றினால், சிவனே இவரிடம் வந்து களியமுது பெற்று உண்டதாகக் கூறுவர். இச்செயலை நம்பியாண்டார் நம்பி,

'விரிதுணிமேல்
ஆந்தண் பழைய அவிழை அன்பாகிய பண்டைப்
பறைச்
சேந்தன் கொடுக்க அதுவும் திருவமிர்தாகியதே'

என்று திருப்பண்ணியர் விருத்தத்தில் குறிப்பிடுகின்றார். எனவே இவரது காலம் 10ஆம் நூற்றாண்டாகும்.

இவர் திருவிசைப்பா மூன்றும், திருப்பல்லாண்டு ஒன்றுமாக அமைந்த 47 பாடல்களைப் பாடியுள்ளார். எல்லாப் பதிகங்களும் பஞ்சமப் பண்ணில் அமைந்தவை. தமிழும் வடமொழியும் மிக எளிதாகப் பயிலும் இவரது பாடல்களில், சொல்நயமும் நெகிழ்ச்சியும் உள்ளன. அகத்துறையில் அமைந்த அந்தாதியாய் ஆவடுதுறை, திருவிடைக்கழிப் பதிகங்கள் அமைந்துள்ளன. திருவிடைக்கழிப் பதிகம் முழுவதும் அங்குக் குராமர நிழலில் எழுந்தருளி நிற்கும் குமரவேளைப் புகழ்வதாக அமைந்துள்ளமை குறிப்பிடத் தக்கது.

### திருவாலி அமுதனார் பதிகங்கள்

இவ்வாசிரியர் மயிலாடுதுறையில் வைணவ குலத்தில் பிறந்தவர். 'மயிலை மறைவல ஆலி' என்றும், மயிலையர் மன்னவர் என்றும் தன்னைப் பதிகங்களில் குறிப்பதிலிருந்து இவர் மறையவர் குலத்தவர் என்றும் அறியலாம். எடுத்தபாதம், மழலைச் சிலம்பு ஆகிய தொடர்கள் இராசராசன் காலக் கல்வெட்டுகளில் பயின்று வருகின்றன. இவை திருவாலி அமுதனார் பாடல்களில் இருந்து எடுத்தாளப் பெற்றிருக்கலாம் எனக் கருதப்படுவதால், இராச ராசனுக்கு முன்னரே இவர் வாழ்ந்திருக்கலாம் எனத் தெரிகிறது.

தில்லையைக் குறித்து நான்கு பதிகங்கள் பாடியுள்ளார். முதல் பதிகம் சிற்றம்பலத்தானைப் பாதாதி கேசமாகவும், மூன்றாம் பதிகம் பெருமான் ஆடும் நடனத்தை வருணிப்பதாகவும், மற்ற இரண்டும் அந்தாதி முறையில் அகத்துறைப் பாடல்களாகவும் அமைந்துள்ளன. பல்லாயிரம் பதஞ்சலிகள் பரவ வெளிப்பட்டு, நந்தி முழவம் கொட்டிச் சித்தர், தேவர், இயக்கர், முனிவர், அத்தா! அருளாய் அணி அம்பலவா' என்று ஏத்த, வலக்கை கவித்து மழலைச் சிலம்பார்க்க, ஆரூர் நம்பியவர்கள் இசைபாட, தென்னன் தமிழும் இசையும் கலந்த சிற்றம்பலந்தன்னுள் ஆடும் அழகன்' என்று திருநடனக் காட்சியைப் போற்றுகின்றார்.

### கண்டராதித்தர் பதிகம்

இவர் கி.பி.950-57 ஆம்ஆண்டுகளில் ஆட்சிபுரிந்த சோழ வேந்தர். இவரது தந்தை பராந்தகனின் காலம் போரில் கழிந்தது. இவர் அமைதியாக, சிவபக்திச் செல்வராகவே தம் காலத்தினைக் கழித்தார். எனவே 'சிவஞான கண்டராதித்தர்' என்று கூறும் பெங்களூர்க் கல்வெட்டுத் தொடர் இவரையே குறிப்பதாகலாம். மேற்கெழுந்தருளிய தேவர் என்ற பெயரும் இவருக்குண்டு.

தில்லையைப் பாடிய திருவிசைப்பாத் தொகுதியில் உள்ள 20ஆம் பதிகம் இவருடையது; பஞ்சமப்பண்ணில் அமைந்தது. அம்பலத்துள் ஒளிரும் சுடரைக் கூடுவது எப்போது என்று கேட்பது போலவே அனைத்துப் பாடல்களும் அமைந்துள்ளன. தஞ்சையர் கோன் கண்டராதித்தன் என்று தம்மைக் கூறும் இவர் தம் ஏக்கத்தினை வெளிப்படுத்திப் பாடிய பாடல்களில் ஒன்று பின்வருமாறு:

**மானைப் புரையும் மடமென் னோக்கி மாமலை யாளொடும்**
**ஆனைஞ்சாடுஞ் சென்னி மேலோர் அம்புலி சூடும்அரன்**
**தேனைப் பாலைத் தில்லை மல்கு செம்பொனின் அம்பலத்துக்**
**கோனை ஞானக் கொழுந்து தன்னைக் கூடுவதென்று கொலோ**

## வேணாட்டடிகள் பதிகம்

வேள்நாடென வழங்கும் திருவாங்கூர்ப் பகுதியைச் சேர்ந்தவர் இவ்வாசிரியர். அரச மரபினர். தம் பாடல்களில் தம்மைப் 'பத்தரடித் தொண்டன்' என்று மட்டுமே கூறிக் கொள்கிறார். இவரைப் பற்றிய வேறெந்த வரலாறும் தெரியவில்லை.

தில்லையைப் பற்றிய ஒரு பதிகம் மட்டுமே திருமுறையில் உள்ளது. புறநீர்மைப் பண்ணில் அமைந்தது. நேரில் உரையாடுவது போலப் பாடல்கள் அமைந்துள்ளன. இவரது பாடல்களில் பழமொழிகள் அதிகம் பயின்று வருகின்றன. பல அருஞ்சொற்கள் இவர் பாடலில் வழங்குகின்றன. தென்கோடித் தமிழகத்தவர் ஆதலின் இச்சொற்கள் அங்குப் பயின்றிருக்கலாம்.

ஒன்பதாம் திருமுறைக்குரிய கருவூர்த்தேவர் பதிகங்கள், பூந்துருத்தி நம்பி, காட நம்பி பதிகங்கள், புருடோத்தம நம்பி பதிகங்கள், சேதிராயர் பதிகம் ஆகியன பதினொன்றாம் நூற்றாண்டுக்குரியன வாதலின் அவை அந்நூற்றாண்டு வரலாற்றில் விளக்கப் பெறுகின்றன.

## 11ஆம் திருமுறை

பதினோராந் திருமுறை ஆசிரியர் யாவர், அதில் உள்ள பிரபந்தங்கள் யாவை என்பதற்கு எந்த வரையறையும் ஆதாரமும் இல்லை. இன்ன நூல்கள், இன்னார் பாடல்கள் என்பதற்கு அடிப்படை முன்வந்தோர் பதிப்பே. முதன் முதலாக 1868-இல்

மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் மாணாக்கர் சோடசாவதானம் சுப்பராயச் செட்டியாரின் பதிப்பில் இத்திருமுறை வெளிவந்தது. அதனையே அனைவரும் பின்பற்றி வருகின்றனர். இத்திருமுறையுள் ஆசிரியர் பன்னிருவர் பாடிய 40 சிற்றிலக்கியங்கள் உள்ளன. எனினும் நக்கீர தேவ நாயனார், கல்லாட தேவ நாயனார், கபில தேவ நாயனார், பரண தேவ நாயனார், பட்டினத்துப் பிள்ளையார் ஆகிய ஐவரே இந்நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள். எனவே இவர்கள் செய்த நூல்களை மட்டும் இங்குக் காணலாம். இவர்கள் செய்த பிரபந்தங்கள் 20.

### நக்கீர தேவ நாயனார் பிரபந்தங்கள்

பதினோராந் திருமுறையில் இடம் பெற்றுள்ள இவரது நூல்கள் 10. எனினும் இவை பத்தும் ஒரே நக்கீரர் யாத்தவையல்ல என்ற கருத்தே வலுவுடையதாதலின் இந்நூல்களை யாத்தோர் மூவர் என்பது திரு.மு. அருணாசலம் அவர்களின் கருத்து. திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரர் முதலாமவர்; கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி, திருவெழு கூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப் பிரசாதம், போற்றித் திருக்கலிவெண்பா ஆகியவற்றைப் பாடியவர் இரண்டாமவர். திருஈங்கோய் மலை எழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, கார் எட்டு, திருக்கண்ணப்ப தேவர் திருமறம் ஆகிய நான்கின் ஆசிரியர் மூன்றாமவர். அந்த வரிசையில் பின்னிருவரின் நூல்கள் பத்தாம் நூற்றாண்டுக்குரியன.

**1. கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி:** இப்பிரபந்தம் மண்டலித்து வரும் அந்தாதியாக நூறுபாடல்களைக் கொண்டது. வடகயிலாயமான திருக்கயிலையினையும், தென்கயிலாயமான திருக்காளத்தியினையும் மாறிமாறித் துதிக்கும் தன்மையில் இதன் பாடல்கள் அமைந்துள்ளன. முதலாழ்வார் பாடல்கள், காரைக்கால் அம்மையார் பாடல்கள், திருமழிசையாழ்வார் பாசுரங்கள், மாணிக்கவாசகரின் திருவாசகம் ஆகிய பாடல்களின் தாக்கங்களை இந்நூலில் பரக்கக் காணலாம். 25 அகத்துறைப் பாடல்கள் இந்நூலில் உள்ளன. திருவைந்தெழுத்தைச் சிறப்பித்தும் (38-40, 100) சிவபெருமானின் பெருநடனத்தை விவரித்தும் (88), சித்தாந்தக் கருத்துகளைப் பெய்தும் (55, 67) பாடியுள்ள இப்பாடல்கள் இவரது பெரும்புலமையையும், பத்திப் பெருக்கையும் வெளிப்படுத்துவன.

**2. திருவெழுகூற்றிருக்கை:** ஆசிரியப்பாவில் ஒன்று என்னும் எண்ணுப்பெயரில் தொடங்கி, ஒவ்வொன்றாய்ப் படிப்படியாக ஏறியும், இறங்கி ஒன்றுவரையில் குறைந்தும், ஒன்றுமுதல்

ஏழுவரையில் எண்ணுப்பெயர்கள அமையுமாறு பாடப்பெறும் ஒரு வகை சித்திரக்கவி வகையில் அமைந்த நூலாகும் இது.

3. **பெருந்தேவபாணி:** இது தெய்வத்தை முன்னிலைப்படுத்திப் பாடிய இசையோடு கூடிய பாடல். ஆசிரியப்பாவில் அமைந்தது. பண் இல்லை. 'கூடல் ஆலவாய் அகவல்' என்பதே இதன் பெயராக இருந்திருக்கலாம் என்பது திரு. மு.அருணாசலம் அவர்களின் கருத்து. முதல் 38 அடிகளில் சிவபெருமானது தன்மையையும் திருவுருவத்தையும் சொல்லித் துதிக்கிறது. அடுத்த 11 அடிகளில் சிவபெருமானின் வீரத்தைக் குறித்துப் பேசுகிறது. மொத்தம் 67 அடிகள் கொண்டதாக இந்நூல் அமைந்துள்ளது.

4. **கோபப் பிரசாதம்:** இந்நூல் இறைவனது சினமும் அருளுமான தன்மைகளை மாறிமாறிக் கூறுவதாக அமைந்தது. ஆசிரியப்பாவில் அமைந்த இந்நூல் 100 அடிகளைக் கொண்டது. சிறுதெய்வங்களைக் கொச்சைத் தேவர்' என்றும், வடநூல் பயின்று, சிறப்பாகத் தருக்கம் பயின்று, வாதமே பேசி, சிவபெருமானை வழிபட அறியாத மக்களை, 'ஆரியப் புத்தகப் பேய் கொண்டு புலம்புற்று வட்டணை பேசுவர்' என்றும் ஆசிரியர் இழித்துரைக்கிறார்.

5. **போற்றிக் கலிவெண்பா:** இந்நூல் சிவனுடைய வீரம், அருள் இரண்டையும் போற்றும் வகையில் போற்றி என்ற சொல்லை இறுதியாகக் கொண்ட 45 கண்ணிகள் உடைய, கலிவெண்பாவில் அமைந்த தோத்திர வகையைச் சேர்ந்தது. ஆசிரியர் இந்த நூலிலும் காளத்திச் சிவனைப் பெரிதும் போற்றுகிறார். கண்ணப்பருக்கும், சண்டேசருக்கும் அருள் புரிந்ததைச் சிறப்பித்துப் பாடுகிறார்; சுந்தரர் தேவாரத் தொடர்களை அப்படியே எடுத்தாள்கிறார்.

**இரண்டாம் நக்கீர தேவ நாயனார்:** முன்னுரையில் குறித்தவற்றுள் இறுதி நான்கு நூல்களான திருஈங்கோய் மலைஎழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, கார் எட்டு, திருக்கண்ணப்ப தேவர் திருமறம் ஆகிய நான்கு நூல்களும், மேற்கூறிய 5 நூல்களினின்றும் நடை, சொல்லமைதி, பொருளமைதி ஆகியவற்றால் வேறுபட்டுக் காணப்படுகின்றன. சொல் நெகிழ்ச்சியின்றிப் பொருளும் கருத்தின்பமும் உடையதாக இவை காணப்படுகின்றன. எனவே இவற்றை இயற்றிய ஆசிரியர் மற்றொரு நக்கீரதேவ நாயனாராக இருக்கலாம் என்ற ஐயம் எழுந்தாலும் முன்னோர்களைப் போற்றி; வேறு ஆதாரம் கிடைக்கும் வரை அதே நக்கீரதேவ நாயனார் பெயரில் எழுதப்பெற்றனவாக அவை

கருதப்பெறுகின்றன. எனினும் மேற்சுட்டிய வேறுபாடு கருதி இரண்டாம் நக்கீரதேவ நாயனார் பெயரில் வகைப்படுத்தப் பெறுகின்றன.

**6. திரு ஈங்கோய் மலை எழுபது:** ஒரு பொருளில் எழுபது பாடல்களை யாத்தல் ஓர் இலக்கிய மரபு. அதன்வழி இந்நூலும் ஈங்கோய் மலை சிவனது சிறப்பினைப் பொருளாகக் கொண்டு பாடப்பெற்ற எழுபது பாடல்கள் கொண்டதாக அமைந்துள்ளது. பாடல்களின் முதல் எழுத்துகள் அகரவரிசையில் அமைய, முடிவில் மலை, குன்று, சிலம்பு, வெற்பு, கடறு, பொருப்பு என்னும் முடிபுகளைக் கொண்டு அமையும் பாடல்களைக் கொண்டுள்ளது. மலைச் சிறப்புகளைக் கூறுதலின் குறவர் வாழ்க்கை, மலைவாழ் விலங்குகள், பறவைகள், போன்றவற்றின் கூறுகள் பெரிதும் விதந்தோதப் பெறுகின்றன. இயற்கைக் காட்சிகளில் மனிதநேயம், பண்பு இவற்றை இணைத்துச் சிறப்பாக எழுதியுள்ள அதே நேரத்தில், ஈங்கோய்மலை இறைவன் அனைத்துத் துன்பங்களையும் விலக்கி அருள்புரிவோன் என்பதையும் ஆசிரியர் பக்தியோடு போற்றுகிறார்.

**7. திருவலஞ்சுழி மும்மணிக்கோவை:** இது சோழநாட்டுத் திருவலஞ்சுழி இறைவனை ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகிய மூவகைப் பாக்களால், மும்மூன்று, பாடல்களைக் கொண்டு மண்டலித்து அந்தாதியாக வரும் 15 பாடல்கள் கொண்ட நூல். 11 பாடல்கள் அகத்துறையின. இறுதிப்பாடலில் அண்ணாமலையினையும் இணைத்துள்ளார். ஒருபாடல், வண்ணம் என்ற சொல்லைப் பன்முறை அடுக்கி, சேரமான் பெருமாள் நாயனாரின் பொன்வண்ணத்தந்தாதியினை அடியொற்றி அமைந்துள்ளது. அப்பாடல் வருமாறு:

> **கழல்வண்ண முஞ்சடைக் கற்றையும் மற்றவர்**
> **காணகில்லார்**
> **தழல்வண்ணங் கண்டே தளர்ந்தார் இருவர்**
> **அந்தாமரையின்**
> **நிழல்வண்ணம் பொன்வண்ணம் நீர்நிறவண்ணம்**
> **நெடியவண்ணம்**
> **அழல்வண்ண முந்நீர் வலஞ்சுழி ஆள்கின்ற அண்ணலையே**

**8. கார் எட்டு:** கார் என்று முடியும் எட்டு வெண்பாக்களைக் கொண்டது இந்நூல். கார்ப்பருவம் வந்தது; தலைவன் வருவான், கவலற்க எனத் தலைவிக்குத் தோழி கூறுமுகத்தான், சிவன் வரும் சிறப்பை உரைப்பதாக அமைந்துள்ளது.

9. திருக்கண்ணப்ப தேவர் திருமறம்: தன் கண்ணை இடந்து சிவனுக்கு அப்பியும், சிவனருள் பெற்றதுமான மற அருட்செயல்களைத் திருமறம் என்று கொண்டு, பலகாலம் நிலவிய திருக்கண்ணப்பரின் வரலாற்றை எடுத்துரைக்கும் வகையில் எழுதப்பெற்ற நூல். 58 அடிகள் கொண்ட ஆசிரியப்பாவும், இறுதியில் ஒரு வெண்பாவும் கொண்டது. தேவையற்ற வருணனை, மற்றும் அடைகள் இன்றி, மிக்க சொற்செட்டுடன், உணர்ச்சி மிக்குடையதாய்க் கண்ணப்பன் கதைக்கு முழுஉருவம் கொடுத்த முதல் நூல் இதுவேயாம்.

## கபிலதேவ நாயனார் பிரபந்தங்கள்

புகழ்பெற்ற பாரியின் நண்பராய் வாழ்ந்த 'புலனழுக்கற்ற அந்தணாளர்' ஆன சங்க காலப் புலவரான கபிலரினும் இவர் வேறுபட்டவர். அவர் பெயரினைத் தரித்தவராய், பதினோராந் திருமுறை ஆசிரியர் வரிசையில் இடம் பெற்றுள்ளார் இவர். 'தேவர்' என்ற அடை இருப்பதனால், இவர் அந்தணர் அல்லர் எனலாம். இவர் தன் பாடல்களில் திருவாரூரைப் பலமுறை பாடுதலினால், அவ்வூரைச் சார்ந்தவர் என்று கருத இடம் உள்ளது. வேறு வரலாற்றுச் செய்திகள் ஏதும் அறியக் கூடவில்லை. இரு இரட்டை மணிமாலைகளையும் ஒரு அந்தாதியினையும் இவர் பாடியுள்ளார்.

1. மூத்த நாயனார் திரு இரட்டை மணிமாலை: மூத்த நாயனாரான விநாயகரைக் குறித்து முதன்முதலில் வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகிய இரண்டும் மாறிமாறி மண்டலித்து அந்தாதியாக 20 பாடல்கள் கொண்டதாக எழுந்தது இந்நூல். விநாயகனையே பரம்பொருளாக்கி, வழிபட்டால் எல்லாப் பொருள்களும் கைகூடும் என்று கூறுவது.

2. சிவபெருமான் திருஇரட்டை மணிமாலை : இந்நூலில் 37 பாடல்கள் உள்ளன. 40 பாடல்களாக இருந்திருக்க வேண்டும். மூன்று பாடல்கள் கிடைக்கவில்லை போலும். அந்தாதி ஆயினும், இறுதிப் பாடலின் இறுதி முதற்பாடலின் முதலாக (கிடைக்காமையால்) வரவில்லை. அதிக அளவில் தலங்களைக் குறித்து வரும்பாடல். அகத்துறைப் பாடல்களாகவும், சிவபிரான் துதியுமாக இவை அமைந்துள்ளன.

3. சிவபெருமான் திரு அந்தாதி: இந்நூலும் அந்தாதியாய் அமைந்த 100 வெண்பாப் பாடல்களைக் கொண்டது; அதிக அளவில் தலங்களைக் குறிப்பிடுகின்றது. பொதுவாக இடுமணல், பனிச்சங்காடு, வெள்ளல்காடு போன்ற பெயர் விளங்காத பதிகளும்

இடம் பெற்றுள்ளன. யமகம், எதுகை தோன்றப் பாடியுள்ளார். அதிகமான பாடல்கள் அகத்துறையில் அமைந்தவை.

### பரணதேவ நாயனார் பிரபந்தம்

பதினோராந் திருமுறையில் கபிலருக்கு அடுத்த ஆசிரியராக இடம் பெறுபவர் பரணதேவர். பாடல்கள் மூலமும், கபில பரணர் என்ற தொடர்பாலும் இருவரும் ஒரே காலத்தினர் எனக் கருதலாம். இவரும் மணிவாசகர் குறித்த அதே கண்ணப்பர் கண்டேசர் ஆகிய இருவரை மட்டுமே பாடுகிறார்; எனவே காலத்தால் மணிவாசகரோடு ஒருங்கு வைத்து எண்ணத்தக்கவர் என்பது திரு. மு. அருணாசலம் கருத்து (மு.அ.10/351).

### சிவபெருமான் திருஅந்தாதி

இது நேரிசை வெண்பா யாப்பில் மண்டலித்து வரும் நூறு பாடல்களைக் கொண்ட அந்தாதி நூல். 10 பாடல்களுக்கு மேல் ஆரூரைப் பாடுகின்றன. 36 பாடல்களில் தலப்பெயர் இல்லை. 26 சோழநாட்டுத் தலங்களையும், 14 பிறநாட்டுத் தலங்களையும் பாடுகின்ற ஆசிரியர் ஆரூரை அதிகமாகப் பாடுவதால் இவர் திருவாரூரினர் எனக் கருதவும் இடம் உண்டு.

### கல்லாடதேவர் பிரபந்தம்

கல்லாடர் என்ற பெயருடையோர் தமிழிலக்கிய உலகில் குறைந்தது நால்வர் உள்ளனர். சங்கப் புலவரான கல்லாடர் முதலவர். கல்லாடம் பாடிய கல்லாடர் மற்றொருவர்; தொல்காப்பியச் சொல்லதிகார உரை செய்த கல்லாடர் பிறிதொருவர்; இம்மூவரே அன்றி, பதினோராந் திருமுறையில் இடம்பெறும் கல்லாடரும் ஒருவர். நம்பியாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியில், கபிலர், பரணர், நக்கீரர் முதல் பல்புலவோர் என்ற வரிசையில் இவர் பெயர் இல்லை. எனினும் பதினோராந் திருமுறையில், தேவர் என்ற அடையினைக் கொண்ட புலவர் வரிசையில் இரண்டாம் இடம் பெறுபவர் கல்லாட தேவநாயனார் ஆவார். கல்லாடம் செய்த கல்லாடருக்கு முற்பட்டவர் எனக் கருதலாம். இவர் பாடிய திருக்கண்ணப்ப தேவர் திருமறம் இத்திருமுறையில் இடம் பெற்றுள்ள ஒரு பிரபந்தம்.

### திருக்கண்ணப்பதேவர் திருமறம்

பதினோராந் திருமுறையின் 19ஆம் பிரபந்தமாகிய இந்நூல் ஆசிரியப்பாவால் அமைந்த 38 அடிகளைக் கொண்டது.

நக்கீரதேவரும் இதே பொருளில் பாடிய பாடலினும் சுருங்கியதாக, கண்ணப்பரது பக்தி நிறைந்த வீரச்செயலைச் சுவை ததும்பப் பாடுகின்றது இந்த நூல். கண்ணப்பர் என்று பெயர் கூறாது வேட்டுவர் என்றே மொழிகின்றது; 'அவ்வேட்டுவர் தம் திருவடி கைதொழக் கருவேட்டு உழல் வினைக் காரியம் கெடுமே' என்று கண்ணப்பரையே நாயகனாக்கி, இயன்மொழியாகக் கூறுகின்றது. கண்ணப்பரைக் காளத்தியில் வைத்துக் கூறாது, 'கானப்பேருறை கண்ணுதல் முடியிற் பூசை' என்று கூறுதலினால், இவர் பாண்டி நாட்டுக் கானப்பேர் என்னும் ஊரைச் சேர்ந்தவர் என்று உய்த்துணரக் கிடக்கின்றது.

### பட்டினத்தடிகள் நூல்கள்

தம்மைத் தம் பாடலில் (திருவிடை மருதூர் மும்மணிக் கோவை) வெண்காடன் என்று குறிப்பதால் அவர் இயற் பெயர் திருவெண்காடர் என்று தெரிகிறது. இவர் மிக்க செல்வந்தராய்த் திருவெண்காட்டின் அயலே உள்ள காவிரிப் பூம்பட்டினத்தில் வாழ்ந்தவர் என்றும், ஆடம்பரமான செல்வ வாழ்க்கை துய்த்துப் பின் துறவு பூண்டிருக்கலாம் என்றும் கருதலாம். உலக இன்பங்களனைத்தையும் தான் அனுபவித்ததை அவரே பாடியிருப்பது இக்கருத்துக்கு வலுவூட்டுகிறது. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப்படும் சிவ வாக்கிய தேவர் துறவினை இவர் பெரிதும் புகழ்கிறார். பட்டினத்தார் கல்வி கேள்விகளில் சிறந்து, ஆராய்ச்சிப் புலமையும் நிரம்பப் பெற்றவர் என்பதை இவர் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

இவர் பாடிய பிரபந்தங்களாக ஐந்து நூல்கள் பதினோராந் திருமுறையில் தொகுக்கப்பட்டுள்ளன.

1. **திருவிடை மருதூர் மும்மணிக்கோவை:** இது திருவிடை மருதூர் சிவன்மீது 30 பாடல்களில் பாடப்பெற்ற தோத்திர நூல். ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகிய பாக்களால் மும்மூன்று பாவகைகளைக் கொண்டு மண்டலித்து அந்தாதியாகப் பாடப்பட்ட நூல். அர்த்தநாரித் திருவுருவினுக்குப் பாதாதி கேசாந்தம் பாடுகிறார். வடமொழியும், தமிழும் கலந்த நடையாயினும், கருத்துகள் அடுக்கடுக்காக வளர்ந்து கொண்டு போகும் வகையில் நீண்ட பாடல்களாக அமைக்கிறார். சிவபெருமானை விளிக்கும் பகுதிகள் சிறப்புக் குரியனவாயுள்ளன.

**புண்ணிய புராதன புதுப்பூங் கொன்றைக்**
**கண்ணி வேய்ந்த கைலை நாயக**

**காளகண்ட கந்தனைப் பயந்த**
**வாளரி நெடுங்கண் மலையாள் கொழுந**
**பூதநாத பொருவிடைப் பாக**
**வேதகீத விண்ணோர் தலைவ**
**முத்தி நாயக மூவா முதல்வா.**

என்று அடுக்கி வரும் தெளிவான நடையினை இவர் பாடல்களில் காணலாம்.

*2. **திருக்கழுமல மும்மணிக்கோவை:*** இது கழுமலம் என்று வழங்கப்பெறும் சீர்காழிச் சிவபிரான் மீது ஆசிரியம், வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகிய பாவகைகளை மாறிமாறி அமைத்து மண்டல அந்தாதியாக எழுதப்பெற்ற நூல். 30 பாடல்கள் உடைய இந்நூலில், முதலில் 12 பாடல்களே கிடைத்தன. பின்னர்க் கிடைத்ததாகப் 18 பாடல்கள் இணைக்கப்பட்டுள்ளன. இப்பதினெட்டிலும் பிற்காலத்துச் சொல்லும் பொருளும் காணப்படுகின்றன என்பது அறிஞர்கருத்து. 'எந்த நேரத்திலும் எப்படி வேண்டுமாயினும் நான் தொழுதாலும் காத்தல் உன் கடமை' என்று கூறி எளிய வழிபாட்டின் வழி இறைவன் அருள் பெற இயலும் என்ற பொருளில் பின்வருமாறு பாடுகிறார்.

**இயன்றதோர் பொழுதின் இட்டது மலரா**
**சொன்னது மந்திரமாக என்னையும்**
**இடர்ப்பிறப்பு இறப்பெனும் இரண்டின்**
**கடற்ப டாவகை காத்தல் நின் கடனே.**

*3. **கோயில் நான்மணிமாலை:*** இந்நூல் கோயில் என்னும் சிதம்பரத்து உறையும் நடராசப் பெருமானைத் துதித்துப் போற்றுவது; நான் மணிமாலை என்ற அமைப்பில் எழுந்த முதல் நூல். வெண்பா, கலித்துறை, விருத்தம், ஆசிரியப்பா ஆகிய பாவகைகள் மாறிமாறி அமைந்து மண்டல அந்தாதியாக அமைந்தது. 81 அடிவரை நீண்ட ஆசிரியப் பாடல்கள், நீண்ட சந்த விருத்தங்கள் பலகொண்ட இலக்கியம். இந்நூலில் உள்ள 40 பாடல்களில் 11 பாடல்கள் அகத்துறையில் அமைந்தவை.

*4. **திருஏகம்பமுடையார் திருஅந்தாதி:*** இது காஞ்சிபுரத்திலுள்ள ஏகம்பநாதரின் துதியாக அமைந்த நூறு கட்டளைக் கலித்துறைப் பாடல்களைக் கொண்ட அந்தாதி இலக்கியம். தம் பாடல்களைப் பதிற்றுப்பத்து என்று கோவையாக்கி ஆசிரியரே உரைக்கிறார். சற்றொப்ப பத்துப் பாடல்களுக் கொருமுறை கருத்தினை மாற்றி மாற்றித் துதிப்பாடல்களாகவும்,

அகத்துறைப் பாடல்களாகவும் அமைத்து முறையாகப் பாடப் பெற்றுள்ள பிரபந்தம். 54 பாடல் பெற்ற தலங்கள் உள்ளிட்ட 70 தலப்பெயர்களைச் சுட்டுவனவாய்ப் பாடல்கள் பாடப்பட்டுள்ளன.

5. **திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது:** திருவொற்றியூர் சிவன்மீது அந்தாதியாக மண்டலித்துப் பாடப்பெற்ற பத்துப் பாடல்கள் கொண்ட நூல். அகவற்பாவில் அமைந்தது. இறைவனைப் புகழ்வதோடு, அவன் சமயங் கடந்தவன் என்ற கருத்தினையும் வெளிப்படையாகக் கூறும் பெருநிலையினை இந்நூலில் காண்கிறோம்.

## 10ஆம் நூற்றாண்டு

### நாலாயிர திவ்வியப் பிரபந்த தனியன்கள்

நாதமுனிகள் காலந் தொடங்கி மணவாள மாமுனிகள் காலம் வரையில் ஆச்சாரியர் பலர் நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களைப் போற்றியும், ஆழ்வார்களைப் போற்றியும் சில தனிப்பாடல்கள்ளைப் பாடியுள்ளனர். இலக்கியங்களுக்குச் சிறப்புப் பாயிரம் போல, திவ்வியப் பிரபந்தங்களுக்கு அமைந்த இத் தனிப்பாடல்களைத் 'தனியன்' என்றழைப்பது வைணவ மரபாகும். இவ்வாறு தனியன் பாடினோர் ஏறக்குறைய நாற்பதுபேர் உள்ளனர். வேறு பெருநூல்கள் செய்யாவிடினும் இவர்கள் பெயர்கள் வரலாற்றில் இடம்பெற்றுள்ளன. அவர்களுள் பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்து தனியன் பாடியவர்கள் ஐவர். அவர்களையும், தனியன்களையும் இங்குக் காணலாம்.

### ஆண்டாள் பாடிய திருப்பாவைக்கு உய்யக் கொண்டார் செய்த தனியன்

திருவெள்ளறையில் பிறந்த உய்யக்கொண்டார், நாதமுனிகளின் சீடர் ஆவார். தன் ஆசிரியரிடம் கற்ற யோக ரகசிய நூற்கருத்துகளை, இவரது சீடரான மணக்கால் நம்பிக்குக் கற்றுக் கொடுத்தார் என்பது மரபு வழிப்பட்ட வரலாறு. ஆண்டாள் பாடிய திருப்பாவைக்கு இவர் இரு தனியன்களை இயற்றியுள்ளார்.

### குலசேகராழ்வாரின் பெருமாள் திருமொழிக்கு மணக்கால் நம்பிகள் செய்த தனியன்

மணக்கால் நம்பிகள் உய்யக் கொண்டாரின் சீடர்; மணக்காலில் தோன்றியவர். ஆச்சாரியப் பக்தி மிக்குடையவர். தம் குரு திருநாடு அலங்கரித்த பின்னர், நாதமுனிகளின் புதல்வரான

ஈசுவர முனிகளுக்குத், தன் குருவின் ஆணைப்படி, உரிய சடங்குகளை எல்லாம் நடத்தி, அவர் குழந்தைக்கு யமுனைத் துறைவன் என்று பெயர் சூட்டி, தம் ஆசிரியர் கற்றுத் தந்த யோக ரகசியங்களை எல்லாம் கற்றுத் தந்தார். அந்த யமுனைத் துறைவனே பிற்காலத்தில் பெரும் சிறப்புப் பெற்ற ஆளவந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

மணக்கால் நம்பிகள் குலசேகரரின் பெருமாள் திருமொழிக்கு இருதனியன்கள் பாடியுள்ளார். குலசேகரர் பெருமையாக கூறுமாறு கிளியை வேண்டுவதாக அமைந்த பின்வரும் தனியன் படித்து இன்புறத்தக்கது.

**இன்னமுதம் ஊட்டுகேன் இங்கேவா பைங்கிளியே**
**தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள் - பொன்னஞ்**
**சிலைசேர் நுதலியர்வேள், சேரலர்கோன் எங்கள்**
**குலசே கரன்என்றே கூறு**

### பேயாழ்வாரின் மூன்றாம் திருவந்தாதிக்குக் குருகைக் காவலப்பன் செய்த தனியன்

நாதமுனிகளின் சீடர் குருகைக் காவலப்பர். சீபாதத்து முதலிகள் கூட்டத்திற்குத் தலைவராய் இருந்தார். நாதமுனிகள், தன் இறுதிக் காலத்தில், அட்டாங்க யோகக் கிரமத்தை இவருக்கு அருளிச் செய்தார். நாதமுனிகளின் பேரனான யமுனைத் துறைவருக்கு, மணக்கால் நம்பிக்குப் பின்னர் தான் கற்ற அட்டாங்க யோகத்தினைக் கற்றுத் தருவதாகக் கூறி ஒருநாளில் வரச்சொல்ல, அன்று யமுனைத் துறைவர் வராததால், கற்றுத் தராமலே பரமபதம் அடைந்தார்.

பேயாழ்வாரின் மூன்றாம் திருவந்தாதிக்குரிய தனியன் இவர் பாடியதாகும்.

### நம்மாழ்வாரின் திருவாய் மொழிக்கு ஈசுவர முனி செய்த தனியன்

ஈசுவர முனி, நாதமுனிகளின் புதல்வர்; ஆளவந்தாரின் தந்தை. எனினும் நாதமுனிகள் அட்டாங்க யோகத்தையும், யோக ரகசிய அர்த்தங்களையும், முறையே குருகைக் காவலப்பருக்கும், உய்யக் கொண்டாருக்குமே உபதேசித்தார். ஈசுவர முனிகள் நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்கு ஒரு தனியன் செய்துள்ளார்.

## ஆண்டாளின் நாச்சியார் திருமொழிக்குத் திருக்கண்ணமங்கை ஆண்டான் செய்த தனியன்

திருக்கண்ணமங்கை ஆண்டான், நாதமுனிகளுடைய சீடர்களில் ஒருவர். நாதமுனிகளின் சகோதரியின் புதல்வரும் ஆவார். திருக்கண்ண மங்கையில், தன் மாமன் வீட்டில் இருந்து துளசி மாலைக் கைங்கர்யம் செய்தவர். இவரது வரலாறு குருபரம்பரை பன்னீராயிரப்படியில், விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

இவர் செய்த நாச்சியார் திருமொழித் தனியன் வருமாறு:

**அல்லிநாள் தாமரைமேல் ஆரணங்கின் இன்துணைவி**
**மல்லிநாடு ஆண்ட மடமயில் - மெல்லியலாள்**
**ஆயர்குல வேந்தன் ஆகத்தாள் தென்புதுவை**
**வேயர் பயந்த விளக்கு**

## 11ஆம் நூற்றாண்டு
## நூற்றெட்டுத் திருப்பதிக் கோவை

மணக்கால் நம்பிகளின் சீடர்களில் ஒருவரான வங்கிபுரத்தாய்ச்சி என்பாரால் கலிப்பாட்டாகப் பாடப்பெற்ற நூல். நூற்றெட்டு வைணவத் தலங்களையும், ஆழ்வார்களையும் குறிப்பிடும் முதல் நூல். இப்பாடலிலேயே வங்கிபுரத்தாய்ச்சி என்ற ஆசிரியர் பெயரும் இடம் பெறுகின்றது.

### பெரும்பொருள் விளக்கம்

தமிழிலக்கிய உலகில், பெருநூல்கள் மட்டும் அல்லாமல், அகப்பொருள், புறப்பொருள்களின் இலக்கண அமைதிகளை விளக்குவதற்கென்றே சில சிறு நூல்களும் எழுதப் பெற்றுள்ளனவென அறிகிறோம். அந்த வகையில், எட்டாம் நூற்றாண்டில் எழுதப் பெற்ற அகப்பொருள் இலக்கண விளக்க நூலான **சிற்றட்டகம்** போல புறப்பொருள் இலக்கணத்திற்கு இலக்கியமாய்ச் செய்யப் பெற்று, மிகப் பிற்காலம் வரை வழங்கி வந்து இன்று காணாமற் போன இலக்கியங்களில் ஒன்றே இப் **பெரும்பொருள் விளக்கம்** எனும் நூலாகும். இது வெண்பாவால் இயன்றது.

'பெரும்பொருள்' என்ற பொருளிலக்கண நூலினை மேற்கோளுடன் விளக்கிய ஒரு நூலே பெரும்பொருள் விளக்கம் என்பது திரு. வையாபுரிப் பிள்ளை யவர்களின் கருத்து. அகப்பொருள் பற்றித் தமிழ்நெறி விளக்கம் எழுந்தது போலப் புறப்பொருள் பற்றி எழுந்ததாக இந்நூலைக் கருதலாம்.

புறத்திரட்டு இந்நூலின் பெயரைத் தருகிறது. இதன் பெயர் சுட்டும் 41 பாடல்களைப் புறத்திரட்டில் காண்கிறோம். அடியார்க்கு நல்லார் 'கொற்றவை பரவுக்கடம்பூண்டல்' என்னும் துறைக்கு இந்நூலின் ஒரு பாடலை மேற்கோளாகத் தருகிறார். நச்சினார்க்கினியரின் சிந்தாமணி உரையில், (பாடல் 187), 'பெரும் பொருளான் உணர்க' என வரும் பகுதி 'பெரும் பொருள்' என்னும் நூலைக் குறிக்கும் என்பது அறிஞர்களின் கருத்து. நச்சினார்க்கினியரின் தொல்காப்பியப் புறத்திணையியலில் எடுத்துக்காட்டாகவரும் 112 வெண்பாக்கள் இந்நூலுக்கு உரியதாகலாம் என்பது திரு. மு. அருணாசலம் அவர்களின் கருத்து (மு.அ.10/133).

புறத்திரட்டில் ஈகை, அறிவுடைமை, தானைமறம், களம், வாழ்த்து ஆகியவற்றுக்கு ஒவ்வொருபாடலும், குடிமரபு, பாசறை, அமர், யானை மறம் ஆகிய துறைகளுக்கு 3 பாடல்களும், பகைவயிற் சேறலுக்கு இரண்டும், நிரைகோடல், எயில் காத்தல் ஆகியவற்றுக்கு 5 பாடல்களும் நிரைமீட்சி, எயில் கோடல் ஆகியவற்றுக்கு 6 பாடல்களும் இந்நூலில் இருந்து தொகுக்கப்பட்டுள்ளன. தொல்காப்பியம் கூறும் புறத் துறைகளுக்குரிய விளக்கமாக எழுந்த ஓர் இலக்கியம் என்பது நச்சினார்க்கினியர் உரையால் புலப்படுகிறது. மேலும் ஒரே துறைக்கு இரு வெவ்வேறான விளக்கப் பாடல்களையும் இந்நூல் கூறுகிறது. ஒன்று அகத்தோனுக்கும் மற்றொன்று புறத்தோனுக்கும் உரியனவாகக் காட்டப்பட்டுள்ளன.

புறத்துறைகளை விளக்குமுகமாக அமைந்த இந்நூலில் பல சிறந்த வீரப் பாடல்களையும், கொற்றவை வழிபாட்டுப் பாடல்களையும், நடுகற் பாடல்களையும் காணலாம். போரில் தன் சிறுவன் இறந்தான் எனக் கேட்ட தாய் மகிழ்ந்தாள்; ஆனால் அவன் வாள்வாய்ப்பட்ட மறவரின் தாயரோ அழுதனர் என்று கூறும் பின்வரும் பாடல் அவலத்தின் உச்சத்தைக் காட்டுகிறது.

**ஆடும் பொழுதின் அறுகயிற்றுப் பாவைபோல்**
**வீடும் சிறுவன்தாய் மெய்ம்மகிழ்ந்தாள் -வீடுவோன்**
**வாள்வாயின் வீழ்ந்த மறவர்தம் தாயரோ**
**கேளா அழுதார் கிடந்து**

நடுகல் எடுப்பதையும், அதன் வழிபாட்டையும் கூறுகின்றது பின் வரும் பாடல்.

**காப்புநூல் யாத்துக் கடிகமழ் நீராட்டிப்**
**பூப்பலி பெய்து புகைகொளீஇ - மீப்படர்ந்த**

**காளை நடுகற் சிறப்பயர்ந்து கால்கொள்மின்**
**நாளை வரக்கடவ நாள்**

சிவன், திருமால், கொற்றவை, வேதம், வேள்வி, வேளாளர், சுடர் ஆகியவற்றைப் போற்றிப் பரவும் பண்புடையாராய் விளங்கிய இந் நூலின் ஆசிரியர் யாரெனத் தெரியவில்லை.

யாப்பருங்கல விருத்தி பெரும்பொருள் விளக்கப் பாடலை மருட்பா வகைக்குச் சான்றாகத் தருதலின் அந்நூலின் காலமான 11ஆம் நூற்றாண்டுக்கு இந்நூல் முற்பட்டது என்பது தெளிவு.

**கல்லாடம்**

கல்லாடர் என்னும் ஆசிரியரால் பெயர் பெற்ற நூலாதலின் கல்லாடம் எனப் பெற்றது. சங்க காலம் தொடங்கிக் கி.பி.15ஆம் நூற்றாண்டு வரையில் ஏறக்குறைய அறுவர் கல்லாடர் என்னும் பெயர் கொண்டவர்களாக வாழ்ந்திருந்தனர். இந்நூலாசிரியர் நம்பி ஆண்டார் நம்பிக்கு முற்பட்டவர் என்பதும் திருக்கண்ணப்ப தேவர் திருமறம் எழுதிய கல்லாடதேவ நாயனாருக்குப் பிற்பட்டவரென்பதும் திரு. மு. அருணாசலம் அவர்களின் கருத்து (மு.அ. 11/33).

இது ஒரு சைவ அகப்பொருள் நூல். பழைய சங்க இலக்கியத்திற்கும் பிற்காலத்துத் தோன்றிய விருத்தப்பாவில் அமைந்த காப்பியங்களுக்கும் இடையில் பாலமாய் அமைந்தது. முந்தைய நூற்றாண்டில் எழுதப்பெற்ற மாணிக்கவாசகரின் திருக்கோவையாரில் உள்ள 100 துறைகளைத் தெரிந்தெடுத்து, அவற்றின் அடிப்படையில் அவை ஒவ்வொன்றையும் விளக்கும் 100 அகவற் பாடல்களைக் கொண்டதாக இந்நூல் அமைந்துள்ளது.

பல புராணக்கதைகளையும், எல்லாத் திருவிளையாடற் புராணக்கதைகளையும், சில திருத்தொண்டர் வரலாறுகளையும் இந்நூல் இடையிடையே எடுத்துரைக்கின்றது. மதுரையொடு பரங்குன்றையும், சிவனோடு முருகனையும் சேர்த்துப் பாராட்டுகின்றது. செய்யுட்கள் யாப்பமைப்பிலும் அணியமைப்பிலும், பொருளமைப்பிலும், தனிச்சிறப்புடையன. ஒத்த ஒலிகளும் வேற்றொலிகளும் இடத்திற்கேற்ப ஒருங்கிணைந்தும், அண்மையில் இணைந்தும், இடைவிட்டுக் கூடியும், சேய்மையில் நின்றும், யானை போன்றும், குதிரை போன்றும், மயில் போன்றும் இன்னும் பலவிதமாகவும் செய்யுளை நடத்திச் செல்லும் யாப்புவன்மை இவ்வாசிரியரின் வித்தக

விளையாட்டு எனக் கூறலாம்' என்பது மர்ரே பதிப்பாசிரியக் குழுவினரின் கருத்து.

தான் எடுத்துக்கொண்ட பொருளை இணைத்தும், ஒப்பிட்டும் வருணிக்கும் திறன் பாராட்டற்குரியது. ஒரே பாடல் மண்டபம், பைந்துகில், முரசு, பள்ளியறை, இருள், அரங்கு, பெருவயல், வீதி, அமர்க்களம், ஆலயம், குண்டம், தகளி, மடைப்பள்ளி ஆகிய பலவாகக் கடலை வருணிக்கிறது (பாடல் 24). இறைவனின் எண்வகைக் குணம், எண்வகை அருள் ஆகியவற்றைப் பட்டியலிட்டுப் போற்றுகிறது. எண்வகைக் குணங்களைக் குறிக்கும் பாடல் கீழ் வருமாறு அமைகிறது:

**முழுதுணர் ஞானம், எல்லாம் உடைமை**
**முழுது அனுக்கிரகம் செழுபரம் அநாதி**
**பாசம் இலாமை மாசுஅறு நிட்களம்**
**அவிகாரக் குறி ஆகிய தன் குணம்**
**எட்டும் தரித்து** (பாடல் 89)

விரிதிணை ஐந்தும் தேன்உறை தமிழும் (10), அமுதம் ஊற்றெழுந்து நெஞ்சம் களிக்கும் தமிழ் (18), உவட்டாது அணையாது உணர்வெனும் பசி எடுத்து, உள்ளமும் செவியும் உருகி நின்றுண்ணும் பெருந்தமிழ் அமுது (68), திருமுத்தமிழ் (84) ஆகிய தொடர்கள், இந்நூலுள் தமிழ்மொழி பெற்ற பெருமையைப் பறைசாற்றும். 'தேரான் தெளிவும் எனும் திருக்குறள் புகுந்து' என்ற பாடலடியின் (62) மூலம் இந்நூல் திருக்குறளைப் பெயர் கூறிச் சிறப்பிக்கிறது.

## பதிப்பு

1868 மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை (ப. ஆ) மூலம்.

1872 மயிலேறும் பெருமாள் பிள்ளை உரை (37 பாடல்கள்) மற்றும் பிறவற்றுக்குச் சுப்பராய முதலியார் உரை. இதில் மூன்று பாடல்களுக்கு உரை இல்லை.

1911 வித்துவான் ராமசாமி நாயுடு. அகலஉரையும் மூன்று பாடல்களுக்கு அரும்பதவுரையும், காஞ்சி இராமாநந்த யோகிகள் விசேஷ உரையுடன் - சென்னை ரிப்பன் அச்சகம்.

1957 சென்னை: மர்ரே பதிப்பு - மூலம்.

## திருவள்ளுவமாலை

திருக்குறளின் பெருமையையும் திருவள்ளுவரின் சிறப்பையும் எடுத்துக் கூறுவனவாய் அமைந்த, ஐம்பத்து மூன்று வெண்பாக்களும், ஒரு குறள் வெண்பாவும் கொண்ட பாடல் தொகுப்பாக இந்நூல் அமைந்துள்ளது. திருவள்ளுவ மாலைப் பாடல்களை ஏறக்குறைய கி.பி.1050ஆம் ஆண்டளவில், அக்காலத்திலேயே வழக்கிலிருந்த சுமார் 10 பாடல்களோடு, பல புதிய பாடல்களையும் ஓர் ஆசிரியரே எழுதி, தாம் பெயர் அறிந்திருந்த பல சங்கப் புலவர்மீது இப்பாடல்களை ஏற்றித் தொகுத்தார் என்றும் திருவள்ளுவமாலை என்ற பெயரும் இட்டார் என்றும் கருதப்படுகிறது.

முதற்பாடல் அசரீரி கூற்றாகவும், இரண்டாம் மூன்றாம் பாடல்கள் முறையே நாமகள், இறையனார் பாடல்களாகவும் அமைந்துள்ளன. ஐயத்திற்கிடமில்லாத 25 பாடல்கள் சங்கப் புலவர்கள் பெயரிலும், பிற பாடல்கள் சங்கப்புலவர் பெயர்களை ஒருபுடை ஒப்புமையாகக் கொண்டோர் பெயரிலும் அமைந்துள்ளன.

தண்டியலங்காரம் முதலிய இலக்கணஉரைகளில் மேற்கோளாக வரும் சிறப்புடைய பாடலான,

ஓங்கலிடை வந்து உயர்ந்தோர் தொழ விளங்கி
ஏங்கொலி நீர் ஞாலத் திருளகற்றும் - ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன்று ஏனையது
தன்னே ரிலாத தமிழ்

என்ற பாடலை அடியொற்றியதாக, குலபதி நாயனார் என்ற பெயருடைய புலவர் இயற்றியதாகக் கீழ்வரும் 48ஆம் பாடல் அமைகிறது.

உள்ளக் கமலம் மலர்த்தி உளத்துள்ள
தள்ளற்கு அரிய இருள் தள்ளுதலால் -வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பாவும் வெங்கதிரும் ஒக்கும் எனக்
கொள்ளத் தகுங்குணத்தைக் கொண்டு.

இதுபோலவே முந்தையோர் கருத்துகளையும், சொற்களையும் தழுவியும் அமைத்தும் பாடிய பாடல்கள் பல திருவள்ளுவ மாலையுள் இடம் பெற்றுள்ளன. சொல்நயமும் பொருள் நயமும் தொடை நயமும் மிக்க பழம்பாடல்களையும் தன்னுள் கொண்டுள்ளது திருவள்ளுவ மாலை. திருவள்ளுவமாலை என்ற

தொகுப்பு உருவான காரணத்தால், திருக்குறளில் இடைச் செருகலோ, பால் இயல் அதிகாரப் பிறழ்வோ ஏற்பட இடமில்லாது ஒரு வரையறைக்குட்பட்ட அமைப்பில் தொடர்ந்து திருக்குறள் வழங்கி வருகிறது. திருவள்ளுவமாலையின் பயன்களுள் இது மிகவும் இன்றியமையாதது.

## பூந்துருத்தி நம்பி காட நம்பி திருவிசைப்பா

திருவிசைப்பா ஆசிரியர்களுள் நான்காமவராக இடம் பெறும் பூந்துருத்தி நம்பி காட நம்பி, ஒன்பதாம் திருமுறையுள் அடங்கிய திருவிசைப்பாவில், திருவாரூரையும் தில்லையையும் குறித்த 18,19ஆம் பதிகங்களைப் பாடியுள்ளார். ஆரூரைப் பற்றிய பதிகத்தில் இரண்டு பாடல்களே கிடைத்துள்ளன. தில்லையைப் பற்றிய அடுத்த பதிகம், தேவாரப் பாடல்கள் எதற்கும் வகுக்கப்படாத சாளரபாணி என்னும் புதுப்பண்ணில் அமைந்துள்ளது. இப்பதிகத்தில், கணம்புல்லர், கண்ணப்பர், ஆமூர் நாவுக்கரசர், காழியர் கோன் சம்பந்தன், சேரமான், ஆரூரன் ஆகிய தொண்டர்களையும் நம்பி குறிப்பிடுகின்றார்.

முதலாம் இராசாதிராசனின் முப்பத்திரண்டாம் ஆட்சியாண்டில் பொறிக்கப் பெற்ற திருவையாற்றுக் கல்வெட்டு அவ்வூரில் உள்ள லோகமாதேவி ஈஸ்வரம் என்னும் கோயிலில் இருந்த சேஷத்திர சிவப் பண்டிதர் என்பவருக்காகத் திருவாராதனை செய்த 'ஆத்ரேயன் நம்பி காடன் நம்பி' என்ற ஒருவரைக் குறிப்பிடுகிறது. திருப்பூந்துருத்தியைச் சொந்த ஊராகக் கொண்ட இவரே அருகில் உள்ள திருவையாற்றில் சிவாச்சாரியப் பணி புரிந்தவர் என்று கருதலாம். கி.பி.1050இல் பொறிக்கப்பெற்ற இக்கல்வெட்டு குறிக்கும் நம்பி காடன் நம்பியே திருவிசைப்பாவின் ஆசிரியர் எனலாம்.

## புருடோத்தம நம்பி திருவிசைப்பா

திருவிசைப்பாப் பாடிய ஆசிரியர்களில் இவர் எட்டாமவர். 'மாசிலா மறைபல ஓதும் நாவன் வண்புருடோத்தமன்' என்று தன் ஒரு பதிக இறுதிப் பாடலில் கூறுவதால் இவர் அந்தண மரபினர் எனலாம். ஒன்பதாம் திருமுறையான திருவிசைப்பாவில் தில்லையைக் குறித்த 26, 27ஆம் பதிகங்களைப் பாடியுள்ளார். ஒவ்வொரு பதிகத்திலும் 11 பாடல்கள் உள்ளன.

இரு பதிகங்களும் அகத்துறையில் அமைந்தவை. பஞ்சமப்பண்ணைத் தன் பாடலில் குறிப்பிடுகிறார். சிவனது ஆடலைக் கண்டு வளை நெகிழும் தலைவியாகத் தன்னை நினைந்து பாடுகின்ற பாடல்கள் மிக்க சுவை யுடையன. காட்டாகச்,

*சேயிழையார்க்கினி வாழ்வரிது திருச்சிற்றம்பலத்து*
*எங்கள் செல்வனே நீ*
*தாயினும் மிகநல்லை என்றடைந்தேன்; தனிமையை*
*நினைகிலை சங்கரா உன்*
*பாயிரும் புலியத ளின்னுடையும் பையமே லெடுத்த*
*பொற்பாதமுங் கண்டு*
*ஏயிவள் இழந்தது சங்கம் ஆ ஆ எங்களை ஆளுடைய ஈசனேயோ!*

போன்ற பாடல்களைக் குறிப்பிடலாம்.

### சேதிராயர் திருவிசைப்பா

உத்தம சோழன் காலமுதல் திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு, மலையமான்களின் ஒரு கிளையினராகச் சேதிராயர் என்போர் சிற்றரசர்களாக ஆட்சி புரிந்தனர். அதுமுதல் சோழர் கால இறுதிவரை பல சேதிராயர்களின் பெயர்கள் கல்வெட்டுகளில் இடம் பெறுகின்றன. எனவே சோழர்களின்கீழ் குறுநில மன்னராயிருந்த சேதிராயர்களில் ஒருவர் திருவிசைப்பா பாடியவர் என அறிகிறோம்.

இவர் தில்லையைக் குறித்து ஒரேயொரு பதிகம் பாடியவர். இப்பதிகம் நற்றாய் இரங்கலாகக் கலித்துறையில் அந்தாதித் தொடையில் அமைந்த 10 பாடல்களைக் கொண்டது. கடைக்காப்பில் இவர் தன் பெயரைச் 'சேதிபர் கோன்' என்றமைத்துப் பாடியுள்ளார்.

### கருவூர்த்தேவர் திருவிசைப்பா

கருவூர்த்தேவர் என்ற பெயரடையால் இவர் கருவூரைச் சேர்ந்தவர் என்றறிகிறோம். இவர் அந்தணர் என்றும், சித்தர் என்றும் கூறும் கருத்து வேறுபாடு உள்ளது. ஒவ்வொரு பதிகத்தின் இறுதிப்பாடலிலும், பொருள் பொதிந்த சொற்களால் தம்மையும் தம் பாடல்களையும் குறிக்கிறார். சோணாட்டில் தங்கி, 9 சோழநாட்டுப் பதிகளுக்கும், பாண்டிய நாட்டுத் திருப்பூவணத்திற்கும், பதிகங்கள் பாடியுள்ளார். முதலாம் இராசராசன், அவன் மகன் இராசேந்திரன் ஆகியோர் காலத்தில் வாழ்ந்தவர்.

ஒன்பதாம் திருமுறையுள் இவரது பத்துப் பதிகங்கள் இடம்பெற்றுள்ளன. முதலாம் இராசராசன் தஞ்சையில் எடுத்த இராசராசேஸ்வரத்துக்கும், அவன் மனைவி எடுத்த திரைலோக்ய சுந்தரத்துக்கும் முதலாம் இராசேந்திரன் எடுத்த கங்கை கொண்ட

சோழீஸ்வரத்துக்கும் பாடிய பதிகங்கள் இதில் அடங்கும். பெரும்பற்றப்புலியூர்த் திருச்சிற்றம்பலம், களந்தை ஆதித்தேஸ்வரம், கீழ்க்கோட்டூர் மணியம்பலம், கோடை திரைலோக்கிய சுந்தரம், சாட்டியக்குடி ஏழிருக்கை என்று ஊரையும் கோயிலையும் இணைத்தே இவர் பாடுவது சிறப்புடையது.

இறைவனுடைய உருவத் திருமேனியில் திளைத்து நின்று சுவைத்துப் பாடும் இவர் பாடல்களில் அடுக்குச் சொற்களும் தொடர்களும் இடம்பெறுவது சிறப்பானது.

பவளமே மகுடம் பவளமே திருவாய்
 பவளமே திருவுடம்பு அதனில்
தவளமே களபம் தவளமே புரிநூல்
 தவளமே முறுவல் ஆடரவம்
துவளுமே

எனவரும் களந்தை ஆதித்தேச்சுரப் பதிகம் இதற்கு ஒரு எடுத்துக்காட்டு. யார் எந்த வடிவில் வழிபட்டாலும், அவ்வழிபாடு சிவனுக்கே ஆகும் என்பது தோன்ற,

சுருதி வானவனாம் திருநெடு மாலாம்
 சுந்தர விசும்பின் இந்திரனாம்
பருதி வானவனாம் படர்சடை முக்கட்
 பகவனாம் அகவுயிர்க் கமுதாம்
எருது வாகனனாம் எயில்கள் மூன்றெரித்த
 ஏறுசேவகனுமாம் பின்னும்
கருதுவார் கருதும் உருவமாம் கங்கை
 கொண்ட சோழேச்சுரத்தானே

என்று பாடும் பாடல், பரம்பொருள் ஒன்றே, எல்லாமாய் இருந்து அருள் செய்கிறது என்ற கருத்தை வலியுறுத்துகிறது. சைவ சித்தாந்தக் கருத்துகளைப் பொதிந்து பாடிய பெருமையும் இவருக்குண்டு.

### நம்பி ஆண்டார் நம்பி பிரபந்தங்கள்

பதினோராந் திருமுறை ஆசிரியர் வரிசையில் இறுதியில் இடம் பெற்றுள்ள நம்பி ஆண்டார் நம்பி குறித்த வரலாறு திருமுறை கண்ட புராணம் என்னும் உமாபதி சிவத்தின் நூல் மூலமே அறியப்படுகிறது. 14ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட இப்புராணம் மூலம், நம்பி ஆண்டார் நம்பி, திருநாரையூரில் ஆதிசைவர் குலத்துப்பிறந்தவர் என்றும், அவ்வூரில் எழுந்தருளியிருந்த

பொல்லாப் பிள்ளையாரின் அருளால், தன்னை வேண்டிய சோழ மன்னனுக்காகத் தில்லையில் பூட்டிய அறையில் செப்பேடுகளில் எழுதி வைக்கப் பெற்றிருந்த திருமுறைகளை எடுத்துத் தொகுத்து, திரு எருக்கத்தம் புலியூரில் உள்ள பாணர் மரபில் வந்த ஒரு பெண்ணின் உதவியால் பண்ணமைத்தார் என்றும் அறிகிறோம்.

இது நடந்த காலம் அபய குலசேகரன் ஆட்சிக்காலம் என்பது புராணக் குறிப்பு; முதலில் பத்துத் திருமுறைகளைத் தொகுத்தமைத்த பின்னர் அரசன் வேண்டுகோளின்படி பதினோராம் திருமுறை தொகுக்கப்பட்டது என்கிறது புராணம். புராணக்கதை எப்படி ஆயினும், சைவ சமயத்திற்கும் திருப்பதிகங்களுக்கும் சிறப்பு அளித்த இராசராசன் காலமே திருமுறை தொகுக்கப்பெற்ற காலம் என்றும், அத்திருமுறைத் தொகுப்பில், நம்பி ஆண்டார் நம்பியின் பங்கு இருந்திருத்தல் வேண்டும் என்றும், பதினோராம் திருமுறையில், தன் பதிகங்களையும் அவர் சேர்த்திருக்கலாம் என்றும் அறிஞர் மு. அருணாசலம் கருதுகிறார். (மு.அ. 11ஆம் நூற்றாண்டு பக்.304-309).

நம்பி செய்த நூல்கள் பதினோராந் திருமுறையில் சேர்க்கப்பெற்றுள்ளன. 31 முதல் 40 வரை எண்ணுள்ள பத்துப் பிரபந்தங்கள் இவரால் இயற்றப் பெற்றவை. அவை வருமாறு:

1. **திருநாரையூர் விநாயகர் திருஇரட்டை மணிமாலை:** வெண்பாவும் கட்டளைக் கலித்துறையுமாய் அமைந்த (இருசொல் மணிகள்) 20 பாடல்கள் தம்முள் மாறிவரும் வகையில் அந்தாதியாக மண்டலித்து வரும் இந்த இலக்கியம் விநாயகரைப் போற்றுவதாக அமைந்துள்ளது.

2. **கோயில் திருப்பண்ணியர் விருத்தம்:** இது 70 கட்டளைக் கலித்துறைப் பாடல்களில் அந்தாதித் தொடை அமைய 'நின் அருளார் திருவை நான் பெறுவது எங்ஙனம்?' என்று சிவனை நோக்கிப் புலம்பிப் பாடும் பாடல்களாக அமைந்த நூலாகும். 'திருவாதவூர்ச் சிவபாத்தியன் செய் திருச்சிற்றம்பலப் பொருளார் தருதிருக் கோவை' என்ற பாடல் அடி திருக்கோவையாரைக் குறிப்பதாகக் கொள்ளலாம். அகத்துறைப் பாடல்கள் சிலவும் இதில் உள்ளன.

3. **திருத்தொண்டர் திருவந்தாதி:** சுந்தரர் பாடிய தனியடியார்கள் அறுபது பேரையும், சுந்தரர் அவரது தாய், தந்தை ஆகிய மூவரையும் சேர்த்து 63 தொண்டர்களையும் போற்றி,

ஆளுக்கொரு பாடலாகக் கட்டளைக் கலித்துறையில், அந்தாதி அமைப்பில் பாடிய நூலே திருத்தொண்டர் திருவந்தாதி ஆகும். மிகச் சிலருக்கு இரு பாடல்களும் உள்ளன. சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகைக்கு இதுவகை என்றும், பின்வரும் சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணத்துக்கு அடிப்படையாய் அமைந்தது என்றும் கூறலாம். திருத்தொண்டர்களின் குலம், ஊர், செய்த அரிய செயல்கள் ஆகியவற்றை இந்நூற் பாடல்கள் விளக்குகின்றன. சோழ மன்னர்களான அடியார் வருமிடங்களில் எல்லாம் சோழகுலத்தை மிகவுயர்த்திப் பாடுகின்றார். ‘செம்பொன் அணிந்து சிற்றம்பலத்தைச் சிவலோகம் எய்தி நம்பன் கழற்கீழ் இருந்தோன் குலமுதல்’, ‘மைவைத்த கண்டன் நெறியன்றி மற்றோர் நெறி கருதாத் தெய்வக் குடிச்சோழன்’ என்பன சில சான்றுகள்.

ஆளுடைய பிள்ளையார் மீதான பிரபந்தங்களாக இவர் இயற்றிய இலக்கியங்கள் ஆறு உள்ளன. ஞானசம்பந்தர் மீது இவருக்கிருந்த பெருமதிப்பின் வெளிப்பாடே இவை எனலாம்.

**4. ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி:** இது கலித்துறையில் அமைந்த மண்டலித்து வரும் 100 பாடல்களைக் கொண்ட நூல். நூறாவது பாடலில் சீர்காழியின் 12 பெயர்களையும் இணைத்துப் பாடுகிறார். ஞான சம்பந்தரின் அற்புதச் செயல்களை இந்நூல் பாராட்டுகிறது. ‘அருகர் தங்கள் தென்னாட்டரண் அட்ட சிங்கம்’ என்று ஞானசம்பந்தரைப் பாராட்டுவது குறிப்பிடத்தக்கது.

**5. ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக் கோவை:** இந்நூல் ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக்கலித்துறை ஆகிய மூவகைப் பாடல்களை (மும்மணிகள்) அடுத்தடுத்து அந்தாதி ஆக்கி, மண்டலித்து வரும் வகையில் முப்பது பாடல்களைக் கொண்டதாக இயற்றப்பெற்றுள்ளது. ஆளுடைய பிள்ளையாரின் திருவடிப் பெருமையை

**என்றும் அடியவர் உள்ளத்திருப்பன, இவ்வுலகோர்**
**நன்று மலர்கொடு தூவித் துதிப்பன, நல்ல சங்கத்து**
**ஒன்றும் புலவர்கள் யாப்புக் குரியன ஒண் கலியைப்**
**பொன்றும் கவுணியன் சைவசிகாமணி பொன்னடியே**

என்று பாடிப் புகழ்கிறார். சில பாடல்களில் ஞானசம்பந்தரின் வரலாற்றைத் தொடர்ச்சியாக அமைத்துப் பாடுகிறார். (எண்.4).

**6. ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம்:** பத்துக் கட்டளைக் கலித்துறைப் பாடல்களைக் கொண்டு சண்பையர் காவலனாம் சம்பந்தனைப் பாடுவதால், இந்நூல் இப்பெயர்

பெற்றது. ஞானசம்பந்தரின் தமிழைப் போற்றும் வகையில், 'சடையான் அருள்மேவ அவனியர்க்கு வீறது ஏறும் தமிழால் வழி கண்டவன்' என்பது போன்று அமைந்த அடிகள் சிறப்புக்குரியன.

**7. ஆளுடைய பிள்ளையார் திருஉலாமாலை:** சேரமான் பெருமாள் பாடிய ஆதி உலாவினை அடுத்து எழுதப்பெற்ற உலா நூல் இதுவேயாகும். பாட்டியல் இலக்கணப் படி இவ்வுலா அமையவில்லை. ஆளுடைய பிள்ளையார் உலா வந்த தன்மையை 143 கண்ணிகளால், கலி வெண்பாட்டால் விவரிக்கும் நூலாக இது அமைந்துள்ளது.

**8. ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்:** ஒன்பதாம் நூற்றாண்டில் எழுந்த நந்திக் கலம்பகத்தினைத் தொடர்ந்து, கலம்பக இலக்கணத்திற்குப் பொருந்துமாறு ஒருபோகு கொச்சகக் கலிப்பாவில் இந்நூல் அமைந்துள்ளது. நாற்பத்தொன்பது பாடல்களே கிடைத்துள்ளன. தமிழின் சிறப்பைக் குறிப்பனவாகவும், சந்தப் பாடல்களாகவும் இவை அமைந்திருப்பது சிறப்புக்குரியது.

அறிவாகி இன்பஞ்செய் தமிழ்வாதில் வென்றந்த
அமணான வன்குண்டர் கழுவேற முன்கண்ட
செறிமாட வண்சண்பை நகராளி என் தந்தை
திருஞான சம்பந்தன் அணிநீடு திண்குன்றில்

என்பது போன்ற பல சந்தப்பாடல்கள் இந்நூலில் உள்ளன.

**9. ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை:** இந்நூல் சம்பந்தருடைய அற்புதச் செயல்களைக் கூறுகிறது. இது 65 அடிகளைக் கொண்டது. முதல் 20 கண்ணிகள் கலி வெண்பாவால் இயன்றன. பின் 25 அடிகள் தனிச்சீர் பெறாத கலிவெண்பாப்போல ஒரே எதுகையோடு சென்று முடிவன. ஆளுடைய பிள்ளையாரின் வரலாற்றுச் சுருக்கம் போல அமைந்திருக்கும் இந்நூலில், அவர் பாலை, நெய்தல் பாடிய செய்தியும் பதினாறாயிரம் பதிகம் பாடிய செய்தியும் குறிப்பிடப்பட்டுள்ளன.

**10. திருநாவுக்கரசு தேவர் திருஏகாதச மாலை:** திருநாவுக்கரசைப் போற்றும் வகையில் 11 சந்த விருத்தங்களில் இந்நூல் அமைகிறது. அப்பரின் வரலாற்றுச் செய்திகள் அனைத்தும் இடம் பெற்றுள்ளன. அந்தாதியாக மண்டலித்து வரும்வகையில் அமைக்கப்பெற்றுள்ளது. அப்பர் 4900 பதிகங்கள் பாடினார் என்ற செய்தியை ஏழாம் பாடலில் "பதிகம் ஏழு எழுநூறு பகரும் மாகவியோகி பரசு நாவரசு' என்ற அடியில் குறிப்பிடுகிறார்.

## நாலாயிர திவ்வியப் பிரபந்த தனியன்கள்

முதலாழ்வார்கள் தொடங்கிய ஆழ்வார் பரம்பரை மதுரகவி யாழ்வாரோடு, ஒன்பதாம் நூற்றாண்டில் முடிவடைந்தது. தொடர்ந்து வைணவத்தில் ஆச்சாரிய பரம்பரை தொடங்கிய காலம் பத்தாம் நூற்றாண்டாகும். இவ்வாச்சாரிய பரம்பரை நாதமுனிகள் முதலாகத் தொடங்குகிறது. வைணவ உலகில் பெரும்புகழ் பெற்ற இராமானுசர் பன்னிரண்டாம் நூற்றாண்டில், பல்லாயிரக் கணக்கானோர் வைணவத்தைப் பின்பற்ற வழிகோலினார். இருப்பினும் இந்நூற்றாண்டில் வைணவத்தில் தனிநூல்களாகத் தமிழில் ஏதும் இயற்றப் பெறவில்லை.

வைணவ மரபில் நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களுக்குச் சிறப்புப் பாயிரமாகச் செய்யப்பட்ட பாடல்களைத் தனியன் என்று கூறுவர். பிரபந்தங்கள் அனைத்திற்கும் இப்படிப்பட்ட தனியன்கள் உள்ளன. எவ்விலக்கியத்திற்கு, எவர் தனியன் இயற்றினார் என்பது மரபு வழியில் ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளது. அத்தகைய தனியன்கள் பாடிய ஆச்சாரியர் சிலரையும், அவர்தம் பாடல்களையும் இந்நூற்றாண்டின் வைணவ இலக்கியங்களாக இங்குக் காணலாம்.

## திருக்கச்சி நம்பி பாடிய திருமழிசை ஆழ்வார் திருச்சந்த விருத்தத் தனியன்கள்

சென்னையை அடுத்த பூவிருந்தவல்லியில் கி.பி 1004ஆம் ஆண்டு வணிகர் குலத்தில் திருக்கச்சி நம்பிகள் பிறந்தார். முதலில் திருவல்லிக்கேணியிலும், பின்னர்க் காஞ்சியிலும் வழிபாடும் ஆலவட்டக் கைங்கரியமும் நடத்தி வந்தார். பெருமாள், ஆச்சாரியர் பத்தியைவிட பக்தர் (பாகவத) பக்தியே சிறப்பென உணர்ந்தவரானார். இராமானுசரின் குருமார் ஐவருள் இவரும் ஒருவராகக் கருதப்படுகிறார். வரதராச அஷ்டகம் என்ற வடமொழித் தோத்திர நூல் செய்த இவர், திருமழிசை ஆழ்வாரின் திருச்சந்த விருத்தத்திற்கு இரு தனியன்களையும் பாடியுள்ளார்.

## திருவரங்கப் பெருமாளரையர் பாடிய தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருப்பள்ளி எழுச்சி, திருமாலை ஆகியவற்றுக்கான தனியன்கள்.

ஆளவந்தாரின் புதல்வரும், சீடருமாவார் திருவரங்கப் பெருமாள் அரையர். திருவரங்கத்தில் திருவாய்மொழியை அபிநயித்துப் பாடி வந்தவர். இவர் தொண்டரடிப் பொடியாழ்வார்

திருப்பள்ளி எழுச்சிக்கு ஒரு தனியனும் திருமாலைக்கு ஒரு தனியனும் ஆக இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார்.

### திருமலை நம்பி பாடிய அமலனாதி பிரானுக்குரிய தனியன்

ஆளவந்தாரின் சீடரும், இராமானுசரின் தாய் மாமனும் ஆன இவர் திருமலையில் பிறந்தவர். திருவாய்மொழிக்கு ஆறாயிரப்படி செய்த திருக்குருகைப் பிரான் பிள்ளானின் தந்தையார். இவர் செய்த தனியன் அமலனாதி பிரானுக்கு உரியதாக வழங்கப்படுகிறது.

**சொட்டை நம்பிகளின் திருவாய்மொழித் தனியன்:** ஆளவந்தாரின் புதல்வரான சொட்டை நம்பிகள், திருவாய்மொழிக்கு ஒரு தனியன் பாடியுள்ளார். நம்மாழ்வார் பாதங்களைப் பற்றிய தனக்கு எவ்விதக் குறையும் இல்லை என்று கூறும், இவர் செய்த தனியன் கீழ்வருமாறு:

**மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணும்**
**இனத்தாரை யல்லாது இறைஞ்சேன் – தனத்தாலும்**
**ஏதும் குறைவிலேன் எந்தை சடகோபன்**
**பாதங்கள் யாமுடைய பற்று.**

### இராமானுசர் பாடிய திருமங்கை தனியன்கள்

தமிழ்நாட்டில் வைணவ மதத்தை நிறுவி, அதன் மூலம் வடநாடெங்கும் அச்சமயம் பரவச் செய்த பெருமகன் இராமானுசர் ஸ்ரீபெரும்புதூரில் பிறந்து, விசிஷ்டாத்வைதம் என்னும் வேதாந்த மதப்பிரிவைச் சிறப்பித்துப் போற்றியவர். முதலில் யாதவப் பிரகாசரிடமும், திருக்கச்சி நம்பியிடமும் கல்வி பெற்ற இவர், பின்னர் திருக்கோட்டி நம்பியிடம் பெற்ற திருமந்திர ரகசியத்தை ஆசிரியர் கட்டளையையும் மீறிக் கோயில் கோபுரத்தின் மீதேறி நின்று அனைவருமறிய ஓதினார். இந்தியா முழுவதும் சென்று உபதேசம் புரிந்த இராமானுசர், தமிழில் பெரிய நூல் எதுவும் எழுதவில்லை. எனினும், இராமானுசார்ய திவ்ய சரிதை என்ற நூலில் உடையவர் ஆழ்வார் திருநகரி வந்தபோது ஒருபாடலும், ஆண்டாளிடம் ஈடுபட்டுப் பாடிய இரு பாடல்களும் இடம் பெற்றுள்ளன. அன்றியும், திருமங்கை ஆழ்வாரின் பெரிய திருமொழிக்கு ஒன்றும், அவரது திருவெழுகூற்றிருக்கைக்கு ஒன்றும், நம்மாழ்வாரின் பெரிய திருவந்தாதிக்கு ஒன்றுமாக மூன்று தனியன்களும் அவர் பாடியனவாக நமக்குக் கிடைத்துள்ளன.

### சில புதிய சிற்றிலக்கியங்கள்

11ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் நம்பியாண்டார் நம்பிகள் பல சிற்றிலக்கியங்களை இயற்றியுள்ளார். இவற்றை அடியொற்றி எழுந்த சிற்றிலக்கிய மரபில் தெய்வத்தைப் புகழும் மரபினின்று சிறிது மாறுபட்டு, சோழப் பேரரசைப் புகழ்ந்து சிற்றிலக்கியங்கள் தோன்றத் தொடங்கின. பரணி, உலா, கோவை, பிள்ளைத்தமிழ் ஆகிய சிற்றிலக்கிய வகைகள் இந் நூற்றாண்டில் தோன்றின.

தமிழிலக்கியங்களில் போர்க்கள வெற்றியைப் பாடும் சிற்றிலக்கிய வகைகளாகச் செருக்களவஞ்சி, களவழி, பரணி ஆகியன காணப்படுகின்றன. இம் மூன்றுள்ளும், கதைநயமும், பொருள்நயமும், யாப்பு நயமும் தோன்ற இயற்றப்படுவது பரணி வகையே ஆகும். போர்க்களத் தெய்வமாம் காளிக்கு உவந்த நாளான பரணியின் பெயரால் இவ்விலக்கிய வகை பெயர் பெற்றது. போரில் தோற்று வீழ்ந்தவரின் உடல் உறுப்புகளாலும், தசை, குருதி முதலியவற்றாலும் பேய்கள் கூழ் சமைத்துப் பரணி நாளில் காளிக்குப் பலியிட்டு வென்றோனை வாழ்த்தும் வழக்கினைப் பரணி இலக்கியங்கள் காட்டுகின்றன.

பத்தாம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற பன்னிரு பாட்டியல் எனும் இலக்கண நூலிலேயே பரணியின் இலக்கணம் கூறப்பட்டிருக்கிறது. எனினும் அந்நூற்றாண்டில் எழுதப்பெற்ற எந்தப் பரணி இலக்கியமும் இன்று கிடைக்கவில்லை. பதினொன்றாம் நூற்றாண்டில் எழுந்த பரணி இலக்கியங்களின் பெயர்கள் இரண்டு கிடைத்துள்ளன. அவை வருமாறு.

**கொப்பத்துப் பரணி:** சோழப் பெருவேந்தன் முதலாம் இராசேந்திரனின் மகனான இரண்டாம் இராசேந்திரன் மேலைச்சாளுக்கிய மன்னனான ஆகவமல்லனுடன் கொப்பம் என்ற இடத்தில் கி.பி.1054-இல் போரிட்டான். தன் அண்ணன் முதலாம் இராசாதிராசன் போரில் இறந்துவிட, அப்போர்க்களத்திலேயே இளவரசன் இரண்டாம் இராசேந்திரன் முடிசூட்டிக் கொண்டதும், அப் பெரும்போரில் வெற்றி பெற்றதும் இப் பரணி இலக்கியத்தின் கருப்பொருளாகும். இந்நூல் கிடைக்கவில்லை. ஆசிரியர் பெயரும் அறியக் கூடவில்லை. இந்நூல் இருந்ததை இராசராச சோழனுலா (25) தெரிவிக்கின்றது.

**கூடல் சங்கமத்துப் பரணி:** இது முதலாம் இராசேந்திரனின் மூன்றாம் மகனான வீரராசேந்திரன், மேலைச் சாளுக்கியருடன்,

கிருஷ்ணா நதியும், துங்கபத்திரையும், கூடும் இடமான கூடல் சங்கமம் என்னும் இடத்தில், கி.பி.1064-இல் போரிட்டுப் பெற்ற வெற்றியைப் புகழ்ந்து பாடும் பரணி நூல். இந்நூலும் கிடைக்கவில்லை. எனினும், விக்கிரம சோழனுலா (21), இராசராச சோழனுலா(25), சங்கர சோழனுலா(22) ஆகிய இலக்கியங்களில் இருந்து இப்பரணி இலக்கியம் இருந்ததை அறிகிறோம்.

### 12ஆம் நூற்றாண்டு

தமிழ் நாட்டு வரலாற்றில் பன்னிரண்டாம் நூற்றாண்டு சோழப் பேரரசு நிலைபெற்று நிலவிய காலம் ஆதலின், எண்ணற்ற கோயில்கள், அவற்றின் நிர்வாக முறை, இசை, நடனம், நீர்ப்பாசனம், கல்விச்சாலைகள், ஆதுர சாலைகள் என்று பலவகையிலும் நாடு மேம்பாடுற்றிருந்தது. எனவே இலக்கிய வளர்ச்சியும் சிறப்பிடம் பெற்றிருப்பதைக் காண்கிறோம். சைவ, வைணவ, சைன, பிரபந்த இலக்கியங்கள் இந்நூற்றாண்டில் பெருமளவில் தோன்றின. சிலப்பதிகாரம் உள்ளிட்ட சிறந்த நூல்கள் சிலவற்றுக்கு உரையும் இக்காலத்தில் எழுதப் பெற்றது. பல சோழ அரசர்களின் மெய்க்கீர்த்திகள் இலக்கிய வளம் மிக்கனவாய் எழுதப்பெற்றன.

### கலிங்கத்துப் பரணி

ஒரு மன்னன் பெரும் வெற்றி பெறும்போது, அவ்வெற்றியைத் தந்த போர்க்களத் தெய்வமாம் காளிக்குக் கூழட்டுப் பரவுமுகமாகப் பரணிப்பாடல் பாடும் மரபு 11-ஆம் நூற்றாண்டிலேயே தொடங்கியதைக் கொப்பத்துப் பரணி, கூடல் சங்கமத்துப் பரணி ஆகிய இலக்கியங்கள் எழுந்ததன் வழி அறிகிறோம். அதனை அடியொற்றி இந் நூற்றாண்டிலும் இரு பரணி இலக்கியங்கள் தோன்றியுள்ளன.

கலிங்கத்துப் பரணியின் ஆசிரியரான சயங்கொண்டார், சோழநாட்டுத் தீபங்குடி என்ற ஊரினர். 'கவிச்சக்கரவர்த்தி' என்றும், 'கவிற்சண்டிதன்' என்றும் போற்றப் பெற்றவர். 'பரணிக்கோர் சயங்கொண்டான்' என்ற தொடர் கலிங்கத்துப் பரணியையும், சயங்கொண்டாரையும் ஒருங்கே சிறப்பிக்கும் தொடர். கி.பி.1070 முதல் 1120 வரை அரசாண்ட முதற் குலோத்துங்கன் கி.பி.1078 ஆம் ஆண்டில் பெற்ற கலிங்க வெற்றியைப் பாடுதலின் இந்நூல் இக்காலப் பகுதியின் பாற்படுகின்றது.

பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த பன்னிருபாட்டியல் என்ற பாட்டியல் இலக்கண நூல், 22 அடி கொண்ட நான்கு

சூத்திரங்களால் பரணி இலக்கணம் கூறுகின்றது. 'மயக்கறு கொச்சகத்து ஈரடி இயன்று நயப்புறு தாழிசை உறுப்பிற் பொதிந்து பரணி இலக்கியம் செய்யப்பெறவேண்டும் என்றும், 'யானை சாய்த்த அடுகளத் தல்லது யாவரும் பெறார் பரணிப்பாட்டே' என்றும் அவ்விலக்கண நூல் கூறுகின்றது. 'பரணிகளெல்லாம் இரண்டடியானே தாழம்பட்ட ஓசை விராய் (தாழிசை) வருதலும் முடுகி வருதலும் (சந்தம்) பெறும்' என்பதும், 'பரணிச் செய்யுளுள் இரண்டடியான் வரும் தாழிசை பேரெண்ணாகப் பயின்றுவரும்' என்பதும் பேராசிரியரின் உரைக் குறிப்புகள். வச்சணந்திமாலை, பிரபந்த மரபியல், இலக்கண விளக்கச் சூத்திரம் ஆகிய நூல்களும் பரணி இலக்கணத்தைக் கூறுகின்றன. பரணி இலக்கியம், கடவுள் வாழ்த்து தொடங்கி, கூழ்அடுதல் ஈறாக 13 பகுதிகளைக் கொண்டது.

பரணி இலக்கியம் முழுவதும் சுவை நிரம்பியது; வரலாற்றுக்குத் துணை செய்யும் தரவுகளைத் தருவது. இராச பாரம்பரியம்' என்னும் பகுதி சோழர் பரம்பரையின் தொல்பழங்கால அரசர்களையும், வரலாற்றுக்கால அரசர்களையும், அவர்கள் செய்த அரிய செயல்களுடன் எடுத்துக் கூறுவது. சோழரின் அரசவைக் கவிஞர் ஆதலின் சயங்கொண்டார் சோழமரபினைப் பெரிதும் ஈடுபாட்டுடன் விளக்குகிறார். அம்மரபின் வரலாறு கேட்டுக் காளிதேவியே பெற்ற நாளினும் பெரிதுவந்ததாகக் கூறுகிறார். அவர் மதிப்பில், கடவுளர்களின் அனைத்துக் கொடிகளும் தாழ்ந்துவிட, சோழனின் புலிக்கொடி உயர்ந்தோங்கிப் பறக்கின்றது. நாடகப் பாங்குடன் அமைந்த பகுதிகள் மிகப்பல. பேய் முறைப்பாடு, காளிக்குக் கூறியது, களம் காட்டியது ஆகிய பகுதிகளில் பல பாத்திரங்களாகப் பேய்களே வருகின்றன. நகைச்சுவையும், அவலமும் நிரம்பிய பல பாடல்கள் இப்பரணியில் இடம்பெற்றுள்ளன. வருணனைத் திறத்திலும் சயங்கொண்டார் மிகச் சிறந்து விளங்குகின்றார். பாலை நில வருணனையை நல்லதொரு சான்றாகக் காட்டலாம்.

உதிர்ந்தவன்னி ஒடுங்குநெல்லி உணங்குதும்பை
உலர்ந்தவேல்
பிதிர்ந்த சுள்ளி சிதைந்தவெள்ளில் பிளந்தகள்ளி
பரந்தவே

வற்றல் வாகை வறந்தகூகை மடிந்ததேறு பொடிந்தவேல்
முற்றல் ஈகை முளிந்தவிண்டு முரிந்தபுன்கு நிரைந்தவே

என்று பாலைக்குரிய மரங்களுக்கு இவர்தரும் அடைமொழிகள் அறிந்து வியக்கத்தக்கன. அச்சமும் பக்தியும் நிறைந்த காளி வழிபாடுகளைக் கீழ்வரும் பாடல்கள் காட்டும்.

**அடிக்கழுத்தி னுடன் சிரத்தை அரிவராலோ**
**அரிந்தசிரம் அணங்கின் கைக் கொடுப்பராலோ**
**கொடுத்தசிரம் கொற்றவையைப் பரவுமாலோ,**
**குறை உடலம் கும்பிட்டு நிற்குமாலோ.**

போர்க்களத்தின் காட்சியையும், அச்ச ஒலியையும் படம் பிடிக்கும் கீழ்வரும் பாடல்.

**எடும் எடும் எடும் என எடுத்ததோர்**
**இகல் ஒலிகடல் ஒலி இகக்கவே**
**விடுவிடுவிடுபரி கரிக்குழாம்**
**விடும் விடும் எனும் ஒலி மிகைக்கவே**
**குருதியின் நதிவெளி பரக்கவே**
**குடைஇனம் நுரைஎன மிதக்கவே**
**கரிதுணி படும் உடல் அடுக்கியே**
**கரைஎன இருபுடை கிடக்கவே.**

போர்க்களத்தில் கொழுநரைப் பறிகொடுத்த மகளிரின் அவலமும் வீரமும் சொல்லத் தரமன்று. அதனை விவரிக்கும் பாடல்:

**பொருதடக்கை வாள் எங்கே மணிமார்பு எங்கே**
**போர்முகத்தில் எவர்வரினும் புறங்கொடாத**
**பருவயிரத் தோளெங்கே எங்கே என்று**
**பயிரவியைக் கேட்பாளைக் காண்மின் காண்மின்**

பல்வேறு சமயங்களைச் சார்ந்தனவாகப் பேய்களும் வகைப்படுத்தப் பெறுகின்றன. பனவப் (பார்ப்பன) பேய், சமண்பேய், புத்தப்பேய், குருட்டுப்பேய், கணக்கப்பேய், இழுதைப் பேய் என்று பேய்ப்பட்டியல் நீள்கிறது.

கடைதிறப்பு முழுவதும் அகச்சுவைக்கு எடுத்துக் காட்டாக அமைவதைக் காணலாம். சில காட்சிகள்:

**சுரிகுழல் அசைவுற அசைவுற துயிலெழும் மயிலென மயிலென**
**பரிபுர ஒலியெழ ஒலியெழ பனிமொழியவர் கடைதிறமினோ**

முருகின் சிவந்த கழுநீரும் முதிரா இளைஞர் ஆருயிரும்
திருகிச் செருகும் குழல் மடவீர் செம்பொற் கபாடம்
திறமினோ

தமிழகத்தின் மிகப்பண்டைய ஆடல்பாடல் மரபுகளான குரவைக்கூத்து, வள்ளைப்பாட்டு ஆகியன மிகச் சிறந்த முறையில் கலிங்கத்துப் பரணியில் பயன்படுத்தப் பட்டிருக்கின்றன. சான்றுகளாக,

இந்த உரற்கண் இவ்வரிசி எல்லாம் பெய்து கொல்யானைத்
தந்த உலக்கைதனை ஓச்சி சலுக்கு மொலுக்கெனக் குற்றீரே

வண்டைவளம்பதி பாடீரே மல்லையும் கச்சியும் பாடீரே
பண்டை மயிலையும் பாடீரே பல்லவர் தோன்றலைப்
பாடீரே

போல்வனவற்றைச் சுட்டலாம்.

இத்தகைய சிறப்பு மிக்க கலிங்கத்துப்பரணியின் தாக்கம் தமிழிலக்கிய மரபில் குறிப்பிடத்தக்கது. போர் வெற்றியைப் பாட வேண்டும் என்ற மையக் கருத்தினை விடுத்துப் பின்வந்த புலவர்கள் சமயத்துறையிலும் இவ்விலக்கிய முறையைப் பயன்படுத்தினர். இதன் தாக்கத்தால், ஒட்டக்கூத்தரும் ஒரு பரணி நூல் செய்தார். அவர் தக்கன் யாகத்தை மையமாகக் கொண்டு தக்கயாகப் பரணி பாடினார். அதை அடியொற்றி இரணியவதைப் பரணி, அஞ்ஞவதைப்பரணி, பாசவதைப்பரணி, மோகவதைப் பரணி, சூரன்வதைப்பரணி என்னும் திருச்செந்தூர்ப் பரணி, கஞ்ச வதைப் பரணி எனப் பரணி நூல்களின் தொகை பெருகுவதற்குக் கலிங்கத்துப்பரணி அடிப்படையாய் அமைந்தது எனில் அது மிகையாகாது.

### பதிப்பு

1898 வி.கோ. சூரியநாராயண சாஸ்திரி (ப.ஆ)

1923 பண்டித அ. கோபாலையர் (ப.ஆ)

1959 சென்னை: மர்ரே ராஜம் பதிப்பு.

### ஒட்டக்கூத்தர் பிரபந்தங்கள்

### 1. குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழ்

இரண்டாம் குலோத்துங்கன் மீது ஒட்டக்கூத்தர் பாடிய பிள்ளைத் தமிழிலக்கியம் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்துள்.

பெரியாழ்வார் கண்ணன் துதியாகப் பாடிய பிள்ளைத் தமிழ்ப் பகுதிகளுக்குப் பின்னர், முதன் முதலாகத் தோன்றிய தனியான பிள்ளைத் தமிழ் இலக்கியம் ஆகும். 103 பாடல்களைக் கொண்ட இதனைப் பாடியவர் ஒட்டக் கூத்தர் என்பதைச் சங்கரசோழன் உலாவின்

**கூடிய சீர்தந்த என்றெடுத்த கூத்தனுலாச்**
**சூடிய விக்கிரம சோழனும் - பாடிய**
**வெள்ளைக் கலியுலா மாலையொடு மீண்டுமவன்**
**பிள்ளைத் தமிழ்மாலை பெற்றோனும்**

எனவரும் பாடலின் மூலம் அறிய முடிகிறது.

பெரியாழ்வார் பாடல்களில் இருந்து செங்கீரை, தால், சப்பாணி, அம்புலி என்ற நான்கு பருவங்களை மட்டும் கூத்தர் பின் பற்றுகிறார். இந்நூலில் முத்தம், வாரானை, சிறுபறை, சிற்றில், சிறுதேர் ஆகிய பருவங்கள் மேலும் இடம்பெற்றுள்ளன. கூத்தர் கொண்ட பருவ அமைப்புகளும், நீண்ட விருத்தத்தாலும், சந்தங்களாலும் பாடுதல், ஒரே பருவத்தில் சந்தம் மாற்றிப் பாடுதல், பருவத்தின் பொருளை மகுடத்தில் அமைத்துப் பாடுதல் போன்ற உத்திகளும், தமிழிலக்கிய உலகை வளப்படுத்தியுள்ளன.

**தொன்னில வேந்தர் சுடர்முடி சூடிய**
**பின்னர்ப் பெறாஅர் பிள்ளைப் பாட்டே**

என்ற பன்னிரு பாட்டியல் நூற்பாவின் படி, இரண்டாம் குலோத்துங்கன் முடிசூடும் முன்னர் இளவரசனாய் இருந்த போதே (கி.பி.1133க்கு முன்னர்) இப் பிள்ளைத் தமிழ் பாடப் பெற்றிருத்தல் வேண்டும்.

கரிகாலன் உருத்திரங் கண்ணனாரிடம், பட்டினப் பாலைக்குப் பதினாயிரம் பொன் பரிசில் கொடுத்தது, புகார் நகரில் அந்நூலை அரங்கேற்ற முத்தினும் பொன்னினும் செய்த பதினாறு கால் மண்டபம் அமைத்தது, பொய்கையார் களவழி பாடியது ஆகிய செய்திகளை இப் பிள்ளைத் தமிழில் கூத்தர் பாடுகிறார். இசைமுதலான கலைகளில் இம்மன்னன் சிறந்தவன் என்பதை நித்யகீத பிரமோகன், துரக வித்யா வினோதன், ஞானகம்பீரன் ஆகிய இந்நூலில் வரும் பட்டப் பெயர்கள் மூலம் அறிகிறோம்.

**பதிப்பு**

*1933* பண்டிதர் உலகநாத பிள்ளை

*1967* சென்னை : சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

## 2. கலிங்கப்பரணி

முதற்குலோத்துங்கன், வடகலிங்கத்தின் மீது கொண்ட வெற்றியைப் பாராட்டிச் சயங்கொண்டார் 'கலிங்கத்துப்பரணி' பாடியதைப் போலவே, அவனது மகனான விக்கிரமசோழன் தென்கலிங்கத்தை வெற்றி கொண்டதைப் பாராட்டி ஒட்டக்கூத்தரும், 'கலிங்கப் பரணி' என்ற பெயரில் ஒரு நூல் செய்ததாக அறிகிறோம். "தரணி ஒரு கவிகை தங்கக் கலிங்கப் பரணி புனைந்த" என வரும் இராசராச சோழன் உலாவால் (27) இதனை அறியலாம். இச்செய்தியினை ஒட்டக்கூத்தரே தனது தக்கயாகப் பரணியில் (தாழிசை 776) குறிப்பிடுகின்றார். இத்தாழிசைக்கு உரையெழுதிய உரைகாரர், இப்பரணி பாடினார் ஒட்டக் கூத்தரான கவிச்சக்கரவர்த்திகள்; இப்பரணிப் பாட்டுண்டார் விக்கிரம சோழ தேவர்' என்று கூறுவதன் மூலம் இது தெளிவாகிறது.

சிலப்பதிகார இந்திர. விழவூரெடுத்த காதையுரையில் அடியார்க்கு நல்லார் பலியிடுதலைக் குறிக்க மேற்கோளாகக் காட்டும் இரு தாழிசைகளும், தக்கயாகப் பரணி 13-ஆம் தாழிசையின் உரையில் எடுத்துரைக்கப்படும் ஒரு தாழிசையும் இந்நூலுக்குரியதென அறிஞர் கருதுவர் (மு.அ.12/382, 83).

## 3. மூவருலா

தமிழிலக்கிய உலகில், உலா என்ற அமைப்பில் சிற்றிலக்கியம் படைப்பதைத் தொடங்கி வைத்தவர் ஆதியுலா என்று வழங்கப்பெறும் திருக்கயிலாய ஞானஉலா எழுதிய சேரமான் பெருமாளே ஆவார். அவரைத் தொடர்ந்து நம்பிஆண்டார் நம்பிகள், ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை எனும் நூல் செய்தார். பன்னிரு பாட்டியல் வரையறுக்கும் உலா இலக்கணத்திற்குப் பொருந்த அமையப் பெற்று, அதன்பின்னர் எழுந்த உலாநூல் மூவருலாவாகும்.

விக்கிரம சோழன் (1118 - 1135), இரண்டாம் குலோத்துங்கன் (1133-50), இரண்டாம் இராசராசன் (1146-72) ஆகிய மூன்று சோழ மன்னர்கள் காலத்திலும் அரசவைப் புலவராக விளங்கிய ஒட்டக் கூத்தரால் அம்மூவர் மீதும் பாடப்பெற்ற உலாக்கள் மூவருலா எனப்பெற்றன. இவை முறையே கி.பி.1126-27, 1140-41, 1151-59 ஆகிய ஆண்டுகளில் இயற்றப்பெற்றன என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[3]

---

3 N. Sethuraman, **The Cholas**, Raman and Raman Ltd., Kumbakonam, 1978, pp.171-173.

அ. விக்கிரம சோழனுலா: இது 342 கண்ணிகள் கொண்ட நூல். உலா இலக்கணத்திற்கேற்ப ஏழுபருவ மகளிரும் உலாத் தலைவனைக் கண்டு காதல் கொள்வதாக அமைந்துள்ளது. இவ்வுலாவில் பங்குபெறுவோர் என்ற வகையில் விக்கிரம சோழனின் அரசியல் தலைவர்கள் 15 பேரை முறையாகக் குறிப்பிடுவது சிறப்பான வரலாற்றுக் குறிப்பாகக் கருதப்படுகிறது.

ஆ. குலோத்துங்க சோழனுலா: இது 387 கண்ணிகள் கொண்ட நூல். இரண்டாம் குலோத்துங்கன் மீது பாடப்பெற்ற இவ்வுலாவில், இம்மன்னன் செய்த தில்லைத் திருப்பணிகள் 21 கண்ணிகளில் விரித்துரைக்கப் படுகின்றன. 'தில்லைத் திருமுன்றில் சிறுதெய்வக் குறும்பு தொலைத் தெடுத்தான்' என்ற அடியினைக் கொண்டு, இவ் அரசன் சிதம்பரம் கோயிலில் இருந்து திருமால் சிலையை அப்புறப்படுத்தினான் என்று சிலர் கருதுகின்றனர். அரசமரபு கூறுமிடத்தில் மூன்று கரிகாலர்கள் கூறப்படுகின்றனர். பந்தாடல் 11 கண்ணிகளில் மிக அழகாக வருணிக்கப்படுகிறது.

இ. இராசராசனுலா: 391 கண்ணிகளையும், ஒருதனி வெண்பாவையும் கொண்டது. இதிலும் தொடக்கப் பகுதியில் குலமரபும் பெருமையும் கூறப்பெறுகின்றன. இந்நூலில் இதற்கு முன்னிருந்த பரணிகள் இரண்டும் (கொப்பத்துப்பரணி, கூடல் சங்கமத்துப் பரணி) குறிப்பிடப் பெறுவது (24-25), தமிழிலக்கிய வரலாற்றுக்குக் கிடைத்த அரிய குறிப்பாகும்.

### 4. தக்கயாகப் பரணி

இரண்டாம் இராசராசனைச் சிறப்பித்து ஒட்டக்கூத்தர் செய்த மற்றொரு நூல் தக்கயாகப் பரணி. இது வீரபத்திரப்பரணி என்றும் வழங்கப்பெறும். இது இதிகாச வரலாற்றுப் பொருளை மையமாகக் கொண்டது. இன்றைய தாராசுரம் ஆன பண்டைய இராசராசபுரத்தில் இராசராசன் எடுத்த ராஜராஜேஸ்வரம் என்னும் கோயிலில் ஆடிக் காட்டுவதற்கேற்ப இந்நூல் யாக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்ப. இன்றும் சிவாலயங்களில் அந்தி வழிபாட்டின்போது சில தாழிசைகள் பரணி என்ற பெயரால் பாடப்படுகின்றன. இந் நூலுக்குச் சிவபெருமானே பாட்டுடைத் தலைவன்.

இது தன்னை அழைக்கமால் வேள்வி நடத்தப் புகுந்த தக்கனை அழிக்க வீரபத்திரனைத் தோற்றுவித்து, வேள்வியினையும் தக்கனையும் அழித்த சிவனின் வீரத்தினைப் பாடும் நூல். 815

தாழிசைகளைக் கொண்டது. காப்பு, கடைதிறப்பு, காடுபாடியது தேவியைப் பாடியது, பேய்களைப் பாடியது, கோயிலைப் பாடியது, பேய்முறைப் பாடு, கூளி கூறியது, கூழடுதல், களங்காட்டல், வாழ்த்துப் பகுதி எனப் பதினொரு பகுதிகளை உடையது. காப்புச் செய்யுள் தொடங்கியே சந்தத்திற்குப் பெரிதும் சிறப்புக் கொடுத்துப் பாடப்பெற்ற நூல் எனலாம். சம்பந்தரை முருகப் பெருமானாகக் கருதி, மதுரையில் சமணரை அவர் வென்ற கதை, நாமகள் கூற்றாக இடம் பெறுகின்றது.

கலிங்கத்துப் பரணியை ஒப்புநோக்க, சந்தமும், சொற்களும் சொற்றொடர்களும் கடுமையான நடையில் அமைந்துள்ளன. வடசொற்களும் சந்திகளும் மிகுதியாய்ப் பெற்றிருத்தலின், உரையின்றி எளிதிற் பொருள் விளங்காத நூல். ஆனால் போர்வருணனையும் சம்பந்தர் வரலாறு கூறும் இடங்களும் மிக எளிய நடையில் அமைந்துள்ளன. எளிய நடைக்குப் பின்வரும் தாழிசை நல்லதோர் எடுத்துக்காட்டு:

சிரமும் சிரமும் செறிந்தன சரமும் சரமும் தறிப்பவே
கனமும் கனமும் கனைத்தன சினமும் சினமும் சிறக்கவே
கடையும் கடையும் கலித்தன தொடையும் தொடையும் துரப்பவே
தாரும் தாரும் தழைத்தன தேருந் தேரும் திளைப்பவே

இந்நூலுக்கு 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த, ஆசிரியர் பெயர் தெரியாத பழைய உரை ஒன்று உள்ளது. தக்கயாகப் பரணியினைப் பின்பற்றிப் புராண நிகழ்ச்சிகளைப் பொருளாகக் கொண்டு இரணியவதைப் பரணி, சூரன்வதைப்பரணி (திருச்செந்தூர்ப் பரணி) போன்ற பல பரணிகள் பிற்காலத்தில் எழுந்தன.

### 5. உத்தர காண்டம்

தமிழில் அமைந்த இராமாயண உத்தரகாண்டம் ஒட்டக் கூத்தர் பாடியதாகவே வழக்கில் கூறப்படுகிறது. கூத்தர் சோழன் வேண்டுகோளுக்கிணங்கி இதனை 1500க்கு மேற்பட்ட பாடல்களில் பாடியதாகக் கருதுவர். சோழமண்டல சதகப் பாடலை (80) இக்கருத்துக்கு வலுவூட்டக் குறிப்பிடுவர். அடியார்க்கு நல்லார் தம் சிலப்பதிகார உரையில் உத்தர காண்டப் பாடல் ஒன்றை எடுத்துக் காட்டுகிறார். எனவே இந்நூல் அடியார்க்கு நல்லாருக்கு முன்னர் 12ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இயற்றப்பட்டது எனக் கருதலாம்.

நூலில் படலப் பாகுபாடும், பாடல் தொகுதியும் ஏட்டுக்கு ஏடு வேறுபடுகின்றன. நூன்முகப்பில் காப்புச் செய்யுள் கடவுள் வணக்கம், சிவதுதி, ஆறு பாடல்களில் திருமால் வணக்கம் ஆகியன இடம்பெறுகின்றன.

வருணனையாகக் கூறுமிடத்துப் பல பாடல்களைக் குளகமாகக் கொண்டு முடிப்பதும் பாடல்களை அடுக்கிச் சொல்வதும் இந்நூலாசிரியரின் இயல்பு. உலகியல்பும் நீதியும் கூறுகின்ற பாடல்கள் சுவையுடையன.

இராமாயணத்தில் பல வரலாறுகள் காரண காரியத்தோடு விளங்கச் சொல்லப் படவில்லை. அவை யெல்லாம் புராணமாகிய உத்தர காண்டத்துள் விளக்கிச் சொல்லப்பட்டுள்ளன என்று அறிஞர் கருதுவர்.

### 6. அரும்பைத் தொள்ளாயிரம்

இந்நூல் அரும்பகைத் தொள்ளாயிரம் என்றும் குறிக்கப்படுகிறது. அரும்பை என்னும் அரும்பாக்கத்தினைச் சேர்ந்த மணவிற் கூத்தன் காலிங்கராயன், விக்ரம சோழனின் படைத் தளபதி. சிதம்பரம், திருவதிகை ஆகிய கோயில்களுக்குப் பல திருப்பணிகள் செய்தவன். முதற் குலோத்துங்கனுக்குப் படைத்தலைவனாயிருந்து பெரும் ஆற்றலை வெளிப்படுத்தியவன். விக்கிரம சோழனுலாவில் இருகண்ணிகளால் புகழப் பெற்றவன். இவனது வீரத்தையும், பக்தியையும் குறித்து இந்நூலை ஒட்டக் கூத்தர் பாடியதாக இருக்கலாம்.

எண் செய்யுளுக்கு எடுத்துக் காட்டாக முத்தொள்ளாயிரத்தையும், இந்நூற் பெயரையும் இலக்கண விளக்கப்பாட்டியல் உரைகாரர் கூறுகின்றார். தமிழ் நாவலர் சரிதையிலும், இந்நூலுக்குரியதாக ஒரு பாடல் இடம் பெறுகின்றது.

### 7. நாலாயிரக் கோவை

இந்நூல் புதுவைக் காங்கேயன் மீது ஒட்டக்கூத்தரால் பாடப்பெற்றதென சோழமண்டல சதகம் கூறும். நாலாயிரம் பாடல்கள் கொண்டது போலும். நூல் கிடைக்கவில்லை. ஒரேயொரு பாட்டு அச் சதக உரையில் மேற்கோளாய்க் காட்டப் பட்டுள்ளது.

## 8. எதிர்நூல்

எதிர்நூல் என ஒன்று உண்டென்பது இறையனார் களவியலுரையாலும், தொல்காப்பிய மரபியல் பேராசிரியர் உரையாலும் அறியப்படுகின்றது.

> தன்கோள் நிறீஇப் பிறர்கோள் மறுப்பது
> எதிர்நூல் என்ப ஒருசா ரோரே.

என்று அதற்கு இலக்கணம் கூறுகின்றன மேற்குறித்த உரைகள். எதிர்நூல் என்ற இலக்கணமொன்றும் கூத்தரால் இயற்றப் பட்டிருந்ததென்பது ஒரு சோழ மண்டல சதகப் பாடலாலும் (95) தெரிகிறது. இந்த நூல் வழக்கில் இல்லை.

## நீதி நூல்கள் - அவ்வையார்

தமிழிலக்கியப் புலவர் வரிசையில் குறைந்தது ஆறு அவ்வையார்களேனும் இருந்திருக்கலாம் எனக் கருத இடமுள்ளது. சங்க கால அவ்வையார் அதிகனின் நண்பர்; பாரியின் மகளிர் என்று நம்பப்பட்ட அங்கவை சங்கவை ஆகியோரை மலையமானான தெய்வீக மன்னனுக்கு மணமுடித்த இடைக்கால அவ்வையார் மற்றொருவர். 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து நீதிநூல்கள் பாடிய அவ்வையார் மூன்றாமவர். விநயாகர் அகவல், ஞானக்குறள் ஆகிய சமயநூல்களைச் செய்த 14ஆம் நூற்றாண்டு அவ்வையார் ஒருவர். கிடைக்கின்ற பிற நூல்களையும் கதைகளையும், தனிப் பாடல்களையும் கொண்டு 16ஆம் நூற்றாண்டுக்குப்பின் மேலும் இரு அவ்வையார்கள் இருந்திருக்கலாம் என்பது அறிஞர் கருத்து. (மு.அ. 12/444-472).

கிடைக்கின்ற அவ்வையார் பாடல்களில் விக்கிரம சோழனோடு தொடர்புடைய கீழ்வரும் பாடல் ஒன்றுளது.

> நூற்றுப் பத்தாயிரம் பொன்பெறினும் நூல்சீலை
> நாற்றிங்கள் தன்னில் கிழிந்துபோம் - மாற்றலரைப்
> பொன்றப் புறங்கண்ட போர்வேல் அகளங்கா
> என்றும் கிழியாதென் பாட்டு.

இதிலிருந்து அகளங்கன் என்று பெயர் கொண்ட விக்கிரமசோழன் காலத்து இப்புலவர் இருந்தாரென்று அறிகிறோம்.

சங்கம் மருவிய காலத்துப் பலநீதி நூல்கள் எழுந்து, பதினெண் கீழ்க்கணக்கு என்ற தொகுப்பில் இடம்பெற்றன.

பெரும்பாலும் சமண சமயப் புலவர்களாலேயே அந் நீதிநூல்கள் யாக்கப்பெற்றன. அதன் பின்னர் இடைப்பட்ட சில நூற்றாண்டுகளில் நீதி நூல்கள் எழவில்லை. அவ்வையின் நீதிநூல்கள் 12ஆம் நூற்றாண்டுக்குரியன.

## ஆத்திசூடி

இது முதற்குறிப்பாற் பெற்ற பெயர். இந்நூல் 109 அடிகளை உடையது. மிகச் சுருங்கிய சொற்களால், பொதுவான நீதிகளை அதிகமாகச் சொன்ன நூல் என்ற பெருமைக்குரியது. உயிர் எழுத்து, உயிர்மெய் எழுத்துகள் ஆகியவற்றை நிரலே முதலெழுத்தாக வைத்துத் தொடங்கும் அடிகளாக அமைக்கப்பட்டது இந்நூல். கல்வியைப் பற்றிப் பல அடிகள் சொல்லுகிறார். சான்றாக, 'எண்ணெழுத்து இகழேல்', 'ஓதுவது ஒழியேல்', 'இளமையிற்கல்', 'கேள்விமுயல்', 'நூல்பல கல்', 'வித்தை விரும்பு' ஆகியனவற்றைக் கூறலாம். குறைந்த கல்வியறிவு உடையவர்கட்கும் பொருள் விளங்கும் தன்மையுடையன இவரது மொழிகள். தமிழ் மக்களுக்குக் குறிப்பாகக் குழந்தைகளுக்கு நல்லொழுக்கம் போதிக்கும் சட்டநூல் போல இது அமைந்துள்ளது எனலாம்.

## கொன்றை வேந்தன்

இந்த நீதிநூலும் ஆத்திசூடியைப் போலவே உயிர் எழுத்துகளையும், உயிர்மெய் எழுத்துகளையும் முதல் எழுத்தாகக் கொண்டு 91 அடிகளில் அமைந்தது. நாற்சீர் கொண்டு எதுகை பொருந்த அமைந்தது. ஆத்திசூடிக்கு விளக்கம் தருவதுபோல இதன்கண் பல அடிகள் உள்ளன. சொற்செட்டு இந்நூலின் குறிப்பிடத்தக்க சிறப்பு.

**எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்.**

**முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.**

என வருவன இச் சிறப்பினைக் காட்டும். "கொன்றை வேய்ந்த செல்வன் அடியிணை" எனத் தொடங்கும் இந்நூலின் காப்புச் செய்யுள் தொல்காப்பியப் பொருளதிகாரம் பேராசிரியரின் உரையில் நான்கு முறையும், யாப்பருங்கல விருத்தியுரையிலும் தொல்காப்பிய இளம்பூரணர் உரையிலும் ஒவ்வொரு முறையும் எடுத்தாளப்பட்டுள்ளது. இவ்வுரைகளின் காலத்துக்கு முன்னரே இக்காப்புச் செய்யுள் ஒரு பழம்பாடலாக வழக்கில் இருந்து, இந்நூலுக்குக் காப்பாக அமைக்கப் பெற்றிருக்கலாம் என்பது அறிஞர் கருத்து (மு.அ.12/496).

மூதுரை

இது விநாயகர் காப்பும் 30 வெண்பாக்களும் கொண்ட ஒரு சிறுநூல். 4ஆம் பாடல் தவிரப் பெரும்பான்மையும் நேரிசை வெண்பாக்கள். மூதுரைப் பாடலொன்றைப் பேராசிரியர் தொல்காப்பியச் செய்யுளியல் உரையில் குறிப்பிடுகிறார். அனைத்துப் பாடல்களும் எளிய நீதிகளை உவமை வாயிலாகப் போதிப்பவை. தீயவை பற்றிக் கூறும் புகழ் பெற்ற மிகவும் பயனுடைய பாடல் வருமாறு:

தீயாரைக் காண்பதுவும் தீதே; திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவுந் தீதே - தீயார்
குணங்கள் உரைப்பதுவுந் தீதே அவரோடு
இணங்கி யிருப்பதுவுந் தீது.

பதிப்பு

1860 மூதுரை ஆங்கில மொழிபெயர்ப்பு - தாமஸ் மார்டன் எப்.ஸ்காட் 'சுகாத்தியன்' என்ற தமிழ்ப்பெயரில் வெளியிட்டார்.

நல்வழி

நாற்பது பாடல்கள் கொண்ட சிறுநூல். சில சிறந்த உவமைகளையும் கொண்டது. முழுமையும் ஆன்மார்த்த நெறியில் இயன்றது. வினை, ஊழ், ஈசன், ஒழுக்கம், நிலையாமை, ஈகை, பொருள் ஆகியவற்றைப் பற்றிய பாடல்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. மூன்றாம் குலோத்துங்கன் மீது பாடப்பெற்ற கோவைப் பிரபந்தத்தில் வரும்

இட்டார் எப்போதும் இடுவார் இடார் என்றும்
இட்டுண்கிலார்
பட்டாங் கிலுள்ள படியிதன்றோ (17)

என்ற செய்யுள் அடிகள்,

மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ளபடி

என்ற நல்வழிப்பாடலோடு பெரிதும் ஒத்திருக்கக் காணலாம்.

மேலே கூறிய நூல்களில் இருந்து, வாழ்க்கையின் அனுபவங்களை யெல்லாம் பெற்று, முதிர்ச்சியால் விளையும்

அறிவும் பண்பாடும் தம் மொழிகளில் பொருந்தி நிற்கப் பாடப்பெற்ற பாடல்கள் இவை என உணரலாம். தமிழர்கள் உறுதிப் பொருட்களை நன்கு உணரவும், நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை என்ற கொள்கையைக் கற்றுக் கொள்ளவும், அடக்கம் மிகுந்து அதே நேரத்தில் அவமதிப்பைக் கண்டு வெகுளும் மனம் வேண்டும் என்ற பாடத்தினைப் பெறவும் வழிகோலியவர் அவ்வையார். இரண்டு மூன்று சொற்களால் உலக முழுமைக்கும் எக்காலத்துக்கும் பொருந்தக் கூடிய பெருநீதிகளை உள்ளத்தில் தைக்குமாறு எடுத்துச் சொல்லும் வன்மை தமிழில் உள்ளது என்பதற்கு அவ்வையார் பாடல்கள் சிறந்த எடுத்துக்காட்டாக அமைகின்றன.

### பதிப்பு

1930-31 அவ்வையார் நூல்கள் (ப.ஆ.) கா. நமசிவாய முதலியார், சென்னை.

1937 பத்துநீதி நூல்கள் ஆங்கிலமொழி பெயர்ப்பு, டி.பி. கிருஷ்ணசாமி முதலியார்.

1959 சென்னை: மர்ரே ராஜம்.

### தில்லையுலா

வீதியில் உலாவரும் தலைவனை ஏழு பருவ மகளிரும் கண்டு மயங்குவதாக அமையும் உலா சிற்றிலக்கிய வகைமையைச் சார்ந்தது. மூவருலா காலத்திலேயே எழுதப்பட்டதாகக் கருதத்தக்க தில்லையுலாவில் தில்லைத் திருமாலைக் கடலிற் கிடத்திய செய்தி உடன்கால நிகழ்ச்சியாகக் குறிப்பிடப்படுகிறது. ஆதலின் இதனையும் இரண்டாம் குலோத்துங்கன் காலத்தியதாக அறிஞர் கருதுவர் (மு.அ.12/807). இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

தில்லையுலா நூல் முழுமையும் கிடைக்கவில்லை. 244 கண்ணிகளே கிடைத்துள்ளன. தொடக்கத்தில் இருந்து, அரிவைப் பருவத் தொடக்கம் 9ஆம் கண்ணிவரை மட்டுமே கிடைத்துள்ளன. தொடக்கப் பகுதியிலேயே தில்லையில் நின்றாடும் ஈசனின் திருநடனம் இடம்பெறுகிறது.

— தில்லைவனத்து
ஆனந்த நூபுரம்நின்று ஆர்க்கும் ஒலிகேட்டு
வானின் றிமையோர்கள் வந்திறைஞ்சி —
நான்மறையில்

ஆய்ந்த பொருளான அஞ்செழுத்தைச் செங்கனகப்
பூந்தகடு தோறும் புறத்தெழுதி - மேய்ந்து
திசைவிளங்கு நாமத் திருவம்பலத்தே
இசைவிளங்க நின்றாடும் ஈசன்.

திருமாலும், சண்டேசரும் தேவரும் போற்ற, மூவாயிரவர் முதலியோர் துதிக்க, திருவாடு தண்டேறி மூன்று வாசலுங் கடந்து திருத்தேர் ஏறினார். மாலோன், குபேரன், வேலன், வேதா, ஐங்கரன், மாரன் முதலியோர் தத்தம் ஊர்திகளில் உடன்வந்தனர். நால்வரும் முப்பத்து முக்கோடி தேவரும், விறன் மிண்டர் முதலான நாற்பத்தெண்ணாயிரம் திருநீற்றுத் தொண்டர், சேரமான், வரகுணன் ஆகியோரும் வந்தார்கள். கண்ட மகளிர் பெருமானைக் காமுற்றுப் பலவாறாக அரற்றுகின்றனர். பின் பேதை முதலான ஏழு பருவ மகளிர் நிலையும் வருணிக்கப்படுகின்றது.

சிவபக்தி முதிர்ச்சியால், சமயாசாரியர் நால்வரையும் தில்லைவாழ் அந்தணர், சேரமான், வரகுணன், காரைக் காலம்மையார் ஆகியோரையும் போற்றுகிறார். கண்ணிகள் தோறும் இவ்வாறே பக்திச்சுவை ததும்புகின்ற கருத்துகளையும், தொடர்களையும் காண்பது இந்நூலின் தனிச்சிறப்பாகும்.

### பதிப்பு

தில்லையுலா (ப.ஆ.) பண்டிதர் உலகநாத பிள்ளை, தஞ்சாவூர்: தமிழ்ப் பொழில்.

### திருப்புகலூர் அந்தாதி

முதலாம் குலோத்துங்கன் காலத்தில் களப்பாளர் என்ற குலத்தில், நெற்குன்றம் என்ற ஊரில் பிறந்த நெற்குன்ற வாணர் என்பவரால் எழுதப் பெற்ற நூல். திருப்புகலூர்ச் சிவன் கோயிலில் உள்ள முதற் குலோத்துங்க சோழனின் 49ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு மூலம் (கி.பி.1119), நெற்குன்றத்தில் இவர் அறச்சாலை யொன்று செய்வித்தார் என்று அறிகிறோம். விக்கிரம சோழன் காலத்திலும் திருமந்திர ஓலை நாயகமாக இவர் பணியாற்றி இருக்கிறார். எனவே இந்நூல் எழுந்த காலம் 12ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்பது தெளிவாகத் தெரிகிறது.

இவ் அந்தாதி 2 பாயிரப்பாடல்களையும், திரிபாக 100 கட்டளைக் கலித்துறைப் பாடல்களையும் கொண்டது. எளிய நடையில் அமைந்தது. பெரும்பாலும் அகத்துறைப் பாடல்களாக

அமைந்தது. பக்திச் சுவைகொண்ட இந்நூலில் தில்லை பலமுறையும், திருப்பழனம், ஐயாறு, நள்ளாறு, திருவிடைமருதூர் ஆகிய பதிகளும் குறிப்பிடப்படுகின்றன.

## பதிப்பு

*1875 முதல் பதிப்பு*

### கண்டன் அலங்காரம்

கண்டன் என்னும் இரண்டாம் இராசராசன் பெயரால் அமைந்தது. களவியற்காரிகை உரைமூலம் இந்த நூல் இருந்ததாக அறிகிறோம். இந்நூலைச் சேர்ந்த 10 பாடல்கள் அதில் மேற்கோளாகப் பெயருடன் எடுத்தாளப் பட்டிருக்கின்றன. நம்பியகப்பொருள் உரையிலும் தண்டியலங்கார உரையிலும், வீரசோழிய உரையிலும் இந்நூலின் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. பாடல்கள் முழுவதும் வெண்பா யாப்பின.

கண்டன் என்ற பெயர் குறிப்பிடப்படாத பாடல்களும் கண்டனலங்காரப் பாடல்களாகக் களவியற் காரிகை குறிப்பிடுகிறது. அவ்வாறு எடுத்தாளப்பெற்றது பின்வரும் பாடல்:

**கண்டு நிலை தளர்ந்தேன் காத்தருளுங் கார்வரைமேற்**
**புண்டரிகம் வைத்தான் புகாரனையீர் – வண்டின்**
**கிளையலம்பு கார்நீழற் கெண்டைமேல் வைத்த**
**வளையலம்பு செந்தா மரை.**

தொல்காப்பிய நச்சினார்க்கினியர் உரையில் (புறத்திணை 91) குடைமங்கலத்திற்கு எடுத்துக் காட்டப்பெறும் பாடல் மூலம், இந்நூல் முத்தொள்ளாயிரம் போல அகம், புறம் என்ற இருதுறைப் பொருளுக்குரிய பாடல்களும் கொண்டதாய் இருந்திருக்கலாம் எனக் கருதத் தோன்றுகிறது.

### வச்சத்தொள்ளாயிரம்

இது முதற் குலோத்துங்கனின் படைத்தலைவருள் ஒருவனான வத்தராயன் மீது பாடப்பெற்ற இலக்கியம். மேலைச் சாளுக்கியரை வென்று, திராட்சாராமம் என்னும் ஊரில் உள்ள பீமேஸ்வரம் கோயிலுக்கு இவன் அளித்த கொடையை அக் கோயிலில் உள்ள கி.பி.1095 ஆம் ஆண்டுக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. நூல் செய்த ஆசிரியர் பற்றிய குறிப்பு ஏதும் கிடைக்கவில்லை.

வச்சத்தார் கோ மீது பாடப்பெற்ற 900 பாடல்களைக் கொண்டது போலும்! நூல் கிடைக்கவில்லை. வீரசோழிய உரைகாரர் இந்நூற் பெயரைக் குறிக்கிறார். உவே. சாமிநாதையர் அவர்கள் பெருங்கதை முகவுரையில் இரு வச்சத்தொள்ளாயிரம் பாடல்களைத் தருகிறார். அவற்றுள் பின்வரும் பாடல் ஒன்று:

**உன்னுயிரும் என்னுயிரும் ஒன்றென்ப தின்றறிந்தேன்**
**மன்னுபுகழ் வச்சத்தார் மன்னவா – உன்னுடைய**
**பொன்னாகத் தெங்கையர்தம் பொற்கைநகச்**
**சின்னங்கண்டு**
**என்னாகத் தேளரிகை யால்.**

இவையன்றி மூன்று பாடல்கள் பெருந்தொகையுள்ளும் சேர்க்கப்பெற்றுள்ளன. வச்சராயனைக் குறித்த ஆசிரியப்பா ஒன்றும் வீரசோழிய உரையுள் காணப்படுதலின், இத்தலைவன் மீது பிற தனிப்பாடல்களும் இருந்தனவெனக் கருதலாம்.

### சரசுவதி அந்தாதி

இராமாயணம் எழுதிய கம்பருக்குப் பின்வந்த மற்றொரு கம்பர் எழுதிய நூலாகிய சரசுவதி அந்தாதி கலைமகளைத் துதிக்கும் வகையில் அமைந்தது.

இது கட்டளைக் கலித்துறையில் அமைந்த முப்பது பாடல்களைக் கொண்டது. 23,24 ஆம் பாடல்கள் இந்த ஆசிரியராலேயே இயற்றப்பெற்ற சடகோபரந்தாதிப் பாடல்களை ஒத்திருக்கின்றன. வடமொழித் தொடர்கள் பல இதில் பயில்கின்றன. இறுதிப் பாடல் பலசுருதி கூறுவதாக உள்ளது. இந்நூல், ஆசிரியரின் இளமைக்காலத்தில் செய்யப் பெற்றிருக்கலாம் என்று கருதுவர். இவ்வந்தாதியின் சுவையினை அறிய கலைமகளின் திருப்பாதம் போற்றும் கீழ்வரும் ஒரு பாடலைக் குறிப்பிடலாம்.

**உரைப்பார் உரைக்குங் கலைகளெல்லாம் எண்ணில்**
**உன்னையன்றித்**
**தரைப்பார் ஒருவர் தரவல ரோ, தண் தரளமுலை**
**வரைப்பால் அமுதுதந் திங்கெனை வாழ்வித்த மாமயிலே**
**விரைப்பா சடைமலர் வெண்தா மரைப்பதி மெல்லியலே**

### கண்டன் கோவை

'கோவை உலா அந்தாதிக்கு ஒட்டக்கூத்தன்' என்ற பழம்பாடலுக்கு ஏற்ப ஒட்டக்கூத்தர் பாடியதாக இக்கோவையினைக் கருதலாம். கண்டனாகிய இரண்டாம்

இராசராசன் மீது பாடப் பெற்ற இந்த நூல் இன்று இல்லை. கோவைக் கொத்துகளில் 'வறுங்களம் நாடி மறுகல்' என்ற துறைக்குக் கண்டன் கோவையின் பின்வரும் பாடல் எடுத்துக்காட்டாகத் தரப்பட்டுள்ளது.

ஆவி எங்கே என்னி லாவியெங்கேயென்னும் ஆனகஞ்சத்
தேவி எங்கே என்னில்தேவி எங் கேளன்னும் செல்விருந்தைக்
கூவியங்கே அழைக்கும் கரத்தான் கண்டன் கோழிவெற்பில்
பாவிஇங்கே கொண்டமால் கொண்டதோஇப்
பனிவரையே.

களவியற் காரிகையுரையில் தலைமகள் அந்திப் பொழுது கண்டிரங்கலுக்குச் செய்யுளாகப் 'போகக் கடவன' என்று தொடங்கும் பாடலும் இந்நூலுக்குரியதாகலாம் எனக் கருதுவர்.

## அம்பிகாபதிக் கோவை

கோவை நூலின் அவையடக்கச் செய்யுளில் இருந்து அம்பிகாபதி என்பாரால் இயற்றப்பட்டநூல் அம்பிகாபதிக் கோவை என்று பெயர் பெற்றது என்றறிகிறோம். இவ் அம்பிகாபதி, தண்டியலங்காரம் யாத்த தண்டியாசிரியரின் மகன் என்றும், எனவே இரண்டாம் குலோத்துங்கன் காலத்திற்குச் சற்று முந்தியவர் என்றும் அறிஞர் கருதுவர் (மு.அ.12/831).

அம்பிகாபதிக் கோவையில் பாட்டுடைத் தலைவனை அமைக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்க ஒன்று. கிளவித் தலைவனோடு பாட்டுடைத் தலைவனையும் கூறும் மரபில் இருந்து மாறுபட்ட இக்கோவை 563 செய்யுட்களைக் கொண்டது. வரலாற்றை அறிந்து கொள்ளத்தக்க குறிப்புகள் எவையும் இந்த நூலில் இல்லை. பதினெண் கீழ்க்கணக்கு என்னும் வழக்கு முதன் முதலாக இந்த நூலில் காணப்படுகிறது (மு.அ. 12/833).

இதில் திருக்குறள், நாலடி, பழமொழி, ஆசாரக் கோவை செய்யுட்கள், கலித்தொகைக் கருத்துகள், மணிமேகலை, மரபியல் ஆகிய நூற்பெயர்கள், புராணக் கதைகள், பழக்க வழக்கங்கள், பழமொழிகள் ஆகியன இடம்பெறுகின்றன. நூலின் இறுதியில் இல்லறம் காத்துத் துறவறம் பேணும் நெறி பேசப்படுகிறது.

### பதிப்பு

1898. - அரிகரையர்
1944 - மு. அருணாசலம்

## சடகோபரந்தாதி

சடகோபரந்தாதியின் தனியனிலிருந்து இந்நூல் பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த கம்பர் பாடியது என்று அறிகிறோம். நம்மாழ்வார் மீது அந்தாதியாகச் செய்யப்பெற்ற 100 பாடல்களை உடையது. இந்த நூலுக்கு 'ஆழ்வார் நூற்றந்தாதி' என்ற மற்றொரு பெயரும் உண்டு. இராமானுச நூற்றந்தாதியை ஒத்துச் செய்யப்பட்டது என்று கருதலாம். இராமாயணம் பாடியவரும் இவரும் வெவ்வேறானவர் என்பது அறிஞர் கருத்து.

சடகோபரந்தாதி சிறந்த இலக்கியச் சுவை பொருந்திய நூல். பக்திச்சுவையும் நிறைந்தது. ஆழ்வார் அருள் தமக்குக் கிடைத்ததை ஆசிரியர் பல இடங்களில் குறிப்பிடுகின்றார். சடகோபரைச் சிறப்பிக்கும் பின்வரும் பாடலை எடுத்துக் காட்டாகக் கூறலாம்:

**சேராதன உளவோ பெருஞ்செல்வர்க்கு; வேதஞ்**
**செப்பும்**
**பேரா யிரம் திண் புயமாயிரம் நறைபெய்துளவத்**
**தாரா யிரம் நம் திருக்குரு கூர்ச்சட கோபன் சொன்ன**
**ஆராஅமுதக் கவியா யிரம்அவ் வரியினுக்கே (45)**

## ஏரெழுபது

உழவுத் தொழிலின் சிறப்பை மிகவும் அருமையாகப் போற்றிக் கூறுகின்றது. 10 பாயிரப் பாடல்களையும்,. 69 கலிப்பாக்களையும், சில விருத்தங்களையும் கொண்ட இந்நூல் கம்பர் பாடியதாகக் கருதப்படுகிறது.

கடவுள் வாழ்த்திற்குப் பின்னர், சோழமண்டலம், சோழ மன்னன், மகாநாடு, வேளாண்குடி, வேளாளர் என்பவற்றின் சிறப்புகள் இடம் பெறுகின்றன. நூலில் உழவு, நாட்கோள் தொடங்கி உழவுக் கருவிகள், உழவுச் செயல் முறைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பாடலால் சிறப்பிக்கப்படுகின்றது. காராளர் கருவி, எழுபதையும் பாடவந்ததாக ஆசிரியர் கூறுகிறார். உழவின் சிறப்பினைப் பின்வரும் பாடலில் கூறுகிறார்.

**அலகிலா மறைவிளங்கும் அந்தணராகுதி விளங்கும்**
**பலகலையாந் தொகை விளங்கும் பாவலர் தம்**
**பாவிளங்கும்**
**மலர்குலாந் திருவிளங்கும் மழைவிளங்கும் மனுவிளங்கும்**
**உலகெலாம் ஒளிவிளங்கும் உழவருழும் உழவாலே**

கருத்துகளின் அமைதியினாலும், சொல்லமைதியினாலும் இந்நூல் சிறப்புடைய ஓர் எளிய நூல் என்று கூறலாம்.

### சமண இலக்கியங்கள்

பல்வேறு இலக்கியங்களைக் காலந்தோறும் சைனர்கள் இயற்றி உள்ளனர். பெருங்காப்பியங்கள், பதினெண் கணக்கு நூல்கள், இலக்கணங்கள் என்று அவர்கள் செய்த நூல்களின் பட்டியல் நீளும். இருப்பினும் இந்த நூற்றாண்டில் சைனர்கள் செய்த இலக்கியங்கள் மிகச் சிலவே.

### அருங்கலச் செப்பு

'அரிய அணிகலன்களை வைத்துள்ள பேழை' எனப்பொருள்படும் பெயரில் அமைத்து நக்கன் ஐயன் எழுதிய 180 குறட்பாக்களைக் கொண்ட நூல். திருக்குறளை நன்கு பயின்று அதன் கருத்துகள் எடுத்தமைக்கப்பட்ட நூல். அருகன் துதியொடு தொடங்கிப் பார்சுவநாதர் போற்றுதலோடு முடிகிறது.

இந்நூலைத் தழுவி இல்லறத்தாருக்குரிய அளவில் விரித்து ஒழுக்க நூலாகச் செய்த அறநெறிச்சாரத்தின் காலம் 13ஆம் நூற்றாண்டாதலின், இந்நூல் 12ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுதப்பட்டதாகலாம் எனக் கருதலாம்.

நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் ஆகிய மூன்றும் அறம் என்கிறது இந்நூல். இம்மூன்றையும் விரித்துக் கூறுகிறது. நல்லொழுக்கத்தினை நிறைவு குறைவு என்று இருவகையாகக் கூறி துறவியருக்கு நிறைவும், இல்லறத்தார்க்கு குறைவும் உரியதென்கிறார். அதுபோலவே மகாவிரதம் துறவியர்க்குரியது என்றும், பூசனை, சல்லேகணை ஆகியன இல்லறத்தார்க்குரியன என்றும் குறிப்பிடுகிறார். மேலும் கொலை செய்யாமை, பொய்யாமை, கள்ளாமை, காமமின்மை, பொருள் வரைதல் ஆகியவற்றையும் இல்லறத்தார்க்குரிய விரதங்களாகக் குறிப்பிடுகின்றார். இல்லறத்தாரைப் பதினோரு நிலையர் என்றுரைக்கிறது இந்நூல்.

நீலகேசிக்குப் பிறகு இதுவே தனிச் சைன சமய நூல். சைன சமயத்துக்கே உரிய சிறப்பான தருமங்களை மட்டும் கூறுகிறது. எனினும் தெய்வ வழிபாட்டைச் சொல்லும்போது பொதுமையாகவே பேசுவதைப் பின்வரும் பாடல் தெரிவிக்கிறது.

> தேவாதி தேவன் திருவடிக்குப் பூசனை
> ஓவாது செய்க உவந்து

பெரிய கொலை நீக்குதல் அணுவிரதம் என்றும், சிறியகொலையை நீக்குதல் மாவிரதம் என்றும் கூறுகிறது. நூல் என்பதற்கு நான்கு பாக்களில் இந்நூல் விளக்கம் அளிக்கிறது.

இந்நூலில் வடசொற்களைப் பாகத வடிவத்தில் தமிழ்ப் படுத்தியிருப்பது சிறப்பாகவுள்ளது. எடுத்துக் காட்டாக, இந்திரியம்- இந்தியம்; பிரம்மசாரி - பம்மன்; பிரமாதம் - பமாதம்; விஷ்ணு - விண்ணு ஆகியவற்றைச் சுட்டலாம்.

*பதிப்பு : அருங்கலச்செப்பு*

*1883* - பாகுபலி நயினார் பதிப்பு. திருக்கலம்பகத்துடன்

*1941* - உரைப்பதிப்பு

*1959* - சென்னை: மர்ரே ராஜம் பதிப்பு

*1960* - க. சுகுமாரன் உரைப் பதிப்பு

*தீபங்குடிப் பத்து*

இது ஆசிரியர் பெயர் அறியப்படாத பத்துப் பாடல்கள் கொண்ட சிறிய தோத்திர நூல். ஏழு பாடல்களே கிடைத்துள்ளன. மூன்றாம் பாடல் அபயனுக்கு விடையாகக் கருதப்படுவதால் இந்நூலும் இந் நூற்றாண்டுக்குரியதாகக் கருதப் படுகிறது.

எல்லாப்பாடல்களும் ‘மடவார் அதரம் கோபம் கடியும் தீபங்குடியே’ என்ற முடிபினை உடையது. இதன் பாடல்கள் யாவும் தீபங்குடியையும், அவ்வூர்க் கோயிலில் எழுந்தருளியுள்ள அருகதேவனையும் புகழ்வதாய் அமைந்துள்ளன. தீபங்குடியைத் தமிழ் நாவலர் வாழ் புலியூர், தவமே புரிவார் தமதூர், அறநூல் செய்வார் தமதூர் போன்ற தொடர்களால் இந்நூல் சிறப்பிக்கின்றது. சமணத்தில் நந்தி கணத்தைச் சேர்ந்த அருங்கலான் வயப்பிரிவினர் திருவாரூரை அடுத்த தீபங்குடியில் வாழ்ந்து தங்கள் சமயத்தைப் பேணினர். எனவே அவ்வூரைப் பற்றி இந்த நூல் எழுதப்பட்டிருக்கவேண்டும் எனக் கருதலாம்.

*வைணவ சிற்றிலக்கியங்கள்*

இந்த நூற்றாண்டின் (12) தொடக்கத்தில் (கி.பி.1137) இராமானுசர் திருநாடு அலங்கரித்தார். அவர் பரப்பிய வைணவம் பரந்து செழித்தது. பல சிறப்புடைய ஆசிரியர்கள் இக்காலத்தே தோன்றி, நூல்களியற்றி வைணவ இலக்கிய வளர்ச்சிக்குத் தோற்றுவாயாக அமைந்தனர். நாலாயிர திவ்வியப் பிரபந்தத்துடன் இணைக்கப்பெற்ற இராமானுச நூற்றந்தாதியை மூங்கிற்குடி

அமுதனார் செய்தது இந்த நூற்றாண்டில்தான். இராமானுசரின் சீடரான திருக்குருகைப் பிள்ளானும், அருளாளப் பெருமானும் இக்காலத்தில் வாழ்ந்து நூல் செய்தனர். வைணவ வரலாற்றில் முதல்முதலாக வியாக்கியான நூல் தோன்றியதும் இந் நூற்றாண்டில்தான்.

## இராமானுச நூற்றந்தாதி

மூங்கிற்குடியில் அணியரங்கத்து அமுதனாரின் மகனாகப் பிறந்த திருஅரங்கத்து அமுதனாரான, பெரியகோயில் நம்பியால் இந்நூல் எழுதப்பெற்றது. திருமால் ஆலயங்களையும் ஆழ்வார்களையும் குறிப்பிட்டு இராமானுசர் புகழாக 108 கலித்துறைப் பாடல்களில் இந்நூல் அமைந்துள்ளது. திருக்கோயிலூர் திருமால் கோயிலில் உள்ள, மூன்றாம் குலோத்துங்கனின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி.1181) சேதிராயர் ஆணையின்படி, வன்னிய மலையமான் என்ற அதிகாரி, திருவரங்கம் கோயிலில் நந்தவனக் கைங்கரியம் செய்து வருவதற்கு, மூங்கிற்குடி திருவரங்கத்தமுதனாருக்கு நிலம் அளித்த செய்தியைக் குறித்தலால், இவர் 12ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 13ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்து நூல் செய்திருக்கலாம் எனத் தெரிகிறது.

இராமானுச நூற்றந்தாதி இலக்கியச்சுவை பொருந்திய ஒரு துதிநூல். பிரபன்னனுக்குரிய 108 காயத்ரி மந்திரம் போல இதன் பாடல்கள் கருதப்பட்டதால் இது 'பிரபன்ன காயத்திரி' என்றும் வழங்கப்பெறுகிறது. அமுதனார் தம் ஆசிரியரான கூரத்தாழ்வாரையும் ஒரு பாடலில் குறிப்பிடுகிறார். ஒப்பற்ற பக்திச் சுவையும், பக்தியினால் விளைந்த பெருமிதமும், இந்நூலைப் பயிலுந் தொறும் புலப்படும். சுவை மிக்க பாடல்களைக் கொண்ட நூல் என்பதற்குப் பின்வரும் பாடல் ஓர் எடுத்துக்காட்டு:

**படிகொண்ட கீர்த்தி இராமாயணம் என்னும் பக்திவெள்ளம்**
**குடிகொண்ட கோயில் இராமானுசன் குணங்கூறும் அன்பர்**
**கடிகொண்ட மாமலர்த் தாள்கலந் துள்ளங் கனியும் நல்லோர்**
**அடிகண்டு கொண்டுகந்து என்னையும் ஆளவர்க் காக்கினரே.**

ஆழ்வார்களின் காலமுறையை அறிவதற்கு இந்நூல் அருந்துணையாய் இருக்கிறது. முதலின் தன் ஆசிரியர் கூரத்தாழ்வாரைக் குறிப்பிட்ட பின், 14 பாடல்களில் (8-21) முறையே 12 ஆழ்வார்களையும், நாதமுனி, யமுனைத்துறைவர் என்ற

ஆசாரியர்களையும் குறிப்பிடுகிறார். இதுவே இவ்வகையில் காலத்தால் முற்பட்ட அடைவு ஆகும்.

## பூதத்தாழ்வாரின் இரண்டாம் திருவந்தாதிக்குத் தனியன்

இராமானுசரின் ஞானபுத்திரரும் அவரது அன்புக் குரியவரும், இராமானுசரின் மனதை அறிந்தவரும், அவரால் தன் ஆராதனைப் பொருள்களைக் கொடுக்கப் பெற்றவரும் ஆன திருக்குருகைப் பிரான் பிள்ளான் பின்வரும் பூதத்தாழ்வார் இரண்டாம் திருவந்தாதித் தனியனைப் பாடியுள்ளார்.

**என்பிறவி தீர இறைஞ்சினேன் இன்னமுதா**
**அன்பே தகளி அளித்தானை - நன்புகழ் சேர்**
**சீதத்தார் முத்துக்கள் சேரும் கடல்மல்லைப்**
**பூதத்தார் பொன்னங் கழல்**

பிள்ளான் ரகசியம் என்ற வடமொழி நூலையும், திருவாய்மொழி ஆறாயிரப்படியையும் செய்த இவர் 11ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 12ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்தவர்.

**திருவாய்மொழித் தனியன்கள்:** கூரத்தாரின் மகனான பராசரபட்டர் எழுதிய தனியன்கள். மாதவசூரி என்ற மைசூர் நாட்டு வேதாந்தியை வாதில் வென்றவர் என்றும், திருநெடுந்தாண்டக வியாக்யானத்தில் வல்லவர் என்றும் கூறப்படுபவர். இவர் திருவாய்மொழிக்குச் செய்த தனியன்களில் கீழ்வரும் பாடல் குறிப்பிடத் தக்கது.

**மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்**
**தக்க நெறியும் தடையாகித் - தொக்கியலும்**
**ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதுங்குருகையர்கோன்**
**யாழினிசை வேதத் தியல்**

## திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழிக்குத் தனியன்

பராசர பட்டரின் தந்தையும், இராமானுசரின் முதல் மாணாக்கருமான கூரத்தில் பிறந்த கூரத்தாழ்வாரால் செய்யப்பட்ட தனியன். திருவரங்கத்தமுதனாரின் ஆசிரியர். அவரால் இராமானுச நூற்றந்தாயில் குறிப்பிடப் பெற்றவர். பரகாலனாகிய திருமங்கை ஆழ்வாரின் பனுவல்களை, 'நெஞ்சுக்கு இருள்கடி தீபம்', 'அடங்கா நெடும்பிறவி நஞ்சுக்கு நல்ல அமுதம்' 'ஆரண சாரம்', 'பரசமயப் பஞ்சுக் கனவின் பொறி' என்றெல்லாம் இவரெழுதிய பெரியதிருமொழித் தனியன் சிறப்பிக்கின்றது.

## பொய்கையாரின் முதல் திருவந்தாதிக்குத் தனியன்

இராமானுசரின் சகோதரி புதல்வரும், அவரது மாணாக்கருமான முதலியாண்டான் என்பார் எழுதிய தனியன். இவர் புதல்வரே கந்தாடையண்ணன்.

கச்சி நகர் வந்துதித்த பொய்கைப் பிரானைக் 'கவிஞர் போரேறு' என்றும், 'அடியவர்கள் வாழ அருந்தமிழ் நூற்றந்தாதி' பாடினோன் என்றும் முதல் திருவந்தாதிக்கு இவர் எழுதிய தனியன் புகழ்கிறது.

## பெரிய திருமொழிக்குத் தனியன்

கோவிந்த பட்டர் என்ற இயற்பெயர் கொண்ட எம்பார் இயற்றியது. இராமானுசரின் சீடராயும், அவருக்கு அடுத்த ஆச்சாரியராயும் திகழ்ந்த இவர் கீழ்க்காணும் தனியனில் இராமானுசரையே வணங்குகிறார்:

**எங்கள் கதியே இராமா னுசமுனியே**
**சங்கை கெடுத்தாண்ட தவராசா – பொங்குபுகழ்**
**மங்கையர் கோனீந்த மறையாயிரம் அனைத்தும்**
**தங்குமனம் நீஎனக்குத் தா.**

## திருமழிசையாழ்வாரின் நான்முகன் திருவந்தாதிக்குத் தனியன்

கூரத்தாழ்வாரின் இளைய புதல்வரும் பட்டரின் தம்பியுமான சீராமப்பிள்ளை என்பார் செய்த தனியன். திருமழிசையின் 'மொழி செப்பி வாழலாம், நெஞ்சமே! மொய்பூமழிசைப் பரனடியே வாழ்த்து' என்று தன் தனியனில் ஆழ்வாரைப் பரவுகிறார்.

## நம்மாழ்வார் திருவிருத்தத்திற்குத் தனியன்

பெரிய திருமலை நம்பியின் மருமகனான கிடாம்பி ஆச்சான் காஞ்சியிற் பிறந்தவர். உடையவருக்கு மடைத்தொழில் செய்தவர். திருநாட்டை அலங்கரிக்க நம்மாழ்வரின் திருவிருத்தம் ஓரடி கற்பீர் என்கிறார் தன் தனியனில்.

## நம்மாழ்வார் திருவாய் மொழித் தனியன்

அனந்தாழ்வாரால் பாடப்பெற்றது. 'சீரார் சடகோபன் செந்தமிழ் வேதம்' என்று தன் தனியனில் திருவாய்மொழியைப் போற்றுகிறார்.

### திருமங்கையாழ்வாரின் திருமடல்களுக்குத் தனியன்

திருநாராயணபுரத்தில் பெருமாளுக்குப் பகைவரால் விளைந்த கெடுதி கண்டு அவ்வூர்க் கோயிலில் இருந்த பெருமாளைக் கட்டிக் கொண்டு உயிர்நீத்த பிள்ளை திருநறையூர் அரையரால் செய்யப்பட்ட தனியன்கள். இவர் இராமானுசரின் சீடரும் ஆவார். இவரது தனியன்களில் ஒன்று இறைவன் அருள் செய்யவில்லையாயின் தானே மடலூர்வன் என்று பாடுபடுகிறது.

**பொன்னுலகில் வானவரும் பூமகளும் போற்றிச்**
**செய்யும்**
**நன்னுதலீர் நம்பி நறையூரர் - மன்னுலகில்**
**என்நிலைமை கண்டும் இரங்காரே யாமாகில்**
**மன்னு மடலூர்வன் வந்து.**

### பெரிய திருமொழிக்கும் இராமானுச நூற்றந்தாதிக்கும் தனியன்கள்

இராமானுசரின் சீடரான சோமாசியாண்டான் செய்தவை எனக் கருதப்படுகின்றன.

### ஆண்டாளைக் குறித்த தனியன்கள்

வேதப் பிரான் பட்டரால் கோதையைக் குறித்து எழுதப்பட்ட இரு தனியன்களில் பின்வரும் தனியன் பெரிதும் பலராலும் எடுத்தாளப்படுவது.

**கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர்**
**சோதி மணிமாடம் தோன்றுமூர் - நீதியால்**
**நல்லபத்தர் வாழுமூர் நான்மறைக ளோதுமூர்**
**வில்லிபுத்தூர் வேதக்கோன் ஊர்.**

கோதை தமிழ் அறியாத மானிடரை வையம் சுமப்பதுவும் வம்பு என்கிறார் அடுத்த தனியனில். இவரே இராமானுச நூற்றந்தாதிக்கும் இருதனியன்கள் பாடியுள்ளார்.

### தென்கலையார் இயல்சாத்துத் தனிப்பாடல்

தாழ்ந்த குலத்துப் பிறந்து, உறையூர் சோழனிடம் வில்வீரராகப் பணிபுரிந்த பிள்ளை உறங்கா வில்லிதாசரால் பாடப்பெற்றது. இராமானுசர் தாள் பிடித்தார்க்குத், 'திருவுண்டு, நானிலத்தில் ஒன்றும் குறைவில்லை' என்று இத்தனிப்பாடல் போற்றுகிறது.

## திருமங்கையாழ்வார் பாசுரங்களுக்குத் தனியன்கள்

ஆச்சாரிய பரம்பரையில் வந்தவர்களே பெரும்பாலும் தனியன்களைப் பாடியுள்ளனர். அதனின்று வேறுபட்டுக் கம்பநாட்டு ஆழ்வார் பாடியதாக மூன்று தனியன்கள் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் இடம் பெறுகின்றன. அவை மூன்றும் திருமங்கையாழ்வார் பாசுரங்களுக்கு உரியன. திருவெழு கூற்றிருக்கைக்கு ஒன்றும், பெரிய திருமடலுக்கு ஒன்றும், சிறியதிருமடலுக்கு ஒன்றுமாய் அவை அமைந்துள்ளன. சிறியதிருமடலுக்குப் பின்வரும் தனியனும் மடலாகவே உள்ளது.

**ஊரா தொழியேன் உலகறிய ஒண்ணுதலீர்**
**சீரார் முலைத்தடங்கள் சேரளவும் – பாரெல்லாம்**
**அன்றோங்கி நின்றளந்தான் நின்ற திருநறையூர்**
**மன்றோங்க ஊர்வன் மடல்**

## இராமானுசர் தாலாட்டு

எம்பெருமான் அடியாள் என்னும் தேவரடியாளால் பாடப்பெற்ற நூல். இத்தாலாட்டு இன்று கிடைக்கவில்லை. எனினும், பிள்ளை லோகஞ்சீயர் செய்த இராமானுசார்ய திவ்விய சரிதையில் 4 கண்ணிகள் காணப்படுகின்றன. இராமானுசர் அனந்தனின் அவதாரம் என்று கூறுகிறது பின்வரும் கண்ணி:

**அத்திரிசூழ் ஞாலம் அனந்தாவ தாரமெனச்**
**சித்திரையி லாதிரைகள் வந்துதித்த தேசிகனோ**

## ஞானசாரம்

இது இராமானுசரின் சீடரான, அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்பவரால் இயற்றப் பெற்ற நூல். இராமானுசரின் அருளாசி பெற்றது. 40 வெண்பாக்களும் ஒரு தனியனும் கொண்டது. திருமால் திருவடிகளைப் பற்றிக் கொண்டால் வீடருளுவான் என்றுரைக்கும் நூல். சரணாகதியை அறிவுறுத்தும் பின்வரும் பாடல் அதற்கு ஓர் எடுத்துக்காட்டு.

**வேதமொரு நான்கின் உட்பொதிந்த மெய்ப்பொருளும்**
**கோதில் மனுமுதல்நூல் கூறுவதும் –தீதில்**
**சரணா கதிதந்த தன்னிறைவன் தாளே**
**அரணாகும் என்னும் அது**

## பிரமேயசாரம்

அருளாளப் பெருமான் எம்பெருமானால் இயற்றப் பெற்ற மற்றொரு நூலான பிரமேயசாரம் 10 வெண்பாவும் ஒரு தனியனும்

கொண்டது. இறைவனருளைப் பெறுவதற்கு வழி கருமமும் ஞானமும் அல்ல. பாகவத சேவையே சிறந்தது என்று உணர்த்துவது இந்நூலின் பொருள்.

## 13ஆம் நூற்றாண்டு

### அறநெறிச்சாரம்

13ஆம் நூற்றாண்டில் சைனர் செய்ததாகக் கிடைக்கும் நீதிநூல் அறநெறிச்சாரம் ஒன்றே. இந்நூல் செய்தவர் திருமுனைப் பாடியார் ஆவார். இயற்பெயர் தெரியவில்லை. பதினெண்கீழ்க் கணக்கு நூல்களில் பெரிதும் தோய்ந்த இவர் பாடல்களில் நான்மணிக்கடிகை, பழமொழி, நல்வழி, சிறுபஞ்சமூலம் ஆகிய நூற்பாடல்களின் தாக்கமும் ஒத்தியல்பும் மிக்கு உள்ளன.

அறநெறிச்சாரம் 226 வெண்பாக்களால் இயன்ற மிகச் சிறப்பான ஒரு நீதி நூல். முதற்பாடல் தற்சிறப்புப் பாயிரம். அதிலும் 223, 224 ஆம் பாடல்களிலும் நூற்பெயர் சுட்டப்பெறுகிறது. 1, 225, 226 ஆகிய பாடல்களில் அருகதேவனைக் குறிப்பிடுகிறார். 225 ஆம் பாடலில் சைனமரபின்படி, யசோதர காவியம் கூறுவது போன்றே, அருகனைச் சிவன் என்றே கூறுகின்ற பாடல் பின்வருமாறு:

**அவன்கொல் இவன் கொல் என்று ஐயப்படாதே**
**சிவன்கண்ணே செய்ம்மின்கள் சிந்தை – சிவன்தானும்**
**நின்றுகால் சீக்கும் நிழல்திகழும் பிண்டிக்கீழ்**
**வென்றசீர் முக்குடையான் வேந்து**

சைன சமயத்திற்குரிய உலக மூடம், தேவ மூடம், பாசண்டி மூடம் என்ற மூன்றையும் (13-18) சில பாடல்களில் பாடுகின்றார். எனினும், இந்நூல் சைனச் சார்பை அதிகம் வெளிப்படுத்தாமல், பெரும்பாலும் அனைவரும் ஒப்புக் கொள்ளத் தக்கவாறு சிறந்த நல்லொழுக்கக் கருத்துகள் செறியும்படி அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

### பதிப்பு

1903 திரிசிரபுரம் தி.ச. ஆறுமுக நயினார், திருச்சிராப்பள்ளி.

1905 திருமணம் செல்வகேசவராய முதலியார், சென்னை.

1959 சென்னை: மர்ரே ராஜம், சென்னை.

## குலோத்துங்க சோழன் கோவை

தொடர்ந்து வரும் சிற்றிலக்கிய மரபில் இந்நூற்றாண்டிலும் சில நூல்கள் தோன்றியிருக்கின்றன. நெல்வேலி வென்ற நின்ற சீர் நெடுமாறன்மீது பாடப்பெற்ற பாண்டிக்கோவை, கோவை இலக்கியங்களுள் பழமையானது. சைவத் திருமுறைகளில் ஒன்றாகிச் சிறப்புப் பெற்ற திருச்சிற்றம்பலக் கோவையார் அடுத்தது. இவற்றையடுத்து எழுந்த இந்நூற்றாண்டுக்குரிய கோவை இலக்கியங்கள் இரண்டினைக் காணலாம்.

திருக்கோவையாரை அடுத்தும், தஞ்சைவாணன் கோவைக்கு முன்னும் இக் கோவை தோன்றியது. காப்புச் செய்யுள் இதனை **ஐந்திணைக் கோவை** என்று கூறும். 510 பாடல்களைக் கொண்டது. மூன்றாம் குலோத்துங்கன் மீது (1178-1218) பாடப்பெற்றது. பாடிய ஆசிரியர் யாரென்பது தெரியவில்லை.

இவ்வரசனை எண்ணெண் கலையாதரன் (360), பண்ணாசை பூண்டவன் (46), தண்டமிழ்க்குப் பொன்னே பொழிப்பவன் (30) மழை ஏழு மொன்றாய்த் தான் ஈவோன் (104), தமிழ்ப் பாவலர்க்குக் கார்மேகம் அன்னவன் (35), செந்தமிழுக்கோர் ஆதார மன்னவன் (359), பாவலர் காவியம் சூடுபவன் (415), தண்டமிழ்க்குச் சிந்தாமணி (425) என்றெல்லாம் இக்கோவை வருணிக்கிறது.

புலவரை ஆதரித்ததோடு இவனே புலமை மிக்கவன் என்பதை, ஓதாதுணர்ந்தவன் (202), நூற்கவியின் சொற்பதம் தேர்பவன் (441), தமிழ் வாணர் தெய்வக் கவியாபரணன் (224) ஆகிய தொடர்கள் காட்டும். மேலும், பாவனைத்தும் கோதே பிரித்தெறி கோமான் (75), உரைவாணர் தங்கள் நவைகாணின் மாற்றும் குமார குலோத்துங்கன் (363) ஆகிய தொடர்கள் இவனது தமிழாய்வின் திறமைக்குச் சான்று பகர்வன.

### பதிப்பு

1910 மு.ரா. அருணாசலக் கவிராயர் (ப.ஆ) (குறிப்புரையுடன்).

## தஞ்சைவாணன் கோவை

தொண்டை மண்டலச் சதகப் பாடல் (18) மூலம், இந்நூலாசிரியர் பொய்யாமொழிப் புலவர்; அம்மண்டலத்துச் செங்காட்டுக் கோட்டத்தில் உள்ள துறையூரில் பிறந்தவர் என்றறிகிறோம். இவரைக் குறித்த பல்வேறு கதைகள்

வழங்குகின்றன. இது தென்பாண்டி நாட்டு, மாறை என வழங்கும் தஞ்சாக்கூரில் வாழ்ந்த சந்திரவாணன் என்ற குறுநிலத் தலைவன் மீது பாடப்பட்டது.

இந்நூல் 425 கட்டளைக் கலித்துறைப் பாடல்களைக் கொண்டது. நாற்கவிராச நம்பியின் அகப்பொருள் விளக்கத்துக்கு இலக்கியமாகவே இந்நூல் செய்யப்பெற்றுள்ளது. எனவே நம்பியின் காலத்திற்கு மிக அண்மையில் இந்நூல் செய்யப் பெற்றிருத்தல் வேண்டுமென்ற அடிப்படையில் 13ஆம் நூற்றாண்டின் இறுதியில் இந்நூல் செய்யப் பெற்றதாதல் வேண்டும். சைவ சமயஞ் சார்ந்த வாசகரிடையே பெருமதிப்பும் பெருவழக்கும் உடைய திருக்கோவையாரை அடுத்துத் தமிழ்ப் பயிற்சியுடையாரிடையே பெருவழக்காக இருந்து வருவது தஞ்சைவாணன் கோவைதான். கி.பி. பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த குன்றத்தூர் அட்டாவதானி சொக்கப்ப நாவலர் இக்கோவைக்கு மிக விரிவானதோர் உரையெழுதியுள்ளார்.

## பதிப்பு

1952 தஞ்சைவாணன் கோவை (சொக்கப்ப நாவலர் உரை) சென்னை: கழகம்.

## களவியற் காரிகை உரை

இறையனார் அகப்பொருளுக்குப் பின்னர் அதைத் தழுவிக் கட்டளைக் கலித்துறையாக அகப்பொருள் இலக்கணத்தைக் கூறும் நூலாக அமைந்தது களவியல் காரிகை. இந்நூலுக்குச் சிறப்பான உரையொன்றும், அழகிய மேற்கோள் பாடல்களோடு கிடைத்துள்ளது. அவ்வுரையின் மேற்கோள் பாடல்கள், நூலின் பெயர் சுட்டிக் கூறப்பட்டிருப்பது அதன் தனிச்சிறப்பு. அவ்வுரையின் வழி நான்கு சிற்றிலக்கியங்களை நாம் அறிகிறோம். அவ்வுரை 14ஆம் நூற்றாண்டினது எனக் கருதப்படுவதால் அதில் குறிப்பிடப்படும் நூல்கள் அதற்கு முந்திய நூற்றாண்டினைச் சேர்ந்தவையெனக் கருதலாம். அவ்விலக்கியங்களைச் சுருக்கமாக இங்குக் காணலாம்.

### 1. கோயிலந்தாதி

கோயிலான திருவரங்கத்துப் பிரானைத் தலைவனாகக் கொண்டு அகத்துறைப் பாடல்களாக அமைந்த அந்தாதியாக இது இருக்கலாம். நான்கு பாடல்களை இந்நூலிற்குரியதாகக் களவியற்

காரிகை ஆசிரியர் எடுத்தாளுகிறார். இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. பாடல்கள் நயம் நிறைந்தவையாய் இருந்தன வென்பது கீழ்வரும் ஒரு பாடல் மூலம் தெரியவருகிறது.

சேர்ந்தசங் கத்த சிறுநுதற் காகச் செவ்வேல் முருகற்கு
ஈர்ந்தசங் கத்தையிட் டாலென் பயன்கட் டிலங்கசைச் செந்தீக்
கூர்ந்தசங் கத்துவிற் கோலிய கொற்றவன் வெற்றிச் செங்கை
ஆர்ந்தசங் கத்தரங் கன்திருத்தார்கொண் டணிமின்களே.

## 2. நறையூர் அந்தாதி

சோழநாட்டுத் திருநறையூர் இறைவன் மீது பாடப்பட்ட அந்தாதி ஆதல் வேண்டும். இதுவும் அகத்துறையில் அமைந்தது போலும். பின்வரும் ஒரேயொரு பாடல் மேற்சுட்டிய உரையில் இடம் பெற்றுள்ளது.

நல்லளந் தானு மமுதளந் தானும் நகைக்கு நல்ல
வில்லளந் தாள்நுதற் கும்விலை கேட்கில் விரிதமிழின்
சொல்லளந் தானொரு பாவலர்க் காத்துறையூர் நறையூர்
நெல்லளந் தானளந் தானெடு நாட்டிற்கு நேர் நிற்குமே.

## 3. தில்லை அந்தாதி

‘தெளிவு’ என்ற துறைக்கு மேற்கோளாகத் தில்லையைப் பற்றிய அகத்துறைப் பாடல்கள் கொண்ட அந்தாதியிலிருந்து ஒரு பாடல் எடுத்தாளப்பட்டுள்ளது.

## 4. மழவை எழுபது

எழுபது என்னும் எண்ணிக்கையில் இலக்கியம் இயற்றும் மரபு பண்டுதொட்டே இருந்தது என்பதைப் பரிபாடல் எழுபது, ஐந்திணை எழுபது, ஏர் எழுபது போன்ற நூல்களின் பெயர்களால் அறிகிறோம் அதன்படி இதுவும் திருமழபாடி என்று பெயர் கொண்ட மழவையைப் பற்றி எழுபது அகத்துறைப் பாடல்கள் கொண்ட நூல் என்பது தெளிவாகிறது. இந்நூலில் இருந்தும் கீழ்வரும் ஒரே ஒரு பாடல் மட்டும் மேற்சுட்டிய உரையில் எடுத்தாளப் பட்டுள்ளது.

செருமலை தானவர் முப்புரந் தீயெழத் தேவர்கட்கும்
வருமலை தீர்த்தவன் மாமழ பாடியில் வந்தெதிர்ந்த
கருமலை வீட்டிய செம்மலை யன்றிக் கறங்குவதிம்
மருமலை கூந்தலை யார்கொள்ள வேண்டி மணமுரசே.

## இரணிய வதைப் பரணி

இதுவும் தக்கயாகப் பரணிபோல ஓர் இதிகாச வரலாற்றினை அடிப்படையாகக் கொண்டது. நூல் செய்த ஆசிரியர் பெயரும் நூல்செய்த காலமும் தெரியவில்லை. மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் இந்நூல் இயற்றப் பெற்றிருக்கலாம் என்று அறிஞர் கருதுவர் (மு.அ.13/435-443).

பிரகலாதனுக்காகத் திருமால் நரசிம்ம அவதாரம் எடுத்து, அவன் தந்தையாகிய இரணியனை வதைத்த வரலாற்றைப் பரணி இலக்கணம் பொருந்தப் பாடுகிறது இந்நூல். 698 தாழிசைகளில், பிற பரணி இலக்கிய முறையில், கடவுள் வாழ்த்து தொடங்கி வாழ்த்து முடிய 12 பகுதிகளைக் கொண்டுள்ளது.

வாழ்த்துப் பகுதியில் திருமாலின் பஞ்சாயுதங்கள், ஆதிசேசன், கருடன், கலைமடந்தை, கொற்றவை முதலியோருக்கும், அரங்கனார் கழல் சடகோபன், எதிராசன் முதலியோருக்கும் வாழ்த்துத் தெரிவிக்கிறார். பேய்கள் யானை மருப்பு கொண்டு அரிசி ஆக்குமிடத்தே 'சும்மேலோ சும்முலக்காய்' என்பதை மகுடமாகக்கொண்டு 15 வள்ளைப் பாட்டுகள் இடம் பெறுவதும், காளிக்குக் கூளி கூறிய பகுதியில் இரணியன் வரலாற்றை மிக விளக்கமாகக் கூறுவதும் குறிப்பிடத்தக்கன.

### பதிப்பு

1918 **செந்தமிழ் இதழ்.** மதுரைத் தமிழ்ச் சங்கம்

1974 **இரணிய வதைப் பரணி** நா. வரதராஜுலு நாயுடு (ப.ஆ.) பொள்ளாச்சி சாந்தி ட்ரஸ்ட்.

## சத்திமுற்றப் புலவர் பாடல்

## நாரைவிடு தூது

சோழப் பெருமன்னர்களின் பண்டைய தலைநகராக விளங்கிய பழையாறையின் ஒரு பகுதி சத்திமுற்றம் என்பதாகும். அச் சத்திமுற்றத்தைச் சேர்ந்த புலவர் ஒருவர் பாண்டி நாடு சென்றிருந்தபோது, தன் மனைவிக்குக் காவிரியாற்றங் கரைக்குச் செல்லும் நாரையொன்றினைத் தூதாக அனுப்பும் வகையில் ஒரு பாடல் அமைந்துள்ளது. சோழராட்சியின் இறுதியும், பாண்டியரின் எழுச்சியும் நிகழ்ந்த காலமாகிய 13ஆம் நூற்றாண்டில் இப்பாடல் எழுந்திருக்கலாம் என்பது அறிஞர் கருத்து.

புறநானூற்றின் 67ஆம் பாடலில் பாண்டிநாட்டுப் பிசிராந்தையார், சோணாட்டுக் கோப்பெருஞ் சோழனுக்கு அன்னச் சேவலைத் தூதுவிடும் நிலை ஓவியமாக்கப் பட்டுள்ளதுபோலவே இந்த நாரைவிடு தூதுப் பாடலும் அமைந்துள்ளது. பதினாறு அடிகளை உடைய பின்வரும் ஒரேயொரு பாடல் இப்புலவரைத் தமிழிலக்கிய உலகில் நீங்கா இடம்பெறச் செய்தது.

நாராய் நாராய் செங்கால் நாராய்
பழம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன
பவளக் கூர்வாய் செங்கால் நாராய்
நீயும் நின் பெடையும்
தென்றிசைக் குமரி யாடி வடதிசைக்
காவிரி யாட ஏகுவி ராயின்
சத்தி முற்றத்து வாவியிற் சென்று
நனைசுவர்க் கூரை கனைகுரல் பல்லி
வரவுபார்த் திருக்கும் மனைவியைக் கண்டு எம்
கோமான் வழுதி கூடல் மன்றத்து
ஆடை யின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்தி
காலது கொண்டு மேலுறத் தழீஇ
அலகு திறந் தன்ன பல்லின னாகிப்
பேழையுள் பாம்பென உயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டனம் எனுமே.

ஏழ்மையின் கோலத்தை ஓவியமாகத் தீட்டும் புலவன், கூடற் கோமானாம் பாண்டியனின் கடைக்கண் நோக்கினால் சிறப்புப் பெறவேண்டும் என்ற நோக்கினையும் உள்ளமைத்துப் பாடுவதாக இப்பாடல் அமைகிறது*.

---

* இந்தப் பாடலின் மற்றொரு வடிவம் பக்கம் 280ல் தரப்பட்டுள்ளது.

# 4. தத்துவ (சாத்திர) நூல்கள்

## 12ஆம் நூற்றாண்டு

முறையான சைவ சித்தாந்த நூல்கள் தோன்றியது 13ஆம் நூற்றாண்டில் தான். மெய்கண்டார் முதலாகச் சந்தான பரம்பரை தொடங்குகிறது. இருப்பினும் மெய்கண்ட சாத்திரங்கள் என்று வழங்குகின்ற சாத்திர நூல்கள் பதினான்கினில் முதலிரு நூல்களாக வகைப்படுத்தப்பட்ட திருவுந்தியாரும், திருக்களிற்றுப் படியாரும் விளங்குகின்றன.

திருமுறைத் தொகுப்புக்குப் பின்னர் எழுந்த நூல்களான உந்தியாரும், களிற்றுப் படியாரும், பெரிய புராணத்தின் பின்னரே எழுந்தன. இவை மெய்கண்ட சாத்திரங்கள் போல, சாத்திர நூல்கள் இல்லை. ஆனால் இவற்றில், சாத்திரமும் உண்டு; தோத்திரமும் உண்டு; உலகியலும் உண்டு. இவையிரண்டுமன்றி ஞானாமிர்தம் என்ற சாத்திர நூலும் இந்த நூற்றாண்டில் எழுந்துள்ளது. எனினும் அது சித்தாந்த சாத்திர நூலாகத் தொகுக்கப்படவில்லை.

## திருவுந்தியார்

திருவியலூர் உய்யவந்த தேவர் என்பாரால் இந்நூல் செய்யப்பெற்றது. தன்னை வந்தடைந்த ஆளுடைய தேவர் என்பாருக்கு அருள் பாலிக்கும் வகையில் இந்நூலினை உபதேசித்தார் என்பது வழக்கு. திருவுந்தியாரின் நடை திருமூலரின் நடையினை நினைவூட்டுவதாய் உள்ளது. சேக்கிழார் கி.பி. 1140இல் திருத்தொண்டர் புராணம் இயற்றினார். ஆதலின் அதன் பின்னர்க் கி.பி.1148-இல் இந்நூல் எழுதப் பெற்றதாகக் (சகம் 1070-இல்) கூறப்படும் வழக்கினை ஏற்றுக் கொள்ளலாம்.

இந்நூல் 45 தாழிசைகளால் ஆனது. திருவாசகத்தில் வரும் திருவுந்தியாரைப் பின்பற்றி, மூன்றடி கொண்ட யாப்பினால் ஆயது. 'உந்தி பறத்தல்' என்ற விளையாட்டமைப்பினைக் கொண்டு எழுதப் பெற்றிருத்தலால் திருவுந்தியார் எனப் பெற்றது. சைவ சித்தாந்த நுண்பொருள்கள் எளிய முறையில், ஓசைநயமிக்க பாடல்களில், எழுதப்பெற்றிருப்பினும் சமய மறைபொருள்களும் சொற்களும்

பொதியச் செய்து இயற்றப்பட்டது. எனவே விளக்கவுரை இல்லையேல் பொருள் விளங்க இயலாத நிலையிலேயே இந்நூல் அமைந்துள்ளது.

முதல் ஆறு தாழிசைகள், தன் ஆசான் மூர்த்தியால் பெற்ற அருள் ஞானத்தைத் தொகுத்துக் கூறுவதாகவும், 7முதல் 18 தாழிசைகள், ஆதார யோகம், நிராதாரயோகம், மீதானஞ் சேறல், அதில் நிற்றலாகிய நான்கு சாதன வகைகளைக் கூறுவதாகவும், 19-20 தாழிசைகள் இன்புறு நிலையினைக் கூறுவதாகவும், தாழிசைகள் 21-22 இன்புறு நிலைக்கான வழியான தத்துவ உணர்வு, வாசியோகம் ஆகியவற்றைக் கூறுவதாகவும், 23-28 பாசவீடு, சிவப்பேறு ஆகிய பயன்களைக் கூறுவதாகவும் 29-31 பரமுத்தியின் இயல்பு சிவநெறியின் சிறப்புக் கூறுவதாகவும், 32-38 அணைந்தோர் தன்மை கூறுவதாகவும் 39-40 பரமுக்தியின் இயல்பினையும், 41-43 உய்யும் நெறியினையும், 44 குரு வாழ்த்தினையும் 45 நூற்பயனையும் விளக்குவதாகவும் இந் நூல் அமைந்துள்ளது.

### பதிப்பு

1968 திருவுந்தியார் காஞ்சி ஞானப்பிரகாசர்

### திருக்களிற்றுப் படியார்

இதுவும் திருவியலூர் உய்யவந்த தேவராலேயே இயற்றப்பட்டது. 100 வெண்பாக்களால் இயன்றது. திருவுந்தியார் தொடர்களை எடுத்து விரித்தனவாக இந்நூல் அமைந்துள்ளது. திருக்குறள் அடிகளையும், திருவாசகத் தொடர்களையும் அமைத்துப் பாடப்பெற்றுள்ளது. சில நாயன்மார் வரலாறுகளைக் குறிப்பிடுகிறது. நால்வர் வாழ்க்கை நிகழ்ச்சிகளை உள்ளடக்கித் தனித்தனிப் பாடல்களாகப் பாடுகிறது. அடியார் தொண்டுகளை மெல்வினை, வல்வினை என்று இந்நூல் விளக்கிச் சொல்வது குறிப்பிடத்தக்கது (16-20). அனைத்தையும் துறந்த இடமே சிவன் என்ற பொருளில் அமைகிறது பின்வரும் பாடல் :

**ஒன்றன்று இரண்டன்று உளதன்று இலதன்று**
**நன்றன்று தீதன்று நானன்று – நின்ற**
**நிலையன்று நீயன்று நின்னறிவும் அன்று**
**தலையன்று அடியன்று தான்.**

### பதிப்பு (உரையுடன்)

1888 கொ.சண்முக சுந்தர முதலியார் (ப.ஆ) தில்லைச் சிற்றம்பலவர் என்னும் சிவப்பிரகாசர் உரை.

1897 நாகலிங்க முனிவர் பதிப்பு.

1934 சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்பு.

1940 திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும். பழைய பொழிப் புரையுடன் சித்தாந்த சாத்திரங்கள் இரண்டாம் பதிப்பு.

1951 திருவாவடுதுறையாதீனப் பதிப்பு.

1951 இலக்கணம் முத்துக்குமாரசாமித் தம்பிரான் குறிப்புரையுடன்.

1962 மு. அருணாசலம்.

1969 திருவாவடுதுறை ஆதினம்: சிவப்பிரகாசர் உரையும் வேறுரையும்.

**மூலங்கள்**

1866 மதுரநாயகம் பிள்ளை. (பிறசாத்திரங்களுடன்).

1899 ஆனூர் சிங்காரவேல் முதலியார்.

1871, 1875 கொ.சண்முக சுந்தர முதலியார்.

1942, 1956 தருமபுரம் ஆதீனம்.

**ஞானாமிர்தம்**

அருண்மொழி என்ற இயற்பெயரும், வாகீச முனிவர் என்ற தீக்கைப் பெயரும், கொண்ட ஆசிரியரால் 75 அகவற் பாக்களால் இயன்ற நூல் ஞானாமிர்தம். இதன் ஆசிரியரை ஆனந்தத் திருமா முனிவன் என்று 4ஆம் அகவலும், கோடலம் பாகை என்னும் ஊரைச் சேர்ந்தவர் என்று 28ஆம் அகவலும் குறிக்கின்றன. இவர் திருவொற்றியூர், நெல்லை மாவட்டத்துத் திருவாலீசுவரம் ஆகிய ஊர்களோடு தொடர்பு படுத்தப் பெறுகிறார். திருவாலீசுரம் சிவன் கோயிலில் உள்ள கி.பி.1254 ஆம் ஆண்டுக் கல்வெட்டு, திருஞானம் ஓதுவதற்காகக் கோளகி மடத்து ஞானாமிர்தாசிரிய சந்தானத்தைச் சேர்ந்த புகலிப் பெருமாள் என்பவனுடன் ஏற்படுத்திய உடன்படிக்கையின் படி நிலம் வழங்கப்பட்டது என்று குறிப்பிடுகிறது. எனவே இதற்கு முன்பே ஞானாமிர்த ஆசிரியர் வாழ்ந்திருத்தல் வேண்டும். 4அடிச் சிறுமையும் 56 அடிப்பெருமையும் கொண்ட பாக்களால் இயன்ற நூல். பாயிரம்,

சம்மிய ஞானம், சம்மிய தரிசனம், பாசபந்தம், தேகாந்தரம் பாசனாதித்துவம், பாசச்சேதம், பதிநிச்சயம், பாசமோசனம் என்ற எட்டு இயல்களைக் கொண்டது.

இந்நூலில் கூறப்பெறும் சமயக் கருத்துகள், தமிழ் நாட்டினருக்கேயுரிய பழஞ்சைவக் கருத்துகள் எனக் கருதப்படுகின்றன. கல்லாடம் போன்று பழைய நடையால் ஆனது. அருள்நந்தியின் இருபா இருபஃதைப் போல வினா விடையாய் அமைந்தது. இதன் ஆசிரியர் சிவாகமப் பயிற்சியோடு, புராண இதிகாசங்களிலும் பயிற்சி மிக்கவர். ஞானபாதம் மட்டுமே கிடைக்கின்றது. சரியை, கிரியை, யோகம் எனும் பிறவற்றையும் பாடினார் என்பதை அவர் பாடல் மூலமே (7) அறிகிறோம். 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சிவஞான சுவாமிகள் தாம் எழுதிய சிவஞான போத மாபாடியத்தில் இந்நூலின் கிரியாபாதப் பாடல் ஒன்றை எடுத்தெழுதுகிறார். எனவே இருநூறு ஆண்டுகளுக்குள்ளாக இதன் முன்பகுதிகள் கிடைக்காமல் போயின எனலாம்.

### பதிப்பு

மதுரைத் தமிழ்ச் சங்கப்பதிப்பு; சே.ரா. சுப்பிரமணியக் கவிராயர் உரை

1954 ஔவை துரைசாமிப்பிள்ளை (ப.ஆ) அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

### 13ஆம் நூற்றாண்டு

சைவத்தைப் பாடிய தேவார நால்வரைத் தொடர்ந்து, சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் பாடியதன் மூலம், சைவநூல்களெனத் தனியான இலக்கிய மரபு வளர்ந்தது. இவையன்றித் தனிச் சாத்திரங்களாகவே பலநூல்கள் இக்காலப் பகுதியில் தோன்றின. உய்யவந்தார் பாடிய திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும் இவ்வகையில் எழுந்த நூல்கள் எனலாம். சோழ மன்னர்கள் எடுத்த பெருங்கோயில்கள் சைவ உணர்வு வளர்வதற்குப் பெருந்துணையாக விளங்கின. அவற்றில் வடமொழி அறிந்த பல்வேறு பண்டிதர்கள் கோயிற் பணியினை ஏற்றனர். இவையாவும் ஒன்றி நின்று வடமொழியில் பல சைவ சாத்திர நூல்கள் தோன்றக் காரணமாயின. அவற்றையொட்டித் தமிழ்ச் சாத்திரங்களும் எழத்தொடங்கின.

## சிவஞான போதம்

தமிழ்நாட்டில் மக்களிடையே வழங்கிய தெய்வக் கொள்கைகளையும், சிவத்தைப் பற்றிய தத்துவக் கருத்துகளையும், தேவாரப் பதிகங்களில் கூறிய சமய உண்மைகளையும் தொகுத்து, மெய்கண்டார் 40 அடிகளில் செய்த நூலே சிவஞான போதம். இது தமிழ் முதல்நூல். சைவ சித்தாந்த சாத்திரங்கள் எல்லாம் இவர் பெயரால் மெய்கண்ட சாத்திரம் எனப்பட்டன. திருவண்ணாமலை அருணாசலேஸ்வரர் கோயில் கல்வெட்டு மூலம் இவர் காலம் கி.பி.13ஆம் நூற்றாண்டு என அறிகிறோம்.

இந்நூல், நூற்பாவால் ஆகிய 12 சூத்திரங்களையும், பொல்லாப் பிள்ளையார் வணக்கம், அவையடக்கம் என்ற இருபாடல்களையும் கொண்டது. சூத்திரங்களை ஏதுக்கள் கொண்டு விரித்துக் கூறும் அதிகரணங்கள் 39, எடுத்துக் காட்டு வெண்பாக்கள் 81 ஆகிய அனைத்தையும் மெய்கண்டார் செய்தார் என்பது வரலாறு. முதல் ஆறு சூத்திரங்கள் பொது அதிகாரம்; பின் ஆறும் உண்மை அதிகாரம். முதல் மூன்று சூத்திரங்கள், பதி, பசு, பாச உண்மைகளைக் கூறும். அடுத்த மூன்றும் அவற்றின் இலக்கணம் கூறும். அடுத்த உண்மை அதிகாரத்து மூன்று சூத்திரங்களும் முறையே பசுவின் சிறப்பிலக்கணம், குரு உணர்த்தும் முறைமை, ஆன்மசுத்தி ஆகியவற்றையும், இறுதி மூன்று சூத்திரங்களும் பாசநீக்கம், சிவப்பேறு, சீவன் முத்தி ஆகியவற்றையும் விளக்குகின்ற இயலாக அமைந்துள்ளது.

மெய்கண்டார் திருக்கயிலாய பரம்பரையில் உபதேசம் பெற்றார் என்பது வரலாறு. சிவஞான போதம் சங்கரரின் அத்வைதத்தினின்று வேறுபட்டு, வேதாந்தத்தோடு, ஆகமாந்தத்தினையும் இணைத்த சைவ சித்தாந்தத்தைக் கூறுவது. மெய்கண்டாருடைய சிவஞான போத சூத்திரங்களின் அமைப்பு நியாயம் என்ற தரிசன முறையில் அமைந்துள்ளது.

## சிவஞான சித்தியார்

சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கின் பகுதியாகக் கருதப்படும், சிவஞான சித்தியார், இருபா இருபஃது ஆகிய இரண்டும் மெய்கண்டாரின் மாணாக்கராகக் கருதப்படும் அருள்நந்தி சிவாச்சாரியாரால் இயற்றப்பெற்றன. இவர் நடுநாட்டில் உள்ள திருத்துறையூரில், சிவாச்சாரியர் மரபில் தோன்றியவர்; சகலாகம பண்டிதர் என்ற சிறப்புப் பெயர் பெற்றவர். மெய்கண்டாரின் மாணாக்கர் ஆதலின் இவரது காலமும்

மெய்கண்டாரின் காலமான பதின்மூன்றாம் நூற்றாண்டின் இடைப்பகுதியே எனலாம்.

சிவஞான சித்தியார், பரபக்கம், சுபக்கம் என இரண்டு பகுதிகளை உடையது. பரபக்கத்தில் 11 பாயிரப் பாடல்கள் உள்ளிட்ட 301 பாடல்கள் உள்ளன. உலகாயதன் தொட்டங்கி, பாஞ்சராத்திரி ஈறாகப் பதினான்கு சமயவாதிகளின் வாதத்தினைச் சித்தாந்தி தருக்க முறையில் மறுப்பதாக அமைந்துள்ளது. சுபக்கம், அருள்நந்தியார் தன் பக்கத்தைக் கூறுவதாக அமைந்துள்ளது. மெய்கண்டாரின் நூலான சிவஞான போதத்தை வைத்து, அதன் பன்னிரு சூத்திரப் பாகுபாட்டை ஒட்டி, எண்சீர் ஆசிரிய விருத்தங்களாலும், அறுசீர் விருத்தங்களாலும் இப் பகுதியைப் பாடியுள்ளார். இதனை மூலநூலுக்குச் செய்யுளால் இயன்ற விரிவான உரை என்று கருதலாம். இது 328 பாடல்களைக் கொண்டது.

எதுசமயம், அதுகூறும் உண்மைப்பொருள் எது, எது சாத்திரம் என்ற கேள்வியைக் கேட்டு, இதுதான் சமயம், இதுதான் பொருள், இதுதான் சாத்திரம் என்று எது வரையறை செய்து வேறொன்றல்ல என்று மறுத்துச் சொல்கிறதோ, அது அல்ல என்று வற்புறுத்தி சித்தியார் கூறும் கீழ்வரும் பாடல் ஆழ்ந்த சிந்தனைக்கு ஓர் எடுத்துக்காட்டு :

**ஓது சமயங்கள் பொருள் உணரும் நூல்கள்**
**ஒன்றோடொன் றொவ்வாமல் உளபலவும்; இவற்றுள்**
**யாது சமயம் பொருள் நூல் யாதிங் கென்னில்**
**இதுவாகும் அதுவல்ல தெனும் பிணக்கதின்றி**
**நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண**
**நின்றதுயா தொருசமயம் அதுசமயம் பொருள்நூல்;**
**ஆதலினால் இவையெல்லாம் அருமறை ஆகமத்தே**
**அடங்கியிடும் அவையிரண்டும் அரனடிக்கீழ் அடங்கும்**
**(சுபக்கம்-8/13)**

பரபக்கத்திற்குத் திருவொற்றியூர் ஞானப்பிரகாசர், திருவொற்றியூர் தத்துவப் பிரகாசர், வேலப்ப பண்டாரம், மதுரை ஞானப் பிரகாசர், சிவாக்கிர யோகி ஆகியோரும், சுபக்கத்திற்கு மறைஞான சம்பந்தர், சிவாக்கிரயோகி, நிரம்ப அழகிய தேசிகர், ஞானப்பிரகாசர், சிவஞான யோகிகள் ஆகியோரும் உரை செய்துள்ளனர். சுப்பிரமணிய தேசிகர் எழுதிய பதவுரையும் உள்ளது.

### பதிப்பு

1895 அறுவர் விரிவுரைகளும் பதவுரையும்

## இருபா இருபஃது

இது அருணந்தி சிவாச்சாரியர் இயற்றிய வெண்பாவும் ஆசிரியப்பாவும் மாறிமாறி அந்தாதித்து வரும் இருபது பாடல்கள் கொண்டதொரு சிறுநூல்; மெய்கண்டாரைத் துதிக்கும் முகமாக வினாவிடையாய்ச் சாத்திர நுண்பொருள்களை விளக்கும் நூல்.

## உண்மை விளக்கம்

இது மனவாசகங் கடந்தாரால் எழுதப்பெற்ற சாத்திர நூல். ஆகம வழி வழுவாமல் எழுதப்பெற்ற நூல். மெய்கண்டாரின் மாணாக்கர்; அருள்நந்தி சிவத்தின் ஒருசாலை மாணாக்கர். திருவதிகை என்ற ஊரினர்.

நூல் வெண்பாவினால் ஆனது. காப்பு வெண்பா, சிறப்புப் பாயிரம், 53 நூல் பாடல்கள் என 55 பாடல்களைக் கொண்டது. 1,2,23,27,30,39,49 ஆகிய பாடல்கள் வினாவாகவும், பிற விடையாகவும் அமைந்துள்ளன. சைவ சித்தாந்தத்தை அறியும் தொடக்க நிலைக் கருவி நூலாகும். சைவ சமயத் தத்துவங்கள் 36. அவற்றையும் நடராச தத்துவத்தையும் விளக்கிய நூல். பின்வரும் பாடல் இந்நூலின் மையமாக அமைவது.

**மாயை தனைஉதறி வல்வினையைச் சுட்டுமலம்**
**சாய அமுக்கி அருள்தா னெடுத்து - நேயத்தால்**
**ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானமுத்தல்**
**தான்எந்தை யார்பரதம் தான்**

## பதிப்பு

(1942) 1956. **மெய்கண்ட சாத்திரம்** (சைவசித்தாந்தம்) மூலம். தருமபுரம்: தருமபுரஆதீனம்

## பரமார்த்த தரிசனம் (பகவத்கீதை)

வேதாந்த மார்க்கத்தின் அடிப்படை நூல்களான உபநிடதம், பிரம்மசூத்திரம், பகவத்கீதை ஆகியவற்றுள் பகவத் கீதையை ஸ்ரீபட்டனார் என்பார் தமிழில் செய்தார். அவர் அந்த நூலுக்கு இட்ட பெயர் பரமார்த்த தரிசனம் என்பது. சங்கரருக்குக் குருவாயிருந்த கோவிந்த பகவத் பாதருடைய பெருமையைக் கூறி, தாம் சங்கர பகவத்பாதர் அருளினால் நூல் செய்ததாகக் குறிப்பிடுகிறார். கி.பி.1315-இல் வாதிகேசரி செய்த பகவத் கீதை வெண்பாவிற்கு முற்பட்டதாகலின் இந்நூல் 13ஆம் நூற்றாண்டினது எனக் கருதலாம்.

நூலின் அத்தியாயங்கள் வடமொழி நூலின் தலைப்பிலேயே அமைக்கப்பட்டுள்ளன. நூல் ஆறு அத்தியாயங்கள் கொண்ட மூன்று காண்டங்களாக அமைந்துள்ளது. பாடல் எண்ணிக்கை, ஒன்றில் 545, மற்றொன்றில் 569, பிறிதொன்றில் 570 என்று ஏட்டுக்கு ஏடு வேறுபடுகின்றது. ஆசிரிய விருத்தம், கலிநிலைத்துறை, கொச்சகக் கலிப்பா, கலிவிருத்தம் முதலான பலவகைப் பாக்களும், பல்வேறு சந்தப் பாக்களும் இதனுள் பயில்கின்றன. மூலத்தை ஒட்டிய மொழிபெயர்ப்பு நூல். பாடல்கள் தமிழ்மரபும், பண்பும் குறையாமல் இயன்றுள்ளன. நல்ல நடையும் சொல் நயமும் கொண்ட நூல் என்பதற்குப் பின்வரும் பாடல் நல்ல எடுத்துக்காட்டு.

**தெளிவில் நெஞ்சைத் தெளியப் பிடித்தலும்**
**களிசெ யும்உளத் தைக்களி மாற்றலும்**
**குளிர்வி லாமை உளத்தில் கொளாமையும்**
**எளிதில் மானத மாதவம் என்பதே**

## பதிப்பு

1853 **பகவத் கீதை** (பரமார்த்த தரிசனம்). (பழைய உரையுடன்)

## குரு பரம்பரா பிரபாவம்

வைணவ தரிசனம் எனப்படும் ஸ்ரீவைஷ்ணவ மார்க்கத்தின் வரலாற்றைக் கூறும்நூல் குரு பரம்பரா பிரபாவம் என்றழைக்கப் பெறுகிறது. வைணவ சமயத்தின் வரலாற்று வளர்ச்சிக்கு அடிப்படைத் தொண்டாற்றிய பெருமக்களின் மரபு தழுவிய வரலாறு என்பது இந்நூலின் பொருள். நம்பிள்ளையின் சீடர்களுள் ஒருவரான, திருப்புட்குழி என்னும் ஊரினரான பின்பழகிய பெருமாள் ஜீயர் இந்த வைணவ வரலாற்று நூலை மணிப்பிரவாள நடையில் நம்பிள்ளை திருநாடு அலங்கரித்த பின்னர் எழுதினார். எனவே இந்நூல் பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதிக்கு உரியதாகக் கருதப்படுகிறது.

இந்த நூலின் முதல்பகுதி பிரவேசம் எனப்படுகிறது. இதில் வைகுண்ட நாதன் ஆழ்வார்களை அவதரிக்கச் செய்து அவர்களுக்கு மயர்வற மதிநலம் அருளி அவர்கள் மூலமாக திராவிட வேதம் எனப்பெறும் நாலாயிரப் பிரபந்தங்களை அருளிச்செய்தார் என்னும் செய்தி கூறப்படுகிறது. இப்பகுதியினை அடுத்து முறையாக முதலாழ்வார் மூவர், திருமழிசை யாழ்வார், குலசேகரர், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப் பொடியாழ்வார்,

திருப்பாணாழ்வார், திருங்கையாழ்வார், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார் என்னும் அடைவில் பன்னிரு ஆழ்வார்களின் வரலாற்றை ஆசிரியர் கூறுகிறார். பின்னர் ஆச்சாரிய பரம்பரையைக் கூறத் தொடங்கி நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி, இராமானுசர், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை என்னும் அடைவில் ஆச்சாரிய பரம்பரையைக் கூறுகிறார். இடையிடையே அநேக வைணவப் பெரியோர்களின் (முதலிகள்) வரலாறுகளையும் சுருங்கச் சொல்லி வருகிறார்.

பரம்பரையின் தொடக்கத்தில் கூறப்படும் சில செய்திகள் தொன்மக் கதைகள் போன்ற உணர்வை வாசகனுக்கு ஊட்டினாலும், ஆழ்வார்கள் தொடக்கமாக நம்பிள்ளை ஈறாகக் கூறப்படும் வரிசைமுறையும் விவரங்களும் வரலாற்று உணர்வோடும் இலக்கியச் சுவையோடும் எழுதப்பட்டவை என்பதில் ஐயமில்லை. வைணவ சமயக் கோட்பாடுகளை விளக்கும் பல செய்திகள் இந்நூலில் இடையிடையே கூறப்படுவதை நோக்க, கோட்பாட்டு வளர்ச்சி வரலாற்றினை அறியவும் இந்நூல் உதவுகிறது எனக் கூறலாம். வைணவ சமயத்திற்குக் கிடைத்த வரலாற்றுப் பெட்டகமாக இந்நூல் போற்றப் படுவதில் வியப்பொன்றுமில்லை.

## பதிப்பு

1890 குருபரம்பரை ஆறாயிரப்படி முதல்பதிப்பு சித்ரகூடம்: கந்தாடை திருவெங்கடாசார்யர்.

1972 குருபரம்பரை ஆறாயிரப்படி. சே.கிருஷ்ணமாசார்யர்.

1968; 1975 குருபரம்பரை ஆறாயிரப்படி, திருச்சி, புத்தூர்: எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார்.

# 5. கல்வெட்டு இலக்கியங்கள்

*10ஆம் நூற்றாண்டு*

அரசர்களாலும், அதிகாரிகளாலும் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளில் பல சமயம் சார்ந்தனவும், வரலாற்றினைக் காட்டுவனவுமாக அமைந்துள்ளன. வேறெந்த வகையிலும் கிடைக்காத சில இலக்கியங்கள் கல்வெட்டுகள் மூலம் மட்டும் அறியக் கிடைப்பது ஒரு பெரும் பேறே ஆகும். அவ்வகையில் ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஞானசம்பந்தரின் திருவிடைவாய்ப் பதிகமும், திருச்சி குடைவரையில் பொறிக்கப்பட்டுள்ள சிராமலை அந்தாதியும் பல கல்வெட்டுப் பாடல்களும் நமக்குக் கிடைத்துள்ளன. பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தவற்றை இங்குக் காணலாம்.

*சிராமலை அந்தாதி*

இது வேம்பை என்ற ஊரைச் சேர்ந்த மணியன் என்பாரின் புதல்வன் நாராயணன் என்பவரால் சிராமலை இறைவன் மீது பாடப்பெற்ற 102 கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் கொண்ட அந்தாதி. இரு பாடல்கள் நூலின் இறுதியில் பாயிரமாகப் பொறிக்கப் பெற்றுள்ளன. 'கற்பந்தல் நீழலில் வைத்த கலித்துறை நூறும்' என்று பாயிரத்தில் வருதலின் அவர் காலத்திலேயே இவ்விலக்கியம் கல்லில் பொறிக்கப்பட்டது என்றறிய முடிகிறது. ஆசிரியர் வேம்பையர்கோன் நாராயணன் வணிகத் தொழில் நடத்தி, அதற்காகப் பல ஊர்களுக்குச் சென்றவர் என்று அவர் பாடல் மூலம் அறிய முடிகிறது.

சிராமலைச் சிவன் மீது பாடிய இந்த அந்தாதி, நடராசப்பெருமானின் ஆடல், பிச்சாடனவடிவம் ஆகியவற்றைப் பரவியும், கண்ணப்பரின் பக்தியினை வியந்தும் பாடுகிறது. உலகோருக்கு உபதேசமாகப் பாடிய பாடல்களும் உண்டு. அவற்றுள் ஒன்று:

**பணிமின்கள் பாதம், பகர்மின்கள் நாமங்கள், பாரகத்தீர்**
**தணிமின்கள் சீற்றம், தவிர்மின்கள் பொய்ம்மை,**
**தவம்புகுநாள்**

கணிமின்கள், ஏனற் கிளிகடி மாதர்தம் கைவிசைத்த
மணிமின்கள் போலொளிர் வான்தோய் சிராப்பள்ளி
வள்ளலுக்கே

பதிப்பு

1953 திரிசிராமலையந்தாதி, மு. இராகவையங்கார், தருமபுரம்.

கல்வெட்டுப்பாடல்கள்

அரும்பாக்கத்து எல்லையக் குறிக்கும் கி.பி.996 ஆம்ஆண்டுப் பாடல்; புத்தன் இராசசிங்கன் கிடங்கிலில் முன்மண்டபம் கட்டியதைக் குறிக்கும் பாடல்; குமரி அருகே அமைச்சன் ஐயநம்பி தண்ணீர்ப்பந்தல் அமைத்ததைக் குறிக்கும் பாடல்கள் என்று பல தனிப்பாடல்கள் கல்வெட்டுகளில் உள்ளன. தண்ணீர்ப்பந்தல் அமைத்ததைக் குறிக்கும் பாடல் வருமாறு:

தெண்டிரைநீர்த் தென்குமரி மாநகர்த்தண் ணீர்ப்பந்தல்
எண்டிசையும் ஏத்த இனிதமைத்தான்- விண்டயரும்
ஐந்தெரிய லான்ஐய னம்பி அடல்வலவன்
மந்திரிதென் மங்கலக்கால மன்

மெய்க்கீர்த்திகள்

இது 'சொற்சீரடியான் எழிலரசர் செய்தி இசைக்கும்' பாடல் வகை ஆகும். முதலாம் இராசராசனின் எட்டாம் ஆண்டு முதல் (கி.பி.993) இவ்விலக்கிய வகை தமிழில் எழுந்தது. 'திருமகள் போல' எனத் தொடங்கும் இவனது மெய்க்கீர்த்தி 14 அடிகள் கொண்டது. அவன் வெற்றிகளைக் கீழ்வருமாறு அடுக்கிக் கூறுகிறது : (மு.அ 10/560)

திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்
தனக்கே உரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச் சாலை கலமறுத் தருளி
வேங்கை நாடும் கங்க பாடியும்
தடிகை பாடியும் நுளம்ப பாடியும்
குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும்
முரட்டொழில் சிங்களர் ஈழமண் டலமும்
இரட்ட பாடி ஏழரை யிலக்கமும்
முந்நீர்ப் பழந்தீவு பன்னீ ராயிரமும்

திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டதன்
எழில்வளர் ஊழியுள் எல்லா யாண்டும்
தொழுதக விளங்கும் யாண்டே, செழியரைத்
தேசுகொள் கோராச கேசரி வர்மரான
உடையார் ஸ்ரீராசராச தேவர்க்கு யாண்டு. . . . . 3.a.

## 11ஆம் நூற்றாண்டின் முற்பகுதி கல்வெட்டுகள் மூலம் அறியப்பெறும் நூல்கள்

கல்வெட்டுகள் மூலம், வழக்கில் இன்று கிடைக்காத சில நூல்களின் பெயர்களையும், சில புலவர்களையும் அறிகிறோம். அத்தகைய நூல்செய்த புலவர்கட்குக் கொடை அளித்ததைக் குறிக்கும் ஆவணங்களாக அவை அமைந்துள்ளன. சில இலக்கியங்கள் கல்வெட்டுகளின் மூலமாக மட்டுமே அறியக் கிடைக்கின்றன. சம்பந்தர் பாடிய திருவிடைவாய்ப் பதிகம், அவ்வூரில் கல்வெட்டாகவே கிடைத்தது. திருமுறைத் தொகுப்பில் அப்பதிகம் இடம் பெற்றிலது. அதுபோலவே 10ஆம் நூற்றாண்டில் வேம்பை நகர் நாராயணன் எனும் புலவனால் எழுதப்பெற்ற சிராமலை அந்தாதி திருச்சிராப்பள்ளியில் கல்வெட்டாகப் பொறிக்கப்பெற்றிருந்தது. இவ்வகையில், கல்வெட்டுகள் மூலம், இந்நூற்றாண்டின் முற்பகுதியில் எழுதப்பெற்றதாக 3 நூல்களையும், இறுதிப் பகுதியில் இரு நூல்களையும் அறிய முடிகிறது. அவை வருமாறு:

### 1. இரசராச விசயம்

முதலாம் இராசராசனின் வெற்றி, வீரம், செங்கோன்மை, சமயப்பணி ஆகியவற்றை விரித்துக் கூறுவதாக இந்நூல் அமைந்திருக்கலாம். இந்நூலைச் சவர்ண (வைத்ய) குலத்தைச் சேர்ந்த, நாராயணன் பட்டாதித்தன் என்ற புலவன் பாடியுள்ளான். இப்புலவர் தாம் செய்த நூலைச் சிறப்பு நாள்களில் அவையில்

---

3.a. ஸ்ரீராசராசதேவர் என்று வரும் இடங்களில், சோழநாட்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டாயின் 'ஸ்ரீராஜராஜதேவர்' என்று கிரந்த எழுத்திலும், பாண்டிய நாட்டில் வட்டெழுத்தில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டாயின் 'ராசராசதேவர்' என்று தமிழ் ஒலிப்பிலும் எழுதப்பெற்றுள்ளது. பொதுவாகக் கிரந்தம், தமிழ் ஆகிய எழுத்துப்பயன்பாட்டின் ஒருமைப்பாட்டில் கவனம் செலுத்தப் படவில்லை. மாற்றி மாற்றி எழுதப்பெற்றுள்ளது.

படிப்பதற்காக, இராசராச சோழனால் நிலநிவந்தம் பெற்றிருந்த செய்தியினைத் திருப்பூந்துருத்தியில் உள்ள முதலாம் இராசேந்திரனுடையதெனக் கருதத்தக்க துண்டுக் கல்வெட்டு மூலம் அறிகிறோம். நூல் கிடைக்கவில்லை.

## 2. இராசராசேசுவர நாடகம்

தஞ்சைப் பெருங்கோயில் வைகாசிப் பெரு விழாவில் இந்நாடகத்தை நடிப்பதற்கு நிவந்தம் அளித்துள்ள செய்தி, தஞ்சைக் கோயிலில் பொறிக்கப் பெற்றுள்ள இராசேந்திரனின் கல்வெட்டு மூலம் தெரிகிறது. இதனை நடிப்பதற்கு ஆடும் திருவாலன் திருமுதுகுன்றன்ஆன விஜய ராஜேந்திர ஆசார்யர் என்பானுக்கு ஆண்டு தோறும் 120 கல நெல் நிவந்தம் அளிக்கப்பட்டிருந்தது. இது இராசராசன் பெருங்கோயில் கட்டிய வரலாற்றையும், இராசராச ஈஸ்வரத்தின் பெருமையையும் குறித்து எழுந்ததாகலாம். நூல் இன்று வழக்கில் இல்லை.

## 3. வீரணுக்க விசயம்

முதலாம் இராசேந்திரனின் ஆட்சிக் காலத்தில் (கி.பி.1027) வீரணுக்க விசயம் என்ற நூல் செய்தமைக்காக, திருவாரூர்க் கோயிலின் பெயரால் பெயர் பெற்ற பூங்கோயில் நம்பிக்கு நிலதானம் அளிக்கப்பட்டது என்பதை அவ்வூர்க் கோயிலில் உள்ள கல்வெட்டால் அறிகிறோம். வீர ராஜேந்திரன் மீது பாடப்பெற்றதாகக் கருதப்படும் இந்நூல் மன்னனின் வெற்றி குறித்துப் பாடப்பட்டதாகல் வேண்டும். நூல் கிடைக்கவில்லை.

## 4. பையூருடையான் வேதவனமுடையான் மீது பாடல்

தொண்டை மண்டலத்துக் களத்தூர்க் கோட்டத்து மருதத்தூரைச் சேர்ந்த திருச்சிற்றம்பலமுடையான் என்பார், பையூர் உடையான் வேதவனமுடையான் எனபார் மீது 'பாடின கவி' இது. இதனைப் பாராட்டிப் பாட்டுடைத் தலைவன் 'குடிகாடு இரும்பூதி' என்ற ஊரினைத் தானமாகத் தர, அதனைப் பெற்ற புலவர் அதைப் பையூர்ச் சிவபெருமானுக்குத் தானமாக அளித்தார். இதனை முதற்குலோத்துங்கனின் 13ஆம் ஆட்சியாண்டுக்கு உரிய (கி.பி.1083) புதுக்கோட்டை மாவட்டம், நாங்குப்பட்டி மடத்துக் கோயில் கல்வெட்டு மூலம் அறிகிறோம்.

## 5. குலோத்துங்க சோழன் சரிதை

திரிபுவனியில் உள்ள முதற்குலோத்துங்க சோழனின் கல்வெட்டு (கி.பி.1097) மூலம், இந்நூல் இவ்வூரில்

அரங்கேற்றப்பட்டது என்றறிகிறோம். இவ்வூர்ச் சபையார், இந்நூல் இயற்றிய கவி குமுதசந்திர பண்டிதன் திருநாராயண பட்டனுக்கு நிலதானம் செய்தார்கள் என்ற செய்தி இக்கல்வெட்டு மூலம் தெரிகிறது. நூல் கிடைக்கவில்லை.

## இரண்டாம் இராசராசனின் மெய்க்கீர்த்தி

தமிழகத்தை ஆண்ட மன்னர்கள், தம்முடைய வெற்றிச் சிறப்புகளை எடுத்துரைக்கும் வகையில் எழுதிய பாடல்களாக அமைந்தவை 'மெய்க்கீர்த்தி' எனப்படும். இதனையும் பிரபந்த வகையுள் ஒன்றாகப் பாட்டியல் நூல்கள் கூறுகின்றன. முதலாம் இராசராசன் தொடங்கி கி.பி. 13ஆம் நூற்றாண்டு வரை ஏறத்தாழ 50 மெய்க்கீர்த்திகள் புனையப்பெற்றுள்ளன. சோழர்களும், பாண்டியர்களும் இத்தகைய மெய்க்கீர்த்திகளைப் பெற்றுள்ளனர். அவை வரலாற்று உண்மைகளையும், அழகிய தொடர்களையும், பொருட்செறிவினையும் உடையனவாய் எதுகை மோனையோடு எழுதப் பெற்றிருக்கின்றன. இரண்டாம் இராசராசனின் கீழ்வரும் மெய்க்கீர்த்தி, மன்னனின் அருங்குணத்தையும், நாட்டின் அமைதியையும் எடுத்துக் காட்டுவதாய் அமைந்திருப்பது கண்டு இன்புறத்தக்கது:

மாரிவாய்த்து வளஞ்சுரக்கத் தாரணியோர் பிணிநீங்க
நல்லோர்தங் கற்புயர நான்மறையோர் துறைவளர
எல்லோருந் தனித்தனியே வாழ்ந்தனம்யாம் எனமகிழ்ந்து
ஒருவருடன் ஒருவர்க்கும் ஒன்றினுடன் ஒன்றுக்கும்
வருபகை யகத்தின்றி விழைந்தகாத லுடன் சேர
இந்திரன் முதற்றிசா பாலர் எண்மரும் ஒரு வடிவாகி
வந்தபடி யெனநின்று மனுவாணை தனிந டாத்தி
படியானையே பிணிப்புண்பன வடிமணிசிலம்பே
யரற்றுவன
செல்லோடையே கலக்குண்பன வருபுனலே சிறைப்படுவன
மாவே வடுப்படுப்பன மாமலரே கடியவாயின
காவுகளே கொடியவாயின கள்ளுண்பன வண்டுகளே
பொய்யுடையன வரைவேயே போர்மலைவன
எழுகழனியே
மெய்யுடையன நெடுவரையே மருளுடையன
இளமான்களே
கயற்குலமே பிறழ்ந்தொழுகும் கைத்தாயரே
கடிந்தொறுப்பர்

இயற்புலவரே பொருள்வைப்பர் இசைப்பாணரே
கூடஞ்செய்வார்
என்றுகூறி இவன்காக்கும் திருநாட்டி னியல் இதுவென
நின்றுகாவல் நெறிபூண்டு நெறியல்லது நினையாது
தந்தையில்லோர் தந்தையாகியும் தாயரில்லோர்
தாயாகியும்
மைந்தரில்லோர் மைந்தராகியும் மன்னுயிர்கட்
குயிராகியும்
விழிபெற்ற பயனென்னவும் மெய்பெற்ற அருளென்னவும்
மொழிபெற்ற பொருளென்னவும் முகம்பெற்ற
பனுவலென்னவும்
எத்துறைக்கும் இறைவனென்னவும்

மெய்க்கீர்த்திகளே அன்றி, அரசர்களும், அதிகாரிகளும், சாதாரண மக்களும் அளித்த கொடைகளில் சிலவும் மிக அழகிய பாடல்வடிவில் எழுதப்பெற்றுக் கிடைத்துள்ளன. பெருந்தொகை நூலினுள் பெருமளவில் கல்வெட்டுகளில் உள்ள கவிதைகள் தொகுக்கப் பெற்றுள்ளன. இத்தகைய கவிதைகள் பல நீண்ட அகவற் பாக்களாகவும், கலிவெண்பாக்களாகவும் மைசூர் வரை பரந்துபட்டுக் கோயிற் சுவர்களில் இன்றும் காணக் கிடைக்கின்றன.

முதற்குலோத்துங்கனிடமும், அவன் மகன் விக்கிரம சோழனிடமும் படைத் தலைவனாய் இருந்த மணவிற்கூத்தன் அரும்பாக்கமுடையான் நரலோகவீரன் என்பான் சிதம்பரம், திருவதிகை ஆகிய ஊர்களில் உள்ள சிவன் கோயில்களில் பெரிய அளவில் திருப்பணிகளைச் செய்தான். அவை சிதம்பரம் கோயில் வடபுறச்சுவர்களில் 38 வெண்பாக்களாகவும், திருவதிகை வீரட்டானேசுவரத் தூண்களில் 26 வெண்பாக்களாகவும் பொறிக்கப் பெற்றுள்ளன. சிதம்பரத்தில் திருப்பதியம் விண்ணப்பிக்க அவன் தனிமண்டபம் அமைத்ததைக் கீழ்வரும் பாடல் தெரிவிக்கின்றது.

நட்டப் பெருமானால் ஞானங் குழைத்தளித்த
சிட்டப் பெருமான் திருப்பதியம் - முட்டாமைக்
கேட்போர்க்கு மண்டபத்தைச் செய்தான்தெவ்
வேந்தர்கெட
வாட்போக்குந் தொண்டையார் மன்.

## கல்வெட்டு உரைநடை

12ஆம் நூற்றண்டில் வழங்கிய உரைநடையினை உரையாசிரியர்தம் உரைகளிலும் கல்வெட்டுகளிலும் மட்டுமே காண்கிறோம். சோழர், பாண்டியர், சிற்றரசர்கள், இலங்கைத் தமிழ் மன்னர்கள் ஆகிய அனைவர் கல்வெட்டுகளிலும் இந்த நூற்றாண்டின் உரைநடை காணப்படுகிறது. ஓரளவு பேச்சு நடையினை இதில் காணலாம். மேலும் சமுதாயத்தின் பல்துறைச் செய்திகளையும், துறைகளின் சிறப்புச் சொற்களையும் அறிந்து கொள்ள இவ்வுரைநடைப் பகுதிகள் பெரிதும் உதவுகின்றன. சான்றாகப் பின்வரும் முதற் குலோத்துங்க சோழன் கல்வெட்டின் நடையைக் காணலாம்.

> ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவருக்கு யாண்டு 41 ஆவது ஜயங்கொண்ட சோழ மண்டலத்து ஊற்றுக் காட்டுக் கோட்டத்து ஊற்றுக் காட்டுநாட்டு குலோத்துங்க சோழச் சதுர்வேதி மங்கலத்துப் பெருங்குறி சபையோம் பூமி நிலவிலையாவணக் கையெழுத்து ... இத்தேவர் கோயிலிலே கருணாகரஞ் சாலை அக்ர போஜனத்துக்கு கலம் அஞ்சுக்கு அரிசி குறுணி இருநாழிக்கும் நெல்லு முக்குறுணி ஒருநாழியும் கறி மூன்றுக்கு நெல் முந்நாழியும் மோருக்கு நெல்லிரு நாழியும் உப்புக்கு நெல்நாழியும் நெய் ஆழாக்குக்கு நெல்லு முந்நாழியும் பாக்கு பத்துக்கும் வெற்றிலை நாற்பதுக்கும் நெல்லிரு நாழியும் அடுவானுக்கு நெல்லுக்குறுணியும் சேக்கலத்துக்கு நெல் நாழியும் விறகுக்கு நெல் நாழியும் இப்படி உண்ணக் கடவதாக'

கல்வெட்டு உரைநடையினைப் பொறுத்தவரை கிடைக்கும் தமிழ்க் கல்வெட்டுகள் அனைத்தும் ஒரே நடையிலேயே அமைந்துள்ளன. எனவே இடவேறுபாடு, நடைவேறுபாட்டுக்குக் காரணமாக அமையவில்லை எனலாம்.

## 13ஆம் நூற்றாண்டு

### கல்வெட்டு மூலம் அறியப்பெறும் நூல்கள்

பிற்காலச் சோழரின் ஆட்சியில், சிறப்பான பல நூல்கள் செய்யப்பெற்றன என்பதை அவர்கள் காலக் கல்வெட்டுகள் பதிவு செய்துள்ளன. அவ்வகையில் தெரியவரும் நூல்கள், புலவர்கள் பற்றி இங்குக் காணலாம்.

### 1. அருள்நிலை விசாகன் பாரதம்

மூன்றாம் குலோத்துங்கனின் 32ஆம் ஆட்சி ஆண்டில் (கி.பி.1210) திருவாலங்காட்டில் உள்ள இறைவனுக்குக் குன்றவத்தன கோட்டத்து இல்லத்தூர் நாட்டு அரும்பாக்கமுடைய அருள்நிலை விசாகன் திரைலோக்ய மல்லன் வத்ஸரா்சன் என்பான் நந்தாவிளக்கு வைத்தான் என்பதைக் கூறும் கல்வெட்டு, அவ்விசாகனைப் 'பாரதந்தன்னை அருந்தமிழ்ப் படுத்திச் சிவநெறி கண்டனன்' என்று கூறுகிறது. எனவே இக்காலத்தில் தமிழில் ஒரு பாரதம் செய்யப்பட்டிருந்தது என்று தெரிகிறது. இப் பாரத நூல் இன்று வழக்கில் இல்லை.

### 2. சிந்து இலக்கியம்

மூன்றாம் இராசராசனின் 21ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி.1237) திருவாழி பரப்பினான் கூத்தன் என்பான் சிந்துப் பிரபந்தம் ஒன்று பாடி, பொத்தப்பிச் சோழன் திருக்காளத்தி தேவனிடம், வள்ளுவப் பாக்கம் என்ற ஊரினைக் கொடையாகப் பெற்றான் என்று காஞ்சிபுரம் வரதராசப் பெருமாள் கோயில் கல்வெட்டு குறிக்கிறது. இந்நூல் கச்சித் திருமால் மீது பாடப்பெற்றதாக இருக்கலாம். இது சிந்து வகையில் தெரியவரும் முதல்நூல் என்பதும் குறிப்பிடத்தக்கது. இன்று இது கிடைக்கவில்லை.

### 3. போர்வஞ்சி

பாண்டிநாட்டுப் பொன்னமராவதிப் பகுதியில் வாழ்ந்த போர் மறவர்கள் மீது 'போர்வஞ்சி' என்னும் இலக்கியம் பாடிய தேவன் திருவரன்குளமுடையான் என்பாருக்கு அவர்கள் 'மறச்சக்கரவர்த்திப் பிள்ளை' என்ற பட்டமும், தூத்துக்குடி என்ற ஊரில் பாதியும் அளித்துச் சிறப்பித்துள்ளனர். மாறவர்மன் சுந்தரபாண்டியனின் 11ஆம் ஆட்சியாண்டுக் (கி.பி.1227) கல்வெட்டு இதனைக் குறிப்பிடுகிறது. இப்புலவரின் இயற்பெயர் தெரியவில்லை. இந் நூலும் இப்போது வழக்கில் இல்லை.

### 4. காங்கேயன் பிள்ளைத்தமிழ்

மாறவர்மன் சுந்தரபாண்டியனின் 14ஆம் ஆட்சி ஆண்டில் (கி.பி.1230) பாண்டிநாட்டுப் பெரிச்சியூர் கொடிக்கொண்டான் பெரியான் ஆதிச்சதேவன் என்பார், கண்டன் உதயஞ்செய்தான் காங்கேயன் என்ற அதிகாரி மீது, பிள்ளைத்தமிழ் இலக்கியம் ஒன்று

பாடினார் என்றறிகிறோம். அதற்காகச் சாத்தனேரி என்ற ஊரில் நிலம் அளிக்கப் பெற்றார் என்பதைப் பெரிச்சி கோயிலில் உள்ள சிவன் கோயிற் கல்வெட்டு கூறுகிறது. நூல் கிடைக்கவில்லை.

### பல்வகைப் பாடல்கள்

தனியுரிமை கொண்டு அரசாண்ட மன்னர்கள் மட்டுமின்றி, சிற்றரசர்களாக ஆண்ட பலரும் தம் வெற்றிகளையும், செய்த திருப்பணிகளையும் பாடல்களாகப் பொறிக்கின்ற மரபினைப் பெரிதும் காண்கிறோம். சிற்றரசர்களில் பெருஞ்சிறப்புப் பெற்ற காடவராயன் கோப்பெருஞ்சிங்கனும், ஆறகழூர் மகதேசனும், தகடூர் அதியன் ராஜராஜ அதிகமானும் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களைப் பற்றிய பல செய்திகள் பாடல்களாகவே கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. அதிலும் கோப்பெருஞ்சிங்கன் தானே தமிழிலும், வடமொழியிலும், இசையிலும், நடனத்திலும் பெரும் புலவனாய் வாழ்ந்திருக்கின்றான் என்பதை அவன் தரித்த பல பட்டப் பெயர்கள் காட்டுகின்றன. இவன் செய்த பாடல்கள் ஆந்திர மாநிலம் கோதாவரி மாவட்டம் திராட்சாராமத்தில் (இடர்க்கரம்பை) உள்ள கல்வெட்டுகளிலும் இடம் பெற்றுள்ளன. அதியனைக் குறித்த பாடல்கள், ஆந்திர நாட்டு வட்டிகம் சிவன் கோயிற் சுவர்களில் காணப்படுகின்றன. பின்வருவன சில எடுத்துக் காட்டுகள் ஆகும். கோப்பெருஞ்சிங்கனைப் புகழும் வாயலூர்ப் பாடல்:

> பின்னிகாவல அவனி நாராயண
> பேணு செந்தமிழ் வாழப்
> பிறந்த காடவ கோப்பெருஞ் சிங்கநின்
> பெருமையார் புகழ்வாரே

இக் கோப்பெருஞ்சிங்கன் சோழமன்னன் மூன்றாம் இராசராசனைச் சேந்தமங்கலத்தில் சிறையிலிட்டதைக் குறிப்பது பின்வரும் பாடல்:

> **திறையிட் டிருமின்கள் தெவ்வேந்திர் செம்பொன்**
> **துறையிட்ட பூம்புகார்ச் சோழன் - சிறைகிடந்த**
> **கோட்டந் தனைநினைமின் கோப்பெருஞ்சிங் கன்கமல**
> **நாட்டங் கடைசிவந்த நாள்.**

ஆறகழூர் மகதேசன் திருவண்ணாமலைக் கோயிலுக்குப் பல திருப்பணிகள் செய்தவன். வாணகோவரையன் பொன்பரப்பினான் என்றும் இவனுக்குப் பெயர். அவனைப் புகழும் பாடல்கள் 22 அண்ணாமலையார் கோயிலில் பொறிக்கப் பெற்றுள்ளன. அவனது

வெற்றியைக் குறிக்கும் பாடல்களும் பல உள்ளன. அவன் வீரத்தைக் குறிக்கிறது பின்வரும் பாடல்:

**தாரும் முடியும் முரசும் தமக்குரிய**
**பாரும் உடன்பெறுவர் பார்வேந்தர் – வீரப்**
**பெருமாள் மகதேசன் பேரெழுதித் தத்தம்**
**திருமார்பில் ஆளோலை செய்து.**

இதுபோலவே பாண்டிய மன்னர்கள் தில்லைக்குப் பெருஞ்சிறப்புச் செய்தனர். அவையெல்லாம் பாடல்களாகத் தில்லையில் பொறிக்கப்பெற்றுள்ளன. தில்லையில் சுந்தரபாண்டியன் துலாபாரஞ் செய்து தானமளித்ததைப் பின்வரும் கல்வெட்டுப் பாடல் தெரிவிக்கின்றது.

**இனவரிக் கிம்புரி வெண்பிறைக் கோட்டிகல் வெங்கடுங்கட்**
**சினமதத்த வெங்கரிச் சுந்தரத் தென்னவன் தில்லைமன்றில்**
**வனசத் திருவுடன் செஞ்சொற் றிருவை மணந்ததொக்கும்**
**கனகத் துலையுடன் முத்தத் துலையிற் கலந்ததுவே'.**

இவை போன்று கல்வெட்டில் இடம் பெற்றுள்ள பாடல்கள் மிகப்பல.

# 6. இலக்கிய உரைகள்

*10ஆம் நூற்றாண்டு*

*மணக்குடவர் – திருக்குறள் உரை*

கி.பி. பத்தாம் நூற்றாண்டு முதல் தமிழ் இலக்கிய இலக்கணங்களுக்கு உரை காணும் முயற்சிகள் எழுத்துவடிவில் நமக்குக் கிடைக்கத் தொடங்குகின்றன. இதற்கு முந்திய நூற்றாண்டுகளிலேயே உரைகாணும் முயற்சிகள் மேற்கொள்ளப் பெற்றிருத்தல் வேண்டும். அவை வாய்மொழியாக ஆசிரியர் - மாணவர் என்றும் மரபில் நடைமுறையில் இருந்திருக்கிலாம்; அல்லது எழுத்து வடிவில் தோன்றி வழக்கிழந்தும் இருக்கலாம். இந்த நூற்றாண்டு முதல் எழுத்து வடிவம் பெற்ற உரைகளில் முன்னைய உரைவேறுபாடுகள், பாடவேறுபாடுகள் பற்றிய குறிப்புகள் காணப்படுதிலின் இச்செய்திகள் நமக்குப் புலனாகின்றன.

பத்தாம் நூற்றாண்டில் தோன்றியனவாக இரண்டு உரைகளை இலக்கிய வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். ஒன்று, இறையனார் களவியல் என்னும் இலக்கணத்திற்கு எழுந்த உரை. மற்றொன்று திருக்குறளுக்கு மணக்குடவர் என்னும் அறிஞரால் எழுதப்பட்டது. இவற்றுள் களவியலுரை ஒன்பதாம் நூற்றாண்டிலேயே எழுத்து வடிவம் பெற்றுவிட்டது எனக் கருதுவோரும் உண்டு.[4]

திருக்குறளுக்குப் பதின்மர் உரைசெய்தனர் என்னும் செய்தியைத்,

**தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்**
**பரிதி பரிமே லழகர் – திருமலையர்**
**மல்லர் பரிப்பெருமாள் காலிங்கர் வள்ளுவர் நூற்கு**
**எல்லையுரை செய்தார் இவர்.**

---

4. இந்த வரலாற்று வரிசையில் இவ்வுரை ஒன்பதாம் நூற்றாண்டுப் பகுதியில் ஆராயப்படுகிறது.

என்னும் பழம்பாடல் நமக்குக் கூறுகிறது. இப்பாடலின் ஆசிரியர், காலம் முதலாயின அறியப்படவில்லை. தொண்டைமண்டல சதகம் 41 ஆம் பாடல் உரையில் மேற்கோளாக இந்த வெண்பா காணப்படுகிறது. மேற்கோளாதலின் இந்தச் சதகத்திற்கு முந்திய காலத்தது என்று மட்டுமே கூற முடிகிறது. எவ்வளவு காலத்திற்கு முற்பட்டது எனக் கூற இயலவில்லை.

இப்பதின்மருள் மணக்குடவர், பரிப்பெருமாள், காலிங்கர், பரிமேலழகர், பரிதியார் என்னும் ஐவரின் உரைகள் மட்டுமே கிடைக்கப்பெற்று அச்சேறியுள்ளன. ஏனையோர் உரைகள் கிடைக்கவில்லை.

மணக்குடவரைப் பற்றிய வரலாற்றுச் செய்திகள் எவையும் கிடைக்கவில்லை. இவருடைய காலத்தைக் குறிப்பிடுவதற்கான அகச் சான்றுகளும் கிடைக்கவில்லை. எனினும் பதினொன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கு உரியவர் என்று சில சான்றுகளால் துணியப்படுகின்ற பரிப்பெருமாள் பெரும்பாலும் மணக்குடவரின் உரையைத் தழுவியே உரை செய்திருப்பதால், பரிப்பெருமாளுக்கு இவர் முந்திய காலத்தவர் என்பது தெளிவாகிறது[5]. எனவே மணக்குடவரின் உரை பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கு உரியது எனக் கருதப்படுகிறது.

மணக்குடவரின் குறளுரை எளிமையும் தெளிவும் மிக்கதாக அமைந்துள்ளது. மணக்குடவர் மூலபாடத்தை ஒட்டிச் சென்று ஒரு சொல்விடாமல் உரை எழுதிச் செல்கிறார். சில இடங்களில் தனித்த சொற்களுக்கு விசேட உரையும் நுண்ணிய விளக்கங்களும் தருகிறார். அதிகாரத் தலைப்புகளை விளக்கிப் பின்னர்த் தனிக் குறள்களுக்கு உரை தருதல், அதிகார இறுதியில் அவ்வதிகாரக் குறட்பாக்களின் கருத்தைத் தொகுத்துக் கூறுதல் (நீத்தார் பெருமை), அதிகாரத்தின் இடையிலும் பொருள் தொடர்புடைய குறட்பாக்களின் கருத்தைத் தொகுத்துக் கூறுதல் (வான்சிறப்பு) ஆகியன மணக்குடவரின் உரையியல்புகளாகக் காணப்படுகின்றன. இவ் இயல்புகள் பெரும்பான்மையான அதிகாரங்களுள் காணப்படுகின்றன. சிலவற்றில் இல்லை. பிற்காலத்தே பரிமேலழகர் இவ் இயல்புகளை வரன்முறைப் படுத்தித் தவறாமல் ஒவ்வோர் அதிகாரத்திலும் பின்பற்றுவதைக் காண்கிறோம். இவ்வகையில் மணக்குடவரின் உரை

---

5. மு. அருணாசலம், *தமிழிலக்கிய வரலாறு* - பத்தம் நூற்றாண்டு, ப. 149.

பரிமேலழகருக்கு வழி காட்டியாக அமைந்திருக்கலாம் எனக் கருதுவதில் பிழையேதுமில்லை.

வடநூற் கருத்துகளைக் காட்டிக் குறட்பொருளை விளக்கும் முறையை மணக்குடவர் மேற்கொள்ளவில்லை. தமிழ் மரபிற்கேற்பவே உரைகூறிச் செல்லும் பாங்கை இவர் உரையில் காண்கிறோம். எனினும் தேவைப்படும் இடங்களில், "சந்நியாசம், கன்மம், சந்தான நாசம், வன்னாச்சிரம தன்மம், சீவன்" போன்ற வடசொற்களைப் பயன்படுத்தக் காண்கிறோம். மேலும் "நீத்தார் வெகுளியால் நகுஷன் பெரும் பாம்பாயினான்; இவ்வுலகின்கண் மிகத் தவஞ்செய்வோர் உளரானால் இந்திரன் தன்பதம் இழக்கின்றானாக நடுங்கும் (நீத்தார் பெருமை); மார்க்கண்டேயன் தப்பினாற்போல (தவம்); அர்ச்சுனன் தவமறைந்து அல்லவை செய்தான் (கூடாவொழுக்கம்)" என்று வடபுலஞ் சார்ந்த புராணக் கருத்துகளையும் மணக்குடவர் தம் உரையுள் சுட்டி விளக்குதலைக் காண்கிறோம்.

பிற்காலத்து உரையாசிரியர்கள் தமிழ் வடமொழி மரபுகளைச் சார்ந்த பல்வேறு நூல்களில் இருந்து மேற்கோள்களை எடுத்துக்காட்டும் மரபுடையவர்களாகக் காணப்படுகின்றனர். முதல் இலக்கிய உரையாசிரியராகிய மணக்குடவரிடம் இந்த மரபு காணப்படவில்லை. மிக அரிதாக நாலடியாரிலிருந்தும் நான்மணிக்கடிகையிலிருந்தும் சில அடிகளை உரைநடையாகக் காட்டிச் செல்கிறார்.

பிற உரையாசிரிர்களின் கருத்துகளை ஓரிரு இடங்களில் (குறள் 16, 390) இவர் குறிப்பிட்டாலும், இவருக்கு முன் குறளுக்கு உரைகள் எழுந்ததாகத் தெரியவில்லை. மேலே குறிப்பிட்டவாறு வாய்மொழியாக வழங்கி வந்த உரைநெறிகளைக் குறிப்பிடுகிறார் என்று கொள்ளலாம்.

திருக்குறளில் இன்று காணப்படும் பால், இயல், பாகுபாடுகளும், அதிகாரங்களின் முறைவைப்பும் திருவள்ளுவராலேயே செய்யப்பட்டனவா என்று உறுதியாகக் கூற இயலவில்லை. திருவள்ளுவ மாலை குறிப்பிடும் செய்திகளை வைத்தே ஆய்வாளர்கள் இப்பாகுபாடு பற்றிய கருத்துகளை முன்வைக்கின்றனர். ஆனால் திருவள்ளுவ மாலை பிற்காலத்துத் தொகுப்பு என மு. அருணாசலம் கருதுகிறார். அவர் கருத்துப்படி,

> 53 பாடல்களைக் கொண்ட திருவள்ளுவமாலை திருவள்ளுவர் காலத்தில் பாடப்பெற்றதன்று. சில

பாடல்கள் (பத்துக்குக் குறைவு) பழமையானவை. இவற்றுடன் மிகப் பலவான புதிய பாடல்களைத்தாமே எழுதிச் சேர்த்துப் பிற்காலப் புலவர் ஒருவர் திருவள்ளுவ மாலை எனப் பெயரிட்டார்; பாடல்களுக்குச் சங்கப் புலவர் பெயர்களையும்சூட்டினார். . . இவர் காலமும் கல்லாடர் காலமாகிய கி.பி.1050 ஐ ஒட்டியே இருக்கும். (தமிழ் இலக்கிய வர்லாறு, 11ஆம் நூற். பக். 55 - 56)

இப்போதுள்ள முப்பால் பகுப்பு அவற்றின் அதிகாரங்களாக 38,70,25 என்னும் பாகுபாடு, பாயிரவியல் முதலாகக் கற்பியல் ஈறாக உள்ள இயல் பிரிவுகள் எல்லாம் மணக்குடவர் உரையில்தான் முதன்முலாகக் காணப்படுகின்றன. பொருட்பாலை அரசியல், அமைச்சியல், பொருளியல், நட்பியல், துன்பவியல், குடியியல் என ஆறாக மணக்குடவர் பகுத்துள்ளார். பரிமேலழகர் அரசியல், அங்கவியல், ஒழிபியல் என மூன்றாகப் பகுத்துள்ளார். இந்த வேறுபாடு தவிர ஏனையவெல்லாம் பரிமேல்ழகரால் உள்ளவாறே பின்பற்றப் பட்டுள்ளன.

உரைநெறியில், பரிப்பெருமாள், பெரும்பாலும் மணக்குடவர் உரையைச் சில இடங்களில் பெயர்த்துக் கொண்டும் பல இடங்களில் மாற்றி எழுதிக் கொண்டும் சென்றுள்ளார். பரிமேலழகர் இவ்வாறு செய்யவில்லையாயினும், மணக்குடவரின் உரையை நன்கு கற்று அதன்வழியே தம் உரையைச் செப்பம் செய்து, தம் நுண்மாண் நுழைபுலத்தால் பலவற்றைப் புதியனவாகச் சேர்த்து அற்புதமான தம் உரையைப் படைத்துள்ளார் எனத் தெளிவாகக் கூறலாம். 412, 675, 737, 742, 817, 1037 என்னும் குறட்பாக்களுக்கு அமைந்த பரிமேலழகரின் உரையை மணக்குடவர் உரையுடன் ஒப்பிட்டு ஆராயின் மணக்குடவரின் வழித்தடம் நன்கு விளங்கும். அதிகார இயைபு கூறும் அவதாரிகைகளும், அதிகாரங்களுக்குள் அமைந்த குறள் வைப்பு முறையும் இக் கூற்றுக்கு மேலும் வலுவூட்டக் காணலாம். எனவே மணக்குடவரின் திருக்குறள் உரை. காலநிரல்படி மட்டும் முதல் உரையாக அமையாமல், பிற உரைகள் எல்லம் நடந்து செல்லப் பாவிய நல்லதொரு உரைத்தடமாகவும் அமைந்துள்ளமையைக் காண்கிறோம்.

## பதிப்பு

1917 வ.உ.சிதம்பரம் பிள்ளை, **அறத்துப்பால் – மணக்குடவர் உரை** (தூத்துக்குடி: கே. ஆர். பிரஸ்)

1925 கா.பொன்னுசாமி நாட்டார், **திருக்குறள் – மணக்குடவர் உரை**(நோபில் அச்சியந்திர சாலை)

(1950) 1952 ச.தண்டபாணி தேசிகர், **திருக்குறள் உரைவளம்** தருமபுர ஆதீன வெளியீடு.

(1957) 1959 தி. பட்டுச்சாமி ஓதுவார், **திருக்குறள் உரைக்கொத்து**, (திருப்பனந்தாள்: காசி மட வெளியீடு)

1968 ஆர்.கன்னியப்ப நாயக்கர், **திருக்குறள் உரைக்களஞ்சியம்** (சென்னை: வானதி பதிப்பகம்)

1973 **திருக்குறள் மணக்குடவர் உரை**, (திருப்பனந்தாள்: காசி மட வெளியீடு)

## 11ஆம் நூற்றாண்டு

### சிலப்பதிகார அரும்பதவுரை

தமிழிலக்கியங்களுக்குத் தோனறிய உரைகளில் சில கால வெள்ளத்தில் மறைந்தன. நமக்குக் கிடைப்பனவற்றுள் சென்ற நூற்றாண்டில் (10) திருக்குறளுக்கு எழுதப்பட்ட மணக்குடவர் உரையே முதலாவது எனலாம். அதனையடுத்துப் பதினொன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் சிலப்பதிகார அரும்பதவுரை தோன்றியது.

இந்த உரையின் ஆசிரியரைப் பற்றி எதுவும் தெரியவில்லை. இவரை முதன்முலாகக் குறிப்பிடும் அடியார்க்கு நல்லார் இவரை அரும்பதவுரையாசிரியர் என்று கூறுகிறார். எனவே அவர் காலத்திலேயே இவ்வுரையாசிரியரின் பெயர், ஊர் முதலான விவரங்கள் மறைந்து போயிருக்கலாம் எனக் கருத வேண்டியுள்ளது.

அரும்பதவுரை என்று அடியார்க்கு நல்லாரால் குறிப்பிடப்படினும், இந்தவுரை வெறும் அருஞ் சொற்களுக்கு மட்டும் பொருள் கூறுவதாக அமையவில்லை. வினை முடிபு காட்டுதல், பொருள் தொடர்பு காட்டுதல், அரங்கேற்றுக் காதை, கானல்வரி போன்ற காதைகளுக்கு விரிந்த உரையும் விளக்கமும் தருதல் போன்ற உரை நெறிகளைக் காணுமிடத்து இதனைப் பேருரை என்றே கூறினும் தவறாகாது. இவ்வாறிருக்க அரும்பதவுரைகாரர் என இதன் ஆசிரியர் குறிப்பிடப்பெறுவது வியப்பைத் தருவதாக உள்ளது.

சிலப்பதிகாரத்துக்கு எழுதிய அல்லது எழுதப்பட்டு இன்று நமக்குக் கிடைக்கின்ற முதல் உரையாகிய அரும்பதவுரை சிலப்பதிகாரம் முழுமைக்கும் கிடைத்துள்ளமை தமிழ்மொழி மற்றும் பண்பாட்டு ஆராய்ச்சிக்குப் பெரிதும் துணை செய்கிறது. சிலப்பதிகாரம் இயற்றப்பெற்ற காலத்தில் தமிழகத்தே நிலவிய பண்டைத் தமிழ் மரபுகள் பலவற்றை உணர்ந்து கொள்ள

அரும்பதவுரைதான் நமக்கு அடிப்படைக் கருவியாகப் பயன்படுகிறது. இதனையொட்டியே அடியார்க்கு நல்லார் உரைசெல்லுதலின் இவ்வுரையின் இன்றியமையாமை இனிது விளங்கும்.

பல்துறைச் செய்திகளைப் பொருத்தி விளக்குதல், பிற உரைகளைக் குறிப்பிட்டுச் செல்லுதல், பாட பேதங்களைக் குறிப்பிடுதல், மேற்கோள் தந்து விளக்குதல், அகப்பொருள் துறைகளை வேண்டிய இடங்களில் தந்து விளக்குதல், ஐந்திர வியாகரணம், மயன்மதம் போன்ற வடமொழி நூல்களைக் காட்டிச் செல்லுதல், அருஞ்சொற்களுக்குப் பொருள் கூறுதல், வடசொற்களை மிகுதியாகப் பயன்படுத்துதல் என்பன இவ்வுரையின் சிறப்பில்புகளாகக் காணப்படுகின்றன.

சிலப்பதிகாரத்தில் இடம்பெறும் தமிழ்ச் சொற்களுக்கு வடமொழிச் சொற்களைத் தந்து பொருள் கூறும் இவ்வுரையின் போக்கை ஊன்றி நோக்கின், நூலுக்கும் உரைக்கும் இடையிலான காலகட்டத்தில் தமிழ்ப் பண்பாட்டில் நேர்ந்த மாற்றங்களைக் கணித்தறியலாம். எடுத்துக்காட்டாகக் சிலவற்றைக் கூறுலாம்.[6]

| | | |
|---|---|---|
| மூலம் | - | உரை |
| பரிகடவுநர் | - | அசுவவாரியர் |
| ஐந்துகேள்வி | - | திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் |
| தெய்வ உத்தி | - | சீதேவி என்னும் ஓர் அணிகலன் |
| வெண்குன்றம் | - | சுவாமி மலை |
| பாரதி | - | பைரவி |
| கையுறை | - | பாகுடம் |
| கள்வரிக்கோலம் | - | கிருத்திரிம வேடம் |
| கருணை மறவ | - | கிருபா வீரனே |
| கோமுறை | - | இராச நீதி |
| படிப்புறம் | - | அர்ச்சனா போகம் |
| வானவர் போற்றும் வழி | - | மோட்ச மார்க்கம் |
| மாளிகை | - | மந்திரம் |

6 மு. அருணாசலம், **தமிழிலக்கிய வரலாறு** - பதினொன்றாம் நூற்றாண்டு, ப.77.

| | | |
|---|---|---|
| பெற்றோர் | - | மாதா பிதா |
| கதிரொழிகாறும் | - | சந்திராதித்தர் உள்ளளவும் |
| மங்கல வணி | - | மாங்கல்ய சூத்திரம் |
| அந்தி விழவு | - | சீபலி |
| நீரணி விழவு | - | திருவபிடேக விழவு |

இலக்கிய வழக்கிற்கும் பேச்சு வழக்கிற்கும் இடையிலான வேறுபாடாக இத்தகைய உரைப் போக்கைக் கருதலாமா என்னும் சிந்தனையும் இதன் தொடர்பாக எழலாம். சமுதாயவியல், வரலாற்று மொழியியல் போன்ற துறைகளின் சிந்தனைக்குரியதாக இவ்வேறுபாட்டை அல்லது வளர்ச்சி மாற்றத்தைச் சுட்டலாம்.

தமக்கு முன்னும் சிலப்பதிகார உரைகள் இருந்தன என்று அரும்பதவுரைகார் பல இடங்களில் குறிப்பிடுகிறார் :

> **ஆடகமாடம்-திருவனந்தபுரம்; இரவிபுரம் என்பாருமுளர். அரங்கம்-திருவரங்கம்; ஆற்றிடைக் குறை என்பாருமுளர். எழுத்தெழுத்தாக இசைக்கும் குழலோன்-அன்றியும் 'சரிகமபதநி' என்பாரும் உளர்.**

அரும்பதவுரைகாரருக்கு முன்னர் வழக்கிலிருந்த இத்தகைய பல பெயர்களையும் இசை தொடர்பான சொற்களையும் நாம் அறிந்துகொள்ள இவ்வுரை பெரிதும் பயன்படுகிறது.

மூலபாட ஆய்வுக்கும் பண்டைத் தமிழின் முத்திறப் பாகுபாடு பற்றிய நூல்கள், மரபுகள் போன்றவற்றை அறிந்து கொள்ளவும், பழந்தமிழ் நூல்களைப் பற்றிய விவரங்களை அறிவதற்கும், வடமொழி நூல்களும், சொற்களும், வாழ்வியல் வழக்காறுகளும் தமிழகச் சமுதாயத்தில் விரவி நின்ற பாங்கு, உடன்காலச் சமய வழக்குகள் போன்றவற்றை அறிந்து கொள்ளவும் பேருதவி செய்யவல்ல இந்த அரும்பத உரையைத் தமிழாராய்ச்சி உலகம் தனிக்கவனம் செலுத்தி ஆழ்ந்து ஆராய்வது அவசியம் எனத் தோன்றுகிறது.

**பதிப்பு**

1892 முதல் பதிப்பு உ.வே. சாமிநாதையர், **சிலப்பதிகாரம்** மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார் உரையுடன்.

**பரிப்பெருமாள் – திருக்குறள் உரை**

திருக்குறளுக்கு உரையெழுதிய பதின்மரில் மணக்குடவரையடுத்துப் பரிப்பெருமாள் என்பவர் இயற்றிய உரை

கிடைத்துள்ளது. இவர் உரைக்குச் சிறப்புப் பாயிரமாக அமைந்துள்ள, "தெள்ளி மொழியியலைத் தேர்ந்துரைத்து" எனத் தொடங்கும் வெண்பாவினால் இவர் பாண்டி மண்டலத்துச் சேது நாட்டில் உள்ள தென் செழுவை என்னும் ஊரினர் எனவும், பொய்யற்ற முப்பாலாகிய குறளுக்குப் பொருளுரைத்தார் எனவும் அறிகிறோம். இவர் பெரும்பாலும் மணக்குடவர் உரையைத் தழுவி எழுதுவதால் அவர் காலமாகிய பத்தாம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டவர் என்பதும், பரிமேலழகர் பரிப்பொருமாள் உரையைச் சில இடங்களில் தழுவிச் செல்வதால் அவர் காலமாகிய பதின்மூனற்றாம் நூற்றாண்டிற்கு முற்பட்டவர் என்பதும் தெளிவாகின்றன. காமத்துப் பாலின் தொடக்கத்தில் அமைந்துள்ள சில விளக்கங்கள் பத்தாம் நூற்றாண்டின இறுதியில் வாழ்ந்த தனஞ்சய கவியின் தசரூபகம் என்னும் வடமொழி நூலைத் தழுவி இவர் கருத்துரைத்துள்ளார் என்பதைத் தெளிவாக்குகின்றன. எனவே பரிப்பெருமாள் பதினொன்றாம் நூற்றாண்டின் இடைப்பகுதி அல்லது இறுதிப் பகுதிக்கு உரியவர் என அறிஞர்கள் கருதுகின்றனர் (மு.அ.11/88-90).

பரிப்பெருமாள் உரையை முதலில் பதிப்பித்த தெ.பொ. பழனியப்ப பிள்ளையும் (1945, 1948),. தருமபுர உரைவளப் பதிப்பும் (1950) திருப்பனந்தாள் காசிமடப்பதிப்பும் (1957) அறத்துப் பாலுக்கு உரிய பரிப் பெருமாளின் உரையைப் பதிப்பிக்கவில்லை. பெரும்பாலும் மணக்குடவர் உரையைப் பின்பற்றித் தம் உரையை இயற்றியுள்ள பரிப்பெருமாள் அறத்துப் பாலுக்கு மட்டும் உரை எழுதாது விட்டனர் எனக் கருத இயலவில்லை. காசிமடம் வெளியிட்ட பொருட்பால், காமத்துப்பால் தொகுதிகளில் பரிப்பெருமாள் உரை சில இடங்களைத் தவிரப் பெரும்பாலான குறட்பாக்களுக்கு மணக்குடவர் உரையோடு சேர்த்தே பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இத்தகைய வேறுபட்ட பதிப்பு முறைக்கு உரிய காரணம் விளங்கவில்லை. காமத்துப்பாலின் இரண்டாம் பதிப்பின் (1961) முன்னுரையில் (ப.6) இப் பதிப்புமுறை பற்றிக் கூறப்படும் காரணம் நூலுள்ளே தரப்பட்டுள்ள உரையமைப்புகளோடு பல இடங்களில் பொருந்தவில்லை. சான்றாக, நலம் புனைந்துரைத்தல் என்னும் அதிகாரத்தின் முதற் குறளுக்குரிய உரையமைப்பைக் கூறலாம். இருவர் உரையும் முற்றிலும் தனித்தனியே பதிப்பிக்கப் பெற்றிருப்பின் இக் குழப்பம் நேராமல் காத்திருக்கலாம்.

"மணக்குடவர் உரையைத் திருத்தியும், மாற்றியும் கூற்று முதலியன சேர்த்தும், ஆங்காங்கு விளக்கவுரைகளோடு விளங்குவது பரிப்பெருமாள் உரை'', என்று மேற்சுட்டிய முன்னுரையில் கூறப்படுவதையும், வேறுபாடின்றி அமைந்த இடங்களில்

இரண்டையும் ஒன்றாகப் பதிப்பித்துள்ளமையையும் நோக்க, இத்தகைய வேறுபாடின்மை கருதிப் பரிப்பொருள் உரையையும் மணக்குடவர் பெயரிலேயே உள்ளடக்கி அல்லது விடுத்து அறத்துப்பால் அச்சிடப்பெற்றதோ என்று எண்ண வேண்டியுள்ளது.

பரிப்பெருமாள் உரைக்குரிய மூல ஏடுகளைத் திரட்டி ஒப்பு நோக்கித் தனியாகப் பதிப்பித்தாலன்றி இவ்வுரை பற்றிய ஐயப்பாடுகளைத் தெளிவிப்பது கடினம்.

மணக்குடவர் உரையைப் பெரும்பாலும் பின்பற்றிச் செல்லும் இயல்புடையதாயினும், பரிப்பெருமாள் உரை தனக்கெனப் பல சிறப்புகளை உடையதாகவும் விளங்குகிறது. பொருள் விளக்கம் தருவதிலும், எடுத்துக்காட்டுகள் தருவதிலும், காமத்துப்பால் பகுதிகளில் மெய்ப்பாடு இன்னது என்று கூறுவதிலும் இவர் தனிக்கவனம் செலுத்தக் காண்கிறோம். இத்தகைய சிறப்புகளால் இவருக்குப் பின்னர் திருக்குறளுக்கு உரை எழுதிய காலிங்கரும், பரிமேலழகரும் பல இடங்களில் இவருடைய உரையயைப் பின்பற்றித் தம் உரையை இயற்றியுள்ளனர். சான்றாகச் சிலவற்றைச் சுட்டலாம்.

| குறள் | பரிப்பெருமாள் | பரிமேலழகர் |
|---|---|---|
| 407 | அறிவிற்கு மாட்சியாவது பொருளைக் கடிதிற் காண்டலும் மறவாமையும் முதலியன | அறிவிற்கு மாட்சிமையாவது பொருளைக் கடிதிற் காண்டலும் மறவாமையும் முதலாயின |
| 899 | வேந்தன் மேய தீம்புனல் உலகமும் என்றார் பிறரும் | வேந்தன் மேய தீம்புனல் உலகமும் என்றார் பிறரும் |
| 944 | நெய்யும் தேனும் இனியவாயினும் தம்மில் அளவொக்குமாயின் கொல்லும். அது போல்வதாம் | தேனும் நெய்யும் தம்முள் அளவொத்து நஞ்சாதல் போல்வனவுமாம் |
| 1087 | நீக்கின் கொல்லும் என்பது கருத்து | உவமை, சிறிது மறையாவழி உவை கொல்லும் என்பது தோன்ற நின்றது. |

| | | |
|---|---|---|
| 1115 | எனவே இனி நெய்தல் பறையே இடைமுரியும்; முரிந்தால் ஒலிப்பது என்றவாறாயிற்று | அதற்குச் செத்தார்க்குரிய நெற்தற் பறையே படுவது என்பதாம். |

திருக்குறட் கருத்துகளை விளக்க இவர் பல வடமொழிக் கதைகளை எடுத்துக் காட்டும் மரபுடையவராகக் காணப்படுகிறார். சான்றாகச் சில:

குற்றங்கடிதல்

குறள் 431 பிறர்மனை நயத்தலால் கெட்டான் இராவணன்.
வெகுளியால் கெட்டான் சனமேசயன்.
நுகர்ச்சியால் கெட்டான் சச்சந்தன்.

432 மாண்பிறந்த மானத்தால் கெட்டான் துரியோதனன்
மாணா உவகையால் கெட்டான் வாதாபி.

437 பிறர்பொருளை விரும்பியதனால் கெட்டான் புரூரவா.

439 தன்னை வியந்தமையால் கெட்டான் கார்த்த வீரியார்ச்சுனன்.

440 காதல காதல் அறியாமல் செலுத்த இயலாமையின் கெட்டான் வத்தராயன்.
(வத்தராயன் யானை பிடிக்கப் போய்ச் சிறைப்பட்டான்)

மேலும் 'தெரிந்து தெளிதல்' என்னும் அதிகாரத்தில் வரும் குறட்பாக்களின் கருத்துகளை விளக்குமிடத்து, "இது சுக்கிரர் மதம் (502), துரோணாசாரியார் மதம் (503), இது கௌடிலியர் மதம் (504), நாரதர் மதம் (505), மகேச்சுரர் மதம் (506), பராசரர் மதம் (507), வியாதன் மதம் (508), உத்தவாசாரியார் மதம் (510)" என வடமொழி நூல் கருத்துகளை ஒப்பிட்டும் உறழ்ந்தும் காட்டும் இயல்புடையதாகவும் பரிப்பெருமாளின் உரை விளங்குகிறது.

பரிப்பெருமாள் வடமொழிப் பயிற்சி மிகுதியும் உடையார் என்பதும், குறள் கருத்துகளை ஒப்பீட்டு நோக்கில் விளக்கும் இயல்புடையோர் என்பதும், இவருடைய உரைநடையில் வடமொழிச் சொற்கள் (தன்வசம், இராசகாரியம் - 387 சாமர்த்தியம் -404, காமக் குரோத லோப மத மானம் உவகை என்னும் ஆறு குற்றமும் (44ஆம் அதிகார விளக்கம்), ஏதிலாரது சித்தம்-440, அமாத்தியர்-494) பயின்று வருகின்றன என்பதும் இவரது திருக்குறள் உரையால் அறியப்படுகின்றன.

### பதிப்பு

1945 தெ.பொ. பழனியப்ப பிள்ளை (ப.ஆ), **திருக்குறள் காமத்துப் பால்**- காலிங்கர், பரிப்பெருமாள் உரை, திருப்பதி: திருவேங்கடேசுவரன் கீழ்க்கலை ஆராய்ச்சிக் கழகம்.

1948 தெ.பொ. பழனியப்ப பிள்ளை (ப.ஆ.) **திருக்குறள் பொருட்பால், அறத்துப்பால் குறைப்பகுதி** - காலிங்கர் பரிப்பெருமாள்உரை. திருப்பதி: திருவேங்கடேசுவரன் கீழ்க்கலை ஆராய்ச்சிக் கழகம்.

1950, 1951, 1952 தண்டபாணி தேசிகர் (ப.ஆ) **திருக்குறள் உரைவளம்:அறத்துப்பால்** (1950), **பொருட்பால்** (1951), காமத்துப்பால்(1952). தருமபுரம் : தருமபுர ஆதீனம்.

1957, 1958, 1959 பட்டுச்சாமி ஓதுவார் (ப.ஆ) **திருக்குறள் உரைக்கொத்து: அறத்துப்பால்** (1957), **காமத்துப்பால்** (1958) **பொருட்பால்** (1959) திருப்பனந்தாள்: காசிமடம்.

## 12ஆம் நூற்றாண்டு

### புறநானூற்றுப் பழைய உரை

புறநானூறு என்னும் சங்கத் தொகைக்கு எழுதப்பட்டு நமக்குக் கிடைத்துள்ள மிகப் பழைய உரை ஒன்றுண்டு. அதன் ஆசிரியர் பெயரோ பிற விவரங்களோ நமக்குக் கிடைத்தில. எனவே புறநானூற்று உரையாசிரியர் என்றே இவர் அறியப்படுகிறார். இவ்வுரை முழுமையாக நமக்குக் கிடைக்கவில்லை. புறநானூற்றின் முதல் 266 பாடல்களுக்கு மட்டுமே இவ்வுரை கிடைத்ததாக உ.வே. சாமிநாதையரவர்கள் மூலமும் உரையுமாக அச்சிட்ட தம் பதிப்பில் குறிப்பிடுகிறார். இந்த உரையின் சிறப்பியல்புகளை உ.வே.சா. அவர்கள் தம்முடைய மூன்றாம் பதிப்பில் மிக விரிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

இந்த உரை ஆற்றொழுக்காக மூலபாடம் எவ்வாறு அமைந்ததோ அதற்கேற்பப் பொருள்கூறும் இயல்புடையது. கொண்டு கூட்டுதல், மாறிக் கூட்டுதல் போன்ற முறைகளை இவர் பின்பற்றவில்லை. இதனால் மூலபாட ஆராய்ச்சி செய்வோர்க்கு இவ்வுரை மிகவும் பயனுள்ளதாக அமைகிறது. ஒவ்வொரு பாடலுக்கும் வினைமுடிபு காட்டி, பிற இலக்கணக் குறிப்புகளையும் தந்து, துறை விளக்கம், துறை இயைபு போன்றவற்றையும் விளக்கி முடிப்பது இவருடைய உரை

நெறியாகக் காணப்படுகிறது. மூலபாடத்தில் இல்லாத சொற்களைப் பெய்து எழுத நேரும் போதெல்லாம் 'ஒரு சொல் வருவிக்க, ஒரு சொல் தரப்பட்டது, ஒரு சொல் கூட்டிப் பொருளுரைக்க', எனக் கூறுவதால் மூலபாடப் பிழைகளைக் களைவதற்கு இவருடைய உரை பேருதவியாகத் திகழ்கிறது.

தமிழ் இலக்கண, இலக்கியப் புலமையோடு, வடமொழி அறிவும், பிற துறைப் புலமையும் மிக்கவராக இவ்வுரையாசிரியர் காணப்படுகிறார். இவர் உரையினால் விளக்கம் பெறும் சங்க காலத் தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகள் மிகப் பல. தொல்காப்பியம், சங்கத் தொகை நூல்கள், நாலடியார், திருக்குறள், புறப்பொருள் வெண்பாமாலை, சிந்தாமணி, தமிழ்நெறி விளக்கம் போன்ற பழம்பெரும் நூல்களை இவ்வுரை மேற்கோளாகக் காட்டுகிறது.

முழுமையாகக் கிடைக்கவில்லையாயினும், இந்த உரையின் சிறப்புகளை நோக்குமிடத்து இவ்வுரைகாரர் இளம்பூரணர், அடியார்க்கு நல்லார் போன்ற புகழ்பெற்ற உரையாசிரியர்களுடன் உடன்வைத்து எண்ணக்கூடிய பெருமையுடையவர் எனக் கூறலாம்.

இளம்பூரணரின் உரையைச் சில இடங்களில் சுட்டிப் பேசுவதனால் அவருக்குப் பிற்பட்டவராகவும் இவருரையின் சில பகுதிகளை அடியார்க்கு நல்லார் மறுத்துரைப்பதால் அவருக்கு முற்பட்டவராகவும் புறநானூற்று உரையாசிரியரைக் கருதலாம். எனவே பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இந்த உரை எழுதப்பட்டிருக்கலாம் எனத் துணியலாம்.

### பதிப்பு

*(1894) 1963 ஆறாம் பதிப்பு, உ.வே. சாமிநாதையர்,* **புறநானூறு மூலமும் பழைய உரையும்** (சென்னை).

### அடியார்க்கு நல்லாரின் சிலப்பதிகார உரை

தமிழிலக்கிய வரலாற்றில் அடியார்க்கு நல்லாரின் சிலப்பதிகார உரைக்கு மிகச் சிறப்பானதோர் இடம் உண்டு. மூலநூலுக்கு ஒப்பானதோர் சிறப்பும் மூலநூலின் சிறப்பை உலகிற்கு உணர்த்திய சிறப்பும் ஒருங்கே உடையது இவ்வுரை எனினும் பொருந்தும். இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழும் விரவிய ஒரே தமிழ்க் காப்பியம் என்னும் பெருமைக்கு உரிதயாகச் சிலப்பதிகாரம் விளங்குவது போல், முத்தமிழையும் விளக்கவல்ல பேருரையாக விளங்குவது அடியார்க்கு நல்லாரின் உரை ஒன்றுமேயாம்.

இத்துணைச் சிறப்புடைய இவ்வுரையாசிரியரைப் பற்றிய வாழ்க்கை வரலாற்று விவரங்கள் எவையும் நமக்குக் கிடைக்கவில்லை. சிலப்பதிகாரப் பதிக உரையின் இறுதியில் காணப்படும் மூன்று செய்யுட்களால் இவ் உரையாசிரியரின் பெயர் அடியாக்கு நல்லான்; இவர் நிரம்பை என்ற ஊரினர்; சிலப்பதிகாரத்திற்குச் சிறந்ததோர் உரை செய்தவர்; பொப்பண்ண காங்கேயன் என்ற சிற்றரசனால் ஆதரிக்கப் பெற்று அவன் விரும்பியதற்கேற்ப இவ் உரையைச் செய்தவர் என்னும் செய்திகள் மட்டும் தெரிய வருகின்றன.

கலிங்கத்துப் பரணிக்குரிய தாழிசைகள் சிலவற்றைக் காட்டுவதாலும், இளம்பூரணர் கருத்துகளைக் குறிப்பிடுவதாலும் அவ்விருவர்க்கும் இவர் பிற்பட்டவர் என்பதும், இவருடைய கருத்துகள் சிலவற்றை நச்சினார்க்கினியர் எடுத்தோதி மறுப்பதனால் அவருக்கு முற்பட்டவர் என்பதும் தெளிவாகின்றன. எனவே அடியார்க்கு நல்லார் பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கு உரியவர் என்று கோபிநாதராவ், உ.வே. சாமிநாதையர், மு.அருணாசலம் போன்ற அறிஞர்கள் கருதுகின்றனர். (மு.அ.12/ 535-37)

கடல் கொண்டதாகக் கருதப்படும் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட பண்டைய தமிழகமாகிய குமரிநாடும் யாறும் ஆகிய நிலப்பகுதி, முச்சங்கங்களின் வரலாறு போன்றவற்றையும், வரலாற்றுக் காலத்திற்கு உட்பட்ட காலத்தில் தமிழில் தோன்றி வழங்கி வந்த தமிழிசை, நாடகம், யாப்பு, மருத்துவம், சோதிடம் போன்றவற்றையும் அறிய உதவும் இன்றியமையாத கருவியாகிய அடியார்க்கு நல்லாரின் உரை நமக்குக் கிடைத்துள்ளது.

சிலப்பதிகாரக் காப்பியத்தின் முதலிரு பிரிவுகளாகிய புகார்க் காண்டத்திற்கும், மதுரைக் காண்டத்திற்கும் அடியார்க்கு நல்லாரின் உரை கிடைத்துள்ளது. இதிலும் புகார்க்காண்டத்தில் உள்ள கானல் வரிக்கும், மதுரைக் காண்டத்தில் ஊர் சூழ்வரிக்குப் பின்னுள்ள நான்கு காதைகளுக்கும் இவருடைய உரை கிடைக்கவில்லை. அதாவது, மொத்தம் 23 காதைகளுள் 18 காதைகளுக்கு மட்டுமே இன்று அடியார்க்கு நல்லாரின் உரை கிடைத்துள்ளது. வஞ்சிக் காண்டம் முழுமைக்கும் இவருடைய உரை கிடைக்கவில்லை.

அடியார்க்கு நல்லர் கானல்வரிக்கும் உரை எழுதினார் என்பது, “அவற்றின் பகுதியெல்லாம் கானல்வரியிற் கூறுதும்” (3/ 13) என அவர் கூறுவதால் தெளிவாகிறது. இனி, “அழற்படு காதைக் கண்ணே விரித்துக் கூறுதும்” (3/107) எனவும், “கட்டுரை காதையுள்

விரியக் கூறுவாம்" (8/45-71) எனவும் கூறுதலின் மதுரைக் காண்டம் முடிய இவர் உரை எழுதியிருந்தார் அல்லது எழுத எண்ணியிருந்தார் என்பது உறுதிப்படுகிறது.

வஞ்சிக் காண்டத்திற்கு இவர் உரையெழுதியமைக்கான இத்தகைய குறிப்புகள் எவையும் கிடைக்கவில்லை. எனினும், சிலப்பதிகார நூற்பிரிவுகளில் சில காதை என்னும் பெயர் பெறாமல் பாடல், வரி, குரவை, மாலை எனப் பெயர் பெற்றமைக்கான விளக்கத்தை முடிவில் கூறுதும் என்னும் குறிப்பு பதிகத்துக்கு இவர் எழுதிய உரையில் காணப்படுவதால் அடியார்க்கு நல்லார் பயன்படுத்திய சிலப்பதிகார ஏட்டில் பதிகமும் வஞ்சிக்காண்டமும் இருந்திருக்கலாம் என்றும், வஞ்சிக்காண்டத்திற்கும் உரையெழுத எண்ணியிருந்தார் அல்லது அப்பகுதிக்குரிய உரை முற்றிலும் மறைந்து போயிருக்கலாம் என்றும் கருத வேண்டியுள்ளது.

சிலப்பதிகாரப் பதிகமும் வஞ்சிக் காண்டமும் இளங்கோவடிகளால் இயற்றப் படவில்லை என்ற ஒரு கருத்தும் அறிஞரிடையே நிலவுகிறது. அதன்படி இவையிரண்டும் பிற்சேர்க்கையாய் இருக்கலாம் எனக் கொள்ளினும், இவையிரண்டிற்கும் அரும்பத வுரையாசிரியர் உரை செய்திருப்பதால் அவர் காலத்திற்கு முன்னரேயே அதாவது பதினொன்றாம் நூற்றாண்டிற்கு முன்னரேயே இத்தகைய இடைச்செருகல் அல்லது பிற்சேர்க்கை நிகழ்ந்திருக்க வேண்டும் என்பது மேற்காட்டிய உரைக் குறிப்புகளால் தெளிவாகிறது. இவ்வாறே இன்று நமக்குக் கிடைத்துள்ள சிலப்பதிகாரத்தின் சில காதைகளின் (2,3,6,8,9,10,16,20,21,22,23) இறுதியில் காணப்படும் வெண்பாக்களும்,நூலின் முகப்பிலும், இறுதியிலும் மற்றும் ஒவ்வொரு காண்டத்தின் இறுதியிலுமாகக் காணப்படும் ஐந்து கட்டுரைகளும் மூல நூலின் பகுதிகளா, அன்றி பிற்சேர்க்கைகளா என்னும் சிந்தனைக்குரிய செய்திகளைச் சிலப்பதிகாரம் பற்றிய தலைப்பின்கீழ்க் கண்டு கொள்க.

ஒவ்வொரு காதையின் தொடக்கத்திலும் அதன்பெயர்க் காரணத்தை இவ்வுரை விளக்கிச் செல்கிறது. அவ்வாறே காதையின் இறுதியில் இன்ன யாப்பினால் இயன்றது என்னும் குறிப்பையும் இவ்வுரை தருகிறது.

நூலின் அகத்தே தொழிற்படும் பாத்திரங்கள், அவை தொடர்பான தொன்மக்கதைகள், இடையிடையே வரும் பழந்தமிழ் வரலாற்றுச் செய்திகள், வடபுல மரபு சார்ந்த கருத்துகள், பெயர்கள், வழக்காறுகள், கதை நிகழும் பெருநகர்களின் அமைப்புகள், கதை மாந்தர் மேற்கொள்ளும் பயணங்களைப்

பற்றிய குறிப்புகள், வழிநெடுகக் காணப்பெறும் நில இயல்புகள், மக்களின் ஒழுகலாறுகள், நூலாசிரியரால் வருணிக்கப்படும் பல்வேறு சமயங்களைச் சார்ந்த கடவுளர்கள், நாட்டுப்புறச் சிறுதெய்வங்கள், பண்டைத் தமிழ் இசை மரபுகள், நாடகக் கலை மரபுகள், இக் கலைகளைக் கூறும் பழந்தமிழ் நூல்கள் என்பன போன்ற பண்டைத்தமிழரின் பல்வேறு பண்பாட்டுக் கூறுகளை அறிந்து கொள்ள உதவும் பெருங்கருவூலமாக அடியார்க்கு நல்லாரின் உரை நமக்குப் பயன்படுகிறது. சிலப்பதிகாரம் சங்கம் மருவிய காலத்துத் தமிழ்ப் பண்பாட்டின் பெட்டகமாக விளங்குகிறது என்னும் வரலாற்று உண்மையை அடியார்க்கு நல்லாரின் உரையினால் தான் நாம் உணர்ந்து கொள்ளமுடிகிறது.

அடியார்க்கு நல்லாரின் உரைச்சிறப்பைச் சிலப்பதிகாரப் பதிக உரையின் இறுதியில் அமைந்துள்ள கீழ்வரும் உரைப்பாயிரச் செய்யுட்கள் இனிது விளக்கா நிற்கின்றன:

**பருந்தும் நிழலும்எனப் பாவும் உரையும்**
**பொருந்துநெறி எல்லாப் பொருளும் – தெரிந்து இப்**
**படியார்க்கு நல்லமிர்தம் பாலித்தான் நன்னூல்**
**அடியார்க்கு நல்லன்என் பான்.**

**ஓரும் தமிழ்ஒரு மூன்றும் உலகுஇன் புறவகுத்துச்**
**சேரன் தெரித்த சிலப்பதி காரத்திற் சேர்ந்த பொருள்**
**ஆரும் தெரிய விரித்துரைத் தான்அடி யார்க்கு**
**நல்லான். . . .**

## பதிப்பு

1880 சோடசாவதானம் சுப்பராய செட்டியார், சிலப்பதிகாரம்– புகார்க்காண்டம் (அடியார்க்கு நல்லார் உரையுடன்) சென்னை.ண

(1892) 1920, 1927 உ.வே. சாமிநாதையர், சிலப்பதிகாரம் (அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார்உரையும்), சென்னை.

## 13ஆம் நூற்றாண்டு

### எட்டுத்தாகை – பழைய உரைகள்

எட்டுத்தொகை நூல்களுள் நற்றிணை தவிர ஏனையவற்றிற்குப் பழைய உரைகள் எழுந்துள்ளன. குறுந்தொகைக்குப் பேராசிரியரும் அவருடைய உரை இல்லாத பகுதிக்கு நச்சினார்க்கினியரும் உரை எழுதினர் என்னும் செய்தி

வரலாற்று நூல்களில் சில குறிப்புகளோடு சொல்லப்படுகிறது. எனினும் இவ்வுரை கிடைக்கவில்லை. ஏனைய ஆறனுள் புறநானூற்றுக்குரிய பழைய உரை பன்னிரண்டாம் நூற்றாண்டுப் பகுதியிலும், பரிபாடலுக்குரிய பரிமேலழகர் உரை தனியாக இதே பகுதியிலும் கலித்தொகைக்குரிய நச்சினார்க்கினியர் உரை பதினான்காம் நூற்றாண்டுப் பகுதியிலும் விளக்கப் படுகின்றன. எஞ்சிய மூன்றிற்குரிய பழைய உரைகளைப் பற்றி இங்குச் சுருக்கமாகக் கூறப்படுகிறது (காண்க : அட்டவணை)

## எட்டுத்தொகை உரைகள்

எட்டுத்தொகை நூல்களைக் குறிக்கும் பழம்பாடல்:

**நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்**
**கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம் புறமென்று**
**இத்திறத்த எட்டுத் தொகை.**

இவ் எட்டு நூல்களுக்கும் தோன்றிய உரைகளின் விவரப் பட்டியல்.

| நூல் | பழைய உரை | உரைதோன்றிய காலம் |
|---|---|---|
| நற்றிணை | கிடைக்கவில்லை | ---- |
| குறுந்தொகை | பேராசிரியர், நச்சினார்க்கினியர் **(உரை கிடைக்கவில்லை)** | 13, 14ஆம் நூற். |
| ஐங்குறு நூறு | பழைய உரை | 13ஆம் நூற். |
| பதிற்றுப் பத்து | பழைய உரை | 13ஆம் நூற். |
| பரிபாடல் | பரிமேலழகர் | 13ஆம் நூற். |
| கலித்தொகை | நச்சினார்க்கினியர் | 14ஆம் நூற். |
| அகநானூறு | பழைய உரை (முதல் 90 பாடல்களுக்கு மட்டும் கிடைத்துள்ளது) | 13ஆம் நூற். |
| புறநானூறு | பழைய உரை (முதல் 266 பாடல்களுக்கு மட்டும் கிடைத்துள்ளது) | 12ஆம் நூற். |

## திருவாய்மொழி வியாக்கியானங்கள்

| பெயர் | ஆசிரியர் | காலம் |
|---|---|---|
| ஆறாயிரப்படி | திருக்குருகைப் பிரான் பிள்ளான் | 12ஆம் நூற். |
| ஒன்பதினாயிரப்படி | நஞ்சீயர் | 13ஆம் நூற். |
| இருபத்து நாலாயிரப்படி | பெரியவாச்சான் பிள்ளை | 13ஆம் நூற். |
| முப்பத்தாறாயிரப்படி (ஈடு) | வடக்குத் திருவீதிப் பிள்ளை (நம்பிள்ளை ஈடு) | 13ஆம் நூற். |
| பன்னீராயிரப்படி | வாதிகேசரி அழகிய மணவாள ஜீயர் | 14ஆம் நூற். |

### குறிப்பு

**படி என்பது கிரந்தம் என்னும் வடசொல்லால் குறிக்கப்பெறும் ஒரு யாப்பளவு. ஒரு கிரந்தம் என்பது ஒற்றொழித்து 32 எழுத்துகளைக் கொண்டதோர் உரை அளவு.**

### ஐங்குறு நூறு - பழைய உரை

ஐங்குறு நூற்றின் மூலத்தையும் பழைய உரையையும் உ.வே.சாமிநாதையரவர்கள் முதலில் 1903 ஆம் ஆண்டில் பதிப்பித்தார். பின்னர் முறையே 1920, 1944 ஆம் ஆண்டுகளில் இரண்டாம் மூன்றாம் பதிப்புகளை வெளியிட்டார். இரண்டாம் பதிப்பின் முகவுரையில் இதன் பழைய உரைபற்றிய விவரங்களைத் தந்துள்ளார். அதன்படி இவ்வுரையில் கருத்துரை என்னும் பகுதி முதலிலும் பொழிப்புரையாக அமைந்துள்ள பழைய உரை அதனையடுத்தும் தரப்பட்டுள்ளன. பல பாடல்களுக்குப் பொழிப்புரைப் பகுதி காணப்பெறவில்லை. எனவே இந்த உரை முழுவதுமாகக் கிடைக்கவில்லை எனத் தெரிகிறது.

இதில் இடம்பெற்றுள்ள கருத்துரை என்பது பாடலுக்குரிய நிகழிடம், கூற்றிற்குரியார், கேட்போர் என்னும் செய்திகளை மட்டும் சுருக்கமாகக் கூறுகிறது. பொழிப்புரையாக அமைந்த பழையவுரை பாடல்களின் பொருளைப் பொழிப்புரையாகவோ, பதசாரமாகவோ தரவில்லை. அகத்துறைத்

தொடர்பான சிறப்பு உத்திகளான உள்ளுறை, இறைச்சி என்பவற்றை விளக்கும் வகையில் பாடலின் மையக் கருத்தை உணர்த்துவதாக அமைந்துள்ளது; சில பாடல்கள் எவ்வாறு, திணையுணர்த்துகின்றன என்றும் விளக்குகிறது. காட்டாக, 'இது பாலைக்குரிய கருப்பொருளாகிய, கோங்கு கூறினமையால், பாலை ஆயிற்று' என்றும் (370), 'இது கருப்பொருளாற் பாலை' (366) எனவும், 'இது காலத்தாற் பாலை'(367) எனவும் வருவனவற்றைச் சுட்டலாம். இத்தகைய பழையவுரை நூல் முழுவதிற்கும் கிடைக்கவில்லை. இவ் உரையாசிரியரைப் பற்றிய விவரங்கள் எவையும் கிடைக்கவில்லை. இது பதின்மூன்றாம் நூற்றாண்டிற்கு உரியது என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

## பதிப்பு

1903 ஐங்குறு நூறு மூலமும் பழையவுரையும் முதல் பதிப்பு. உ.வே. சாமிநாதையர், சென்னை

1920 இரண்டாம் பதிப்பு

1944 மூன்றாம் பதிப்பு, கலியாணசுந்தரையர், சென்னை

## பதிற்றுப்பத்து-பழைய உரை

பதிற்றுப்பத்தின் பழையவுரையை மூலத்துடன் உ.வே. சாமிநாதையரவர்கள் 1904 இல் முதல் முறையாக வெளியிட்டு உதவினார். இவ்வுரையாசிரியரின் பெயரோ, பிற விவரங்களோ எதுவும் கிடைக்கவில்லை. இந்நூலின் 76ஆம் பாடல் 11ஆம் அடியில் வரும் 'சில்லேராளர்' என்னும் தொடருக்கு விளக்கம் தரும்போது," சின்மையை சின்னூல் என்றது போல ஈண்டுச் சிறுமையாகக் கொள்க" என்று இவ்வுரையாசிரியர் குறிப்பிடுகிறார். இங்குச் சின்னூல் என்பது நேமிநாதத்தைக் குறிப்பதாகக் கொண்டு இவ் வுரையாசிரியர் நேமிநாதத்திற்குப் பிற்பட்டவர், அதாவது பதின்மூன்றாம் நூற்றாண்டிற்கு உரியவர் என அறிஞர்கள் கருதுகின்றனர். 'சின்னூல் உரைத்த குணவீர பண்டிதன்' என்னும் தொண்டை மண்டலச் சதகத் தொடர் இக் கருத்துக்கு அரணாக அமைகிறது.

இவ்வுரை பதவுரையாகவும் இல்லாமல் குறிப்புரையாகவும் இல்லாமல் இடைப்பட்ட நிலையில் பாடற்கருத்துகளை விளக்கிச் செல்லும் பாங்கில் அமைந்துள்ளது. இவ்வுரையாசிரியர் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் காணப்பெறும் துறை, வண்ணம், தூக்கு என்பனவற்றைத் தெளிவாக விளக்குகிறார். இத்தகைய பண்டைய

மரபுகளை உணர்ந்துகொள்ளவும், பதிகங்களுக்கு இவர் தரும் விளக்கங்களின் மூலமாகச் சேர அரசர்களைப் பற்றிய விவரங்களை அறிந்து கொள்ளவும் இவ்வுரை பெரிதும் உதவுகிறது.

## பதிப்பு பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும்

1904 - முதல் பதிப்பு, உ.வே. சாமிநாதையர்

1920 - இரண்டாம் பதிப்பு "

1941 - மூன்றாம் பதிப்பு "

1945 - நான்காம் பதிப்பு, S கலியாண சுந்தரையர்

1949 - ஐந்தாம் பதிப்பு, "

## அகநானூறு - பழைய உரை

"அகநானூறு மூலமும் பழைய உரையும்" என்னும் தலைப்பிட்டு 1923, 1926 ஆம் ஆண்டுகளில் முறையே முதலிரு பதிப்புகளையும் சென்னை மயிலாப்பூர் கம்பர் விலாச வே. இராசகோபாலார்யன் என்பவர் வெளியிட்டுள்ளார். இதில் முதல் 90 பாடல்களுக்கு மட்டும் குறிப்புரை என்னும் தலைப்பில் பழையவுரை அச்சிடப்பட்டுள்ளது. சேது சமஸ்தான வித்துவான் ரா. இராகவையங்காரால் பரிசோதிக்கப்பட்டது என்று இப் பதிப்பின் முகவுரை கூறுகிறது. இவ்வுரையின் ஆசிரியருடைய பெயரோ வரலாறோ ஒன்றும் தெரியவில்லை. இவ்வுரையின் ஏட்டில் கிடைத்துள்ள ஒரு குறிப்பைக் கொண்டு (கொல்லம்460) இவ்வுரை பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதிக்கு உரிய தாகலாம் எனக் கருதப்படுகிறது.

இவ்வுரை பல அரிய தமிழ் வழக்குகளையும், பண்டைத் தமிழரியல்புகளையும் புலப்படுத்துகிறது. ஒவ்வொரு பாடலிலும் வழங்கும் திரிசொற்களுக்கும் அருந்தொடர்களுக்கும் பொருள் கூறுகிறது. அகத்திணைக்குரிய உள்ளுறை, இறைச்சிப் பொருள்களை இனிது விளக்குகிறது. வேண்டிய இடங்களில் சொல்முடிபு, பொருள் முடிபு காட்டியும், இலக்கணக் குறிப்புகள் கூறியும், கதைபொதிந்த இடங்களில் அவ்வக் கதைகளை விளக்கியும் செல்லும் இயல்பினதாக இவ்வுரை அமைந்துள்ளது.

## பதிப்பு

1926 வே. இராசகோபாலார்யன், சென்னை: மயிலாப்பூர், கம்பர் விலாசம்.

## திருக்கோவையார் - பேராசிரியர் உரை

மாணிக்கவாசகரின் திருக்கோவையாருக்கு மிக விளக்கமான உரை ஒன்று பேராசிரியர் என்னும் பெயரோடு வழங்குகிறது. தொல்காப்பியத்திற்கு உரைவகுத்த பேராசிரியர் வேறு; கோவையுரை பேராசிரியர் வேறு என்று அறிஞர்கள் கருதுகின்றர் (மு.அ.13/96). சைவ சித்தாந்தக் கருத்துகள் பரவலாக இவ்வுரையில் கையாளப் பெறுவதனால் மெய்கண்டார்-அருள்நந்தி ஆகியோருக்குப் பிற்பட்டவராதல் கூடும். அதனால் பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இவ்வுரை எழுதப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

பன்னிரு திருமுறைகளுள் பண்டைய உரை வாய்க்கப்பெற்றது திருக்கோவையார் மட்டுமே. இக் கோவையுரையாசிரியர் தமக்கு முன்னர் இருந்த பழைய உரையொன்றைப் பல இடங்களில் பொருள் வேறுபாடும் பாடவேறுபாடும் காட்டுவதற்காக எடுத்துக்காட்டுகிறார்.

அகப்பொருள் இலக்கணத்தின் அடிப்படையில் எழுதப்பெற்றுள்ள இவ்வுரையில் பதசாரம், இலக்கணக் குறிப்பு, இலக்கண, இலக்கிய மேற்கோள்கள் ஆகிய கூறுகள் இடம் பெற்றுள்ளன. தொல்காப்பியம், இறையனார் களவியல், தமிழ்நெறி விளக்கம் ஆகிய இலக்கணங்களும், திவாகர நிகண்டும், புறநானூறு, குறுந்தொகை, கலித்தொகை, குறள், நாலடியார், சிலப்பதிகாரம், நாவுக்கரசர் தேவாரம், திருவாசகம் ஆகிய இலக்கியங்களும் இவ்வுரையில் மேற்கோள்களாகக் காட்டப் பெற்றுள்ளன. நம்பியகப்பொருள் என்னும் இலக்கணம் மேற்கோளாகக் காட்டப் பெறவில்லை (மு.அ.13/101).

ஐந்திணைக்குரிய பெயர்கள் அவ்வத்திணைக்குரிய பூக்களால் பெயர்பெற்றன என்று இக் கோவையுரை பேராசிரியர் தம் உரைத் தொடக்கத்தில் கூறுகிறார். இக்குறியீடுகள் "ஏகதேச காரணம் பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறி என்று கொள்ளப்படும்" என விளக்கி, இவை பூக்களால் வந்த பெயர் என்று இளம்பூரணர் கூறுகிறார் (பொருள். அகத். 5). பின்னர் வந்த நச்சினார்க்கினியர் போன்றோர் ஒழுக்கம் பற்றிய குறியீடுகள் என்று கருதுகின்றனர். ஆராய்ச்சிக் காண்டிகையுரைகாரராகிய பாலசுந்தரனார் நிலம், ஒழுகலாறு என்னும் இரண்டினாலும் பெற்ற குறியீடுகள் என்று கருதுகிறார் (அகத்திணையியல், முன்னுரை, LVII).

## பதிப்பு

1922 (நான்காம் பதிப்பு). திருக்கோவையார்– பேராசிரியர் உரை (ப.ஆ.) ஆறுமுக நாவலர்.

## 12ஆம் நூற்றாண்டு

## திருவாய்மொழி – பேருரைகள் (வியாக்கியானங்கள்)

### திருவாய்மொழி ஆறாயிரப்படி

திராவிட வேதம் என்று கருதப்பெறும் நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்குப் பல பேருரைகள் தோன்றியுள்ளன. அவற்றுள் முதலாவதாகக் தோன்றியதுதான் ஆறாயிரப்படி என்னும் புகழ்பெற்ற பேருரை. இதனை இயற்றியவர் பிள்ளான் என்னும் பெயரினர்; திருப்பதியில் வாழ்ந்த பெரிய திருமலை நம்பியின் புதல்வர்; திருவரங்கம் சென்று இராமாநுசரின் சீடராக வாழ்ந்தவர். இவருடைய ஆறாயிரப்படி உரையின் சிறப்புகளால் பெரிதும் மகிழ்ச்சியடைந்த உடையவர் 'திருக்குருகைப் பிரான்' (நம்மாழ்வார்) என்னும் பட்டப்பெயரை இவருக்கு அளித்து ஆசீர்வதித்தார். அன்று முதல் இவர் திருக்குருகைப் பிரான் பிள்ளான் என்றழைக்கப்பட்டு வருகிறார். இராமாநுசருக்கு உடன்காலத்தவராகவும் அவருக்குப் பிறகு சிம்மாசனாதிபதிகளுள் ஒருவராகவும் இருந்து வைணவ தரிசனத்தைப் பரிபாலித்து வந்தவராதலின் இவர் காலத்தைப் பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதி எனக் கூறலாம்.

கிரந்தம் என்னும் வடசொல் ஓர் எழுத்தளவையைக் குறிக்கும். அதாவது ஒற்றொழித்து 32 எழுத்துகளைக்கொண்ட யாப்பளவு. வைணவ உரையாசிரியர்கள் இதனைப் படி என அழைத்தனர். எனவே ஆறாயிரப்படி என்பது ஆறாயிரம் கிரந்தங்களால் இயற்றப்பட்ட உரை எனப் பொருள்படும்.

இந்த உரைதான் மணிப்பிரவாளம் என்னும் கலவை நடையில் எழுதப்பெற்ற முதல் வியாக்கியானமாகக் கருதப்படுகிறது. தமிழும் வடமொழியும் கலந்து எழுதப்பெற்ற இத்தகைய உரைநடை பிள்ளான் காலத்துக்கு முன்னரும் சமணச் சான்றோர்களால் பயன்படுத்தப் பெற்றிருந்ததாயினும், வைணவ உரையாசிரியர்கள்தான் தலைமைசான்ற மொழி நடையாக, ஒரு மொழி மரபாக இவ் உரையைப் போற்றிப் பயன்படுத்தி வந்தனர்.

அடுத்த நூற்றாண்டில் தோன்றிய உரைகள் இந்நடையை முழுக்கப் பயன்படுத்தினவேனும், முதல் உரையாகிய பிள்ளானின்

ஆறாயிரப்படி முற்றிலும் மணிப்பிரவாளமாக அமையாமல் சில இடங்களில் முழுவதும் தமிழ் நடையிலும், சில இடங்களில் முழுவதும் வடமொழியிலும் சில இடங்களில் செம்பாதி கலந்த மணிப்பிரவாளமாகவும் அமைந்திருக்கக் காண்கிறோம். சில காட்டுகள்:

> 'இருடீ கேசன் எம்பிரான்' (2:7:10) என்னும் திருவாய்மொழிக்குத் தன்னழகாலும் செயலாலும் என்னை அடிமை கொண்டவன்; அயர்வறும் அமரர்கள் அதிபதி என்றென்று அவனை ஏத்தி நினைந்து வணங்கு; ... மறந்தும் நம்பி பற்பநாபனை விடாதே கிடாய் நெஞ்சே என்று கொண்டு தம்முடைய நெஞ்சைக் குறை கொள்ளுகிறார் (ஆழ்வார்).

என முழுவதும் தமிழ்ச் சொற்களால் உரைவகுக்கிறார். 'துயரில் சுடரொளி' (3:10:6) என்னும் பாசுரத்திற்கு முற்றிலும் வடமொழி மயமாக உரை கூறுகிறார். 'அஞ்சிறைய மடநாராய்' (1:4:1) என்னும் அற்புதமான பாசுரத்திற்குத் தமிழும் வடமொழியும் செம்பாதி கலந்த மணிப்பிரவாள நடையைப் பயன்படுத்துகிறார். மேலே சுட்டிய மூன்றனுள் முதலிரண்டும் மிகச் சுருக்கமான பொழிப்புரையாக அமைந்திருக்க, மூன்றாவது காட்டு மிக விரிவான வியாக்கியானமாகவே அமைந்துள்ளது. பின்னர் வந்த உரைகளெல்லாம் மூன்றாம் எடுத்துக் காட்டைப் போலவே விரிந்து அமைந்தவை. மணிப்பிரவாள நடையின் தொடக்ககால உரையாதலின் பிள்ளான் உரை இவ்வாறு வேறுபட அமைந்தது போலும்.

இராமானுசராலேயே போற்றிப் புகழ்ந்து ஆசீர்வதிக்கப்பட்டது என்பதும், பின்னர்த் தோன்றிய பல உரைகளும் இவ் உரையின் பல கூறுகளைப் பின்பற்றியுள்ளன என்பதும், ஒரு வியாக்கின பாரம்பரியத்தைத் தொடங்கி வைத்தது என்பதும் திருக்குருகைப் பிரான் பிள்ளை அருளிய ஆறாயிரப்படியின் சிறப்புகளாகக் கொள்ளத்தக்கன.

## மைவண்ண நறுங்குஞ்சி வியாக்கியானம்

திருமங்கையாழ்வாரின் திருநெடுந்தாண்டகத்தின் 21ஆம் பாடலுக்கு பராசர பட்டர் எழுதிய வியாக்கியான நூல். 800 கிரந்த அளவு என்று குறிப்பிடப்படும் இவ்வுரை 38 பக்கங்களில் அச்சிடும் அளவாய் உள்ளது. மணிப் பிரவாளத்தில் அமைந்த உரையை அறிய கீழ்வரும் பகுதி பயன்படும்.

"மைவண்ண நறுங்குஞ்சி இத்யாதி-நாயகனோடே கலந்து பிரிந்து பிரிவாற்றாமல் நோவு படுகிறாளொரு நாயகி, உபாயத்தாலே உபவநத்திலே பூக்கொய்ய வென்று புறப்பட, நாயகனும் வேட்டைக் கென்றுவர, அங்கே உபயம் பலித்து ஸம்ச்லேஷம் ப்ரவிருத்தமாய் நாயகனும் போனவளவிலே இத்தைக் கடைப்பிடித்துத் தலைக்காவலாகநின்ற தோழி வந்து கிட்டி, 'அவன் செய்த படியென்' என்று கேட்க, அவளுக்குப் ப்ரவிருத்தமான படியை நாயகி சொல்லுகிறாள் இப்பாட்டால்".

அகப்பொருள் தொடர்பான இப் பாசுரத்தின் துறைச் சூழலைப் பண்டைய அகமரபுப்படி இவ்வுரை அழகாகப் படம்பிடித்துக் காட்டுகிறது.

### 13ஆம் நூற்றாண்டு

### திருவாய்மொழி ஒன்பதினாயிரப்படி

திருவாய்மொழி ஒன்பதினாயிரப்படி என்னும் மணிப்பிரவாள வியாக்கியானத்தை இயற்றியவர் நஞ்சீயர். மைசூர் மாநிலத்தில் உள்ள திருநாராயணபுரத்தில் மாதவசூரி என்றொரு வேதாந்தி இருந்தார். திருவரங்கத்தில் இருந்து பெரியபட்டர் (1192-1220) மைசூர் சென்று மாதவசூரியை வாதில் வென்று வைணவ தர்மத்திற்கு அவரை மாற்றினார். இல்லறத்தில் வெறுப்புற்ற மாதவ சூரி திருவரங்கம் சென்று பட்டரின் சீடரானார். அப்போது பட்டர் அவருக்கு **'நம் ஜீயர்'** எனத் திருநாமம் சூட்டி ஆசீர்வதித்துத் தம் சீடராகப் பரிகரித்தார். அதுமுதல் அவர் நஞ்சீயர் (1182-1287) என வழங்கப் பெற்றார்.

பட்டரின் திருவுள்ளப்படியே திருவாய்மொழிக்குப் பிள்ளான் அருளிச்செய்த ஆறாயிரப்படியை நன்கு பயின்றும், பட்டரின் சொற்பொழிவுகளை உடனிருந்து கேட்டும் ஆழ்வார் அருளிச் செயல்களில் மிக்க ஈடுபாடு உடையவரானார். அதன் விளைவாகப் பட்டரின் ஆசியுடன் ஒன்பதினாயிரப்படி என்னும் வியாக்கியானத்தைத் திருவாய்மொழிக்கு அருளிச் செய்தார். மேலும் திருப்பாவை ஈராயிரப்படியும், கண்ணிநுண் சிறுத்தாம்பு, திருப்பள்ளி யெழுச்சி ஆகியவற்றிற்கு உரையும் இவரால் இயற்றப்பட்டனவாக அறிகிறோம். நஞ்சீயரின் வியாக்கியானம் பட்டர் திருநாடு அலங்கரித்த பின்னர் எழுதப்பட்டதாக அறியப்படுதலின், அதனைப் பதின்மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதிக்கு உரியதாகக் கூறலாம்.

நஞ்சீயர் ஆழ்வார் பாசுரங்களுக்கு விரிவுரை ஆற்றுவதில் மிக்க ஈடுபாடு கொண்டிருந்தார். திருவாய்மொழிக்கு மட்டும் நூறுமுறை விளக்கம் கூறியவர் என்ற பெருமை இவருக்கு உண்டு. இவருடைய ஒன்பதினாயிரப்படியில் இடம்பெறாமல் சொற்பொழிவுகளில் மட்டும் இடம்பெற்ற பல விளக்கங்கள் நம்பிள்ளை, பெரியவாச்சான் ஆகியோரின் உரைகளில் பெயர்விதந்து கூறப்பட்டுள்ளன. இவருடைய ஆழ்ந்த நூற்புலமைக்கும் ஆன்மீகப் பார்வைக்கும் இவர் உரையில் காணப்பெறும் அற்புதமான விளக்கங்கள் சான்று பகர்கின்றன. காட்டாக வைணவன் யார் என்னும் வினாவிற்கு நஞ்சீயர் தரும் கீழ்வரும் விளக்கத்தைச் சுட்டலாம் :

> என்னை எனின், வைஷ்ணவதர்மம் அதுவாதலின். 'ஒருவனுக்கு வைணவத்துவம் உண்டு இல்லை என்னும் இடம் தனக்கே தெரியுங்காண்' என்று சீயர் (நஞ்சீயர்) பலகாலும் அருளிச் செய்வர்; அதாவது, பிறர் அநர்த்தம் (துன்பம்) கண்டால் 'ஐயோ' என்று இரங்குவானாகில், அவன் 'நமக்குப்பகவத் சம்பந்தம் உண்டு' என்று இருக்க அடுக்கும் (தகும்); 'இத்தனையும் வேண்டும் பட்டிடுவானுக்கு' என்று இருந்தானாகில், அவன் 'நமக்குப் பகவத் சம்பந்தமில்லை' என்று இருக்க அடுக்கும் என்றபடி (ஈடு, 1:2: முன்னுரை)

> பிறர் ஆகிறார் யார் என்னில் தன்னினின்றும் வேறுபட்டவர். ஆனால் பிரதிகூலர் பக்கலிலும் கிருபையைச் செய்யவோ என்னில், அப்படியே அன்றோ இவர்களுக்கு மதம் (கொள்கை). (ஈடு, 6:10:4)

## திருவாய்மொழி இருபத்து நாலாயிரப்படி

பெரியவாச்சான் பிள்ளை (1228-1323) என்னும் பேரறிஞர் திருவாய் மொழிக்கு எழுதிய வியாக்கியானம் இருபத்து நாலாயிரம் என்று வழங்கப்படுகிறது. சோழ நாட்டில் திருவெள்ளியங்குடிக்கு அருகில் உள்ள சங்க நல்லூரில் பிறந்து ஸ்ரீகிருஷ்ண பாதர் என்னும் இயற்பெயரோடு வாழ்ந்த இவர் திருவரங்கம் சென்று நம்பிள்ளையின் சீடராக வாழ்ந்து வந்தார். அந்நிலையில்

> "தம் விருப்பத்துக்கு உகந்த மாணவராய்த் தம் பக்கலில் எல்லா சாஸ்திரங்களையும் அலகு அலகாகக் கற்று இருப்பவராயுள்ள பெரியவாச்சான் பிள்ளையைப் பார்த்து, "நீர் திருவாய் மொழிக்கு ஒரு வியாக்கியானம் செய்யும்"

என்று நம்பிள்ளை நியமித்திருள, ஆசாரிய நியமனத்தை மேற்கொண்டு இவ் வியாக்கியானத்தைச் செய்தருளினார் பெரியவாச்சான் பிள்ளை".[7] இச் செய்தியினை,

> நம்பிள்ளை தம்முடைய நல்லருளால் ஏவியிடப்
> பின்பெரிய வாச்சான்பிள்ளையதனால்– இன்பா
> வருபத்தி மாறன் மறைப்பொருளைச் சொன்னது
> இருபத்து நாலயிரம்

எனவரும் உபதேச ரத்தினமாலைச் செய்யுளால் (43) அறியலாம்.

திருவாய்மொழியைத் தவிர நாலாயிரத்தின் ஏனைய பகுதிகளுக்கும் பெரியவாச்சான் உரை வகுத்துள்ளார். ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் எல்லாவற்றிற்கும் முழுமையாக வியாக்கியானம் செய்தவர் இவர் ஒருவரே. மேலும், மாணிக்கமாலை, நவரத்தினமாலை, கத்தியத்திரய வியாக்கியானம், இராமாயண தனிச்சுலோகி பாசுரப்படி இராமாயணம் முதலான பல அரிய நூல்களையும் இவர் இயற்றியுள்ளார். இவருடைய பிற வியாக்கியானங்களில் திருப்பாவைக்கு அமைந்த விளக்கவுரை மிகவும் தனிச்சிறப்பு உடையது.

பெரும்பாலும் மணிப்பிரவாள நடையில் இவருடைய பேருரை அமைந்திருப்பினும் சில இடங்களில் வடமொழிக் கலப்பின்றி எழுதும் இயல்புடையவராயும் காணப்படுகிறார். இதனை அமலனாதி பிரானில் உள்ள இரண்டாவது, மூன்றாவது பாடல்க்ளுக்கு இவர் வகுத்த உரையினால் அறியலாம். இதன் தொடர்பில்,

> இவர் பகவானையும், பிரபஞ்சத்தையும், ஆன்மாவையும் இவர்களுக்குள்ள தொடர்பையும் பற்றிப் பேசும் போது பெரிதும் வடசொற்களைக் கொண்டு எழுதுகிறார் . . . (அதாவது) பகவத் விஷயத்தைச் சொல்லும்போதுதான். . வடமொழியை மிக அதிகமாய்க் கையாளுகிறார். . . ஆனால் இயற்கை வருணனை போன்றவை கூறுமிடங்களில், தம்மை மறந்து இனிதாகக் தமிழ்ச் சொற்களாலேயே விளக்கமும் கதைகளும் சொல்லிக் கொண்டு போகிறார்

---

7. பு.ரா. புருஷோத்தம நாயடு **திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம்** முதற்பத்து, (வியாக்கின வரலாறு) சென்னைப் பல்கலைக்கழகம், நான்காம் பதிப்பு, 1980, ப.46.

எனக் கூறும் மு. அருணாசலம் அவர்களின் கூற்று பொருத்தமானதாகப் படுகிறது.[8]

இவருடைய வியாக்கியானத்தால் ஆழ்வார்களின் திருவுள்ளமும், ஆன்மாவின் இயல்புகளும் விளக்கம் பெறுவதோடு, அவர்காலத்துத் தமிழ் வழக்கிலிருந்த பல புதிய சொல்லாட்சிகள், அழகிய தொடர்கள், உவமைகள், பழமொழிகள், சமுதாய மரபுகள், வரலாற்றுக் கூறுகள் போன்ற தமிழகப் பண்பாட்டுச் செய்திகள் பலவற்றையும் அறிந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்படுகிறது.

இத்தகைய பல்வேறு சிறப்புகளின் காரணமாகத்தான் வைணவ உலகும் தமிழறிஞரும் இவரை உரைவேந்தர், வியாக்கியான சக்கரவர்த்தி என்றெல்லாம் பலபடப் பாராட்டிச் சிறப்பித்து வருகின்றனர்.

### பதிப்பு

*1996-1998* **பகவத்விஷயம்** *(திருவாய்மொழி வியாக்கியானம்) பெரியவாச்சான் பிள்ளை. திருவரங்கம்: ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ.*

### திருவாய்மொழி - ஈடு - முப்பத்தாறாயிரப்படி

உலகாரியர் (லோகாசார்யர்) என்று போற்றப்பெற்ற நம்பிள்ளையின் (1207-1312) சீடர்களுள் ஒருவரான வடக்குத் திருவீதிப் பிள்ளையால் (1217-1312) எழுதி உபகரிக்கப்பட்டது முப்பத்தாறாயிரப்படி என்னும் திருவாய் மொழி வியாக்கியானம்.

காவிரியின் தென்கரையிலுள்ள நம்பூர் என்னும் சிற்றூரில் பிறந்து வரதராசன் என்னும் பிள்ளைத் திருநாமம் பெற்றிருந்த இவரை, 'சாத்தன் கையெழுதுமாறு வல்லன்; அதனால் தந்தை உவக்கும்' என்னும் முதுமொழிக்கு ஏற்ப, நஞ்சீயர் தம் திருவரங்கத்திற்கு அழைத்தார். அவ்வாறே பட்டோலை செய்து நஞ்சீயரை மகிழ்வித்த நம்பூர் வரதர், "இவர் **நம்முடைய பிள்ளை** திருக்கலிகன்றிதாசர்" என்று நஞ்சீயரால் பாராட்டி ஆசீர்வதிக்கப் பெற்றார். அதுமுதல் இவருக்கு நம்பிள்ளை என்னும் திருநாமம் வழங்கப்படலாயிற்று.

வடக்குத் திருவீதிப் பிள்ளை தம் ஆசாரியரான நம்பிள்ளை ஒருமுறை திருவாய் மொழியைச் சொற்பொழிவுகளாகப் பிரசாதித்தார். அவ்வாறு அவர் அருளிச் செய்து கொண்டுவரும்

---

8 **தமிழிலக்கிய வரலாறு - பதின்மூன்றாம் நூற்றாண்டு** *திருச்சிற்றம்பலம்: காந்தி வித்தியாலயம், 1970, ப.342.*

சொற்பொழிவுகளைக் கேட்டுக் குறிப்பு எடுத்துத் தனியே ஏடுகளில் எழுதிவரலாயினர். அந்தக் குறிப்புகளின் தொகுப்பே முப்பத்தாறாயிரப் படியாக மலர்ந்தது. இதன் சிறப்பை,

> மிகச் சுருக்கம் இன்றி மிக விரிவும் இன்றி யானை கோலஞ்செய்து புறப்பட்டாற் போன்று கம்பீரமான நடை அழகோடு கூடியதாய், சுருதப் பிரகாசிகை அளவில் முப்பத்தாறாயிரம் கிரந்தங்களோடு கூடியதாய் இருக்கக் கண்டு, மிகவும் திருவுள்ளம் உவந்து தம் மாணாக்கரைப் பார்த்து, நன்றாக எழுதினீர். . . [9] என்று நம்பிள்ளை மனமுவந்து பாராட்டினார்.

நம்பிள்ளை நாள்தோறும் சொற்பொழிவுகளில் கூறிவந்த திருவாய்மொழி விளக்கங்களையும், வைணவ தரிசனக் கருத்துகளையுமே வடக்குத் திருவீதிப் பிள்ளை எழுதிவைத்தாராகலின், இவ்வியாக்கியானம் நம்பிள்ளை ஈடு எனவும் வழங்கப்படுகிறது.

முப்பத்தாறாயிரப்படி வியாக்கியானம் வைணவர்களிடையே ஈடு என்னும் பெயரால்தான் பெரும்பாலும் வழங்கப்படுகிறது. இதனை

> **தெள்ளியதாம் நம்பிள்ளை செப்பு நெறிதன்னை**
> **வள்ளல் வடக்குத் திருவீதிப் பிள்ளை–இந்த**
> **நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்தது**
> **ஈடுமுப்பத் தாறா யிரம்.**
>
> **(உபதேச ரத்தினமாலை – 44)**

என்னும் மணவாள மாமுனியின் வாக்கு உறுதிப்படுத்துகிறது.

ஈடு என்னும் பெயர் இப்பேருரைக்கு வாய்த்தமைக்குப் பல காரணங்கள் சொல்லப்படுகின்றன.

1. ஈடு என்பது முதனிலை திரிந்த தொழிற்பெயராய் உடலின்மேல் அணிந்து கொள்ளுதலையும், ஆகுபெயராய் கவசத்தையும் உணர்த்தும். கவசம் போன்று இம் முப்பத்தாறாயிரப்படி வியாக்கியானமும், கற்போரையும் எழுதுவோராலும் வேற்று மக்களாலும் தன்னிலை திரிந்து மாறுபடாதபடி திருவாய் மொழியினைக் காத்து நிற்றலின்,

---

9 பு.ரா. புருஷோத்தம நாயடு, ஈட்டின் தமிழாக்கம் - பகுதி I, ப.49.

இவ்வியாக்கியானத்திற்கு 'ஈடு' என்ற தனிச் சிறப்புப் பெயரினை நம் பெருமக்கள் இட்டு வழங்கினார்கள்.

2. இனி, இது சுருதப்பிரகாசிகையினை அளவால் ஒத்து இருத்தலின் (ஈடு-ஒப்பு) இதனை ஈடு என வழங்கினர் என்றும்

3. தன்னைக் கற்பார் எல்லாரையும் இறைவனிடத்து ஈடுபடச் செய்வதாதலின் ஈடு என வழங்கினர் என்றும் கூறுவதுண்டு.[10]

இந்த ஈட்டின் பெருமையை, அது தோன்றிய காலத்திலிருந்து பல ஆசாரியர்களும், அறிஞர்களும் மிகவும் புகழ்ந்து பாராட்டியுள்ளனர். இதனை முழுவதும் தமிழ்ப்படுத்தி உதவிய அறிஞர் புருஷோத்தம நாயடு அவர்கள் கீழ்வருமாறு இப்பேருரையின் சிறப்புகளைத் தாம் நுகர்ந்து இன்புற்றவாறே நமக்கும் புலப்படுத்துகிறார்.

> ஈட்டின் நடையழகு தனிச்சிறப்பு வாய்ந்தது; பொருள் உணர்வோடு பயிலப் பயிலப் பேரின்பம் பயப்பது; சொல்லாற்றல் பொருளாற்றல்கள் அமைந்தது; 'சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்' என்னும் வனப்பு வாய்ந்தது; கூறப்புகும் பொருளை விளக்குவதற்குக் காட்டப்படும் மேற்கோள்கட்குப் பொருள் கூறும் முறை எத்தகையோரும் வியக்கத் தக்கது; பதசாரம் கூறுவதில் இந்த ஈட்டின் ஆசிரியருக்கு ஒத்தாரும் மிக்காரும் இத் தமிழ்நாட்டில் இலர்; பிற நாட்டிலும் இலர் என்றே கூறலாம்; ஒரு பதிகத்தோடு மற்றொரு பதிகத்திற்கும், ஒரு பாசுரத்தோடு மற்றொரு பாசுரத்திற்கும் உள்ள பொருள்தொடர்பைக் கூறிச்செல்லும் பண்பு வேறு எவ்வுரையிலும் காண்டல் அரிது.[11]

## பதிப்பு

புரா. புருஷோத்தம நாயடு, ஈட்டின் தமிழாக்கம், சென்னைப் பல்கலைக் கழகம்.

1951 -பகுதி-1; பகுதி-2; 1953-பகுதி-3

1957-பகுதி-4, பகுதி-8; 1955-பகுதி-5

1956-பகுதி-6, பகுதி-7; 1958-பகுதி-9

1959-பகுதி-10

---

10 புரா. புருஷோத்தம நாயடு, ஈட்டின் தமிழாக்கம் - பகுதி I, பக். 47-49.

11. மேலது, பக். 51-52.

## திருவாய் மொழி வாசகமாலை

சம்பிரதாய வரலாறுகளில் காணப்படாத மணிப்பிரவாள உரைநூலாகக் கருதப்படுவது திருவாய்மொழி வாசகமாலை. இது திருவாய்மொழி விவரண சதகம் என்றும் குறிப்பிடப்படுகிறது. இதனை இயற்றிய்வர் கோனேரி தாஸ்யை என்னும் வைணவப் பெண்மணி. ஆசாரிய பாரம்பரியத்தைச் சேராதவர். எனவே இவருடைய இந்த நூல் பிரபலப்படுத்தப்படவில்லை போலும். இந்த அம்மையார் வடக்குத் திருவீதிப் பிள்ளையின் காலத்தவர் என்று கருதப்படுகிறார் (மு.அ.13/356). இந்நூலைப் பதிப்பித்த ஆசிரியரும் இதே கருத்தினராகக் காணப்படுகிறார். இவரைப் பற்றிய மற்ற விவரங்கள் கிடைக்கவில்லை. காஞ்சிபுரத்தை அடுத்த கோனேரி என்னும் ஊரின்ராக இருத்தல் கூடும்.

திருவாய்மொழியின் முதற்பாடலாகிய, "உயர்வற உயர்நலம் உடையவன் யவனவன்" என்னும் பாசுரத்தின் மையப் பொருளையும் கருத்தையுமே திருவாய் மொழியின் ஏனைய பாசுரங்கள் விளக்குகின்றன என்னும் கருத்தை விளக்குவதாக இந்த உரைநூல் அமைந்துள்ளது. திருவாய்மொழியில் உள்ள 1102 பாசுரங்கள் 100 பதிகங்களாக அல்லது பத்துகளாகப் பகுக்கப்பட்டுள்ளன. இவை ஒவ்வொன்றிலிருந்தும் முதற் பாடலையோ அதனோடு மற்றொரு பாடலையும் சேர்த்தோ மொத்தம் 164 திருவாய் மொழிப் பாடல்களைத் தேர்ந்தெடுத்து அவையெல்லாம் முதற்பாடலின் விளக்கங்களே என்று இந்த நூல் விளக்கிக் காட்டுகிறது.

வியாக்கியான மரபில் இது ஒரு புதிய முயற்சி. இந்த விவரண சதக ஆசிரியர் வடமொழியிலும் புலமை மிக்கவராகக் காணப்படுகிறார். பிரபலப்படுத்தாத காரணத்தால் இது பரவலாக அறியப்படவில்லை. இலக்கிய வரலாற்றாளர் மு.அருணாசலம் மட்டுமே இதனைத் தேடிப் பிடித்துத் தம் வரலாற்றில் இடம் பெறச் செய்துள்ளார்.

### பதிப்பு

1952 திருவாய்மொழி வாசகமாலை என்னும் விவரண சதகம் (ப.ஆ) நாவல்பாக்கம் தேவநாதாசாரியார், தஞ்சை : சரசுவதி மகால்.

### வார்த்தாமாலை

வார்த்தைகளின் தொகுப்பு என்னும் பொருள்படும் இந்த நூல் பின்பழகிய பெருமாள் ஜீயர் என்பவரால் பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் தொகுக்கப் பெற்றது.

"ஸ்ரீ வைஷ்ணவர்கள் அவசியம் அறியவேண்டும் அர்த்தங்களையும் அனுஷ்டானங்களையும் (எல்லோரும்) அறிந்து உஜ்ஜீவிக்கும்படி ஸ்ரீமந் நாதமுனிகள் தொடக்கமானோர் அருளிச்செய்த வார்த்தாமலை" என்று இந்நூலின் முகப்பேடு கூறுகிறது (மு.அ.13/357).

இத் திரட்டிலுள்ள வார்த்தைகள் மொத்தம் 457. வார்த்தை என்பது வைணவ ஆசாரியர்கள் சொற்பொழிவின் போதும், விவாதங்களின் போதும், தம் மாணாக்கர்களுக்கு உபதேசம் செய்யும்போதும் கூறிய தத்துவார்த்த விளக்கங்களைக் குறிக்கும். நாதமுனிகள் தொடங்கி வடக்குத் திருவீதிப்பிள்ளை, பெரியவாச்சான் முடிய உள்ள ஆசாரியர்களின் விளக்கங்கள் இதில் அடங்கியுள்ளன. இவை சில சமயம் ஒரே வரி அளவிதானகவும், சில சமயம் மூன்று பக்கம்வரை நீளும் விளக்கங்களாகவும் இருக்கும். 441 ஆம் வார்த்தை மட்டும் ஏழு பக்க அளவுக்கு நீண்டு செல்கிறது. ஆசாரியர்களைத் தவிர, குரும்பரம்பரை வரலாறுகளிலும், பிற வியாக்கியானங்களிலும் காணப்பெறும் கருத்துகளும் இத் திரட்டுள் கோக்கப்பட்டுள்ளன. பொருள் அடிப்படையில் இவை தொகுக்கப்பெற்றுள்ளன. கால முறைப்படியோ, ஆசாரிய பரம்பரைக் கிரமமாகவோ வரிசைப்படுத்தப் பட்டனவாகத் தெரியவில்லை.

ஆசாரியர்கள், திருமாலடியார்கள் ஆகியவர்கட்குச் செய்யும் தொண்டுதான் ஒருவனை முத்தியடைதற்குரிய தகுதியுடையவனாக்கும் என்பதுதான் இந்தத் திரட்டின் மையக் கருத்தாகவும், தொகுப்பாளரின் நோக்கமாகவும் அமைந்துள்ளது. சில வார்த்தைகளை எடுத்துக்காட்டாகக் காணலாம்:

**வார்த்தை 11:**

> அஹங்காரமாகிறது ஒரு ஸர்ப்பம்; மமதையாகிறது அதனுடைய உடல்; ராகத்வேஷங்கள் அதனுடைய பற்கள். இப்பற்களை முறிக்கத் தீரும்.

67: பற்றிற்றெல்லாம் பற்றி அவனையும் பற்றுகை பக்தி.; விடுவதெல்லாம் விட்டுத் தன்னையும் விடுகை ப்ரபத்தி.

221: ஆசார்ய கைங்கர்யம் தனக்குப் பசி விளைந்து உண்கை;

பாகவத கைங்கர்யம் தாய்க்குச் சோறிடுகை;

பகவத் கைங்கர்யம் ஒப்பூண் உண்கையும் மூப்புக்குச் சோறிடுகையும் என்று வடுகநம்பி அருளிச் செய்வார்.

இத் தொகுப்பில் காணப்பெறுவனவற்றைக் கிபி 10ஆம் நூற்றாண்டு முதல் 13ஆம் நூற்றாண்டு வரையில் வாழ்ந்த வைணவப் பெரியார்களின் கருத்துகளும் மொழிநடையும் என இருவகையாகப் பகுத்து உணரலாம். இந்த நான்கு நூற்றாண்டுக் காலப் பகுதியில் வழங்கிய மொழிநடையின் இயல்புகளையும், ஒரு குறிப்பிட்ட சமய ஒழுகலாற்றிற்குரியனவாகக் கூறப்படும் கருத்துகளின் வளர்ச்சி நிலையையும், தமிழகத்தின் பொதுவான சமூக ஒழுகலாறுகளையும் அறிந்து கொள்ளத் தக்க கருவூலமாக வார்த்தாமாலை என்னும் இச்சிறிய தொகுப்புநூல் பயன்படுகிறது.

*முதல்பதிப்பு*

*1882 பிற பதிப்பு விவரங்கள் கிடைக்கவில்லை.*

*2002 சாந்தி சாதனா, சென்னை-28.*

*காலிங்கர் - திருக்குறள் உரை*

திருக்குறளுக்கு இடைக்காலத்தே உரைசெய்தோர் பதின்மர் என்று கூறப்படினும் ஐவருடைய உரைகளே இதுவரை கிடைத்துள்ளன. இந்த ஐந்தனுள் பதின்மூன்றாம் நூற்றாண்டில் முன்னும் பின்னுமாக இரண்டு உரைகள் இயற்றப்பட்டனவாக அறிகிறோம். அவற்றுள் முன்னது காலிங்கர் எழுதியது. பின்னது பரிமேலழகரால் எழுதப்பட்டது. காலிங்கர் என்னும் பெயர் காளிங்கர் எனவும் வழங்ககிறது.

காலிங்கரைக் குறித்த சிறப்புப் பாயிரமோ வேறு வரலாற்றுச் செய்திகளோ எவையும் கிடைக்கவில்லை. எனவே இவருடைய உரையால் அறியப்படும் உரைச்சிறப்புகளைத் தவிர உரையாசிரியரைப்பற்றிய வாழ்க்கைக் குறிப்புகளை அறிய இயலவில்லை.

காலிங்கரின் காலத்தை அறிவதற்குரிய புறச்சான்றுகள் எவையும் கிடைக்காத நிலையில், அவருக்கு முன்னும் பின்னும் எழுந்த குறள் உரைகளுடன் ஒப்பிட்டு நோக்குமிடத்துக் கிடைக்கும் சில குறிப்புகள் இவருடைய காலத்தை ஒருவாறு உய்த்து உணர்வதற்குத் துணைசெய்கின்றன. காமத்துப்பாலில் புலவி நுணுக்கம் என்னும் அதிகாரத்திலுள்ள 'கோட்டுப் பூச்சூடினும் காயும்' எனத்தொடங்கும் குறட்பாவுக்கும் (1313), ஊடலுவகை அதிகாரத்திலுள்ள 'புல்லி விடாப் புலவியுள்' எனத் தொடங்கும் குறட்பாவுக்கும் (1324) அமைந்த காலிங்கரின் உரை முழுக்க முழுக்க பரிப்பெருமாள் உரையாகவே காணப்படுதலின் காலிங்கர்

பரிப்பெருமாள் காலத்திற்குப் பிற்பட்டவராதல் கூடும் என அறிஞர்கள் கருதுகின்றனர் (உரைக்கொத்து-பொருட்பால்-ஆராய்ச்சிக்குறிப்பு, ப.34) காலிங்கர் உரை நூல் முழுமைக்கும் கிடைத்துள்ளதாயினும் இடையிடையே சில குறட்பாக்களுக்குக் கிடைக்கவில்லை. அத்தகைய இடங்களில், அச்சிட்டோர் பரிதியார் பரிப்பெருமாள் ஆகியோரின் உரையை தந்திருக்கின்றனர் என்று மு. அருணாசலம் கூறுகிறார் (மு.அ.13/256). இவ்வாறே மேற்குறித்த காமத்துப்பாலின் இரண்டு பாடல்களுக்கும் பரிப்பெருமாள் உரையை அச்சிட்டிருக்கலாகாதோ என்னும் ஐயம் எழுதல் இயல்பே. காலிங்கர் உரை முழுவதையும் பிற உரைகளுடன் ஒப்பீட்டு நோக்கில் ஆராய்ந்தாலன்றி இந்த ஐயப்பாட்டைத் தீர்க்க இயலாது.

இனிப் பரிமேலழகர் உரையோடு ஒப்பிட்டு நோக்குமிடத்துக் கீழ்க்காணும் இடங்களில் பரிமேலழகர் காலிங்கர் உரையைச் சுட்டி ஏற்றும் மறுத்தும் கூறுகிறார் என மேற்குறித்த இரு அறிஞர்களும் எடுத்துக்காட்டியுள்ளனர். அவையாவன :

| குறள் எண் | காலிங்கர் பாடம் | பரிமேலழகர் பாடம் | ஏற்பு/மறுப்பு |
|---|---|---|---|
| 501 | அறம்பொருளின்பம் உயிர் எச்சம் | அறம்பொருள் இன்பம் உயிர் அச்சம் | மறுப்பு |
| 1012 | ஊணுடை அச்சம் | ஊணுடை எச்சம் | ஏற்பு |
| 1013 | ஊணைக் குறித்த | ஊனைக் குறித்த | ஏற்பு |
| 1056 | முழுதும் கெடும் | ஒருங்கு கெடும் | ஏற்பு |
| 1161 | யானிதோர் | யானிஃதோ | மறுப்பு |
| 1178 | கொண்கனைக் காணாது | மற்றவர்க் காணாது | ஏற்பு |

இவற்றை நோக்குமிடத்துக் காலிங்கர் பரிமேலழகர் காலத்திற்கு முற்பட்டவர் என்பது தெளிவாகிறது. பரிமேலழகர் 13 ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதிக்கு உரியவர் எனக் கருதப்படுதலின், காலிங்கர் 13ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் எனக் கொள்வது நேரிதாகலாம்.

குறளின் இயல்பாகுபாட்டை பொருத்தவரையில் காலிங்கர் திருவள்ளுவ மாலை கூறும் இயல் பகுப்புகளை யொட்டித் தம் உரையை வகுத்திருக்கக் காண்கிறோம். பெரும்பாலும் இவருடைய

உரை பொழிப்புரையாக அமைந்துள்ளது. இடையிடையே வடசொற்கள் பயின்றுவரினும், இவருடைய நடை நல்ல தமிழ்நடையாகக் காணப்படுகிறது. பல இடங்களில் இவர் உரைநடை செய்யுளோசைபட அமைந்துள்ளது. சான்றாகக் கீழ்வரும் உரையைக் காணலாம்:

குறள்: பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்
பெண்மை உடைக்கும் படை. (1258)

### காலிங்கர் உரை

தோழீ! "நின்மாட்டு அன்பு பெரிதுடையேன்; அருளும் நீங்கேன்; நின்னிற் பிரியேன்; பிரியினும் ஆற்றேன்; புறத்து உடம்பு இரண்டல்லது அகத்து உயிர் ஒன்று' என வஞ்சனை பலவும் வகுத்து உடன்படுத்து எம் கவின்திறம் முழுதும் கவர்ந்த கள்வன் பண்புற மொழிந்த பணிமொழி அன்றோ நம் பெண்மையை உடைக்கும் கருவி என்றவாறு.

ஒவ்வொரு பாலுக்கும் தோற்றுவாய் எழுதுவதும், ஒவ்வோர் அதிகாரத்தின் பத்தாவது குறள் உரையின் முடிவிலும் அடுத்த அதிகாரப்பொருளைத் தொடர்புறுத்திக் காட்டுவதும், தம் உரையை இரு கூறாக்கி வினாவிடையாக அமைப்பதும், ஒவ்வொரு குறளின் உரையிலும் மற்று என்னும் சொல்லை உரையசைபோலப் பயன்படுத்துவதும் காலிங்கர் உரையின் இயல்புகளாகக் காணப்படுகின்றன.

உழவுத் தொழில், மருத்துவம், போர் முறைகள், படைகளைச் செலுத்துதல் போன்ற பொருள்களை விளக்குவதில் காணப்பெறும் காலிங்கரின் புலமையையும் பட்டறிவையும் நோக்குமிடத்து, இவர் தமிழ்ப் புலமையோடு பிறதுறைப் புலமையும் நிறைந்தவராக விளங்கினார் என அறிகிறோம்.

### பதிப்பு

பரிப்பெருமாள் உரையின்கீழ் காண்க.

## பரிமேலழகர் – திருக்குறள் உரை

### பெயர்

திருக்குறள் என்னும் இறவாத் தமிழ்நூலுக்கு எழுந்த பண்டைய உரைகள் பத்தனுள், எட்டாவது அல்லது ஒன்பதாவதாகத் தோன்றியதும் இப் பத்தனுள்ளும் சிறந்ததாகத் தமிழாராய்ச்சி உலாகல் ஏற்றுப் பாராட்டப்பட்டு வருவதும்

பரிமேலழகரின் உரைதான். பரிமேலழகியார், பரிமேலழகரையர், வண்துவரைப் பெருமாள் என்னும் பெயர்களும் இவ் உரையாசிரியர்க்கு வழங்கினும், திருக்குறள் உரைச்சிறப்புப் பாயிரமும், பரிபாடல் உரைச்சிறப்புப் பாயிரமும் ஏட்டுப் பிரதிகளும் இவரைப் பரிமேலழகன் என்றே கூறுகின்றன. எனவே பரிமேலழகர் என்னும் பெயரே தமிழுலகில் நிலைபெறலாயிற்று.

**உரைகள்**

திருக்குறள், பரிபாடல், திருமுருகாற்றுப்படை என்னும் மூன்றுக்கும் பரிமேலழகர் உரையெழுதியாகச் சிலரால் கருதப்படினும், இவ் உரைகளைக் கருத்தோட்டம், நடைப்பொலிவு என்னும் அடிப்படைகளில் ஒப்புநோக்குமிடத்துத் திருக்குறளுக்கு அவர் உரை எழுதினார் என்பது மட்டும் ஐயத்திற்கு இடமின்றிப் புலனாகிறது. பரிபாடலுக்கும் பரிமேலழகர் உரை செய்திருப்பதாக உ.வே. சாமிநாதையர் கருதுகிறார். பரிமேலழகர் பெயரால் பதிப்பிக்கப்பெற்றுள்ள திருமுருகாற்றுப்படை உரையில் பரிமேலழகரின் உரையியல்புகள் காணப்பெறாமையின் அதனை அவருரையாகக் கருத இயலவில்லை. இனி, பரிபாடலுக்கும் பரிமேலழகர் உரையெழுதினாரெனினும், திருக்குறளுக்கு எழுதிய உரைச்சிறப்பின் காரணமாகவே தமிழுலகம் இவரைப் போற்றிப் புகழ்ந்த வந்துள்ளமையைக் கீழ்வரும் பழம் பாடல்கள் உணர்த்துகின்றன:

பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ - நூலிற்
பரித்தஉரை எல்லாம் பரிமே லழகன்
தெரித்தஉரை யாமோ தெளி.

(தொண்டைமண்டல சதகம் 41, மேற்கோள்)

வள்ளுவர்சீர் அன்பர்மொழி வாசகம்தொல்
காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை - ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
தண்டமிழின் மேலாம் தரம்.

(உமாபதி சிவாசாரியார்)

**ஊர்**

பரிமேலழகர் 'காஞ்சி உலகளந்த பெருமாள் கோயில் அருச்சகர் பரம்பரையில் பிறந்தவர்' என அறிஞர்கள் கருதுகின்றனர் (மு.அ. 13/65).

திருக்காஞ்சிவாழ் பரிமேலழகன் வள்ளுவன்
நூற்கு வழிகாட்டினான்.

என வரும் தொண்டை மண்டல சதகப் பாடற்குறிப்பாலும் (41),

நீள்நிலம் கடந்தோன் தாள்தொழு மரபின்
பரிமேலழகன்

என வரும் பரிபாடலின் உரைச்சிறப்புப் பாயிரப் பகுதியாலும் (20-21), இக்கருத்து உறுதிப்படுகிறது. இனி, இவருரையின் ஏட்டுப் பிரதிகளுள் காணும் சில பாடல்கள் இவரை, 'ஒக்கை காவலன்' என்றும் 'தமிழ்க் கூடல் பரிமேலழகியன் என்பான்' என்றும் குறிப்பிடுவதால் இவர் பாண்டிநாட்டில் உள்ள ஒக்கூரிலும் மதுரையிலும் சில காலம் வாழ்ந்திருக்கக் கூடும் என்றும் கருதப்படுகிறது (மு.அ.13/67).

## பண்பு நலன்கள்

சிறப்புப் பாயிரங்கள் பொதுவாக நூலாசிரியரைப் பற்றி எழுவன. சில உரையாசிரியரைப் பற்றியும் எழுந்துள்ளன. அவற்றுள் பரிமேலழகரைப் பற்றி எழுந்துள்ள சிறப்புப் பாயிரம் அவருடைய புலமைச் சிறப்போடு, தனிமனித, ஒழுகலாற்றுச் சிறப்புகளையும் எடுத்துக்கூறும் பாங்கு குறிப்பிடத்தக்க ஒன்றாக அமைகிறது. எளிதில் பொருள் விளங்கும் அப் பாயிரப்பகுதி கீழ்வருமாறு:

திருந்திய தமிழில் தெய்வப் புலமை
அருந்திறல் வள்ளுவன் . . . .
திறந்தெரிந்து உரைத்த செவ்விமுப் பாலுக்கு . . . .
விழுப்பொருள் தோன்ற விரித்துஇனிது உரைத்தனன் :

வடநூல் துறையும் தென்திசைத் தமிழும்
விதிமுறை பயின்ற நெறிஅறி புலவன்
அன்புஅருள் நாண்ஒப் புரவுகண் ணோட்டம்
நன்றுஅறி வாய்மை நற்றவம் உடையோன்
இத்தகை அன்றி ஈசனது அருளால்
உய்த்துணர்வு உடைய ஓர் உண்மை யாளன்
பரிமே லழகன் எனப்பெயர் படைத்துத்
தரைமேல் உதித்த தலைமை யோனே.

இப்பாடல் எழுந்த காலம், இதனை இயற்றிய ஆசிரியர் பெயர் முதலானவற்றை அறிய இயலவில்லை. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பேரறிஞர் மு. இராகவையங்கார் அவர்களால் தொகுக்கப்பெற்று 1935 ஆம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச் சங்கச்

செந்தமிழ் வெளியீடாக வந்த **பெருந்தொகை** என்னும் நூலின் 1543 ஆம் பாடலாக இந்தச் சிறப்புப் பாயிரம் இடம்பெற்றுள்ளது.

இயற்கையாக, இறையருளால், உய்த்துணர்வு பெற்றவர்; முறையான பயிற்சியால் வடமொழி நூல்களிலும் தென்தமிழ்ப் பனுவல்களிலும் புலமை பெற்றவர்; தம் மனப்பயிற்சியால் அன்பு, அருள், நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்னும் சான்றாண்மைப் பண்புகள் நிறையப் பெற்றவர்; 'நீள்நிலம் கடந்தோன் தாள்தொழும்' மரபாகிய நற்றவ ஒழுக்கமும் உடையவர் எனப் பரிமேலழகரின் உரைப்பெருமையையும் அவருடைய தனிமனித ஆளுமைச்சிறப்பையும் இந்த உரைப்பாயிரம் உயர்வு நவிற்சியின்றி எடுத்துக்கூறுகிறது.

**சமயம்**

காஞ்சி உலகளந்த பெருமாள் கோயில் அருச்சகர் மரபினர் என்னும் மரபுவழிச் செய்தி; 'நீள்நிலம் கடந்தோன் தாள்தொழு மரபின் பரிமேலழகன்' எனவரும் பரிபாடலின் உரைச்சிறப்புப் பாயிரப் பகுதி; கி.பி.1271ஆம் ஆண்டிற்குரியதெனக் கருதப்படும் தெலுங்கச் சோழன் விசயகண்ட கோபாலனின் காஞ்சிபுரம் வரதராசப் பெருமாள் கோயில் கல்வெட்டு,' வண்துவரைப் பெருமாளான பரிமேலழகிய பெருமாள் தாதர் என்று பரிமேலழகரைக் குறிப்பிடுதல் ஆகிய **புறச்சான்றுகளால்** பரிமேலழகர் வைணவ சமயத்தினர் என்று கருதப்படுகிறது.

இறைமாட்சி அதிகாரத்தின் தோற்றுவாய்ப் பகுதியில், "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும்" எனத் திருவாய்மொழிப் பாடலைக் (4:4:8) காட்டல்; அறத்துப்பாலில் உள்ள துறவு அதிகாரத்தில் வரும், 'பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் என்னும் குறட்பா (349) உரையில், 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்னும் திருவாய்மொழிப் பகுதியைக் (1:2:5) காட்டல்; அவாவறுத்தல் அதிகாரத்தில் வரும், 'ஆராஇயற்கை அவா நீப்பின்' என்னும் குறட்பா (370) உரையில், 'நன்றாய் ஞானம் கடந்துபோய்' எனத் தொடங்கும் திருவாய்மொழிப் பாடலைக் (8:8:6) காட்டல்; பொருட்பாலில் உள்ள மடியின்மை அதிகாரத்தின் இறுதிக் குறளில் (610) வரும் 'அடியளந்தான் தாயது' என்பதற்குத் தன் அடியளவானே எல்லா உலகையும் அளந்த இறைவன் (திருமால்) என்று பொருள் கூறுதல்; காமத்துப்பாலில் உள்ள புணர்ச்சி மகிழ்தல் அதிகாரத்தில் வரும் "தாம்வீழ்வார்' என்னும் குறளில் (1103) உள்ள 'தாமரைக் கண்ணான் உலகு' என்பதற்குச் 'செங்கண்மால் உலகம்' என்று பொருள் கூறுதல் ஆகிய **அகச்சான்றுகளாலும்** பரிமேலழகர் வைணவ சமயத்தினர் என்னும்

கருத்து உறுதிப்படுகிறது. எனினும் சைவாகமக் கருத்துகளையும் ஆருகதர் தரும நெறிகளையும் ஏற்றவிடத்து எடுத்துக்காட்டுதலால், இவர் பல்சமயப் புலமையோடு சமயப்பொறையும் உடைய சான்றோராக விளங்கினர் என அறிகிறோம்.

காலம்

> தெய்வப் புலமை வள்ளுவன்... உரைத்த முப்பாலுக்கு
> ஒருரை யின்றி ஒன்பது சென்றும்
> ஐயுற வாக நையுறு காலை ....
> விழுப்பொருள் தோன்ற விரித்துஇனிது உரைத்தனன்..
> பரிமேலழகன்....

என்னும் உரைச்சிறப்புப் பாயிரக் குறிப்பால் பண்டைய உரையாசிரியர்களுள் ஒன்பதின்மருக்குப் பின்னர் வந்தவர் பரிமேலழகர் என்பது பெறப்படுகிறது. பரிதியார் உரை பரிமேலழகருக்குப் பிற்பட்டுத் தோன்றியது எனக் கருதப்படினும், காலிங்கர் ஈறாகிய பிற உரையாசிரியர்களுக்கு இவர் பிற்பட்டவர் என்பது தெளிவாகிறது. காலிங்கர் உரை பரிமேலழகருக்கு முற்பட்டது என்னும் செய்தியும் காலிங்கர் 13ஆம் நூற்றாண்டின் முற்பகுதிக்கு உரியவராகலாம் என்பதும் மேலே கூறப்பட்டன. காமத்துப் பாலுக்குப் பரிமேலழகர் எழுதிய முகவுரையில் 11ஆம் நூற்றாண்டில் அரசோச்சிய போசராசன் என்னும் வடநாட்டு அரசன் இயற்றிய சிருங்காரப் பிரகாசம் என்னும் காமநூலை மேற்கோளிட்டுக் காட்டுதலின் இவர் அவன் காலத்துக்குப் பிற்பட்டவராகிறார். இனிப் பொருட்பாலின் கண்ணோட்டம் என்னும் அதிகாரத்து முதற்குறளில் (571) வரும் 'கழிபெரும்' என்னும் தொடரையும், பகைமாட்சி என்னும் அதிகாரத்து மூன்றாம் குறளில் (863) வரும் 'தஞ்சம், எளியன்' என்னும் சொற்களையும் ஒருபொருட் பன்மொழி என்னும் இலக்கணக் குறியீட்டால் பரிமேலழகர் விளக்குகிறார். இக் குறியீடு முதன்முதலாக நன்னூலாரால் (சொல்.460) எடுத்தாளப்படுகிறது. எனவே இவரை நன்னூலாருக்குப் பிற்பட்டவர் என அறிஞர் கருதுவர் (மு.அ.13/92).

பரிபாடல் ஒன்பதாம் பாட்டில் வரும், 'வாள்மிகு வயமொய்ம்பு (57) என்னும் தொடருக்கு, 'வாள்தழும்பு நெருங்கிய வெற்றி மொய்ம் பினையுடைய முருகன்' எனப் பரிமேலழகர், பொருள் கூறுகிறார். திருமுருகாற்றுப்படை 106ஆம் அடியாகிய, 'வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்' என்பதில் உள்ள 'வசிந்து' என்பதற்குப் பகைவர் மார்பைப் பிளந்து என்று பொருள் கூறிய நச்சினார்க்கினியர் விசேட உரையாக, படைக்கலங்களால்

வடுப்பட்டு என்று பொருளுரைத்தல் இறைவனாதலின் பொருந்தாது எனக் கூறுவதை மேலே காட்டிய பரிபாடல் தொடருக்குப் பரிமேலழகர் கூறும் உரைக்கு மறுப்பாகக் கொண்டால், பரிமேலழகர் நச்சினார்க்கினியர்க்கு முற்பட்ட காலத்தவர் எனக் கொள்ளலாம் என உ.வே. சாமிநாதையர், கருத்துரைத்துள்ளார் (பரிபாடல்-பரிமேலழகருரை, 1935, ப.62). இதனை மேற்கோளாகக் காட்டி மு.அருணாசலமும் (13/91), கே.எம். வேங்கடராமையாவும் (திருக்குறள் உரைக்கொத்து - பொருட்பால், 1960, ப.19) பரிமேலழகர் நச்சினார்க்கினியர்க்கு முற்பட்டவர் என்று கூறுகின்றனர்.

மேற்சுட்டிய 106ஆம் அடியில் வரும் **வசிந்து** என்னும் சொல்லுக்கு நச்சினார்க்கினியர் விளக்கம் கூறுமிடத்து,

> **வசிந்து என்பது பிளந்து என்னும் பொருட்டு. . .**
> **வசிந்தென்பதற்குப் படைக்கலங்களால் வடுப்பட்டென்று**
> **பொருளுரைத்தல் இறைவனாதலின் பொருந்தாது**

என்று கூறுகிறார்.[12] பரிமேலழகர் வசிந்து என்னும் சொல்லுக்குப் பொருள்தரவில்லை. இவர்கள் சுட்டும் பரிபாடலில் இச்சொல் பயிலவுமில்லை. பொருளால், பரிமேலழகர் கருத்தை நச்சினார்க்கினியர் மறுப்பதுபோல் தோன்றினாலும், இரண்டு மூலபாடங்களும் தம்முள் தொடர்பில்லாதனவாய்க் காணப் படுதலின். இக்கருத்து பொருந்துமாறு இல்லை.

மேலும் பரிமேலழகர் பெயரால் வழங்கும் திருமுருகாற்றுப் படையுரை விவாதத்திற்குரிய 106 ஆம் அடிக்கு,

> **வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள் –**
> **வளவிய புகழ்நிறைந்து வளர்ந்து நீண்டு நிமிர்ந்த**
> **தோள்கள்**[13]

என்று பொருள் கூறுகிறது. நச்சினார்க்கினியர் மறுக்கும், 'படைக்கலங்களால் வடுப்பட்டு' என்னும் உரை இதில் காணப்படவில்லை.

---

12. பத்துப்பாட்டு–திருமுருகாற்றுப்படை உரை உ.வே.சா. பதிப்பு, 1956, ப.49.

13. K.M. வேங்கடராமையா - வேரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் (தொகுப்பாசிரியர்கள்) **திருமுருகாற்றுப்படை உரைக் கொத்து.** திருப்பனந்தாள்:அன்னபூரணா பதிப்பகம்,1981, ப.61.

குறளுரைகாரராகிய பரிமேலழகர் பரிபாடலுக்கு உரை செய்தார் என்பதே கருத்து வேறுபாடின்றி நிறுவப்படாத நிலையிலும், விவாதத்திற்குரிய 'வசிந்து' என்னும் சொல் பரிபாடலில் காணப்படாத நிலையிலும், பரிமேலழகர் என்னும் பெயரால் வழங்கும் திருமுருகாற்றுப்படை உரையிலும் நச்சினார்க்கினியர் மறுக்கும் பொருள் இடம்பெறாத நிலையிலும் நச்சினார்க் கினியரோடு தொடர்பு படுத்திப் பரிமேலழகரின் காலத்தைத் துணியும் கருத்து பொருத்தமாகப் படவில்லை.

காஞ்சிபுரம் வரதராசப் பெருமாள் (அருளாளப் பெருமாள்) கோயிலில் உள்ள தெலுங்கச் சோழன் விசயகண்ட கோபாலனுடைய 16 மற்றும் 22ஆம் ஆட்சி ஆண்டுகளுக்குரிய கல்வெட்டுகள், "வண்துவரைப் பெருமாள் ஆன பரிமேலழகிய தாதன் என்பவரிடம் 500 குழி திருநந்தவனப் பகுதியை ஆமூர் சிற்றரசனாகிய நீலங்கன் வாங்கித் திருமாலைப் புறமாக அளித்தான்" என்று கூறுகின்றன. இந்தக் கல்வெட்டின் (22 ஆம் ஆட்சியாண்டு) காலம் கி.பி.1271 என்று கண்டறியப்பட்டுள்ளது. இடம், காலம், சமயத்தொடர்பு ஆகியவற்றைத் தொகுத்துப் பார்க்குமிடத்துக் குறளுக்கு உரைசெய்த பரிமேலழகர் பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதிக்கு உரியவர் என்று துணியலாம்.

### உரைநெறிகள்

தான் தோன்றிய காலத்திலிருந்து இன்றுவரை தொடர்ந்து பரிமேலழகரின் குறளுரை போற்றப்பட்டு வருகிறது. அதற்குரிய காரணங்களுள் ஒன்றாக அவருக்கு முன்னர்த் தோன்றிய மணக்குடவர், பரிப்பெருமாள், காலிங்கர் போன்றோரின் உரைகள் அவருக்குப் பல வகைகளில் வழிகாட்டியாக அமைந்திருந் தமையைக் கூறலாம். எனினும் அவர் மேற்கொண்ட உரைநெறிகள் தான் அவர் உரையின் பெருஞ்சிறப்பிற்குக் காரணமாயின என்பதை மறத்தலாகாது. திருக்குறளைப் பற்றிய முழுப்பார்வையும், திருக்குறளுக்கு முன்னும் பின்னும் தோன்றிய பண்டைய தமிழ் மரபும், இந்திய நாட்டின் பண்பாட்டிற்கு அடிப்படையான வடபுல நூல்களைப் பற்றிய ஆழ்ந்த அறிவும் நிரம்பிய பரிமேலழகரின் அறிவு வீச்சினையும் சிந்தனை வளத்தையும் அவருடைய உரைநெடுகக் காணலாம்.

குறள்முழுமைக்குமாக அமைந்த உரைப்பாயிரத்தில் திருக்குறள் கூறும் முப்பால் பொருண்மைக்குரிய காரணம் கூறி முதற்பகுதியாகிய அறத்துப்பாலை இன்னதென விளக்கி, அதன்

இயல் பாகுபாடுகளையும், அறம் என்றால் இன்னதென வரையறுத்து வள்ளுவனார் கூறும் அறம் எத்தகையது என்பதையும் விளக்குகிறார். இத்தகைய தோற்றுவாய்கள் எல்லாப் பால்களுக்கும் அதிகாரங்களுக்கும் தரப்பட்டுள்ளன. அதிகாரப் பொருளை விளக்கி முன்னைய பின்னைய அதிகாரங்களுடன் தொடர்புபடுத்திக் காட்டுகிறார். அவ்வாறே ஒவ்வோர் அதிகாரத்திலும் உள்ள குறள்களின் முறைவைப்புக்கும் தக்க காரணம் கூறிவிளக்குகிறார். இந்த முறையினால் திருக்குறளின் அமைப்புமுறை எவ்வளவு செறிவானது, அதன் உட்பகுதிகள் எவ்வாறு உயிரியத்தன்மையோடு கோக்கப்பட்டுள்ளன என்னும் செய்திகள் நன்கு விளக்கமடைகின்றன. ஒவ்வோர் அதிகாரத்திலும் கூறப்படும் பொருளைக் கூறுப்படுத்தி அதனை விளக்கும் குறள்களைத் தொகுத்துக் கூறும் பாங்கினைப் பரிமேலழகர் உரையில் மட்டுமே காண்கிறோம். சான்றாக, அடக்கமுடைமை என்னும் அதிகாரத்துக்கு அமைந்த உரைப்பகுதியைக் காட்டலாம்:

> அஃதாவது மெய், மொழி, மனங்கள் தீநெறிக்கண்
> செல்லாது அடங்குதல் உடையனாதல்.

(1-5) இவை ஐந்து பாட்டானும் பொதுவகையான் அடக்கத்தது சிறப்புக் கூறப்பட்டது.

(6) இதனான் மெய்யடக்கம் கூறப்பட்டது.

(7,8,9) இவை மூன்று பாட்டானும் மொழியடக்கம் கூறப்பட்டது.

(10) இதனான் மனவடக்கம் கூறப்பட்டது.

குறளைப் பயில்வார், அடக்கம் என்னும் ஒழுகத்தின் முழுப்பொருண்மையையும் பாகுபடுத்தி உணர்ந்து கொள்ள மேற்சுட்டிய உரைப்பகுதி பெரிதும் துணைசெய்கிறது. ஒரு நல்ல உரையாசிரியர் அல்லது திறனாய்வாளரின் பணியும் அதுதான்.

### மேற்கோள்

இலக்கியம் என்பது ஒரு சமுதாயப் பண்பாட்டின் அனுபவப் பயிர். அதன் இயல்பையும் சிறப்பையும் உணர்ந்துகொள்ள அச் சமுதாயத்தின் கலை, இலக்கியப் படைப்புகளைத் தொடர்பு படுத்திக் காண்பது இன்றியமையாதது. இத்தகைய நோக்கில் பரிமேலழகர் குறட்பொருளை விளக்குமிடத்துத் தமிழ்ப் பண்பாட்டு இலக்கிய மரபுகளையும் ஒப்புநோக்காக வடபுலப் பண்பாட்டு இலக்கிய, தத்துவ, சமுதாய

மரபுகளையும் மேற்கோளாகக் காட்டும் உரைநெறியைக் கையாள்கிறார். இது எல்லா உரையாசிரியர்க்கும் ஒக்குமாயினும், பரிமேலழகரிடம் இந்நெறி பெரிதும் பயன்படக் காண்கிறோம்.

பரிமேலழகர் குறட்பொருளை விளக்குவதற்குக் காட்டும் மேற்கோள் நூல்களை இலக்கியம், இலக்கணம், சமயம், அரசியல், தருக்கம், மருத்துவம் என்று துறைவாரியாகவும், தமிழ் மரபுகள், வடநூல் மரபுகள் என்று மொழிவாரியாகவும் பகுத்துணரலாம். தமிழ், வடமொழி என்னும் இருமொழிகளிலும் புலமை பெற்றறிருந்தார் என்பதைவிட எத்துணைத் துறைகளில் பரிமேலழகர் புலமைபெற்றிருந்தார் எனக் காண்பதே குறள் உரையை உணர்ந்துகொள்ளப் பெரிதும் பயன்படும்.

எனவே துறைதோறும் காட்டப்பெற்ற மேற்கோள்களைக் காண்பது பயனுடையது.

**இலக்கியம்:** தமிழிலக்கிய மரபிலிருந்து புறநானூறு (31 இடங்களில்) கலித்தொகை (16), அகநானூறு (4), நற்றிணை (2), குறுந்தொகை (2), பட்டினப்பாலை (2) பரிபாடல் (2), பதிற்றுப்பத்து (1), பொருநராற்றுப்படை (1), நெடுநல்வாடை (1) ஆகிய சங்க நூல்களும், நாலடியார் (22), நான்மணிக்கடிகை (4), பழமொழி நானூறு (2), திரிகடுகம் (1) ஆகிய கீழ்க்கணக்கு நூல்களும், சீவக சிந்தாமணி, (17), சிலப்பதிகாரம் (8), மணிமேகலை (2) வளையாபதி (2) கம்பராமாயணம் ஆகிய காப்பியங்களும், முத்தொள்ளாயிரமும் (1), திருவாய்மொழி (3), திருக்கோவையார் ஆகிய பக்தி இலக்கியங்களும் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. (மேற்கோள் காட்டப்பெறும் இடங்களின் எண்ணிக்கை இ. சுந்தரமூர்த்தி, பரிமேலழகர் உரைத்திறன் என்னும் நூலிலிருந்து பெறப்பட்டது, பக். 45-74)

**இலக்கணம் :** புறப்பொருள் வெண்பா மாலை (12), தொல்காப்பியம்(7) இறையனாரகப் பொருள் (1) ஆகியன மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன.

**சமயம் :** சைவம் (குறள் 9), வைணவம் (349, 370) இறைமாட்சி தோற்றுவாய், (610, 1103), சமணம் (9, 286, 359) வைசேடிகம் (307) எனப் பல்வேறு மதக் கருத்துகள் பொருள் விளக்கத்திற்காகக் காட்டப்பட்டுள்ளன.

**அரசியல் :** மனு (உரைப்பாயிரம்), அர்த்தசாஸ்திரம் (பெரியாரைத் துணைக்கோடல் தோற்றுவாய், 501) வார்த்தா சாஸ்திரம் (512) போன்ற வடமொழி நூல்கள் காட்டப்பட்டுள்ளன.

**தருக்கம் :** பெயர் விதந்து தருக்க நூல்களைக் கூறவில்லையேனும், தருக்க முறைகளைக் கீழ்வரும் குறட்பாக்களின் உரையில் பரிமேலழகர் பரவலாகப் பின்பற்றி உரைசெய்யக் காண்கிறோம்.

*அளவைகளாவன பொறிகளால் காணும் காட்சியும் குறிகளான் உய்த்துணரும் அனுமானமும், கருத்தா மொழியாகிய ஆகமும் எனமூன்று. . உவமையும், . . அருத்தாபத்தியும், . . இன்மையும் என இவற்றைக் கூட்டி ஆறு என்பாரும் உளர். இவையும் ஒருவாற்றான் அவற்றுள்ளே அடங்குதலின் மூன்றென்றலே கருத்து (குறள் 242).*

*அருத்தாபத்தி அளவையைக்காட்டி விளக்கும் இடங்கள் 236, 256, 811, 851, 1194, 1316.*

*அனுமான அளவையைக் காட்டி விளக்கும் இடங்கள்: 71, 316, 318, 1232*

*ஆகமம், காட்சி, கருதல் ஆகிய அளவை முறைகளைக் காட்டி விளக்கும் இடங்கள் : 37, 71, 281, 316, 363, 503 தெரிந்து தெளிதல் அதிகாரத்துக்குரிய தோற்றுவாய்.*

**மருத்துவம் :** மருந்து என்னும் அதிகாரத்திற்கு உரை, வகுக்கையில் மருத்துவ நூற்கருத்துகளைப் பரிமேலழகர் பயன்படுத்துகிறார். நூலோர் (941) என்பதற்கு ஆயுள் வேதம் உடையார் எனப் பொருள் கூறும் பரிமேலழகர் இந்த அதிகாரம் முழுமைக்கும் ஆயுள் வேதமுறைமையின் அடிப்படையில் உரை வகுத்துள்ளார்.

மேற்சுட்டிய மேற்கோள்களால் பரிமேலழகர் பெற்றிருந்த பன்மொழி மற்றும் பல்துறைப் புலமை வீச்சினை எளிதில் அறிந்து கொள்ளலாம்.

## இலக்கண உரை

கி.பி.1885இல் திருக்குறள் பரிமேலழகர் உரையைப் பதிப்பித்த திருமயிலை முருகேச முதலியாரவர்கள், "திருக்குறள்

மூலமும் பரிமேலழகர் செய்த இலக்கண வுரையும்" என்று தலைப்பிட்டு வெளியிட்டுள்ளார். பண்டைய உரையாசிரியர்கள் அனைவரும் வாக்கியமுடிபு, வினைமுடிபு, எச்சத் தொடர்கள் அசைநிலை போன்ற இலக்கணக் குறிப்புகளை ஆங்காங்கே காட்டிச் செல்வது இயல்பு. எனினும் பரிமேலழகர் இலக்கணக் குறிப்புகள் தந்து குறட்பொருளை விளக்கும் முறையை ஓர் உரை நெறியாகவே கையாளுகின்ற காரணத்தால், அவர் உரையை அறிஞர்கள் இலக்கண உரை என்றே அழைத்தனர்.

எழுத்து, சொல், பொருள் தொடர்பான இலக்கணக் கூறுகளை விளக்க தொல்காப்பியத்தையும், புறப்பொருள் தொடர்பான கூறுகளை விளக்க புறப்பொருள் வெண்பா மாலையையும் ஒரோவழி அகப்பொருளை விளக்க இறையனார் களவியல் உரையையும் (குறள் 1099) பரிமேலழகர் எடுத்துக் காட்டுகிறார்.

தொல்காப்பியத்தைப் பொறுத்தவரையில், 'வாராக் காலத்தும் நிகழுங் காலத்தும்' என வரும் சொல்லதிகாரச் சூத்திரத்தை (241) முழுவதுமாகவும், 'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்' என்னும் புறத்திணைச் சூத்திரத்திலிருந்து (74) 'நாலிரு வழக்கின் தாபதப் பக்கமும்' என்னும் ஓரடியை மட்டும் தனியாகவும் முறையே குறள் 3, 26 ஆகியவற்றின் உரைகளில் மேற்கோளாகக் காட்டுகிறார். பிற இடங்களில் எழுத்து, சொல் தொடர்பான இலக்கணக் கூறுகளைக் கருத்தளவில் சொல்லிச் செல்கிறார். மேலே சுட்டிய புறத்திணைச் சூத்திரப் பகுதியைப் பரிமேலழகர் (குறள் 26) வேறொரு உரையாசிரியரின் மேற்கோளாகக் காட்டி மறுத்துவிடுகிறார். மறுக்கப்படும் உரையாசிரியர் இன்னாரெனத் தெரியவில்லை. மறுக்கப்படுவது சிதைந்து போனதாகக் கருதப்படும், பரிப்பெருமாளின் அறத்துப்பாலுக்குரிய உரையாக இருக்கலாம்.

எனவே புறப்பொருள் தொடர்பான செய்திகளை விளக்கப் பரிமேலழகர் பொருளதிகாரத்தை விடுத்துப் புறப்பொருள் வெண்பாமாலைய எடுத்துக்காட்டுவானேன் என்னும் வினா இங்கு எழுகிறது. வஞ்சிக்குரிய தழிஞ்சி, (குறள் 766,772,773) தும்பைக் குரிய தும்பை அரவம், (762) நூழில் ஆட்டு (774) வாகைக்குரிய அவையமுல்லை, (118) ஏறாண்முல்லை, (764) பாடாணுக்குரிய செவியறிவுறூஉ, (432, 960) ஓம்படை (566) ஆகிய துறைகளுக்குரிய புறப்பொருள் வெண்பாமாலைப் பாடல்களைப் பரிமேலழகர் மேற்கோளாகக் காட்டிக் குறட்பாக்களின் பொருளை விளக்குகிறார். இவற்றுள் தழிஞ்சி, செவியறிவுறூஉ என்னும் இரு துறைகள் மட்டும் தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் இடம்

பெறுகின்றன. எனினும் இத்துறைகளால் தொல்காப்பியர் கருதும் பொருளும் புறப்பொருள் வெண்பாமாலை கருதும் பொருளும் வேறுபட்டு விளங்குகின்றன. பரிமேலழகர் காட்டும் குறட்பாக்களுக்குப் புறப்பொருள் வெண்பாமாலை கருதும் பொருள்களே பொருத்தமாக அமைகின்றன. இனித் தும்பை அரவம், நூழிலாட்டு, அவையமுல்லை, ஏறாண்முல்லை, ஓம்படை என்னும் புறத்துறைகள் வெண்பாமாலையில் மட்டுமே இடம்பெற்றவை. எனவே தாம் உரைசெய்யப்புகுந்த இலக்கியத்திற்குப் பொருத்தமானவையாக இருந்த வெண்பா மாலைப் பாடல்களைப் பரிமேலழகர் மேற்கோளாகக் காட்டினார் எனக் கொள்ளக் கிடக்கிறது.

அணியிலக்கணம் தொடர்பான குறிப்புகளைப் பரிமேலழகர் பல குறட்பாக்களின் பொருளை விளக்குவதற்குப் பயன்படுத்தியுள்ளார். அவர் எடுத்துக்காட்டும் அணிகளின் பெயர்கள் தொல்காப்பியத்துள் காணப்பெறவில்லை; பிற்கால அணியிலக்கண நூல்களுள், குறிப்பாகத் தண்டியலங்காரத்துள் பல அதே பெயரால் வழங்கப்படுகின்றன. காட்டாகத் தொழிலுவமை, பண்புவமை, அவயவ உருவகம், குறிப்புருவகம், பின்வருநிலை, நிரனிறை, பிறிதுமொழிதல், என்பனவற்றைக் கூறலாம். எனினும் இல்பொருளுவமை, எடுத்துக்காட்டு உவமை, ஏகதேச உருவகம் என்னும் சொல் வழக்குகளைப் பரிமேலழகர் எந்த அணியிலக்கணத்தைப் பின்பற்றி எடுத்தாளுகிறார் என அறிய இயலவில்லை. ஏகதேச உருவகம் என்னும் வழக்கு முதன்முதலாக மாறனலங்காரத்தில் காணப்படுகிறது.

இவ்வாறு எழுத்து, சொல், பொருள், அணியென்னும் தமிழிலக்கணக் கூறுகளைப் பயன்படுத்திக் குறட்கருத்துகளைக் கற்போர் உளங்கொள்ளுமாறு உரைவகுத்த காரணத்தால் பரிமேலழகர் உரை 'இலக்கணவுரை' எனக் கருதப்படுகிறது.

### நடை

மூல நூலைப் போலவே பரிமேலழகரின் உரையும் மிக்க சொற்செட்டுடையது. சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க்கினிமை முதலாக நல்லதொரு நூலுக்குச் சொல்லப்படும் இலக்கண நலன்களெல்லாம் ஒருங்கே அமைந்ததாகப் பரிமேலழகர் உரை விளங்குகிறது. மணிப்பிரவாள நடை பெருவழக்காயிருந்த காலத்தில் தோன்றியதாயினும் இந்த உரையில் வடசொற் கலப்பை மிகுதியாகக் காண இயலவில்லை. தேவையான இடங்களிலும் தொல்காப்பிய வரையறைக்கேற்ப

வடசொற் கிளவிகளைத் தமிழ்மரபாக்கி இவ்வுரை கையாளக் காணலாம். திருக்குறளில் சில இடங்களில் ஓரிரு அசைச் சொற்களை நீக்கினாலும் பொருள் சிதையாத நிலையைக் காண்கிறோம். ஆனால் பரிமேலழகர் உரையிலிருந்து சில சொற்களைக் கூடப் பொருளிழப்பின்றி நீக்க இயலாது என்பதை அதனை ஊன்றிப் பயில்வோர் நன்குணரலாம். பரிமேலழகருக்கு முன்னும் பின்னும் தோன்றிய உரைகளை ஒப்பிட்டு ஆராயின் பரிமேலழகரின் ஏனைய உரைச்சிறப்புகளோடு அவருடைய நடையினிமையும் இனிது புலனாகும்.

பரிமேலழகர் தம்உரையுள் சில இடங்களில் வடமொழி வழக்கையும் கருத்தையும் வலிந்து புகுத்தியுள்ளார். தமிழ் மரபிற் பிறந்த திருக்குறளுக்குத் தேவையற்ற வடமொழி எடுத்துக் காட்டுகளையும் இணையான கருத்தோட்டங்களையும் தந்து செல்கிறார் என்னும் குற்றச்சாட்டை அறிஞர்கள் முன்வைத்து வந்துள்ளனர். இக் குற்றச்சாட்டு ஓரளவுக்கு ஏற்கக் கூடியதுதான். அவர் வாழ்ந்த காலத்தின் பண்பாட்டு, இலக்கியச் சூழலுக்கேற்ப இத்தகைய கருத்துகளைச் சில இடங்களில் பரிமேலழகர் கையாளுகிறார். எனினும் இத்தகைய இடங்கள் மிகவும் சிலவே, கௌடல்யரின் பொருள்நூல், சுக்கிரநீதி, போசராசனின் சிருங்கார நூல், ஆருகதம், வைசேடிகம், சாங்கியம் போன்ற சமயநூல்கள் ஆகியவற்றைப் பரிமேலழகர் சில இடங்களில் கருத்தாகவும், மேற்கோளாகவும் காட்டிச் செல்கிறார். அகம், புறம் என்னும் சங்க இலக்கிய மரபு மாறி, முப்பொருள் (திரிவர்க்கம்), நாற்பொருள் (சவர்க்கம்) என்னும் வாழ்வியற்கோட்பாடுகள் கால்கொண்ட காலச் சூழலில் தோன்றிய திருக்குறள் கருத்துகளுக்கு ஏற்பனவற்றைக் காட்டி அதன்பெருமையை உறுதிப்படுத்துவதே பரிமேலழகரின் நோக்கமாதலின் இத்தகைய மேற்கோள் கருத்துகளைக் குறையாகக் கருதவேண்டுமென்பதில்லை. மேலும் வடமொழி மரபு ஒவ்வாதது எனத் தாம் கருதிய இடங்களில் பரிமேலழகர் அதனை மறுத்துரைக்கவும் தவறவில்லை என்பதையும் நாம் சிந்திக்கவேண்டும். காட்டாக ஒன்றைக் கூறலாம்:

**இன்றி அமையாச் சிறப்பின ஆயினும்**
**குன்ற வருப விடல் (961).**

இக் குறளுக்குச் சிறப்புரை கூறுமிடத்து, 'இறப்ப வரும்வழி இளிவந்தன செய்தாயினும் உய்க' என்னும் வடநூன் முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையும் தூக்கி அவை செய்யற்க என்பதாம் என

வடபுலக் கருத்தோட்டத்தை மறுத்துத் தமிழ்மரபைப் போற்றும் இயல்பினராகப் பரிமேலழகர் காணப்படுகிறார். எனவே மேற்சுட்டிய, குறைபாட்டைப் பெரிதுபடுத்தாமல் 'மிகை நாடி மிக்க கொளல்' என்னும் வள்ளுவர் கருத்திற்கு ஏற்பப் பரிமேலழகரின் பெருமையை உள்ளவாறு அறிதலே நல்லது.

> **முப்பால் கடைந்தெடுத்த மூவா அமுதம்**
> **பரிமே லழகர் உரை.**

*பதிப்பு*

*1861* ஆறுமுக நாவலர் (ப.ஆ) **திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும்.** வாணி நிகேதன் அச்சுக்கூடம்

*1885* முருகேச முதலியார் (ப.ஆ) **திருக்குறள் மூலமும் பரிமேலழகர் செய்த இலக்கணவுரையும்.** சென்ன பட்டணம்: கலா ரத்னாகரம் அச்சுக் கூடம்.

*1910* மு. இராகவையங்கார் (ப.ஆ) **திருக்குறள் பரிமேலழகர் உரை.** மதுரை: விவேக பாநு முத்திராசாலை.

*1937* சடகோப ராமாநுசாசாரியார் (ப.ஆ) **திருக்குறள் பரிமேல்ழகர் உரையும் விளக்கமும்,** சென்னை.

*1947* **திருக்குறள் பரிமேலழகர் உரை,** சென்னை சைவ சி. நூ. ப. கழகம்.

*1950* ச. தண்டபாணி தேசிகர் (ப.ஆ) **திருக்குறள் உரைவளம் அறத்துப் பால்.** தருமபுர ஆதீனம்.

*1951* **திருக்குறள் உரைவளம்**-பொருட்பால்.

*1952* **திருக்குறள் உரைவளம்**-காமத்துப்பால்.

*1957* பட்டுச்சாமி ஓதுவார் (ப.ஆ) **திருக்குறள் உரைக்கொத்து**-அறத்துப் பால்.

*1958* உரைக்கொத்து - காமத்துப்பால்.

*1959* உரைக்கொத்து-பொருட்பால்; மூன்றும் திருப்பனந்தாள் காசிமட வெளியீடு.

***பரிமேலழகர் – பரிபாடல் உரை***

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய பரிபாடலுக்குப் பழைய உரை ஒன்று இருபத்திரண்டு பாடல்களுக்கும்

கிடைத்துள்ளது. இந்த உரை திருக்குறளுக்கு உரைகண்ட பரிமேலழகரால் எழுதப்பட்டது என அறிஞர்கள் கருதுகின்றனர். பரிபாடல் மூலமும் பரிமேலழகர் உரையும் என்று பெயரிட்டு இதனை முதலில் (1918) பதிப்பித்த உ.வே. சாமிநாதையரவர்கள் இவ்வுரை பரிமேலழகரால் செய்யப்பெற்றது என்பதற்குக் கூறும் காரணங்களாவன:

> ஏட்டுப்பிரதிகள் தேடுகையிற் கிடைத்த சில குறிப்புக்களாலும், "கண்ணுதற் கடவுள்" என்னும் இந்நூல் உரைச்சிறப்புப் பாயிரத்தாலும், செந்தமிழ் 6,7,9,10 ஆம் தொகுதிகளிற் பதிப்பிக்கப்பெற்றுள்ள திருக்குறள் பரிமேலழகருரை நுண்பொருள் மாலையாலும் இந்த உரை பரிமேலழகர் இயற்றியதென்று தெரியவந்தது (முகவுரை IX).

இதில் மூன்று செய்திகள் குறிக்கப்பெறுகின்றன :

1. ஏடுகள் தேடுகையில் ஐயரவர்கட்குக் கிடைத்தத சில குறிப்புகள். இவை யாவை என்றோ என்ன தன்மைய என்றோ அவர் விளக்கவில்லை.

2. 'கண்ணுதற் கடவுள்' எனத் தொடங்கும் உரைச்சிறப்புப் பாயிரம்'பரிமேலழகன். . . . பரிபாட்டமுதம் . . . சிற்றறிவினர்க்கும் தெற்றெனத் தோன்ற . . . தொல்லோர் பாடிய துணிதரு பொருளை. . . விளங்கக் காட்டினன் எனக்கூறும் பகுதியை உ.வே.சா. ஒரு காரணமாக்குவர்.அடிக்குறிப்பாக இந்தப்பாயிரம், 'செந்தமிழ் முதல் தொகுதி, பக்.88-90'இல் இடம்பெற்றதாகக் குறிக்கப்பட்டுள்ளது. 1935இல் மு.இராகவையங்காரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு மதுரைத் தமிழ்ச் சங்கத்தால் வெளியிடப் பெற்ற பெருந்தொகை என்னும் தொகுப்பில் இந்தப் பரிபாடல் உரைச் சிறப்புப்பாயிரம் (1549) மீண்டும் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதன் அடிக்குறிப்பில், 'திருக்குறட் பரிமேலழகர் உரைப்பிரதியிற்கண்டவை' என்று தரப்பட்டுள்ளது. இந்தப் பாயிரம் காணப்படும் திருக்குறட் பரிமேலழகர் உரைப்பிரதி பற்றிய வேறு விளக்கமோ, விவரமோ, அதனைப் பதிப்பித்தார் இன்னார் என்ற குறிப்போ காணப் பெறவில்லை. மேலும் பரிபாடல் உரைக்குளமுந்த இச்சிறப்புப் பாயிரம், பரிபாடல் உரைப்பிரதியில் காணப்பெறாமல் திருக்குறள்

உரைப்பிரதியில் மட்டும் காணப்படுவானேன் என்னும் வினாவும் எழுகிறது.

3. 'திருக்குறள் பரிமேலழகர் உரை நுண் பொருள் மாலையாலும்' என்று ஐயரவர்கள் குறிப்பிடுவதற்குப் பரிபாட்டினுள் 'மழையிருஞ் சூல்' என்பதனை முன்பின்னாகத் தொக்க இரண்டாம் வேற்றுமைத் தொகையென்றார் இவ்வுரையாசிரியர்" (216) என வரும் பகுதி அடிப்படையாக அமைந்தது போலும்.

காரி இரத்தின கவிராயர் பெயரால் செந்தமிழில் வெளியிடப்பெற்ற இந்த நுண்பொருள் மாலை அவரால் முழுவதுமாக இயற்றப் பெற்றதாகத் தெரியவில்லை. அறத்துப்பாலின் இறுதியில், 'பரிமேலழகரையனுரையுள் இரத்தின கவிராயன் எடுத்துச் சேர்த்த நுண்பொருள்மாலை' என்று காணப்படுதலின் பரிமேலழகர் உரைக்கு விளக்கம் தரவந்த கவிராயர் தாமே சிலவற்றைச் சேர்த்தும் தந்துள்ளார் எனக் கொள்ளக் கிடக்கிறது. மேற்குறித்த பரிபாடல் எடுத்துக்காட்டே இதற்கு நல்லதொரு சான்றாக அமைகிறது. முதலாவது, 4ஆம் பரிபாடல் 7ஆவது அடியில் வரும் தொடராகிய 'மழையிருஞ் சூல்' என்பதற்கு அமைந்த உரை, மேல் தாமரைப் பொகுட்டு என்றது போலக் கொள்க' என்று மாட்டேற்றிக் கூறுகிறதே, தவிர நேராக இந்த இலக்கணக் குறிப்பைக் கூறவில்லை. மூன்றாம் பாடலில் 94ஆம் அடியிலுள்ள, 'தாமரைப் பொகுட்டு' என்பதற்கு இலக்கணக்குறிப்பு கூறுங்கால் "வரையறையின்மையாற் சிறுபான்மை முன்மொழி பின்மொழியாகத் தொக்க இரண்டாம் வேற்றுமைத் தொகை" என்று பரிபாடல் உரை கூறுகிறது.

பரிமேலழகர் தம் குறளுரையில் இத்தகைய தொகைப் பெயர்களுக்கு இலக்கணம் கூறுங்கால், பின் முன்னாகத் தொக்கது என்றும், ஆறாம் வேற்றுமைத் தொகை என்றும் கூறுகிறார் (குறள் உரை - 319, 476, 1008). பரிபாடல் உரையில் முன்மொழி பின்மொழியாகத் தொக்கது என்றும், இரண்டாம் வேற்றுமைத் தொகை என்றும் இலக்கணக் குறிப்பு தரப்பட்டுள்ளது. இரண்டும் இருவகையாலும் (பின்முன் - முன்பின்; ஆறாம் வேற்றுமை - இரண்டாம் வேற்றுமை) வேறுபட்ட உரைகளாகத் தோன்றுகின்றன. இந்த முரண்பாடு காரணமாகத்தான், காரி இரத்தினக் கவிராயர் 'அவர் கருத்து எம்மனோர்க்கு அறிதல் அரிதென்க' என்று கூறுகிறார் (இ.சு. 216, பக்.48-49).

இதன் தொடர்பில், ஏறக்குறைய பரிமேலழகரின் சமகாலத்தவர் எனக் கருதப்படும் (மு.அ.13/93) சேனாவரையர், தம்

சொல்லதிகார உரையில் தொகைப்பெயர்களைக் குறித்துக் குறிப்பிடும் ஒரு செய்தி ஒப்பு நோக்கத் தக்கதாய் அமைகிறது.

"அடைகடல் என்பது அடையாகிய கடல் என இருபெயர்ப் பண்புத்தொகை. இனி வரையறையின்மையாற் சிறுபான்மை முன்மொழி பின்மொழியாகத் தொக்கதோர் ஆறாம் வேற்றுமைத் தொகை எனவும் அமையும்" (419).

இனி இந்தப் பரிபாடல் உரையின் தன்மை குறித்துக் கூறுங்கால், "நுணுகி ஆராயின், திருக்குறளுரையிலும் இவ்வுரையிலும் ஒத்த கருத்துக்களும் ஆசிரியர் பரிமேலழகருடைய கொள்கைகளும் பல காணலாகும்" (முகவுரை IX) என்று உ.வே. சாமிநாதையர் கூறுகிறர். 1918 இல் கூறப்பெற்ற இக் கருத்தின் வன்மை மென்மைகள் மேலும் ஆராயத்தக்கனவாகத் தோன்றுகின்றன.

ஆக, ஆசிரியர், காலம், இடம் குறித்த வலுவான சான்றுகள் எவையும் இல்லாத "கண்ணுதற் கடவுள்" என்னும் உரைப்பாயிரத்தைத் தவிர இவ் உரை பரிமேலழகரால் இயற்றப்பெற்றது என்பதற்கு வேறு வலுவான காரணங்கள் புலப்படவில்லை. எனினும் வேறு எவர் பெயராலும் வழங்கப்படாமையாலும், வேறு தெளிவான ஆதாரங்கள் கிடைக்காமையாலும், தற்போதைக்கு இதனைப் பரிமேலழகரின் உரையாகக் கொள்ளவேண்டிய நிலையில் உள்ளோம்.

"இந்தவுரை பலவிடத்துப் பொழிப்புரையாயும், சிலவிடத்துப் பதவுரையாயும், சிலவிடத்துக் கருத்துரையாயும். . . உரிய இடங்களில் இலக்கணக் குறிப்புகளைப் பெற்றும், சில விடத்து, மிக அழகான பதசாரத்துடன் கூடியும், விளங்காத சிலவற்றைத் தக்க தமிழ் நூல் மேற்கோள்களாலும், வேதம், உபநிடதம் முதலியவற்றின் கருத்துக்களாலும் விளக்கியும் மிக விரிவாக அமைந்துள்ளது" (முகவுரை IX) என்று கூறும் உ.வே. சாமிநாதையரவர்களின் கருத்து இவ்வுரைக்கு முற்றிலும் பொருத்தமானதேயாகும்.

## பதிப்பு

1918 முதல்பதிப்பு . உ.வே. சாமிநாதையர் (ப.ஆ) **பரிபாடல் மூலமும் பரிமேலழகருரையும்**. சென்னை

1935 இரண்டாம் பதிப்பு. உ.வே. சாமிநாதையர் (ப.ஆ) **பரிபாடல் மூலமும் பரிமேலழகருரையும்**. சென்னை

## திருமுருகாற்றுப்படை – பரிமேலழகருரை

'திருமுகாற்றுப்படை உரைக்கொத்து' என்னும் பெயரில் ஐந்து உரைகளைத் தொகுத்து 1950ஆம் ஆண்டில் திருப்பனந்தாள் காசிமடத்தார் வெளியிட்டனர். இப்பதிப்பில் நச்சினார்க்கினியர், உரையாசிரியர், பரிமேலழகர், கவிப்பெருமாள், பரிதி என்னும் ஐவரின் உரைகள் அடங்கியுள்ளன. இதில் உள்ள நச்சினார்க்கினியர் உரை அவர் எழுதிய பத்துப்பாட்டு உரையுள் காணப்படுவது. 'உரையாசிரியர் உரை' என்று ஒருரை மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் பதிப்பிக்கப்பெற்றது என்றும் பரிமேலழகர் என்பவர் பேரால் ஒருரை சென்னையில் இருமுறை பதிப்பெய்தியது என்றும், கவிப்பெருமாள், உரைப்பொழிப்பும், பரிதி உரைக்குறிப்பும் அடங்கிய ஏடுகளைத் தெய்வ சிகாமணிக் கவுண்டர் அளித்தார் என்றும் இந்த உரைக்கொத்தின் இரண்டாம் பதிப்பிற்கான பதிப்புரை (1981) கூறுகிறது.

இந்தப் பதிப்புரையின் கூற்றால், திருக்குறளுக்கு உரை கண்ட பரிமேலழகர்க்கும் திருமுருகாற்றுப்படைக்கு உரைசெய்த பரிமேலழகர்க்கும் எத்தகைய தொடர்பும் இருப்பதாகத் தெரியவில்லை. மேலும் இதனை முதலில் பதிப்பித்தவர் யார், பதிப்பித்த காலம் எது முதலான விவரங்கள் எவையும் கூறப்பெறவில்லை. பரிமேலழகர் பெயரால் பதிப்பிக்கப் பெற்றுள்ள உரையில் திருக்குறளுக்கு உரையெழுதிய பரிமேலழகரின் புலமை, நடைச்செறிவு, பிற உரைநெறி இயல்புகள் ஆகிய எவையும் காணப்பெறவில்லை. எனவே நக்கீரர், அவ்வையார், பேராசிரியர், அகத்தியர் என்னும் புகழ்பூத்த பெயர்களைப் போன்று பரிமேலழகரின் பெயரும் பிற்காலத்தே பிறரால் சூடிக் கொள்ளப் பெற்றதாதல் கூடும் எனக் கருத வேண்டியுள்ளது.

இக் கொத்தில் உள்ள உரையாசிரியர், கவிப்பெருமாள், பரிதி என்னும் மூவரைப் பற்றிய எத்தகைய வரலாற்று விவரங்களும் கூறப்பெறவில்லை. பழைய பெயர்களின் வாசனை இவற்றிலும் காணப்படுவதை உணரலாம்.

### பதிப்பு

1950 **திருமுருகாற்றுப்படை உரைக்கொத்து.** திருப்பனந்தாள் காசிமடம்

1981 **திருமுருகாற்றுப்படை உரைக்கொத்து.** (இரண்டாம் பதிப்பு), (தொகுப்பாசிரியர்கள்): K.M. வேங்கடராமையா, வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர். திருப்பனந்தாள்: அன்னபூரணா பதிப்பகம்.

# 7. இலக்கண நூல்கள்

## *10ஆம் நூற்றாண்டு*

### *பாட்டியல்*

பாடாண் பொருண்மையமைந்த சங்கப் பாடல்கள் எல்லாம் தனிப்பாடல் இயல்பினவாக இருந்தன. ஒரே தலைவனைப் பற்றிப் பாடினாலும் தனித்தனித் துறைப் பொருண்மையுடையனவாய் அமைந்தனவேயன்றித் தொடர் நிலைத் தன்மையுடையனவல்ல. சங்க காலத்திற்குப் பின்னர்த் தொடர்நிலைச் செய்யுட்கள் இயற்றும் மரபு தோன்றியது. இம்மரபில் காப்பியங்களும் சிற்றிலக்கியங்களும் தோன்றின. தொல்காப்பியத்தில் இவ்வகையான படைப் புகளுக்கென விதந்தோதப்பட்ட விதிகள் காணப் பெறவில்லை. எனவே பிற்காலத்தே தோன்றிய இத்தகைய இலக்கியங்களுக்கான இலக்கண நூல்கள் கி.பி. எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுகளில் தோன்றலாயின. பாட்டியல் என்னும் பெயரால் தோன்றியனவாக அறியப்படுகின்ற அகத்தியர் பாட்டியல், பரணர் பாட்டியல், பொய்கையார் பாட்டியல் போன்றவை வழக்கொழிந்த காரணத்தால் மறைந்து போயின. கி.பி. பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய பன்னிரு பாட்டியல் என்னும் நூல்தான் இந்த வகையில் நமக்குக் கிடைத்துள்ள முதல் நூலாகக் கருதப்படுகிறது. பாட்டியல் என்னும் நூல்வகை பாவியல் என்றும், சில இடங்களில் (கல்லாடனார் கலாவியல், பொய்கையார் கலாவியல்) கலாவியல் என்றும் வழங்கப் பெற்றதாக அறிகிறோம். (மு. அருணாசலம், தமிழிலக்கிய வரலாறு - 10ஆம் நூற்றாண்டு, ப. 221).

### பன்னிரு பாட்டியல்

பன்னிரு பாட்டியல் என்னும் நூலை முதன் முதலில் மதுரைத் தமிழ்ச் சங்க ஏடான செந்தமிழில் ரா. இராகவையங்கார் பல ஏடுகளைப் பரிசோதித்துக் கி.பி. 1912இல் வெளியிட்டார். இதனுடைய திருத்தமான இரண்டாம் பதிப்பு 1951இல் வெளியாயிற்று.

பன்னிரு பாட்டியல் ஒரு தொகுப்பு நூல். தொகுத்த ஆசிரியரின் பெயர். வரலாறு எதுவும் தெரியவில்லை. சிவனது அட்ட மூர்த்தங்களைக் கூறும் பாடல்களிரண்டும், நாமகள்

வாழ்த்து ஒன்றும் காணப்படுதலின் இதனுடைய தொகுப் பாசிரியர் சைவ சமயச் சார்புடையவர் எனத் தெரிகிறது.

## பெயர்க்காரணம்

பன்னிரு பாட்டியல் என்னும் நூல் கருதும் பன்னிரண்டு என்னும் தொகைக்குரிய விளக்கம் கிடைக்கவில்லை என்று மேற்குறிப்பிட்ட இராகவையங்கார் பதிப்பு கூறுகிறது. பன்னிரண்டு பாட்டிலக்கண நூல்களிலிருந்து தொகுக்கப்பெற்ற சூத்திரங்களை உடைய நூலாதலின் இப்பெயர் பெற்றது என்று ஒரு கருத்து நிலவுகிறது. இதற்குரிய ஆதாரங்கள் எவையும் நூலுள் காணப்படவில்லை. எனவே பன்னிரண்டு பாட்டியல் உறுப்புகளைக் கூறுதலின் பன்னிரு பாட்டியல் எனப் பெயர் பெற்றது என்று பாடுபொருள் அடிப்படையில் இதற்கு விளக்கம் தரலாம் என அறிஞர்கள் கருதுகின்றனர். இந்நூலுக்குப் பின்னர் எழுந்த வச்சணந்தி மாலை முதலான பாட்டியல் நூல்கள் மங்கலம் முதலாகக் கணம் ஈறாகப் பத்துப் பொருத்தங்களை மட்டுமே கூற, இந்நூல் அவற்றோடு கன்னல், புள் என்னும் இரண்டையும் சேர்த்துப் பன்னிரண்டு பொருத்தங்களைக் கூறுவதனால் இத்தொகையால் பெயர் பெற்றது என்று மு. அருணாசலம் விளக்குகிறார். பன்னிரு பாட்டியல் எழுத்தியல், சொல்லியல், இனவியல் என மூன்று பகுப்புகளை உடையது. இவற்றுள் மேற்சுட்டிய பன்னிரு பொருத்தங்களும் எழுத்தியல், சொல்லியல் என்னும் இரு பகுதிகளைச் சேர்ந்தன. மூன்றாம் பகுதியாகிய இனவியல் இப்பன்னிரண்டனுள் அடங்காமையின் பாடு பொருளால் இந்நூல் பெயர் பெற்றது என்பதும் பொருத்தமாகத் தோன்றவில்லை. தக்க வேறு அகப்புறச் சான்றுகள் கிடைக்கும் வரையில் இந்நூலின் உண்மையான பெயர்க் காரணத்தை அறிய வாய்ப்பில்லை.

> தவளத் தாமரை தாதார் கோயில்
> அவளைப் போற்றுதும் அருந்தமிழ் குறித்தே

என வரும் பன்னிரு பாட்டியலுக்கு முந்திய நாமகள் வாழ்த்தும்

> சொல்லின் கிழத்தி மெல்லியல் இணையடி
> சிந்தையில் வைத்து முன்னோர் பொருள்நெறி
> கூட்டி உரைப்பல் பாட்டியல் மரபே . . . . .
> எழுத்தின் கிழத்தி நாமகள் ஆதலால்,

என வரும் பன்னிரு பாட்டியல் கூறும் நாமகள் வாழ்த்துகளும், பண்டைய இலக்கண நூல்கள் நாமகளுக்கு வாழ்த்துக் கூறித்

தொடங்கும் மரபினைப் பின்பற்றி வந்தன என்பதை உணர்த்துகின்றன (மேலது, ப. 225).

எழுத்தியல் (96), சொல்லியல் (59), இனவியல் (205) என்னும் மூன்று இயல்களும் 360 நூற்பாக்களும் இந்நூலுள் காணப்படுகின்றன. இவற்றுள் சில (61-71) குறள் யாப்பில் அமைந்தவை. இந்நூலின் தொகுப்பாசிரியர் இயற்றினவும், அவருக்கு முன்னர் வழக்கில் இருந்த பாட்டியல் ஆசிரியர்கள் இயற்றினவும், ஆசிரியர் பெயர் குறிப்பிடப்படாமல் அமைந்தனவுமாக இந்த நூற்பாக்கள் காணப்படுகின்றன. முதலிரு இயல்களும் முதன்மொழிப் பொருத்தங்கள் பன்னிரண்டையும் கூறுகின்றன. மூன்றாவது இயல்தான் பிரபந்தங்களின் இலக்கணங்களை வரையறுத்துக் கூறுகிறது.

## பிரபந்த இலக்கணம்

பன்னிரு பாட்டியல் 74 பிரபந்தங்களுக்கு (சிற்றிலக்கிய வகைகளுக்கு) இலக்கணம் கூறுகிறது. 96 வகைப் பிரபந்தங்கள் என்பது பிற்கால வழக்கு. பதினேழாம் நூற்றாண்டில் தோன்றிய **சிவந்தெழுந்த பல்லவராயன் உலா**" தொண்ணூற்றாறு கோலப் பிரபந்தங்கள் கொண்டபிரான்" என்று முதன் முதலாக இத் தொகையைக் குறிப்பிடுகிறது.

பன்னிரு பாட்டியல் விளக்கும் 74 பிரபந்தங்களில் பல தமிழிலக்கிய வரலாற்றில் இடம் பெறாதவை. காட்டாகச் சாதகம். பல்சந்தமாலை, ஒலியந்தாதி, யானைத் தொழில் போன்றவற்றைக் கூறலாம்.

தூதுப் பிரபந்தம் பற்றி இவர் குறிப்பிடாமையின் இந்த நூலின் தொகுப்பாசிரியர் காலத்தில் அல்லது அவருக்கு முன்னர் இந்தச் சிற்றிலக்கிய வகை தோன்றவில்லை எனக் கருதலாம். ஆனால் பரணியிலக்கணம் இந்நூலுள் காணப்படுவது வரலாற்றுப் பொருத்தமற்றதாகத் தோன்றுகிறது. இந்த நூற்றாண்டிலோ(10) அதற்கு முன்னரோ பரணி நூல்கள் தோன்றியதாகச் சான்றுகள் இல்லை. ஒருகால் தோன்றியிருப்பின் வழக்கொழிந்திருக்கலாம். எனவே பன்னிருபாட்டியலில் காணப்படும் பரணியிலக்கணம் இடைச்செருகலாக இருக்கலாம் என அறிஞர்கள் கருதுகின்றனர் (மேலது, ப. 227). உழத்திப்பாட்டு, குறத்திப் பாட்டு என்ற இரண்டும் பிற்காலத்தே பள்ளு, குறவஞ்சியாக மலர்ந்தவை. இவற்றைக் கூறியிருப்பதும் மேற்காட்டிய ஐயத்தை வலுப்படுத்துகிறது.

மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என்னும் இருவகை நூற்பகுப்பைப் பன்னிரு பாட்டியலில்தான் முதன்முதலாகக்

காண்கிறோம். சங்க நூல்களையும், சங்கம் மருவிய காலத்துத் தோன்றிய அறவிலக்கிய நூல்களையும் கருத்திற்கொண்டு இத்தொகுப்பாசிரியர் இவ்விலக்கணத்தைக் கூறியிருக்கலாம் எனத் தோன்றுகிறது. எனினும் பிரபந்தம் என்னும் வகையுள் இவற்றை அடக்கிக் கூறுவது பொருத்தம்தானா என்பது மேலும் ஆராய்தற்குரியது.

தமிழிலக்கிய வரலாற்றில் படைப்புகளாகக் கண்டறியாத சிலவகை புது மரபுகளையும் பன்னிருபாட்டியல் கூறுகிறது. உலாவுக்கு இலக்கணம் வகுக்குமிடத்துப் பெண்களுக்கு எழுவகைப் பருவங்களையும், அவ்வவற்றிற்குரிய வயது நிலைகளையும் கூறுவதோடு அமையாமல், ஆண்களுக்கும் ஏழு பருவங்களையும் பின்வருமாறு கூறுகிறது: பாலன் 7 வயது வரை: மீளி 10; மறவோன் 14; திறலோன் 15; காளை 16; விடலை 30; முதுமகன் 30 வயதுக்கு மேல். பெண்டிர் உலா வருவதும் அவர்களைப் பார்த்து எழுவகைப் பருவ ஆடவரும் காமுறுவதும் ஆகிய நிகழ்ச்சியைத் தமிழ்ப் புலனெறி வழக்கோ உலக வழக்கோ காட்டவில்லை. மேலும் பருவப் பெயர்களும் வயது வரம்பும் வலிந்து கொண்டனவாகத் தோன்றுகின்றன. எனவே இப்புதுமை மேலும் ஆராய்தற்குரியதாக அமைந்துள்ளது.

**மடன்மாப் பெண்டிர் ஏறார் ஏறுவர்**
**கடவுள் தலைவ ராய்வருங் காலே**

என மகளிர் மடலேறுவதைப் பன்னிரு பாட்டியல் இலக்கணப் படுத்துகிறது. திருமங்கையாழ்வாரின் சிறிய திருமடல், பெரிய திருமடல் என்னும் இரு பிரபந்தங்களும் பன்னிரு பாட்டியல் கூற்றுக்கு அடிப்படையாக அமைந்தன போலும்.

பாட்டியல் இலக்கண வரிசையில் தோன்றிய நூல்களுள் மிகப் பழமையானதான பன்னிரு பாட்டியல் தனக்குப் பின்னர்த் தோன்றிய பல பாட்டியல் நூல்களுக்கு வழிகாட்டியாய் அமைந்து, தொல்காப்பியப் பொருளதிகார மரபு தொடர்வதற்கு ஒரு வகையில் துணை நின்றது எனக் கூறலாம்.

### பதிப்பு

1904, 1951 ரா. ராகவையங்கார் (ப.ஆ.) **சங்கத்துச் சான்றோர் இயற்றிய பன்னிரு பாட்டியல்**, மதுரைத் தமிழ்ச் சங்கம் இரண்டாம் பதிப்பு.

1943, 1978 கா.ர. கோவிந்தராச முதலியார் (ப.ஆ.) **பன்னிரு பாட்டியல்** சென்னை: கழகம்.

## 11ஆம் நூற்றாண்டு

### யாப்பருங்கலம்

பதினொன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை என்னும் இரண்டு யாப்பிலக்கண நூல்களும், பிற்பகுதியில் வீரசோழியம் என்னும் ஐந்திலக்கண நூலும் தோன்றின. இவற்றுள் யாப்பருங்கலக் காரிகை மட்டுமே இன்றளவும் பலராலும் பயிலப்பட்டுப் பெருவழக்கினதாகத் திகழ்கிறது.

செயங்கொண்ட சோழமண்டலத்தைச் சேர்ந்த (தொண்டை நாடு) ஆமூர்க் கோட்டத்துச் சிறுகுன்ற நாட்டில் உள்ள காரிகைக் குளத்தூர் என்னும் ஊரினரான 'அளப்பருங்கடற் பெயர் அருந்தவத்தோன்' எனப்பட்ட அமித சாகர முனிவர் என்பவரால் யாப்பருங்கலமும் யாப்பருங்கலக் காரிகையும் இயற்றப் பட்டன என்று முதற் குலோத்துங்கச் சோழனின் செய்யுட் கல்வெட்டுகள் (கி.பி. 1108, 1116) குறிப்பிடுகின்றன. அமிர்த சாகரர், அமுதசாகரர் எனவும் இவர் சிலரால் குறிக்கப்படினும், அமித சாகரர் என்பதே இவருடைய சரியான பெயர் என்பதை, 'அளப்பருங்கடற் பெயர்' என்னும் தொடர் உறுதிப்படுத்துவதாக முதன் முதலில் (1919) அனவரத விநாயகம் பிள்ளையவர்களும் பின்னர் (1940) ந.மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களும் தெளிவித்தனர்.

நூற்பா யாப்பால் இயன்ற இந்நூல் உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல் என மூன்று பிரிவுகளை உடையதாக விளங்குகிறது. பாயிரம் - 2, உறுப்பியல் - 53, செய்யுளியல் - 40, ஒழிபியல் - 3 ஆக இந்நூலில் 98 நூற்பாக்கள் உள்ளன. இந்நூலில் உள்ள நூற்பாக்கள் ஓரடிச் சிறுமையும் இருபத்தொன்பதடிப் பெருமையும் உடையன.

யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை என்னும் இரு நூல்களும் யாப்பிலக்கணம் கூறுவனவாயினும், இவ் இரண்டு நூல்களின் அமைப்பிலும் பொருண்மையிலும் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. காட்டாகச் சில:

| | யாப்பருங்கலம் | யாப்பருங்கலக் காரிகை |
|---|---|---|
| 1. | நூற்பா (ஆசிரியம்) யாப்பு | கட்டளைக் கலித்துறை யாப்பு |
| 2. | அவையடக்கம் இல்லை | அவையடக்கம் உண்டு. |
| 3. | அசைக்கு உறுப்பு - 15 | அசைக்கு உறுப்பு - 13 |
| 4. | விதியும் புறனடையும் ஆங்காங்கே கூறப்படல் | புறனடைகள் ஒழிபியலில் தனியாகக் கூறப்படல் |

| | | |
|---|---|---|
| 5. | எடுத்துக்காட்டுகள் நூலாசிரியரால் பாடப் பெறவில்லை | நூலாசிரியரால் பாடப் பெற்றுள்ளன |
| 6. | மகடூஉ முன்னிலை இல்லை | மகடூஉ முன்னிலை உண்டு |
| 7. | மருட்பா இலக்கணம் கூறப்படவில்லை | கூறப்பட்டுள்ளது |
| 8. | அகவற்பா ஏ, ஓ, ஈ, ஆய், என், ஐ என்று அறுவகையாக முடியும் | அகவற்பா ஈற்றுக்கு விதி கூறப் பெறவில்லை |
| 9. | காசு, பிறப்பு என்னும் வெண்பா வாய்பாடுகள் கூறப்பெறவில்லை | கூறப்பட்டுள்ளன |

இவற்றுள் அவையடக்கம், எடுத்துக்காட்டு இலக்கியம், மகடூஉ முன்னிலை ஆகியன இல்லாமை மரபு வேறுபாட்டையும், மருட்பா இலக்கணம் கூறாமை, காசு, பிறப்பு என்னும் வெண்பா முடிபு கூறாமை, அகவற்பா ஈறு முறைமை கூறுதல், விதியும் புறனடையும் ஒருங்கே கூறுதல் ஆகியன பொருண்மை வேறுபாட்டையும் குறிக்கின்றன. ஒரே ஆசிரியரால் முன்பின்னாக இயற்றப்பெற்ற இரு நூல்களுக்கிடையே இத்தகைய வேறுபாடுகள் காணப்பெறுவது மேலும் ஆராயத் தக்கதாக அமைகிறது.

## பதிப்பு

1916 ச. பவானந்தம் பிள்ளை, **யாப்பருங்கலம்**, சென்னை.

1972 இரா. இளங்குமரன் (ப.ஆ.) **யாப்பருங்கலம்** (சென்னை: கழகம்)

1998 மே.வீ. வேணுகோபாலப்பிள்ளை (ப.ஆ.) **யாப்பருங்கலம்** பழைய விருத்தியுரையுடன் (சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்)

### யாப்பருங்கலக் காரிகை

யாப்பருங்கலத்தை இயற்றிய பின்னர் அமித சாகரர் அதைவிடச் சுருக்கமாகவும் எளிமையாகவும் யாப்பிலக்கணக் கூறுகளை விளக்கி யாப்பருங்கலக் காரிகை என்னும் நூலை இயற்றினார். யாப்பருங்கலத்தின் அங்கமாகச் செய்யப் பெற்றமையால் அதனையொட்டிக் காரிகையும் உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல் என மூன்று பிரிவுகளை உடையதாக அமைந்துள்ளது. உறுப்பியல் - 21, செய்யுளியல் - 16, ஒழிபியல் - 10

ஆக 47 கட்டளைக் கலித்துறைகள் இதன்கண் உள்ளன. தற்சிறப்புப் பாயிரமும், முதல் நினைப்புக் காரிகைகளும் இவற்றுள் அடங்கும்.

எழுத்து, அசை, சீர், பந்தம் (தளை), அடி, தொடை என்னும் கூறுகளைப் பற்றி உறுப்பியலும், வெண்பா, ஆசிரியம், கலிப்பா, வஞ்சிப்பா மற்றும் இவற்றின் தாழிசை, துறை, விருத்தம் என்னும் இனங்களையும் பற்றிச் செய்யுளியலும் விளக்குகின்றன. ஒழிபியலில், மேலே கூறப்படாத யாப்பிலக்கண மரபுகள் சிலவும், எல்லா இலக்கணங்களுக்கும் பொதுவான விகாரம், வகையுளி, வாழ்த்து, வசை, வனப்பு, பொருள்கோள் போன்றனவும் கூறப்படுகின்றன.

இசையமைப்பு உடைய கட்டளைக் கலித்துறையால் இயன்ற காரிகைகளால் இந்நூல் இயற்றப்பட்டிருக்கிறது. மேலும் இலக்கணக் கூறுகளைக் கூறும் காரிகைகளையும் உதாரணச் செய்யுட்களையும் நினைவுகொள்வதற்கு வசதியாக முதல் நினைப்புக் காரிகைகளும் தரப்பட்டுள்ளன. எனவே கற்போர்க்கு மிகவும் பயன்பட்டு எளிமையும் தெளிவும் உடைய இந்நூல் தான் தோன்றிய காலந்தொட்டு இன்றளவும் பெரிதும் பயிலப்பட்டு வருகிறது. இந்நூலுக்குப் பிறகு இத்தகையதொரு யாப்பிலக்கண நூல் தோன்றவே இல்லை என்பதும் இந்நூலின் சிறப்பை விளக்குகிறது.

குணசாகரர் என்னும் உடன்கால அறிஞர் இந்நூலுக்கு நல்லதோர் உரை வகுத்துள்ளார். மூலமும் உரையுமாக இந்நூல் பலரால் பலமுறை பதிப்பிக்கப்பட்டுள்ளது. இந்நூலின் எளிமைக்கும் தெளிவிற்கும் சான்று பகர்வனவாகக் கீழ்வரும் இரண்டு காரிகைகளைக் காட்டலாம்.

சீர்

ஈரசை நாற்சீர் அகவற்கு உரியவெண் பாவினவாம்
நேரசை யாலிற்ற மூவசைச் சீர்நிரை யாலிறுப
வாரசை மென்முலை மாதே வகுத்தவஞ் சிக்குரிச்சீர்
ஓரசை யேநின்றும் சீராம் பொதுஒரு நாலசையே

அடி

குறளிரு சீரடி சிந்துமுச் சீரடி நாலொருசீர்
அறைதரு காலை அளவொடு நேரடி ஐயொருசீர்
நிறைதரு பாதம் நெடிலடி யாம்நெடுமென்
பணைத்தோள்
கறைகெழு வேற்கண்நல் லாய்மிக்க பாதம் கழிநெடிலே

பதிப்பு

காண்க: யாப்பருங்கலக் காரிகையுரை.

### வீரசோழியம்

பதினொன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் எழுந்த இலக்கண நூல் வீரசோழியம். தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் இடம் பெற்றுள்ள செய்யுளியல் யாப்பிலக்கணத்தையும், உவம இயல் ஓரளவு அணியிலக்க ணத்தையும் உணர்த்துவதாகக் கொண்டு தமிழில் ஐந்திலக்கண மரபு உண்டு என்னும் கொள்கை பிற்காலத்தே எழுந்தது. பதினொன்றாம் நூற்றாண்டில் தோன்றிய யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை என்னும் நூல்கள் தனித்த யாப்பிலக்கண நூல்களாக விளங்கின. இவ்வாறு அணியிலக் கணத்திற்குத் தனித்ததோர் நூல் தமிழில் அந்தக் காலகட்டத்தில் தோன்றவில்லை. ஐந்திலக்கணம் என்னும் மரபை உட்கொண்ட இலக்கண நூல் எதுவும் தமிழில் அது வரை தோன்றவில்லை. இந்நிலையில் தான் **வீரசோழியம்** தோன்றியது. தமிழில் மட்டுமல்ல; இந்திய இலக்கணங்களிலேயே ஐந்திலக்கண மரபு என்ற ஒன்றை எடுகோளாகக் கொண்டு எழுந்த ஒரே இலக்கண நூல் வீரசோழியம்தான். இந்நூலுக்குரிய சிறப்பாக இதனைக் கொள்ள இயலாதெனினும், இத்தகையதொரு புதிய முயற்சியினைத் தமிழ் இலக்கண மரபில் தோற்றுவித்தவர் புத்தமித்திரர் என்பதில் ஐயமில்லை.

**எழுத்துச் சொல் நற்பொருள் யாப்பு அலங்காரம் எனும்**
**. . . . . பஞ்ச அதிகாரமாம் பரப்பைச் சுருக்கி . . . . .**
**சோழன் திருப்பெயரால் . . . . . . உரைப்பன்**

எனவரும் பாடற்பகுதி இக்கருத்தை விளக்கி நிற்கக் காணலாம்.

### ஆசிரியர்

தமிழ், சமஸ்கிருதம், பாலி ஆகிய பல மொழிகளில் புலமை பெற்றிருந்த வீரசோழிய ஆசிரியரான புத்தமித்திரர் பாண்டி நாட்டில் உள்ள பொன்பற்றி என்னும் ஊரைச் சேர்ந்தவர் என்றும் பௌத்த மதத்தைச் சேர்ந்தவர் என்றும் அவருடைய நூலின்வழி அறிகிறோம். முதலாம் இராசேந்திரனின் ஐந்தாம் புதல்வனாகிய வீர ராசேந்திரனின் விருப்பத்திற்கிணங்க இயற்றப் பெற்ற இந்நூல் அவன் பெயராலேயே **வீரசோழியம்** எனப் பெயர் பெற்றது என்பதை,

**"வெ ற்றி புனை வீரன்தன், சொல்லின்படியே தொகுத்து"**

எனவும்,

"வெண்குடைச் செம்பியன் வீர ராசேந்திரன்"

எனவும்,

"வீரசோழன் திருப்பெயரால் பூமேல் உரைப்பன்"

எனவும் வரும் காரிகைப் பகுதிகளால் தெளியலாம். வீர ராசேந்திரனின் ஆட்சிக்காலம் கி.பி. 1063 முதல் 1070 வரை என வரலாற்று அறிஞர்கள் கருதுவதால், இந்நூலின் காலம் கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதி என்று கூறலாம். இலக்கண நூல்கள் பெரும்பான்மையும், நுதற்பொருளாலும், ஆசிரியனாலும் பெயர்பெறுவது மரபு. இயற்றுவித்தோனால் பெயர்பெற்ற சிறப்பு வீரசோழியத்திற்கு மட்டுமே உண்டு.

## நூல்அமைப்பு

கட்டளைக் கலித்துறையால் அமைந்த வீரசோழியம் பாயிரமும் ஐந்திலக்கணம் கூறும் ஐந்து அதிகாரங்களும் உடையது. இவற்றுள்

| | |
|---|---|
| எழுத்ததிகாரம் (1-28) | 28 |
| சொல்லதிகாரம் (29-83) | 55 |
| பொருளதிகாரம் (84-104) | 21 |
| யாப்பதிகாரம் (105-140) | 36 |
| அலங்காரம் (141-181) | 41 |
| | ------ |
| | 181 |
| | ------ |

என நூலின் பொருளைக் கூறும் 181 காரிகைகளும், தொடக்கத்திலுள்ள பாயிரப் பகுதியில் மூன்றும், சொல்லதிகார இறுதியிலும் அலங்காரப் படலத்தின் இறுதியிலும் இரண்டிரண்டு காரிகைகளுமாக 7 காரிகைகளும் அமைந்துள்ளன.

இந்நூலின் உட்பகுதி படலம் என்றழைக்கப்படுகிறது. சொல்லதிகாரத்தில் ஆறு படலங்களும் ஏனைய எழுத்து, பொருள், யாப்பு, அலங்காரம் என்னும் இயல்களில் ஒவ்வொரு படலமுமாக மொத்தம் 10 படலங்கள் இந்நூலில் உள்ளன.

## நூல் தோன்றிய சூழல்

தமிழ் இலக்கண மரபில் புது முயற்சியாக வீரசோழியம் தோன்றிய காலத்தில், வடமொழியின் வழக்கும் செல்வாக்கும்

படிப்படியாக மிகுதியாகிக் கொண்டு வந்தன. கோயில்களில் வழிபாடு, நிர்வாகம் போன்ற நிலைகளில் வடமொழி மரபில் வந்த சிவாசாரியர்களால் வடமொழி பயன்படுத்தப் பெறலாயிற்று. சமணர்களாலும் தமிழர்களாலும் வடமொழி மூலங்களை அடியொற்றி இலக்கியம், சமயம், சடங்குகள் என்னும் துறைகளில் தமிழ் நூல்கள் பல தோன்றலாயின. வடமொழ மரபில் வந்தவர்கள் தமிழையும், தமிழ் மரபினர் வடமொழியையும் கற்கும் சூழ்நிலை நிலவி வந்த இக் காலகட்டத்தில் எழுந்த வீரசோழியம் தமிழ் இலக்கணத்தை வடமொழி இலக்கணக் கூறுகளோடு இயைத்து விளக்கும் வகையில் அமைக்கப்பட்டது.

> **வீரசோழன் திருப்பெயரால்**
> **பூமேல் உரைப்பன் வடநூல் மரபும் புகன்று கொண்டே**

என்னும் பாயிரப் பகுதி இந்நூலின் நோக்கத்தையும் செல்நெறியையும் உணர்த்துகிறது. வடமொழியினருக்குத் தமிழ் கற்பிக்கும் நோக்கில் எழுத்து, சொல் பற்றிய தமிழ் இலக்கண மரபுகள் பலவற்றை வலிந்து சிதைத்து வடமொழி மரபோடு இணைத்துக் காட்டும் முயற்சியை இந்நூல் மேற்கொள்வதாலும், அலங்காரப் படலத்தில் தொல்காப்பிய உவமைக் கோட்பாட்டைப் புறக்கணித்து வடமொழிக் காவ்யா தரிசத்தைப் பின்பற்றி அணியிலக்கணம் கூறுவதாலும் இந்நூல் தான் தோன்றிய காலத்திலும் செல்வாக்குப் பெறவில்லை; அதன் பின்னரும் தமிழ் இலக்கண மரபில் பயிலப் பெறாமல் வழக்கு வீழ்ந்தது.

புத்தமித்திரரின் மாணவராக இருந்த பெருந்தேவனார் வீரசோழியத்திற்கு விரிவானதோர் உரையைப் பன்னிரண்டாம் நூற்றாண்டில் எழுதியுள்ளார். இவர் வடமொழி, தமிழ், பௌத்த சாத்திரங்கள் போன்றவற்றில் பெரும் புலமை உடையவராக விளங்கினார் என்பதை இவருடைய உரையால் அறியலாம்.

தமிழரல்லாதோரை நோக்கி இலக்கிய இலக்கணங்கள் செய்யப் பெறுவது தமிழ் மரபில் புதியதன்று. பத்துப்பாட்டுள் குறிஞ்சிப் பாட்டையும், தொல்காப்பியக் கோட்பாடுகள் சிலவற்றையும் நுணுகி நோக்குவார்க்கு இம் மரபு புலனாகாமற் போகாது.

புத்தமித்திரரின் வீரசோழியத்தை அடிப்படையாகக் கொண்டு 13ஆம் நூற்றாண்டில் **சித்தத் சங்கரவா** என்னும் சிங்கள இலக்கண நூல் தோன்றியது. இந்த இரண்டு நூல்களின்

ஆசிரியர்களும் பௌத்த மதத்தைச் சேர்ந்தவர்கள் என்பதும், பன்மொழிச் சூழல் அமைந்த தத்தம் சமுதாயத்திற்குப் பயன்படுமாறு தத்தம் நூல்களை இயற்றினர் என்பதும் குறிப்பிடத்தக்கன.

## பதிப்பு

1881 சி.வை. தாமோதரம் பிள்ளை (ப.ஆ.).

1942 கா.ர. கோவிந்தராச முதலியார் (ப.ஆ.) பவானந்தர் கழகம்.

1970 கா.ர. கோவிந்தராச முதலியார் (ப.ஆ.) **வீரசோழியம்–பெருந்தேவனார் உரையுடன்**. சென்னை: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

## மொழிபெயர்ப்பு: மலையாளம்

1977 M. இளைய பெருமாள் (மொ.பெ.) திருவனந்தபுரம்: சாமி புக் சென்டர்.

## 12ஆம் நூற்றாண்டு

### தண்டியலங்காரம்

பன்னிரண்டாம் நூற்றாண்டின் தமிழிலக்கண வரலாற்றில் தண்டியலங்காரம் என்னும் அணியிலக்கண நூல் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இதற்கு முன்னர் அணியிலக்கணம் என்னும் ஒரு பிரிவை உடையதாகச் சென்ற நூற்றாண்டில் (11) வீரசோழியம் என்னும் நூலும் பிற்காலத்தில் அணியிலக்கணத்திற்கெனவே மாறனலங்காரம், குவலையானந்தம் போன்று பல நூல்களும் தோன்றினவாயினும், தான் தோன்றிய காலந்தொட்டு இன்று வரை தண்டியலங்காரம் மட்டுமே அணியிலக்கணப் பயிற்சியில் முதலிடம் பெற்று நிற்கிறது. வீரசோழியத்திற்கு முன்னரே அணியியல் என்னும் அலங்கார நூல் ஒன்று வழக்கில் இருந்ததாக யாப்பருங்கல விருத்தியாலும் வீரசோழியக் குறிப்பினாலும் தெரிய வருகிறது. எனினும் இந்நூல் இன்று வழக்கில் இல்லை.

தண்டியலங்கார ஆசிரியரின் பெயர் மற்றும் வாழ்க்கை வரலாறு பற்றிய விவரங்கள் எவையும் கிடைத்தில. அக்காலச் சோழ அரசனைப் பற்றி இந்நூலிற் காணப்படும் அகச் சான்றுகளாலும் பிரயோக விவேக நூலாரின் குறிப்பினாலும் இரண்டாம் குலோத்துங்க சோழனின் காலமாகிய (1133-1150) பன்னிரண்டாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்தவராக இவரைக் கருதலாம். அணியியல், அணியதிகாரம் என்னும் பெயர்களாலும்

இந்நூல் வழங்கப்பட்டதாகக் குறிப்புகள் காணப்படினும், **தண்டியலங்காரம்** என்னும் பெயரே இந்நூலுக்கு நிலைத்து விட்டது.

கி.பி. எட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வடமொழியில் தோன்றிய காவியாதரிசம் என்னும் 'அலங்கார சாஸ்திரத்தை' முதனூலாகக் கொண்டு தமிழில் தண்டியலங்காரம் இயற்றப்பட்டது. எனவே இது மொழிபெயர்ப்பு என்னும் வழிநூல் வகையைச் சேர்ந்தது. வடமொழியில் எழுந்த முதனூலைத் தமிழ்நாட்டைச் சேர்ந்த தண்டி என்னும் தமிழ்ப் பேரறிஞர் இராசசிம்ம பல்லவன் காலத்தில் இயற்றினார் என்பதை அந்நூலின் அகச்சான்றுகள் காட்டுகின்றன. பதினொன்றாம் நூற்றாண்டில் தோன்றிய வீரசோழியம் என்னும் இலக்கணமும் வடமொழித் தண்டியின் காவியாதரிசத்தை முதனூலாகக் கொண்டு தோன்றியது தான் என்பதும் இங்கு நினைக்கத் தக்கது.

பொதுவணியியல், பொருளணியியல், சொல்லணியியல் என இந்நூல் மூன்று பெரும் பிரிவுகளையும் 125 நூற்பாக்களையும் உடையது. செய்யுள் வகைகளையும், செய்யுள் நெறிகளையும், பத்துக் குணங்களையும் விவரித்துக் கூறுவதால், சில அறிஞர்கள் பொதுவணியியலைச் செய்யுளியல் எனவும் கூறுவர். அணிகளைப் பற்றிக் கூறும் பொருளணியியல்தான் இந்த நூலின் சிறப்பான பகுதி. 35 அணிகளும் அவற்றின் வகைகளாக 225 அணிவேறுபாடுகளும் இதன்கண் கூறப்படுகின்றன. மூன்றாம் பகுதியாகிய சொல்லணியியல் மடக்கு, யமகம், சித்திரகவி போன்ற சொல்லலங்காரங்களைக் கூறுகிறது.

தொல்காப்பியத்திற்குப் பின்னர் சுமார் 1500 ஆண்டுகள் கழித்து அணியிலக்கணத்திற்கெனத் தோன்றிய நூல்கள் மொழியின் பல்வேறு கவிதை வெளிப்பாடுகளையெல்லாம் அணி என்னும் கருத்தீட்டிற்குள் கொணர்ந்து அணிகளின் எண்ணிக்கையைப் பெருக்கிக் காட்டுகின்றன. வீரசோழியமும் தண்டியலங்காரமும் 35 அணிகளைத் தனித்தனியே கூறுகின்றன. பதினாறாம் நூற்றாண்டில் தோன்றிய மாறனலங்காரம் 64 அணிகளையும் பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றிய முத்துவீரியம் 58 அணிகளையும், சந்திராலோகம் 100 அணிகளையும் குவலையானந்தம் 120 அணிகளையும் கூறுகின்றன. வடமொழிக் காவியாதரிசத்தைப் பின்பற்றி எழுந்தனவேனும் வீரசோழியமும் தண்டியலங்காரமும் தமிழ் மரபை விட்டு அதிகமாக விலகாமல் இருத்தலையும், பின்னர் வந்த அணியியல் நூல்களெல்லாம்

பெரிதும் விலகி வடமொழி மரபை மிகுதியாகப் பின்பற்றுவதையும் காணுமிடத்துக் **கவிதையியல்** என்னும் புலமரபு ஓர்அனைத்திந்திய நெறியாகப் பரவிக் கொண்டிருந்தமையை உணர முடிகிறது. கன்னட மொழியில் ஸ்ரீவிஜயன் என்பவரால் ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் (கி.பி. 840) இயற்றப்பட்ட **கவிராச மாணிக்கம்** என்னும் அணியிலக்கணமும், தெலுங்கு மொழியில் 15ஆம் நூற்றாண்டில் வின்னகோட பெத்தன என்பவரால் எழுதப் பெற்ற **காவ்யாலங்கார சூடாமணி** என்னும் அணியிலக்கணமும் இத்தகைய புலமைநெறிப் பரவலை உறுதிப்படுத்துகின்றன.

கவிதை நடையின் வெளிப்பாட்டு உத்திகளாகத் தொல்காப்பியம் கூறும் இறைச்சி, குறிப்பு, பொருள்கோள், மெய்ப்பாடு போன்றவற்றையெல்லாம் அணிவகைகளாகப் பெருக்கிக் காட்டும் முயற்சியை மேற்காட்டிய அணியிலக்கண நூல்களில் காண்கிறோம். உவமை, உருவகம் என்னும் இரு கூற்று வெளிப்பாட்டை மட்டுமே தொல்காப்பியம் இந்தப் பார்வையில் எடுத்தோதுகிறது.

வடமொழித் தண்டியார் கூறிய 32 அணிகளைப் பாமகர் 4 ஆகச் சுருக்கிக் கூற, எல்லா அணிகளுக்கும் அடிப்படை உவமை அணிதான் என்று வாமனர் அழுத்தமாகக் கூறுகிறார்[14].

**உவமை என்னும் தவலரும் கூத்தி**
**பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து**
**காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி**
**யாப்பறி புலவர் இதயம்**
**நீப்பறு மகிழ்ச்சி பூப்பநடிக் கும்மே**

என்னும் கருத்தமைந்த அப்பைய தீட்சிதரின் சித்திரமீமாம்சை என்னும் அணியிலக்கணக் கோட்பாடும் இங்குச் சிந்திக்கத் தக்கது. (சித்திர மீமாம்சா: உபமான நிரூபணம். (பம்பாய்: காவிய மாலா 38) ப. 33.[15]

பாமகர் (8ஆம் நூற்.) வாமனர் (9ஆம் நூற். முற்பகுதி), அப்பைய தீட்சிதர் (16ஆம் நூற்.) என ஒருவர் பின் ஒருவராகக்

14. A.B. Keith, **A History of Sanskrit Literature.** (1928) Indian Edn. New Delhi 1993. pp. 375, 381, 382.

15. C.S. Sundaram, **Contribution of Tamilnadu to Sanskrit** (Chennai: Institute of Asian Studies, 1999) p. 310.

கூறும் கருத்துகள், உவமையை அடிப்படை அணியாகக் கொண்ட தொல்காப்பியரின் கோட்பாட்டோடு இணைத்துச் சிந்திக்கத் தக்கன.

தம்முடைய முதல் நூலாசிரியரைப் போன்றே தமிழ்த் தண்டியாசிரியரும் தம்முடைய இலக்கண விதிகட்குத் தாமே உதாரணப் பாடல்களைக் காட்டியுள்ளார். யாப்பருங்கலக் காரிகையாசிரியர் இவ்வகையில் தண்டியாரின் தமிழ் முன்னோடி எனலாம்.

தண்டியலங்காரத்துள் காட்டப் பெற்ற உதாரணப் பாடல்கள் மொத்தம் 403. இவற்றுள் மூலநூலிற் காட்டப் பெற்றவற்றின் மொழிபெயர்ப்பாகச் சிலவும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு, முத்தொள்ளாயிரம், சம்பந்தர் தேவாரம், பொய்கையாழ்வாரின் முதல் திருவந்தாதி, கணிகண்ணன் பாடல், பாரதவெண்பா எனத் தமிழ் இலக்கியத்திலிருந்து பல பாடல்களும் காணப்படுகின்றன. எஞ்சிய 369 பாடல்களைத் தண்டியாசிரியரே இயற்றிக் காட்டியுள்ளார். இவர் இயற்றிய பாடல்கள் பெரும்பாலும் கடவுளர், அரசர்கள், போர்கள், படைகள், ஆடைகள், அணிகலன்கள், நகர்கள் என்பனவற்றைப் பற்றி அமைந்துள்ளன. பன்னிரண்டாம் நூற்றாண்டின் அரசியல் மற்றும் சமுதாயச் சூழலை அறிந்து கொள்வதற்குத் தண்டியாசிரியர் தாமே இயற்றிய உதாரணப் பாடல்கள் பெரிதும் உதவுகின்றன எனலாம்.

தண்டியலங்கார ஆசிரியர் இயற்றிய உதாரணப் பாடல்களுள் குறிப்பிடத்தக்க சிலவற்றைக் கீழே குறிக்கலாம்:

### தமிழ்

**ஓங்கல் இடைவந்து உயர்ந்தோர் தொழவிளங்கி**
**ஏங்கொலிநீர் ஞாலத்து இருளகற்றும் - ஆங்கவற்றுள்**
**மின்னேர் தனியாழி வெங்கதிர் ஒன்று ஏனையது**
**தன்னேர் இலாத தமிழ் (பொருள் வேற்றுமையணி)**

### சோழன்

**அன்னைபோல் எவ்வுயிரும் தாங்கும் அனபாயா**
**நின்னையார் ஒப்பார் நிலவேந்தர் - அன்னதே**
**வாரி புடைசூழ்ந்த வையகத்திற்கு இல்லையால்**
**சூரியனே போலும் சுடர். (மறுபொருள் உவமையணி)**

மூவாத் தமிழ்பயந்த முன்னூல் முனிவழி
ஆவாழி வாழி அருமறையோர் - காவிரி நாட்டு
அண்ணல் அனபாயன் வாழி அவன்குடைக்கீழ்
மண்ணுலகில் வாழி மழை. (வாழ்த்தணி)

கச்சிமாநகர்

ஏரி இரண்டும் சிறகா எயில்வயிறாக்
காருடைய பீலி கடிகாவா - நீர் வண்ணன்
அத்தியூர் வாயா அணிமயிலே போன்றதே
பொற்றேரான் கச்சிப் பொலிவு (இயைபுருவகம்)

மலிதேரான் கச்சியும் மாகடலும் தம்முள்
ஒலியும் பெருமையும் ஒக்கும் - மலிதேரான்
கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ எல்லாம் படும் (உயர்ச்சி வேற்றுமையணி)

ஆடவர்கள் எவ்வாறு அகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமும் ஊரகமும் பஞ்சரமா - நீடியமால்
நின்றான் இருந்தான் கிடந்தான் இதுவன்றோ
மன்றார் மதிற்கச்சி மாண்பு
(மொழிமாற்று நிரல்நிரையணி)

பதிப்பு

*(1901) 1956* (இரண்டாம் பதிப்பு) வை.மு.சடகோப ராமானுசாசாரியார்

*1920* செம்பூர் வித்துவான் வீ. ஆறுமுகம் சேர்வை.

*(1967) 1974* கு. சுந்தரமூர்த்தி (சென்னை: கழகம்)

### 12ஆம் நூற்றாண்டு

### நேமிநாதம்

சோழப் பேரரசின் இறங்கு முகமாக நிலவிய பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் அரசோச்சிய மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் *(1178 - 1218)* தொண்டை மண்டலத்தைச் சேர்ந்த களத்தூர் என்னும் திருக்களந்தையில் வாழ்ந்த குணவீர பண்டிதர் என்னும் சமணப் பெரியார் நேமிநாதம், வச்சணந்தி மாலை என்னும் இரண்டு இலக்கண நூல்களை இயற்றினார்.

நேமிநாதம் எழுத்தும் சொல்லுமாகிய இரண்டு கூறுகளைப் பற்றி எழுந்த இலக்கண நூல். வெண்பா யாப்பால் செய்யப்பட்ட

இந்நூல் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என்னும் இருபிரிவுகளையும் 97 வெண்பாக்களையும் கொண்டது. தொல்காப்பியத்தை அடியொற்றி இயற்றப்பட்ட நேமிநாதம், மிகச் சுருக்கமாக அமைந்த காரணத்தால் **சின்னூல்** என்னும் பெயரிலும் வழங்கி வந்தது. இதனைச் "சின்னூல் உரைத்த குணவீர பண்டிதன்" என்னும் தொண்டை மண்டலச் சதகத்தால் அறியலாம். நேமிநாதர் என்னும் சமணத் தீர்த்தங்கரரின் பெயரைத் தம் நூலுக்கு இட்டுக் குணசாகரர் வழங்கியமையால் நேமிநாதம் எனப் பெயர் பெற்றது என இந்நூலின் உரைப்பாயிரம் கூறுகிறது. பதிற்றுப்பத்தின் உரையும் (76) கோயிற் புராண உரையும், இந்நூலை முறையே சின்னூல், நேமிநாதம் எனக் குறிப்பிடுவதால் இந்நூல் அக்காலத்தில் கற்றோரிடையே வழக்கில் இருந்தது என அறிகிறோம். எனினும் நன்னூல் தோன்றிய பின்னர் இந்நூல் வழக்கு அருகிற்று எனத் தெரிகிறது.

### பதிப்பு

(1903) 1923 ரா. ராகவையங்கார், மதுரைத் தமிழ்ச் சங்கம்

1945 சென்னை: கழகம்.

### வச்சணந்தி மாலை

குணவீர பண்டிதரால் இயற்றப் பெற்ற **வச்சணந்தி மாலை** என்னும் இலக்கண நூல் பாட்டியல் வகையைச் சேர்ந்தது. வெண்பா யாப்பால் இயன்றதால் **வெண்பாப் பாட்டியல்** எனவும் இந்நூல் வழங்கப்படுகிறது.. வஜ்ர நந்தி என்னும் தம்முடைய ஆசிரியர் பெயரை இந்நூலுக்குக் குணவீர பண்டிதர் சூட்டியமையால் வஜ்ர நந்தி **மாலை** எனப் பெயர் பெற்றது. பின்னர் "வச்சணந்தி மாலை" என மருவி வழங்கப்படலாயிற்று. இந்திரகாளியம் என்னும் பாட்டியல் மரபின் வழியாக வச்சணந்தி மாலை செய்யப்பட்டது என்னும் குறிப்பை அதனுடைய உரையினால் அறிகிறோம். கி.பி. எட்டு, ஒன்பது நூற்றாண்டுகளில் தோன்றியனவாகப் பல்வேறு பாட்டியல் நூல்கள் அறியப்படினும், கிடைத்தவற்றுள் பன்னிரு பாட்டியல்தான் முந்தையதாகக் கருதப்படுகிறது. அதனையடுத்துத் தோன்றியது வச்சணந்திமாலை என்னும் வெண்பாப் பாட்டியல். இந்நூலில் முதல்மொழி இயல், செய்யுளியல், பொதுவியல் என மூன்று இயல்களும் முறையே 23, 48, 31 என அந்தாதித் தொடையில் அமைந்த 102 வெண்பாக்களும்

உள்ளன. இலக்கண நூல்கள் பெரும்பான்மையும் நூற்பா யாப்பில் இயன்றிருக்க குணவீர பண்டிதரின் நேமிநாதம், வச்சணந்தி மாலை ஆகிய இரு நூல்களும் வெண்பா யாப்பில் இயன்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

முதல் இயல் பாட்டுடைத் தலைவன் பெயரோடு பொருந்தத் தக்க முதல்மொழிப் பொருத்தங்கள் பத்தினைக் கூறுகிறது. இரண்டாவதாக அமைந்த செய்யுளியல் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைக் கவிகளின் இலக்கணங்களைக் கூறுகிறது. பின்னர்த் தமிழ்ப் பிரபந்தங்கள் 56 வகையெனக் கூறி அவற்றிற்குரிய இலக்கணங்களைத் தருகிறது. இயல் முடிவில் கவிஞர்களை அகலக் கவி, கமகன், வாதி, வாக்கி, வெள்ளைக்கவி எனப் பாகுபாடு செய்து விளக்குகிறது. மூன்றாவதாக அமைந்த பொதுவியல் நால்வகைப் பாக்களையும் அவற்றிற்குரிய சாதி, நிறம், இடம், நாள், இராசி, தேவதை, அவற்றைப் பாடும் விதம் போன்றவற்றையும் விளக்குகிறது. பின்னர் அவையின் பிரிவுகளாக நல்அவை. நிறை அவை, தீய அவை ஆகியவற்றைக் கூறி அவற்றுக்குரிய தன்மைகள் விளக்கப்படுகின்றன. முடிவாக அந்தணர், அரசர், வைசியர், சூத்திரர் ஆகியோரின் இயல்புகளும் தொழில்களும் கூறப்படுகின்றன.

இப் பாட்டியல் கூறும் இலக்கணங்களுள் பிரபந்தங்கள் பற்றிய இலக்கண வரையறைகள் மட்டுமே இலக்கியப் பயனுடையவை என்று கூறலாம். பெயருக்கேற்ற பொருத்தங்கள், கவிகளின் வகைப்பாடு, பாக்களுக்குரிய சாதி முதலான கூறுகள், நால்வகைச் சாதிகளின் விளக்கங்கள் போன்றனவெல்லாம் அக்காலச் சமுதாயத்தில் சாதி, சோதிடம் போன்றவற்றின் ஆதிக்கம் இலக்கணப் படைப்புகளில் கூட எந்த அளவிற்கு மேலோங்கியிருந்தது என்று உணர்த்துகின்றன. இவை பற்றிய செய்திகள் யாப்பருங்கல விருத்தியுள்ளும் கூறப்பட்டிருக்கின்றன. 11, 12ஆம் நூற்றாண்டுகளின் சமுதாய அகழ்வாய்வுக்கு இத்தகைய இலக்கண நூல்கள் பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

### பதிப்பு

1860 - சந்திரசேகர கவிராச பண்டிதர்

1908 - சென்ன கேசவலு நாயுடு

1936 - சென்னை: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

## 13ஆம் நூற்றாண்டு

### நன்னூல்

நன்னூல் பவணந்தி முனிவரால் இயற்றப் பெற்றது. தொல்காப்பியம் - வீரசோழியம் - நேமிநாதம் - நன்னூல் என்னும் நான்கனுள் இடையிரண்டும் சிறப்பில்லாதன. நன்னூலின் சிறப்பால் அவை வழக்கொழிந்தன. மூன்றாம் குலோத்துங்க சோழனுக்குக் கீழ் (1178-1218) அரசோச்சிய குறுநில மன்னனாகிய கங்க நாட்டரசன் சீயகங்கனின் (ஆட்சியாண்டு 1181-1212) வேண்டுகோட்கிணங்கப் பவணந்தி முனிவர் நன்னூலை இயற்றினார். பவணந்தி முனிவர் தொண்டை மண்டலத்தைச் சேர்ந்த சனகாபுரம் என்னும் ஊரினர் எனவும், சமண சமயத்தினர் எனவும் இந்நூலின் சிறப்புப்பாயிரத்தால் அறிகிறோம். மைசூர் நாட்டைச் சார்ந்த சனநாதபுரமே இவருடைய ஊர் எனக் கூறுவாருமுண்டு.

**முன்னோர் நூலின்**
**வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்**

எனவரும் சிறப்புப் பாயிரத் தொடரால் நன்னூல் ஒரு வழிநூல் என்பது தெளிவாகிறது. இதன் பாயிரத்தை நன்னூலார் பெயரிலேயே எல்லாப் பதிப்புகளும் சேர்த்து 463 நூற்பாக்களாகப் பதிப்பித்திருப்பினும், இப்பாயிரப் பகுதி முழுவதும் பவணந்தி முனிவரால் செய்யப்படவில்லை என்ற கருத்து அறிஞரிடையே நிலவுகிறது. இறையனார் அகப்பொருள் உரை, யாப்பருங்கல முதல் சூத்திர உரை, தொல்காப்பியப் பாயிர உரைகள் போன்றனவற்றுள் சூத்திர நடையிலும், உரைநடையிலும் காணப்படும் செய்திகள் நன்னூல் பாயிரத்துள் காணப்படுகின்றன. மேலும் நன்னூலின் முதல் உரைகாரராகிய மயிலைநாதர் சூத்திரத்தொகை கூறுமிடத்து எழுத்ததிகாரம் 202 சூத்திரங்களும் சொல்லதிகாரம் 205 சூத்திரங்களும் ஆக 407 நூற்பாக்களை உடையது நன்னூல் என்று கூறுகிறார். எனவே அவர் கூற்றுப்படி பாயிரம் பவணந்தியாரால் இயற்றப்பட்டதன்று என்பது தெளிவாகிறது. ஆக, பண்டைய இலக்கண நூல்களிலும் உரைகளிலும் கூறப்பட்டவற்றையெல்லாம் தொகுத்தும் வகுத்தும் பாயிரம் என்னும் நூல் மரபிற்கு ஓரிலக்கண வரையறை வகுத்துத் தந்தவர் பவணந்தியார் என்று கூறலாம்.

எழுத்ததிகாரம், எழுத்தியல், பதவியல், உயிரீற்றுப் புணரியல், மெய்யீற்றுப் புணரியல், உருபுப் புணரியல் என்னும் ஐந்து இயல்களை உடையது. சொல்லதிகாரம் பெயரியல், வினையியல்.

பொதுவியல், இடையியல், உரியியல் என்னும் ஐந்து இயல்களை உடையது.

"தொகை வகை விரியில் தருகென" என்று இதன் சிறப்புப் பாயிரம் கூறுவது போல் தொல்காப்பியம், அவிநயம் போன்ற முந்தைய இலக்கண நூல்களில் கூறப்பட்ட இலக்கணங்களைக் கால வகையினால் கழிந்தனவற்றை நீக்கியும் புகுந்தனவற்றைச் சேர்த்தும், தொகுக்கும் வழி தொகுத்தும், விரிக்கும் வழி விரித்தும் பவணந்தியார் தம் நூலை மிக அற்புதமாகப் படைத்திருக்கிறார் என்று கூற வேண்டும்.

இவருக்குப் பின்னர் நானூறு ஆண்டுகள் கழித்து **இலக்கணக்கொத்து** என்னும் நூலை இயற்றிய வைத்தியநாத தேசிகர் நன்னூலிலிருந்து 250 நூற்பாக்களை அப்படியே எடுத்துத் தம் நூலுள் அமைத்துக் கொண்டார் என்பதை நோக்க இந்நூலின் சிறப்பு புலப்படும். மேலும், இலக்கணக் கொத்தின் ஆசிரியர் சுவாமிநாத தேசிகர்.

**முன்னூல் ஒழியப் பின்னூல் பலவினுள்**
**எந்நூ லாரும் நன்னூ லாருக்கு**
**இணையோ என்னும் துணிவே மன்னுக**

எனக் கூறுவதும், சங்கர நமச்சிவாயர், 'பல்கலைக்குரிசில் பவணந்தி என்னும் புலவர் பெருமான்' என்று பாராட்டுவதும், சுப்ரமணிய தீட்சிதரும் சிவஞான முனிவரும் தங்கள் நூல்களில் நன்னூலைப் போற்றிக் கூறுவதும் இந்த நூலின் பெருமையை நன்கு உணர்த்துகின்றன. மேற்குறித்த நால்வரும் சைவர்களாயிருந்தும் சமண அறிஞராகிய பவணந்தியின் நூலைக் காழ்ப்பின்றிப் புகழ்ந்து கூறுவதால் அவர்களுடைய சமயப் பொறையும் நன்னூலின் உள்ளார்ந்த பெருமையும் புலனாகின்றன.

தொல்காப்பியத்தையும் பிற இலக்கண நூல்களையும் ஒட்டி எழுதப்பட்டதாயினும் காலத்துக்கேற்ப சில மாறுதல்களையும் நன்னூலிற் காண்கிறோம். பதவியல் என்னும் பகுதி நன்னூலிற் காணப்படும் புதுச்சேர்க்கை. முன்னைய இலக்கண நூல்களிற் கூறப்பட்ட வரையறைகளைத் தொகுத்தும் வகுத்தும் இடைக்காலத் தமிழ்மொழியின் இயல்புக்கேற்ப இவ்வியலைப் பவணந்தியார் படைத்துள்ளார்.

"வடசொற் கிளவி வடவெழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" (எச்ச. 5)

எனத் தொல்காப்பியம் பொதுப்படக் கூறும் வடசொற்களின் தமிழாக்க நெறியைத் தம் உடன்கால மொழியின் இயல்புக்கேற்ப விரிவாக்கி ஐந்து நூற்பாக்களில் (146-150) விளக்கியிருப்பது நன்னூலாரின் மொழியியல் அக்கறையைக் காட்டுகிறது எனலாம். வீரசோழியப் பகுதியோடு ஒப்பிட்டு நோக்குவார்க்கு நன்னூலாரின் நுட்பமும் தெளிவும் இனிது புலனாகும். இனி, நன்னூலார் காலத்திற்குப் பின்னர் அரபு, பாரசீகம், போர்ச்சுகல், ஆங்கிலம் போன்ற மொழிகளின் சொற்களைத் தமிழாக்கம் செய்யும் முயற்சிக்கும் பவணந்தியாரின் எழுத்துப் பெயர்ப்புக் கோட்பாடு (Phonemic transliteration) முன்னோடியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கக் காண்கிறோம்.

இனிப் பின்னோன் வேண்டும் விகற்பம் கூறி என்பதற்கேற்ப

**உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே**
**அஃறிணை என்மனார் அவரல பிறவே** (கிளவி-1)

என்னும் தொல்காப்பியரின் திணைக்கோட்பாட்டிலிருந்து விலகி

**மக்கள் தேவர் நரகர் உயர்திணை**
**மற்றுயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை** (261)

என்று பவணந்தியார் கூறுகிறார். ஏறக்குறைய 1500 ஆண்டுக்கால இடைவெளியில் ஏற்பட்ட வாழ்வியல் பார்வைகளின் (ideologies) வேறுபாட்டால் இத்தகைய மாற்றம் ஏற்பட்டது எனக் கருதத் தோன்றுகிறது. "மக்கள் தாமே ஆறறி உயிரே" எனவும் "ஆறறிவதுவே அவற்றொடு மனனே" எனவும் 'மக்கட்சுட்டு' என்னும் தொடரின் குறிப்பைத் தொல்காப்பியர் விளக்கி, ஆறறிவாகிய மனம் செயற்படாத உயிர்களை அஃறிணை என்றோதினார். அந்த நுட்பத்தையும் ஆழத்தையும் நன்னூலாரின் வரையறையில் காண இயலவில்லை.

## பதிப்பு

நன்னூலுக்கும் அதன் உரைகளுக்குமாக எழுந்த சில குறிப்பிடத்தக் பதிப்புகள் (அ. தாமோதரனின் விருத்தியுரை, பதிப்பின்படி, 1999, பக். 580-584).

(1834); 1840 **நன்னூல் மூலமும் காண்டிகையுரையும்,** திருத்தணிகை விசாகப் பெருமாளையர் உரை, சென்னபட்டணம்: கல்வி விளக்க அச்சுக்கூடம்.

1847 **நன்னூல் விருத்தியுரை** முகவை இராமானுசக் கவிராயர் உரை, சென்னை.

(1851) ;1966 நன்னூல் மூலமும் சங்கர நமச்சிவாயரால் செய்யப்பட்டுச் சிவஞான முனிவரால் திருத்தப்பட்ட விருத்தியுரையும் (ப.ஆ.) ஆறுமுக நாவலர், யாழ்ப்பாணம்: வித்தியானுபாலன இயந்திரசாலை, 1851 ஒன்பதாம் பதிப்பு.

(1880) ;1984 நன்னூற் காண்டிகையுரை (நாவலருரை) ஆறுமுக நாவலர், சென்னை, வித்தியாநுபாலன யந்திர சாலை 1880. பதினைந்தாம் அச்சு, தஞ்சாவூர்: தமிழ்ப்பல்கலைக் கழகம்.

1892 நன்னூற் காண்டிகையுரை, சடகோபராமாநுசாசாரியார், சென்னை, மிமோரியல் அச்சுக் கூடம்.

(1918) ;1946 பவணந்தி முனிவர் இயற்றிய நன்னூல் மூலமும் மயிலைநாத ருரையும், (ப.ஆ.) உ.வே. சாமிநாதையர், சென்னை: வைஜயந்தி அச்சுக்கூடம், 1918, இரண்டாம் பதிப்பு எல். கலியாண சுந்தரையர், சென்னை: கபீர் அச்சுக் கூடம்.

(1925); 1991 பவணந்தி முனிவர் இயற்றிய நன்னூல் மூலமும் சங்கர நமச்சிவாயர் உரையும் (ப.ஆ.) உ.வே. சாமிநாதையர் சென்னை: கமர்ஷியில் அச்சுக் கூடம், 1925, ஐந்தாம் பதிப்பு.

(1957); 1971 சிவஞான சுவாமிகள் இயற்றிய புத்தம் புத்துரை என்னும் நன்னூல் விருத்தியுரை (ப.ஆ.) ச. தண்டபாணி தேசிகர், திருவாவடுதுறை ஆதீனம், 1957 இரண்டாம் பதிப்பு சென்னை: பாரி நிலையம்.

1999 பவணந்தி முனிவர் இயற்றிய நன்னூல் மூலமும் சங்கர நமச்சிவாயர் செய்து சிவஞான முனிவரால் திருத்தப்பட்ட புத்தம் புத்துரை என்னும் விருத்தியுரையும் (ப.ஆ.) அ. தாமோதரன், சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

மொழிபெயர்ப்புகள் (அ. தாமோதரன் (1999) பக்கம். 49).

1837; 1876; 1972 ஹென்றி பவர் (ஆங்கிலம்).

1848; 1851 சாமுவேல் பிள்ளை - வால்ற்றர் ஜாயீஸ் (ஆங்கிலம்).

1878; 1977 ஜான் லாசரஸ் (ஆங்கிலம்).

1967 மா. இளைய பெருமாளும் பிறரும் (மலையாளம்).

## அகப்பொருள் விளக்கம்

தொல்காப்பியத்திற்குப் பின்னர் ஐந்திலக்கணம் என்னும் ஒரு மரபு உருவாகியது. தொல்காப்பிய எழுத்து, சொல் என்னும் இரு அதிகாரப் பொருள்களோடு, பொருளதிகாரம் கூறும் அகப்புற இலக்கணங்களைப் பொருளிலக்கணம் எனவும் செய்யுளியல் செய்திகளை யாப்பிலக்கணம் எனவும், உவம இயல், பொருளியல் செய்திகளை அணியியல் எனவும் மூன்றாக்கிச் சேர்த்து ஐந்திலக்கணம் என்னும் மரபு தோன்றியது. தொல்காப்பியத்திற்குப் பின்னர் இவற்றிற்கெனத் தனித்தனி இலக்கண நூல்கள் தோன்றலாயின. புறப்பொருளுக்கென வெண்பா மாலையும். அகப்பொருளில் களவியலுக்கு மட்டும் இறையனார் களவியலும் யாப்பியலுக்கென யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை என்னும் இரண்டும், அணியியலுக் கெனத் தண்டியலங்காரமும் எழுத்து, சொல்லுக்கென நன்னூலும் காலவாரியாகத் தோன்றின. இவ்வரிசையில் அகப் பொருளிலக்கணம் முழுவதும் கூறும் நூல் எதுவும் பன்னிரண்டாம் நூற்றாண்டு வரையில் தோன்றவில்லை. ஐந்திலக்கணம் என்னும் கருத்தீட்டை உட்கொண்டு தோன்றிய வீரசோழியம் தமிழகத்தே தக்க வரவேற்பினைப் பெறாமையின் பயில்வாரற்று ஆட்சி குன்றியது.

இந்நிலையில் பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் நாற்கவிராச நம்பி என்பவரால் **அகப்பொருள் விளக்கம்** என்னும் இலக்கண நூல் இயற்றப்பட்டது. இவர் பாண்டி நாட்டில் பொருநை யாற்றின் கரையிலுள்ள திருப்புளியங்குடி என்னும் ஊரில் பெரும்புகழ் பெற்று விளங்கிய முத்தமிழாசான் உய்யவந்தாரின் மைந்தர் என்பதும், தொல்காப்பியப் பொருளதிகாரத்தை ஆராய்ந்து இந்நூலைச் செய்தார் என்பதும் இதற்கு இவரே அகப்பொருள் விளக்கம் எனப் பெயரிட்டு விரிவாக உரையும் எழுதினார் என்பதும் இந்நூலின் சிறப்புப் பாயிரத்தால் பெறப்படுகின்றன. நாற்கவிராச நம்பியின் அகப்பொருள் விளக்கம் அகத்திணையியல் (115), களவியல் (54), வரைவியல் (29), கற்பியல் (10), ஒழிபியல் (43) என ஐந்து இயல்களையும், பாயிரத்தோடு சேர்த்து 252 நூற்பாக்களையும் உடையதாக அமைக்கப்பட்டுள்ளது.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தை அடியொற்றிச் செய்யப்பட்டது எனக்கூறப்படினும் நம்பியகப் பொருள், அகப்பொருள் இலக்கணத்தில் புல புதுமைகளைப் புகுத்தித் தொல்காப்பிய மரபினின்று விலகியும். பிறழ்ந்தும் இருக்கக் காண்கிறோம். சான்றாகச் சில:

1. கைக்கிளை ஒழுக்கத்தை அகத்தில் வரும் கைக்கிளை, அகப்புறக் கைக்கிளை என இருவகையாக நம்பியகப் பொருள் பாகுபடுத்துகிறது. காமஞ்சான்ற இளமையோள்வயிற் குறுகாது நின்று நெஞ்சொடு கூறலை அகக்கைக்கிளை எனவும் (நூற்பா 29) காமஞ்சாலா இளமையோள் வயிற் குறுகி இறப்பக் கூறுவது அகப்புறக் கைக்கிளை (241) எனவும் கூறுகிறது.

2. பாங்கனைப் பார்ப்பனப் பாங்கன், சூத்திரப் பாங்கன் என இருவகையாகப் பாகுபடுத்தல், (100, 101) காமக்கிழத்தியர், பின்னர் வரைந்த பெதும்பை, காதற் பரத்தை, விருந்தியல் பரத்தை எனப் பரத்தையர் மரபை விரிவுபடுத்தல் (105-107, 113-115) என்னும் புதுமையான சமுதாயத் தாக்கங்களை உட்கொண்ட இலக்கண மரபைத் தோற்றுவிக்கிறது.

3. அகப்பாட்டிற்குப் பாட்டுடைத் தலைவன், கிளவித் தலைவன் என இரு தலைவர்களை உருவாக்கி, இவர்கள் அகப்பாடலுள் சேர்ந்து வருதலும், ஒருவர் மட்டுமே வருதலும் ஒருவரும் வாராதொழிதலும் என இலக்கணங் கூறுகிறது (245-249).

4. பெருந்திணையைப் பொருந்தாக் காமம் என அகத்திணையியலிற் கூறிய நாற்கவிராச நம்பி ஒழிபியலில் அகப்பொருள் பெருந்திணை, அகப்புறப் பெருந்திணை என இருவகைப் படுத்தி அவற்றிற்குரிய துறைகளைக் கூறுகிறார். அந்நிலையில் தொல்காப்பியர் அன்பின் ஐந்திணைக்குக் கூறிய துறைகள் பலவற்றை அகப்பொருள் பெருந்திணைக்குள்ளும், தொல்காப்பியர் புறத்திணையியலுள் கூறும் துறைகளில் பலவற்றை அகப்புறப் பெருந்திணைக்குள்ளும் அடக்கிக் கூறுகிறார் (243, 244). அகப்பொருள் மரபுகள் தடம் புரண்டு விட்டமைக்கு நல்லதொரு சான்று.

மேற்சுட்டிய மரபு விலகல்களும், மீறல்களும், பிறழ்ச்சியும் கால வகையினால் தோன்றிய இலக்கணப் புதுமைகள் என்று கருதத் தோன்றவில்லை. தம் உடன்கால வாழ்வியல் பார்வையின் காரணமாகத் தமிழ்ச் சமுதாயத்தில் ஏற்பட்ட மாற்றங்களின் காரணமாகவும், கோவை என்னும் சிற்றிலக்கிய வகைமைக்கேற்ப இலக்கணம் கூறக் கருதியும், தொல்காப்பிய மரபைப் புறக்கணித்து எழுந்த புறப்பொருள் வெண்பா மாலை, வீரசோழியம் போன்ற இலக்கணங்களைப் பின்பற்றியும் நம்பிகள் இவ்வாறு செய்திருக்கலாம் எனத் தோன்றுகிறது. இத்தகைய மீறல்களைப் "பிழையான இலக்கண வரலாறு" என வ.சுப. மாணிக்கம் (தமிழ்க்காதல், 234) கூறுவது மிகையன்று.

நம்பியகப் பொருளுக்கு நூலாசிரியரே உரை செய்தார் என்றும் (மு.அ. 13/178) தற்போது கிடைத்துள்ள பழைய உரையின் ஆசிரியர் இன்னார் என்பது விளங்கவில்லை என்றும் (கழகப்பதிப்பு, முன்னுரை 5) இருவேறு கருத்துகள் நிலவுகின்றன. சிறப்புப் பாயிரத்துள் வரும் 'இருளறப் பொருள் விரித்து எழுதினன்' என்னுந் தொடரால் நம்பியே இதற்கு உரையும் எழுதினார் என்று கருதப்படுகிறது. 'பொருள்விரித்து' என்பதற்குப் பொருளிலக் கணத்தை ஐயமின்றி விரிவாக எழுதினன் என்றும் பொருள் கொள்ளும் வாய்ப்புண்டு. அன்றியும் இப்போதுள்ள பதிப்புகளில் தரப்பட்டுள்ள பழைய உரை நம்பியார் செய்ததுதானா என்பதற்கும் தெளிவான சான்றுகள் இல்லை.

இந்தப் பழைய உரை கருத்துரையாகவும், பொழிப் புரையாகவும் அமைந்துள்ளது. ஒவ்வொரு இலக்கணக் கூறுக்கும் உரிய மேற்கோள் பாடல்கள் தரப்பட்டுள்ன. பெரும்பாலான மேற்கோள்கள் தஞ்சைவாணன் கோவையிலிருந்து தரப்பட்டுள்ளன. நம்பியகப் பொருளின் துறைகளையும் கிளவித் தொகைகளையும் அடிப்படையாகக் கொண்டு அதற்கு இலக்கியமாகவே தஞ்சைவாணன் கோவை இயற்றப்பட்டது என்ற கூறப்படுகிறது. "பழைய ஏட்டுப் பிரதிகளுள் ஒன்று துறைகளுக்கு மேற்கோளாக இக்கோவைப் பாட்டுகளை மட்டுமே கொண்டிருந்தது. வேறு பல சுவடிகளில் இவற்றோடு பழந்தமிழ்ச் செய்யுட்கள் பலவும் சேர்க்கப் பெற்றன' என்று அறிஞர்கள் கருதுகின்றனர் (மு.அ. 13/178). நம்பியகப் பொருளுக்குக் கிடைத்துள்ள உரைகளைக் கூர்மையான ஆராய்ச்சிக்கு உட்படுத்தினாலன்றி இதில் தெளிவு பிறக்க வழியில்லை.

## பதிப்பு

1878 யாழ்ப்பாணம் வல்வை வைத்தியலிங்கம் பிள்ளை உரைப்பதிப்பு.

1907 யாழ்ப்பாணம் சிவானந்தையர் பதிப்பு-பழைய உரையுடன்.

1912 சுன்னாகம் குமார சுவாமிப் புலவரும் திருக்கோணமலை கனக சுந்தரம் பிள்ளையும் எழுதிய புத்துரையுடன் கூடிய பதிப்பு

1913; 1926 மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு; பாண்டித்துரைத்தேவர் பரிசோதித்தது; உரையும் உதாரணச் செய்யுட்களும் கொண்டது.

1948; 1998 கழகப் பதிப்பு, கா.ர. கோவிந்தராச முதலியார் பதிப்பித்தது.

1962 தஞ்சை சரசுவதி மகால் பதிப்பு.

# 8. இலக்கண உரைகள்

## 11ஆம் நூற்றாண்டு

## இலக்கண உரைகள்

இந்த நூற்றாண்டில் (11) தோன்றிய மூன்று இலக்கண நூல்களுள் யாப்பருங்கலத்திற்கும் யாப்பருங்கலக் காரிகைக்கும் இந்த நூற்றாண்டிலேயே உரைகள் வகுக்கப்பட்டன. மூன்றாவதாகிய வீரசோழியத்துக்கு மட்டும் அடுத்து வந்த பன்னிரண்டாம் நூற்றாண்டில் உரை எழுந்துள்ளது.

### யாப்பருங்கல விருத்தியுரை

யாப்பருங்கலத்திற்கு யாப்பருங்கல விருத்தி என்னும் பெயரில் பதினொன்றாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் மிக விரிந்ததொரு உரை வகுக்கப்பட்டது. சமண சமயத்தைச் சார்ந்தவர் என்பது தவிர இந்த உரையாசிரியரைப் பற்றிய வேறு செய்திகள் எவையும் கிடைக்கவில்லை. இவருடைய பெயரையும் அறிய இயலாத நிலையில் விருத்தியுரைகாரர் என்றே இவர் அழைக்கப்பட்டு வந்துள்ளார். இறையனார் களவியலுக்கு வகுக்கப்பட்ட உரை, தொல்காப்பியத்திற்குத் தோன்றிய பேருரைகள் ஆகியவற்றுடன் இந்த விருத்தியுரையும் சேர்த்தெண்ணப்பட்டு வருவதால், இதன் பெருஞ்சிறப்பு புலனாகிறது.

இலக்கிய இலக்கணப் புலமையோடு, பல்துறைப் புலமையும் உடையவராக விருத்தியுரைகாரர் காணப்படுகிறார். தொல்காப்பியம் முதலாகப் பத்தாம் நூற்றாண்டுவரை வழங்கி வந்த இலக்கண, இலக்கிய மரபுகளை முற்றிலும் அறிந்தவராக இருந்தார் என்பதை விருத்தியுரையும் அதன்கண் காட்டப்படும் மேற்கோட் பாடல்களும் தெளிவாகக் காட்டுகின்றன. பிற நூல்கள் அல்லது உரைகள் வேறு எதனாலும் அறியப்படாத பல செய்திகள் இந்த உரையின்கண் ஆங்காங்கே காணக்கிடக்கின்றன.

யாப்பருங்கலத்தில் கூறப்படும் யாப்பிலக்கண வகைகளுக்கு இவர் காட்டும் மேற்கோள் பாடல்களில் பல அருகன் துதியாகவும் வேறு சில சிவபெருமானைப் போற்றுவனவாகவும் உள்ளன.

மருட்பா, அடிமறிமண்டலம். நிரல்நிறை போன்றவற்றை விளக்க இவர் காட்டும் மேற்கோள்கள் சிவன், திருமால், கலைமகள், ஆகிய கடவுளரைப் போற்றுவனவாக உள்ளன. அர்த்தநாரீசுவர உருவத்தையும், சங்கர நாராயணர்உருவத்தையும் விளக்கும் பாடல்களையும் இவர் மேற்கோள்களாகக் காட்டுகிறார். இதனால் இவருடைய பல்சமய இலக்கியப் புலமை வெளிப்படுவதோடு இவருடைய சமயப் பொறையும் நன்கு விளங்குகிறது. சில இடங்களில் தக்க மேற்கோள்கள் கிடைக்காத விடத்து இவரே மேற்கோட் பாடல்களை இயற்றியும் தந்துள்ளார் எனக் காண்கிறோம். எல்லா உறுப்புகளும் பெற்ற வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கு இவர் காட்டும் “சிலம்பொலிக்கும் இணையடியும்” எனத் தொடங்கும் பாடலைச் சான்றாகக் கூறலாம்.

இன்று வழக்கில் இல்லாத பல இலக்கண, இலக்கிய நூல்களை இவர் எடுத்தாளுகிறார். எனவே அவர் காலத்தில் வழக்கில் இருந்த பல நூல்களையும் ஆசிரியர்களையும் அறிந்து கொள்ள இவ்வுரை பேருதவியாக உள்ளது. அவற்றுள் சில: சாந்தி புராணம், புராண சாகரம், அணியியல், ஊசி முறி, செயிற்றியம், முத்தரையர் கோவை, செம்பூண் சேயார் கூற்றியல் (பொருளிலக்கணம்), பல்காயனார், காக்கை பாடினியார் போன்றோரின் நூல்கள்.

பொய்கையார், நக்கீரர் என்னும் பெயருடையார் ஒருவரல்லார் பலர் என்னும் கருத்துக்கு அரண் செய்யும் கருத்துகள் பல இவ்விருத்தியுள் காணப்படுகின்றன. இலக்கிய வரலாற்றில் ஒரே பெயருடைய புலவர்கள் பலர் இருந்திருக்க வேண்டும் என்னும் எடுகோளுக்கு இவ்வுரை நன்கு பயன்படக்கூடும்.

நால்வகைப் பாக்களின் வைப்பு முறைக்கும், தாழிசை, துறை, விருத்தம் என்பவற்றிற்கும் இவர் தரும் விளக்கங்களால் அக்காலச் சமுதாயத்தில் நிலவிய சாதிகளின் முறைவைப்பைக் கூறுகிறார். ஒவ்வொரு சாதிக்கும் உரிய தொழில்களையும் கணக்கிட்டு, வணிகருக்கு எட்டு, வேளாளர்க்குப் பத்து எனக் கூறுகிறார். எழுத்து முதலான செய்யுள் உறுப்புகள், சொல் வகைகள், எண்வகை மணம், நால்வகைக் கவிகள் போன்றவற்றை விளக்குமிடத்துச் சாதிவேறுபாடுகள், தருக்கம், சோதிடம் போன்ற துறைகள் அக்கால வாழ்வில் பெற்றிருந்த சிறப்பு, புலமைத் துறையிலும் காணப்பட்ட உயர்வு தாழ்வுகள் ஆகிய அக்காலச் சமுதாயச் செய்திகள் இவ்வுரையின் கண் இடம் பெறுகின்றன.

இவ்வாறு இவ்வுரையில் எடுத்தாளப்பெறும் மேற்கோள்களால் புலனாகும் பல்வேறு தமிழ் இலக்கண இலக்கிய நூல்கள், யாப்பிலக்கண மரபுகள், அக்காலத்தில் நிலவிய புலமையோர் வாழ்க்கை முறைகள், அரசர்கள், தலைவர்கள், சமயங்கள், நகரங்கள், பல்வேறு பண்பாட்டுப் புதுமைகள் ஆகியவற்றை ஆராயவும் அறியவும் பேருதவி செய்யும் கலைக்களஞ்சியமாக யாப்பருங்கல விருத்தியுரை திகழ்கிறது. (மு.அ. 11/133-193).

## பதிப்பு

1916 ச. பவானந்தம் பிள்ளை பதிப்பு (உறுப்பியல் மட்டும்) (சென்னை: பவனாந்தர் கழகம்)

1960 மே.வீ. வேணுகோபாலப்பிள்ளை (ப.ஆ.) **யாப்பருங்கலவிருத்தி** (முழுமையும்) (சென்னை: அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம்)

1972 இரா. இளங்குமரன் (ப.ஆ.) **யாப்பருங்கலம்**, (சென்னை: கழகம்)

1998 மே.வீ. வேணுகோபாலப்பிள்ளை (ப.ஆ.) **யாப்பருங்கலம்** (பழைய விருத்தியுரையுடன்) மறுபதிப்பு (சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்).

## யாப்பருங்கலக் காரிகையுரை

அமிதசாகரரின் இரண்டாவது இலக்கணமாகிய யாப்பருங்கலக் காரிகைக்குக் குணசாகரர் என்பவர் பெயரால் ஓர் உரை வழக்கிலுள்ளது. இவர் நூலாசிரியராகிய அமிதசாகரரின் மாணவர் என்றும், சோழ நாட்டினர் என்றும் கூறப்படுகிறது. சோழநாட்டைச் செந்தமிழ் நாடென வரையறுத்த காரணத்தால் இவர் சோழநாட்டைச் சேர்ந்தவர் எனக் கருதப்படுகிறது போலும். ஏனெனில் காரிகையுரை இவர் பெயரால் வழங்குகிறது என்பதையும், இவர் சமண சமய வணக்கம் கூறுதலின் அச்சமயத்தைச் சார்ந்தவர் என்பதையும் மிக நல்ல உரைகாரர் என்பதையும் தவிர இவரைப் பற்றிய வரலாற்றடிப்படையான செய்திகள் எவற்றையும் அறிய இயலவில்லை.

'கந்த மடிவில்' எனத் தொடங்கும் தற்சிறப்புப் பாயிரக் காரிகைக்கு உரை கூறுமிடத்து இவர் எடுத்தோதும் இலக்கண இலக்கிய நூல்கள் எவையும் இப்போது வழக்கில் இல்லை. இவர் காட்டும் இலக்கிய மேற்கோள்களில் பெரும்பாலானவை

யாப்பருங்கல விருத்தியுரையுள் காணப்படுகின்றன. வடமொழி, பிராகிருதம் போன்ற பிற மொழிகளில் புலமை உடையவராயினும், குணசாகரர் தமிழிலக்கிய நூல்களில் ஆழமான புலமை பெற்றவர் என்பதை அவருடைய உரையும், பாடலியற்றும் வன்மையும் (உரைச் சூத்திர காரிகை), அவர் காட்டும் இலக்கிய மேற்கோள்களும் மெய்ப்பிக்கின்றன. எல்லாக் குற்றமும் தீர்ந்த செய்யுளுக்குக் காட்டாகத் "தாமரை புரையும் காமர் சேவடி" எனத் தொடங்கும் முருகனை வாழ்த்தும் கடவுள் வாழ்த்தைக் காட்டுவதனால், விருத்தியுரைகாரரைப் போன்று இவரும் சமயப்பொறை உடைய சான்றோராக வாழ்ந்துள்ளார் என அறிகிறோம். யாப்பருங்கல நூலும், அதன் விருத்தியும், பெருஞ்சிறப்புடையனவாயினும் யாப்பருங்கலக் காரிகையும் அதற்கமைந்த குணசாகரரின் உரையுமே அன்று தொட்டு இன்று வரை பயில்வோரிடைப் பெருவழக்காக இருந்து வருகின்றன.

இத்தகைய சிறப்புடைய இந்த உரையில் ஒரு சீர்மையோ (consistency) நெறிமுறையோ காணப்படாதது வியப்பைத் தருகிறது. உரை மீண்டும் மீண்டும் பெயர்த்தெழுதிய நிலையிலோ ஏடுகளிலிருந்து அச்சிட்ட நிலையிலோ இத்தகைய குழப்பம் ஏற்பட்டிருக்கலாமோ என்று தோன்றுகிறது. நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் அரிதின் முயன்று பிழைகள் பலவற்றை நீக்கிப் பதிப்பித்த (1940) கழகப் பதிப்பிலேயே இந்நிலை என்றால் முன்னைய பதிப்புகளில் இன்னும் பலவாறான குறைபாடுகள் இருந்திருக்கலாம். பயில்வோர்க்கு மிகுதியான சிக்கலை விளைவிக்கும் சிலவற்றை மட்டும் இங்குக் குறிப்பிடலாம்.

1. பாயிரம், உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல் என்னும் நால்வகைப் பகுப்பிலும் உள்ள காரிகைகள் மொத்தம் 47 எனக் கணக்கிட்டுப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இயல்தோறும் இலக்கணம் கூறுவனவும் அவற்றின் முதல் நினைப்புக் காரிகைகளும், உதாரண. இலக்கிய முதல் நினைப்புக் காரிகைகளும் நூல் நுவலும் எல்லாக் கூறுகளையும் தொகுத்துக் கூறும் காரிகையும் இவற்றுள் அடங்கும்.

   இப்போதுள்ள பதிப்புகளின் படி 45 ஆவது காரிகை எல்லா வகைச் செய்யுட்களுக்கும் பொதுவான விகாரம், வகையுளி, வாழ்த்து, வசை, வனப்பு, பொருள்கோள், குறிப்பிசை, ஒப்பு ஆகியவற்றைக் கூறுகிறது. இதற்குரிய உரையின் இறுதிப்பகுதி 'ஒப்பும்' என்னும் சொல்லில் உள்ள உம்மையை விதப்புக் கிளவியாகக் கொண்டு வண்ணங்கள் நூறு என்பதை

விளக்குகிறது. அதற்குச் சான்றாகத் "தூங்கேந்து அடுக்கல் பிரிதல்.... வண்ணம் நூறும் தலைப்படுமே" என்னும் செய்யுளைச் சான்று காட்டுகிறது. இவ்வுரையின் கருத்துப்படி காரிகையாசிரியர் வண்ணங்களுக்கு இலக்கணம் கூறாது விட்டார். உரையாசிரியர் 'ஒப்பும்' என்றும் விதப்புக்கிளவி கொண்டு அதனை விளக்கிக் கூறுகிறார் என்றாகிறது. ஆனால் ஒழிபியல் காரிகைகளின் முதல் நினைப்புக் கூறும் செய்யுளில் "தூங்கேந்து அடுக்கு" என்று மேற்காட்டிய செய்யுளைக் குறிப்பிடுகிறது. மேலும் நூல் நுதற் பொருளைத் தொகுத்துக் கூறும் காரிகை "ஒழுக்கிய வண்ணங்கள் நூறு" என வண்ண இலக்கணம் கூறப்பட்டதாகக் கூறுகிறது. எனவே உரையாசிரியர் சான்று காட்டும், "தூங்கேந்து அடுக்கல்" என்னும் காரிகை நூலாசிரியரின் செய்யுள்தான் என்பது தெளிவாகிறது. தம் பதிப்பில் நாவலர் நாட்டார் அவர்கள் அடிக்குறிப்பாக இதனைச் சுட்டிக்காட்டியுள்ளார். ஆக காரிகைகள் மொத்தம் 48 எனக் கொள்ளக் கிடக்கிறது. இந்நிலையில் இவ் உரையாசிரியர் பாயிரவுரையில் நூலின் அளவைக் குறிக்குமிடத்துக் 'காரிகை வகையில் நாற்பத்து நான்கு' (பாயிரம் நீங்கலாக) எனக் கூறுவதன் காரணம் விளங்கவில்லை.

2. இனி இயல்முடிபு கூறி நூல்முடிபு கூறுவதுதான் இலக்கண நூல்களில் காணப்படும் மரபு. ஆனால் யாப்பருங்கலக் காரிகையில் நூல்முடிபு கூறும் காரிகை. 46ஆம் செய்யுளாகவும் இயல்முடிபு கூறும் காரிகை 47ஆம் செய்யுளாகவும் வைக்கப்பட்டுள்ளன. இது பதிப்பில் நேர்ந்த குறையாகத் தோன்றவில்லை. உரையில் நேர்ந்துள்ள குழப்பமாகத் தோன்றுகிறது. நூல் முடிவு கூறும் காரிகைக்கு உரைக்கப்பட்டுள்ள விளக்கங்களில் பல மற்றொன்று விரித்தலாகவும் காணப்படுகின்றன.

3. அடுத்து, இலக்கணம் கூறுவதோடு இலக்கிய மேற்கோளுக்குரிய முதல்நினைப்புக் காரிகைகளையும் நூலாசிரியரே செய்தமைத்தார் என்று கருதப்படுகிறது. இத்தகைய காரிகைகள் உறுப்பியலில் ஆறும் செய்யுளியலில் ஒன்றுமாக மொத்தம் ஏழு காரிகைகள் உள்ளன. உறுப்பியலுக்கு ஆறு செய்தவர், செய்யுளியலுக்கு ஒரேயொரு காரிகை மட்டும் செய்வானேன்? ஒழிபியலுக்கு ஒன்றுகூடச் செய்யாமல் விடுவானேன் என்று எழும் வினாக்களுக்கு விடையில்லை. நூலாசிரியரே உதாரண

இலக்கிய முதல் நினைப்புக் காரிகை செய்திருந்தால் மேற்கோள்கள் எல்லாம் அவரால் தரப்பட்டிருக்க வேண்டும். அப்படியொரு மரபும் உண்டென்பதைப் புறப்பொருள் வெண்பா மாலையால் அறிகிறோம். ஆனால் ஒரு இயலுக்கு மட்டும் செய்து பிற இயல்களுக்குச் செய்யாமல் விடுபட்டது ஏடெழுதியோர் பிழையென்றோ, அத்தகைய காரிகைகள் அழிந்துபட்டன என்றோ கருத இயலவில்லை. இலக்கணம் கூறும் காரிகைகள் எல்லாம் இறவாதிருக்க உதாரணக் காரிகைகள் மட்டும் மறைந்துபோயின என்பதும் ஏற்புடையதாக இல்லை. எனவே உதாரண இலக்கிய முதல் நினைப்புச் செய்யுட்களை நூலாசிரியரே இயற்றினாரா என்பது ஐயத்திற்குரியதாக அமைகிறது. "ஒவ்வோர் இயலின் ஈற்றிலுமுள்ள காரிகை முதனினைப்புச் சூத்திரங்கள் நூலாசிரியராலும் உரையாசிரியராலும் எழுதப்படாமல் பிறிதொருவரால் இயற்றப்பட்டிருக்க வேண்டும். சுவடிதோறும் இவை வேறுவேறாக உள்ளன" என்று உ.வே.சா. நூல் நிலையப் பதிப்பின் முகவுரை கூறுவதும் இதன் தொடர்பில் சிந்திக்கத்தக்கது.

4. அடுத்து, உதாரண இலக்கிய முதல் நினைப்புக் காரிகை என்னும் தலைப்புடைய 13 செய்யுட்கள் செய்யுளியலில் காணப்படுகின்றன. உரையாசிரியர் இவற்றை உரைச் சூத்திரக் காரிகை எனக் குறிப்பிடுகிறார். இவற்றை உரையாசிரியரே எழுதிச் சேர்த்தார் என்று மு. அருணாசலம் (11/201) குறிப்பிடுகிறார். செய்யுளியல் மேற்கோள்களுக்கு நூலாசிரியரின் ஒரேயொரு முதல் நினைப்புக் காரிகை மட்டும் இருப்பதனால், எஞ்சிய மேற்கோள்களுக்கு உரையாசிரியரே முதல் நினைப்பு இயற்றியச் சேர்த்தார் எனக் கருதலாம். இத்தனைக் குழப்பங்களும் போதாவெனக் கருதியோ என்னவோ **யாப்பருங்கலக்காரிகை** (பாடநுண்பதிப்பு) என்னும் நூல் எல்லாச் சூத்திரங்களையும் ஒன்றுசேர்த்து 60 எனக் கணக்கிட்டுக் காட்டுகிறது. ஆனால் நூலாசிரியரின் காரிகை எனக் கூறித் "தூங்கேந்து அடுக்கல்" என்னும் காரிகையைக் கணக்கில் எடுத்துக்கொள்ளலாமல் தனியே பதிப்பித்துள்ளது. நூலாசிரியரின் முதல்நினைப்புக் காரிகைகள் எல்லாம் மேற்கோள்களுக்கு முன்னர் அமைந்துள்ளன. உரைச் சூத்திரக் காரிகைகள் எல்லாம் மேற்கோள்களின் இறுதியில் அமைந்துள்ளன. இந்த வேறுபாட்டிற்குரிய காரணம் விளங்கவில்லை.

5. இனிச் செய்யுளியலுக்குக் காட்டப்பெற்ற மேற்கோள்களின் அளவிற்குச் சமமான மேற்கோள்கள் ஒழிபியலில் இடம்பெற்றிருந்தும், இந்த இயலுக்கு நூலாசிரியரின் முதல் நினைப்புக் காரிகைகளும் இல்லை; உரையாசிரியர் செய்து சேர்த்ததாகக் கருதப்படும் உரை சூத்திரக் காரிகைகளும் இல்லை. இதற்குரிய காரணமும் விளங்கவில்லை.

இவ்வாறு குணசாகரர் பெயரால் வழங்கும் யாப்பருங்கலக் காரிகையின் பாடமும் உரையும் பல்வேறு ஐயங்களுக்கும் குழப்பங்களுக்கும் இடம் தருவனவாக அமைந்துள்ளன. அறிஞர்களின் ஆழ்ந்த சிந்தனைக்கும் ஒருமுகமான செயற்பாட்டிற்கும் உரியனவாக இவற்றைக் கருதலாம்.

## பதிப்பு

1940 ந.மு. வேங்கடசாமி நாட்டார், (ப.ஆ), **யாப்பருங்கலக் காரிகை மூலமும் குணசாகரர் இயற்றிய உரையும்** (சென்னை: கழகம்).

1948 **யாப்பருங்கலக் காரிகை** (சென்னை: உவே.சா. நூல் நிலையம்).

1973 சு. சாமிஐயா (ப.ஆ.), **யாப்பருங்கலக் காரிகை** (பாடநுண் பதிப்பு) (அண்ணாமலைப் பல்கலைக் கழகம்)

## தொல்காப்பியம் - இளம்பூரணர் உரை

பதினொன்றாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியிலும் பன்னிரண்டாம் நூற்றாண்டின் முதற்பகுதியிலும் வாழ்ந்தவராகக் கருதப்படும் இளம்பூரண அடிகள் என்னும் சமணப் பெரியார்தான் தொல்காப்பியத்துக்கு முதன்முதலாக உரைவகுத்து உதவிய பேரருளாளர் எனலாம். இந்த உரை இளம்பூரணம் என்று வழங்கப்படுகிறது. 'உரையாசிரியராகிய இளம்பூரணர்' என அடியார்க்கு நல்லார் இவரைக் குறிப்பிடுகிறார். இதன் காரணமாகவோ தொல்காப்பியத்திற்கு முதலில் உரை செய்தார் என்பதனாலோ இவருக்குப் பின்னர் வந்த உரைகாரர் எல்லோரும் இவரை உரையாசிரியர் என்றே குறிப்பிடுகின்றனர். தொல்காப்பியத்தில் மூன்று அதிகாரங்களுக்கும் இளம்பூரணர் உரை மட்டுமே இன்று வழக்கில் உள்ளது. நச்சினார்க்கினியரும் மூன்று அதிகாரங்கட்கும் உரை எழுதினார் எனக் கருதப்படினும் பொருளதிகாரத்தில் சில இயல்களுக்கு அவருடைய உரை கிடைக்கவில்லை. இளம்பூரணரின் தொல்காப்பிய உரையினால் விளைந்த பல நன்மைகளுள் முக்கியமானது தொல்காப்பியத்தின்

மூலபாடம் பெருமளவுக்கு உறுதி செய்யப்பட்டமை என்று கூறலாம். நச்சினார்க்கினியர் பல இடங்களிலும், சேனாவரையர் சில இடங்களிலும் வேறுபட்ட பாடங்களைக் கொண்டனராயினும் பெரும்பாலான பாடபேதங்களில் இளம்பூரணரின் பாட்மே சிறந்தது என அறிஞர்கள் கருதுகின்றனர். இவர் உரையில் காணும் தவறுபட்ட ஒன்றிரண்டு பாடங்கள்(பொருளதிகாரப்பகுதியில்) ஏடு பெயர்த் தெழுதுவோரால் நேர்ந்திருக்கக் கூடும் எனக் கருதப்படுகிறது.

தொல்காப்பிய உரைகளில் எல்லாம் இளம்பூரணர் உரைதான் மூலநூற்கருத்தை நேரிடை யாகவும், சுருக்கமாகவும் தெளிவாகவும் எடுத்துக் கூறுகிறது. இவர் பல நூற்பாக்களுக்கு உரையே வகுக்காமல் சூத்திரத்தாற் பொருள் விளங்கும் எனக் கூறிச் செல்கிறார். பெரும்பான்மையும் பண்டைத் தமிழ் நூல்களின் மரபுக்கேற்பவே உரை கூறும் இயல்புடையவராக இளம்பூரணர் காணப்படுகிறார். வடமொழிப் புலமை பெற்றவராயினும், வடமொழிக் கருத்துகளை வலிந்து கொண்டு வந்து சேர்த்து உரை வகுக்கும் இயல்பு இவரிடம் காணப்படவில்லை. பல்துறைப் புலமை மிக்கவராயிருந்தும் தேவைப்பட்ட இடங்களில் மட்டுமே அவற்றைத் தம் உரையுள் தந்து மூலத்திற்கு விளக்கம் தரும் கட்டுப்பாட்டு உணர்வை இவருடைய உரையில் நன்கு காணமுடிகிறது. இலக்கியப் பரப்பில் நச்சினார்க்கினியரை விடவும் இலக்கண நுட்பத்தில் சேனாவரையரை விடவும் குறைந்தவராகச் சில இடங்களில் இளம்பூரணர் காணப்படினும், மூல நூலை வாசகனுக்குத் தந்து விளக்கம் கூறுவதில் தேவைப்படும் நம்பகத் தன்மையில் அவ் இருவரையும்விட இளம்பூரணரே சிறந்து விளங்குகிறார் எனக் கூறலாம்.

முதன்முதலாக எழுந்த உரை என்பதாலோ, வடமொழிச் செல்வாக்கு ஏறுமுகமாக இருந்த காலமாயினும் இளம்பூரணம் பெரும்பாலும் தமிழ் மரபை ஒட்டியே செல்வதாலோ, வடமொழி ஈடுபாடு மிகுதியும் உடைய சேனாவரையர், நச்சினார்க்கினியர், சிவஞான முனிவர் போன்றோரின் செல்வாக்கால் இளம்பூரணப் பயிற்சி இடைக்காலத்தே குன்றியமையாலோ, இளம்பூரண ஏடுகள் மிகுதியாகக் கிடைக்கவில்லை. அதிலும் பொருளதிகாரத்திற்குரிய இளம்பூரண ஏடு தமிழகம் முழுவதிலும் ஒன்றே ஒன்றுதான் கிடைத்துள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கது. அந்த ஒன்றும் பல

இடங்களில் சிதைந்திருந்ததாகவும் அத்தகைய இடங்களில் நச்சினார்க்கினியரின் உரையை இட்டு நிரப்பியதாகவும் இளம்பூரணப் பொருளதிகாரப் பதிப்புகள் கூறுகின்றன. தமக்குக் கிடைத்த பொருளதிகார மூலமே சிதைந்தும் சில இடங்களில் விடுபட்டும் இருந்ததாக இளம்பூரணரே தம் உரையில் குறிப்பிடுகிறார் (பொருள். இளம். 45). பன்னிரு படலத்தோற்றம் பற்றிய கதையையும், அதனோடு தொல்காப்பியர்க்கு உள்ளதாகக் கூறப்படும் தொடர்பினையும் இளம்பூரணர் தம் உரையில் மறுத்துரைக்கிறார். சிதைந்து போனவையாகக் கருதப்படும் பகுதிகளிலும் அல்லது சிதைக்கப்பட்ட பகுதிகளிலும் இதுபோன்ற இலக்கண வரலாற்றுக் குறிப்புகள் பல மறைந்து விட்டிருக்கக் கூடும் எனக் கருதத் தோன்றுகிறது. இதன் தொடர்பாக இளம்பூரணரின் பொருளதிகார உரைப் பதிப்பைப் பற்றி மு. அருணாசலம் அவர்கள் வெளியிட்டுள்ள கருத்துகள் ஆய்வாளர்களால் நன்கு சிந்திக்கத்தக்கன (11/203-238/395-403).

இவர் காட்டும் மேற்கோள் பாடல்களால் தமிழ்மொழியில் எழுந்த இலக்கண இலக்கிய நூல்களின் காலமும் பாடமும் உறுதிப்படுகின்றன. இவரால் காட்டப்படும் நூல்களாவன: புறப்பொருள் வெண்பா மாலை, இறையனார் களவியல், பிங்கல நிகண்டு, தமிழ்நெறி விளக்கம், செயிற்றியம், காக்கை பாடினியம், பரிமாணச் சூத்திரம், பன்னிரு படலம், எட்டுத்தொகை நூல்கள் முழுவதும், பத்துப்பாட்டுள் சிறுபாணாற்றுப்படை ஒழிந்த ஏனைய ஒன்பதும், சிலப்பதிகாரம், சிந்தாமணி, சூளாமணி, மணிமேகலை, குறள், நாலடியார், பழமொழி நானூறு, திரிகடுகம், களவழி நாற்பது, கார் நாற்பது, ஐந்திணை நூல்கள் ஐந்தும், பாண்டிக்கோவை, முத்தொள்ளாயிரம், சிற்றட்டகம், ஆசிரிய மாலை, குண நாற்பது, மார்க்கண்டேயனார் காஞ்சி, விளக்கத்தனார் பாடல் முதலாயின. இவற்றுள் பல இன்று வழக்கில் இல்லை.

இந்த மேற்கோள்களும், தம் உரையில் ஆங்காங்கே காட்டும் எடுத்துக்காட்டுத் தொடர்களும், புலவர்கள், அரசர்கள், ஊர்கள் போன்றவற்றின் பெயர்களும் இளம்பூரணர் தமிழ்ப் பண்பாட்டு மரபில் பெரிதும் பற்றுடையவர் என்பதையும், சமணராயினும் தேவையில்லாமல் வடமொழி நூல்களையோ, மரபுக் கூறுகளையோ அதிகம் பயன்படுத்தவில்லை என்பதையும் தெளிவாகக் காட்டுகின்றன. "நும் நாடு யாது என்றால், தமிழ்நாடு என்றல்" (தொல்.சொல்.13) என்னும் எடுத்துக்காட்டுத் தொடரால்

இளம்பூரணரின் தமிழ்மொழிப் பற்றையும், தமிழ்நாட்டுப் பற்றையும், தமிழன் என்னும் உணர்வையும் அவர் தழுவிய சமயம் தளைப்படுத்தவோ கறைபடுத்தவோ இல்லை என அறிந்து மகிழலாம்.

இவர் காலத்திற்குப் பின்னர் எழுந்த நன்னூல் என்னும் இலக்கணமும் பிற உரைகளும் பல நிலைகளில் இவருடைய உரையை அடியொற்றி அமைந்தமையைப் பின்னர்வரும் பகுதிகளில் விளக்கமாகக் காணலாம்.

## பதிப்பு

### எழுத்து

1868 சுப்பராயச் செட்டியார் (ப.ஆ.) **தொல்.எழுத்து. இளம்பூரணம்,** சென்னை: அத்திநீயம் அண்ட் டேலி நியூஸ் பிரான்ச் அச்சுக் கூடம்.

1928 வ.உ.சிதம்பரம்பிள்ளை (ப.ஆ.) **எழுத்து-இளம்பூரணம்,** தூத்துக்குடி : வேலாயுதம் பிரஸ்.

1955 சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், **எழுத்து - இளம்பூரணவுரை.**

1969 அடிகளாசிரியர் (ப.ஆ.) **தொல்.எழுத்து-இளம்பூரணம்**

### சொல்

1927 கா.நமச்சிவாய முதலியார் (ப.ஆ.) **தொல்.சொல். இளம்பூரணம்,** சென்னை : காக்ஸ்டன் பிரஸ்.

1963 கு.சுந்தரமூர்த்தி (ப.ஆ). **தொல்.சொல்.இளம்பூரணம்,** சென்னை : கழகம்.

1988 அடிகளாசிரியர் (ப.ஆ.) **தொல்.சொல்.இளம்பூரணம்,** தஞ்சாவூர் : தமிழ்ப் பல்கலைக்கழகம்.

### பொருள்

1928 வ.உ.சிதம்பரம்பிள்ளை(ப.ஆ.) **தொல்காப்பியம்-பொருளதிகாரம்-இளம்பூரணம்** (அகத்திணையியல், புறத்திணையியல்), சென்னை : வாவிள்ள இராமசுவாமி சாஸ்திரிலு அண்ட் சன்ஸ்.

1936 வ.உ. சிதம்பரம்பிள்ளை (ப.ஆ.) எஸ். வையாபுரிப்பிள்ளை (ப.ஆ), **தொல்.பொருளதிகாரம் - இளம்பூரணம்** (களவியல்

-மரபியல், (ஏழு இயல்கள்), சென்னை: வாவிள்ள இராமசுவாமி சாஸ்திரிலு அண்ட் சன்ஸ்.

1953 தொல்.பொருள்.இளம்பூரணம், சென்னை : கழகம்.

## 12ஆம் நூற்றாண்டு

### பெருந்தேவனாரின் வீரசோழிய உரை

புத்தமித்திரரின் ஐந்திலக்கண நூலாகிய வீரசோழியத்திற்கு எழுந்த உரையாதலின் இது வீரசோழிய உரை என்றே வழங்கப்படுகிறது. புத்தமித்திரரின் மாணவர் என்று கருதப்படுகிற பெருந்தேவனார் என்பவர் இதனை இயற்றியதாகப்

பொன்பற்றிக் காவலன் தான்மொழிந்த.....வீரசோழியப்
..பொழிப்புரையைப் பெருந்தேவன் கடனாகவே நவின்றான்"

என வரும் உரைச் சிறப்புப் பாயிரப் பகுதியால் அறிகிறோம்.

பெருந்தேவனார் என்னும் பெயரைத் தவிர இவ்வுரையாசிரியரைக் குறித்த வேறு விவரங்கள் எவையும் கிடைத்தில. இவருடைய உரையில் காணப்படும் எடுத்துக்காட்டுப் பாடல்களால் வீர ராசேந்திர சோழனை யடுத்த காலப்பகுதியில் அதாவது 12ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இவர் வாழ்ந்திருக்கலாம் எனவும், சோழ நாட்டினர் எனவும் அறிகிறோம். சிவபெருமானைப் பற்றிய குறிப்புகள் இவ்வுரையில் மிகுதியாகக் காணப்படுகின்றமையின் இவர் சைவ சமயத்தைச் சார்ந்தவராக இருந்திருப்பார் என மு. அருணாசலம் போன்ற அறிஞர்கள் கருதுகின்றனர் (12/675-678). திருமால், புத்தர் ஆகிய கடவுளர் பற்றிய குறிப்புகளும் பரவலாகக் காணப் படுகின்றமையால் இவர் சமயப் பொறை மிகுதியும் உடைய அறிஞராக இருந்திருக்கக் கூடும் எனக் கருதத் தோன்றுகிறது.

ஐந்திலக்கணம் கூறும் முதல் நூலாக வீரசோழியம் தோன்றியது போலவே ஐந்திலக்கணத்திற்குத் தோன்றிய முதல் உரையாகப் பெருந்தேவனார் உரை விளங்குகிறது. வடமொழி, தமிழ் என்னும் இரண்டின் அடிப்படையில் தோன்றிய வீரசோழியத்திற்கு இயற்றப்பட்ட உரையாகலின் இவ் உரையாசிரியரும் இவ் இரு மொழிகளிலும் வல்லவராக இருந்தார் என்பதை இவருடைய உரையால் அறிகிறோம். இலக்கிய இலக்கணப் புலமையோடு வேளாண்மை, மருத்துவம், நெசவு, சோதிடம், தச்ச நூல் போன்ற பல்துறைப் புலமையும் உடையவராகப் பெருந்தேவனார் விளங்கியமையை இவ்வுரையால் அறிகிறோம்.

"வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ" எனப் பொதுவாக வடபுலச் சொற்களைத் தமிழ்ப்படுத்தும் முறைபற்றித் தொல்காப்பியர் இலக்கணம் கூறினார். இவ் உரையாசிரியர் இந்த இலக்கணக் கூறை விரிவாக்கி,

> ஆரியம், வடுகு, சாவகம், தெலுங்கு, சோனகம்
> சிங்களம், பப்பரம் முதலாகிய பிற(மொழிச்)
> சொற்களைத் தமிழாக்குவது எப்படி என்று
> காட்டுகிறார்.... (மு.அ. 12/681)

இதனால் மேற்குறித்த வடுகு, சாவகம் போன்ற பிறமொழிகளையும் இவர் ஓரளவு அறிந்திருந்தார் எனக் கருதலாம். அடுத்த நூற்றாண்டில் தோன்றிய நன்னூல் இப்பகுதியை இன்னும் விரிவாக்கிக் கூறுவதை வரலாற்று நோக்கில் ஒப்பிட்டுக் காணலாம்.

## வீரசோழிய உரையியல்பு

ஐந்திணை இலக்கணமாகிய வீரசோழியம் பல புதிய இலக்கண மரபுகளைக் கூறுகின்றமை யாலும், பயிற்சியின்றி இந்நூல் மிகுதியாகப் போற்றப்படாமையாலும், பெருந்தேவனார் உரையின் துணையின்றேல் இந்நூலை இன்றுள்ள மாணவர்கள் உணர்ந்துகொள்ள இயலாது. இவருடைய உரையாலும், இவர் காட்டும் உதாரணப் பாடல்களாலும்தான் இந்நூலை உணர்ந்துகொள்ள இயலும். எனவே இலக்கண வரலாற்றில் ஒரு முக்கியமான மைல்கல்லாகிய வீரசோழியத்திற்கு எழுதப்பட்ட இவ்வுரை மிகவும் இன்றியமையாததாக விளங்குகிறது.

பல நிலைகளில் வீரசோழியம் புது மரபுகளைத் தோற்றுவித்துள்ளது என்னும் உண்மையை இந்த உரையின் மூலமாகத்தான் உணர்ந்துகொள்கிறோம். அவருடைய மாணவராகவும் ஏறக்குறைய உடன்காலத்தவராகவும் இருந்த காரணத்தால், நூலாசிரியரின் உள்ளக் கருத்தையுணர்ந்து பெருந்தேவனார் தம் உரையை இயற்றியுள்ளார்.

அகத்திணை, புறத்திணை மரபுகளாக இவ்வுரைகாரர் கூறுவன கூர்ந்து சிந்திக்கத் தக்கன. ஐந்திணைகளைக் குறிஞ்சி, நெய்தல், பாலை, மருதம், முல்லை என முறைவைப்பை மாற்றியும், ஐந்திணை மரபை நடையியல் மரபு எனக் கூறி "நடையாவது ஒழுக்கம். இப்பாட்டு எந்நடை பற்றி வந்தது என்றால் இந்நிலத்துள் ஒழுக்கம் பற்றி வந்தது என்றறிவது" எனக் கூறி மிக நீண்ட அகவற்பாக்களால் இவ் ஐந்தனுக்கும் துறைகள் கூறுகிறார். எனவே புவியியல் சூழலுக்கு ஏற்ப ஐந்திணை

ஒழுக்கங்கள் ஏற்பட்டனவாகக் கருதும் இவருடைய கருத்து தொல்காப்பியரின் அகத்திணைக் கோட்பாட்டுக்குப் புறம்பானது. அகப்புறம் என்னும் பொருளிலக்கண மரபைக் கூறி அது பத்து வகைப்படும் என்றும் கூறுகிறார். இத்தகைய சிந்தனை பிற்கால உரையாசிரியர்களிடம் காணப்படுவதற்கு இவரே மூலகாரணமாக இருந்தனரோ எனக் கருத வேண்டியுள்ளது. இவர் கூறுகின்ற துறைகளில் பலவும் பண்டைய தமிழ் இலக்கண மரபோடு முரண்பட்டனவாகத் தோன்றுகின்றன.

சொற்குற்றம், பொருட்குற்றம் என்னும் இருவகைக் குற்றங்களும் கவிதைக்கண் அமையலாகா என்னும் கருத்துடைய பெருந்தேவனார், பின்னர் சொற் குற்றத்தால் உடல் ஊனம் நேரும், பொருட் குற்றத்தால் உயிர்க்கு ஊனம் நேரும் என்று கூறுகிறார். எனவே இரண்டில் பொருட்குற்றமே பெருங்குற்றம் என்பதும் கவிதை இதனைத் தவிர்க்க வேண்டும் என்பதும் உரையாசிரியரின் கருத்தாகக் காணப்படுகிறது. பிற்காலத்தே திருவிளையாடற்புராணம் முதலானவற்றில் வரும் நக்கீரரின் 'கொங்குதேர் வாழ்க்கை' என்னும் பாடல் பற்றிய விவாதக் கருத்துக்கு இக்கருத்து அடிப்படையாக அமைந்திருக்கலாம். ஏனெனில் தொல்காப்பியச் செய்யுளியல் கோட்பாட்டின்படி கவிதையென்பது ஓர் உயிரியத்தன்மை (organic whole) உடையது; தனித்தனிக் கூறுகளெல்லாம் ஒரு கவிதையின் உயிர்ப்பாக விளங்கும் மையக் கருத்தோடு தொடர்புடையன; பிரித்தறியப்படாதன என்னும் உசிதக் கோட்பாட்டை (ஔசித்தியம்) உடையது. பெருந்தேவனாரின் விளக்கம் புது மரபைத் தோற்றுவிக்கக் காண்கிறோம்.

வழுவற்ற செய்யுளைப் பற்றிப் பேசும் வீரசோழியக் காரிகை 144க்கு உரை வகுக்குமிடத்து,

> வழக்கதிகாரத்தோடும் பொருந்தித் தமிழினோடும் கூடி வடவெழுத்தைத் தவிர்த்துப் பெரிதும் இன்பம் தந்து பெரியோராற் செய்யப்பட்ட செய்யுட்களிலும்...

என்று கூறுவதனால் குற்றமற்ற கவிதை உலகியல் மரபு, தமிழ் மரபு (இலக்கிய மரபு) என்ற இரண்டையும் தழுவியதாகவும், வடவெழுத்தைத் தவிர்ந்ததாகவும் அமைந்து இன்பம் பயப்பதாக அமையவேண்டும் என்று பெருந்தேவனார் கருதக் காண்கிறோம். மரபியலை வழக்கதிகாரம் என்னும் பெயரால் பெருந்தேவனார் குறிப்பிடுவதும் சிந்திக்கத் தக்கது.

பொருள்கோள் என்னும் இலக்கண மரபைச் சூத்திரங்கள் மூலமாக விளக்கும் இவ்வுரையாசிரியர் புதிய பொருள்கோள்களைச் சுட்டுகிறார். இவர் கருத்தின்படி பொருள்கோள் ஏழு வகைப்படும். அவை யாவன:

கொழுங்கொடி வள்ளி செழுங்குலை வாழை
தீங்கரும் பேமலர் திகழ்தரு பலவே
தேங்கமழ் அசோகு செருவிற் பூட்டு
பூம்புனல் ஆறெனப் பெருள்கோள் ஏழே.

இவற்றுள் பூட்டுவில், ஆற்றுநீர் என்னும் இரண்டும் யாப்பருங்கலக்காரிகையில் கூறப்பட்டவை. எஞ்சிய வள்ளி, வாழை, கரும்பு, பலா, அசோகு என்னும் ஐந்தும் பெருந்தேவனாரால் முதன்முதலில் கூறப்பட்ட புதுப் பொருள்கோள் வகைகள் எனலாம். இவ் ஏழனையும் மற்றொரு நூற்பாவால் விளக்கிக் கூறுகிறார். இவ்வாறே பயன், குறிப்பு, மெய்ப்பாடு என்பவற்றையும் தமக்கே உரிய புதுப்புதுக் கோணங்களில் விளக்கிக் கூறுகிறார்.

பண்டைய உரையாசிரியர்களைப் போலவே பெருந்தேவனாரும் பண்டைய தமிழ் நூல்களையும், இலக்கணங்களையும் மேற்கோள்களாக எடுத்துக் காட்டுகிறார். இவற்றுள் பெரும்பாலன யாப்பருங்கல விருத்தியுரையுள் காட்டப்பெற்றவை. பாரதவெண்பாவுக்கு உரியனவாகப் பல வெண்பாக்களையும், விருத்தங்களையும், இராமாயண வெண்பாவுக்கு உரியனவாக மூன்று வெண்பாக்களையும் பெருந்தேவனார் தாமே காட்டுகிறார். இவர் காட்டும் பாரத வெண்பாப் பாடல்களில் பல அச்சிடப்பெற்ற நூலுள் காணப்பெறவில்லை. வடமொழித் தண்டியின் காவியாதரிசம், அழிதசாகரரின் யாப்பிலக்கண நூல்கள், தமிழ்நெறி விளக்கம், திவாகரம், பிங்கலந்தை ஆகிய நிகண்டுகள், பெரியமுப்பழம், தாரணைநூல் ஆகிய நாடக நூல்கள், அணியியல் என்னும் அலங்கார நூல் ஆகியவற்றிலிருந்து இலக்கண மேற்கோள்களைப் பெருந்தேவனார் காட்டுகிறார். இவருடைய மேற்கோள்களால் இவருடைய பரந்த இலக்கண, இலக்கியப் புலமையும் இலக்கண உலகில் இவர் கொண்ட புதிய பார்வையும் நமக்குப் புலனாகின்றன.

இனி அகத்திணை, புறத்திணை, பொருள்கோள், மெய்ப்பாடு போன்ற கூறுகளைப் பற்றி இவர் கூறும் புதுக்கருத்துக்களைத் தாங்கிய பிற இலக்கண நூல்கள்

அக்காலத்தில் இருந்தனவோ, அன்றி இருந்து மறைந்தனவோ என்னும் ஐயப்பாடும் நம் சிந்தனைக்கு உரியதாகிறது.

## பதிப்பு

1881 சி.வை. தாமோதரம் பிள்ளை

1942 கா.ர. கோவிந்தராச முதலியார், சென்னை : பவானந்தர் கழகப் பதிப்பு.

## 13ஆம் நூற்றாண்டு

## தொல்காப்பியம்–பொருள்: பேராசிரியர் உரை

தமிழிலக்கிய வரலாற்றில் 1.தொல்காப்பியப் பொதுப்பாயிரம் எழுதிய ஆத்திரையன் பேராசிரியன், 2.யாப்பருங்கல விருத்தியுரையில் குறிப்பிடப்படும் பேராசிரியர், 3.தொல்காப்பிய உரை செய்த பேராசிரியர், 4.திருக் கோவையாருக்கு உரை வகுத்த பேராசிரியர், 5.தமிழ் நாவலர் சரிதை குறிப்பிடும் பேராசிரியர் என ஐவர் ஒரே பெயரில் குறிப்பிடப்படுகின்றனர். இவர்கள் வெவ்வோறு காலத்தில் தோன்றி வெவ்வேறு தமிழ்ப் பணிகளைச் செய்த பெருமக்கள்.

இவர்களுள் பதின்மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்து தொல்காப்பியத்திற்கு உரை வகுத்தவர் ஒருவர். இவரே திருக்கோவையாருக்கும் உரையெழுதினார் என்று பொதுவாகக் கருதப்படுகிறது. இரண்டு உரைகளின் போக்கினை ஆராய்ந்த அறிஞர்கள் இவர்கள் இருவரும் வெவ்வேறானவர் என்று காட்டியுள்ளனர் (மு.அ. 13/191). அவர்கள் சுட்டும் வேறுபாடுகளுள் மிக முக்கியமானது ஒன்றுண்டு: அதாவது தொல்காப்பியத்திற்கு உரை செய்தவர் தொல்காப்பியரை எப்போதும் படர்க்கை ஆண்பால் ஒருமையிலேயே குறிப்பிடும் மரபுடையவர். சான்றாக, "உவமை எட்டெனப்படும் என்று அறிந்து கூறினான்; உள்ளநிகழ்ச்சியை இரண்டாவதென்றான்; முதல் வினையாற் கூறினான்; உவமையென்றான்; எதிர்மறுத்துக் கொள்ள வைத்தான்'' என வருவனவற்றைக் கூறலாம். திருக்கோவையாருக்கு உரை வகுத்தவரோ, "பன்மை பற்றிக் கடம் என்றார்; அவ்வாறு கூறினார்; பொய்வானவரென்றார்" என எல்லா இடங்களிலும் நூலாசிரியரைப் பலர்பால் விகுதி கொடுத்தே குறிப்பிட்டுச் செல்லும் மரபுடையவராகக் காணப்படுகிறார் (மு.அ/192) மொழி வழக்குச் சார்ந்த இவ்வேறுபாடு மிக இன்றியமையாத தனிப்பட்டோரின்

மொழியாளுமையைக் குறிப்பது. எனவே இருவரும் வெவ்வேறானவர் எனத் துணியலாம்.

தொல்காப்பிய உரைகாரரான பேராசிரியரைப் பற்றிய வேறு வரலாறுகள் எவையும் தெரியவில்லை. நச்சினார்க்கினியர் பொருளதிகார உரையில் பல இடங்களில் இவருரையைக் குறிப்பிட்டுப் "பேராசிரியர் கூறினார்; பேராசிரியர் காட்டினார்; பேராசிரியர் தாமே மறுத்தவாறு காண்க'' என்றெல்லாம் கூறுகிறார். அதனால் இவர் பெயர் பேராசிரியர் என்று அவருடைய உரையின் அடிப்படையில் அறிகிறோம்.

தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்கு முதல் உரைகாரரான இளம்பூரணர் எழுதிய உரை மட்டுமே முழுவதும் கிடைத்துள்ளது. பொருளதிகாரத்தின் முதல் ஐந்து இயல்களுக்கும், செய்யுளியலுக்கும் நச்சினார்க்கினியரின் உரை கிடைத்துள்ளது. எழுத்துக்கும் சொல்லுக்கும் முழுமையாக உரை எழுதிய நச்சினார்க்கினியர் இடைப்பட்ட இரண்டு இயல்களுக்கும் மரபியலுக்கும் உரை செய்திருக்க வேண்டும் எனக் கருதுவதில் தவறில்லை. இவ்விருவருக்கும் இடைப்பட்ட காலத்தில் பொருளதிகாரத்திற்கு உரைகண்ட பேராசிரியரின் உரை பின்னைய நான்கு இயல்களான மெய்ப்பாட்டியல், உவமயியல், செய்யுளியல், மரபியல் என்னும் பகுதிகளுக்கு மட்டுமே கிடைத்துள்ளது. எனினும் "களவியலுள் கூறினாம் (266), அகத்திணை இயலுள் கூறினாம் (267, 317, 392) அவை வெட்சியுள்ளும் ஒழிந்த திணையுள்ளும் காட்டப்பட்டன (500)" எனவரும் குறிப்புகளால் பேராசிரியர் பொருளதிகாரம் முழுவதற்கும் உரை வகுத்திருக்க வேண்டும் எனக் கருத வேண்டியுள்ளது.

முத்தமிழிலும் வல்லவரான பேராசிரியர் வடநூற் பயிற்சியும் மிக்கவராகக் காணப்படுகிறார். பத்தாம் நூற்றாண்டிற்குப் பின் உரையெழுதிய அறிஞர் பலரும் வடமொழிப் புலமை நிரம்பியவராகக் காணப்படுகின்றனர். யாப்பருங்கல விருத்தியுரைகாரர், இளம்பூரணர், வீரசோழிய உரையாசிரியர், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார், சேனாவரையர், நச்சினார்க்கினியர் போன்றோரைச் சுட்டலாம். படைப்பிலக்கியம் செய்தோராயினும், உரை வகுத்துத் தமிழாய்ந்தோராயினும் இத்தகைய இருமொழிப் புலமையும் பல்துறைப் புலமையும் பெற்றவராகக் காணப்படுவதை நோக்க, இவ் இடைக்காலத்தே (10 முதல் 16 ஆம் நூற்றாண்டு வரை)

இலக்கியப் புலமை வெறும் தமிழ்ப் புலமையோடு நிறைவுற்றதாகக் கருதப்படவில்லை என அறிகிறோம்.

தம் கருத்தை விளக்குவதற்காக இவர் பண்டைய ஆசிரியர்கள் பலரை மேற்கோளாகக் காட்டுகிறார். அமிதசாகரர், இளம்பூரணர், தண்டியாசிரியர் ஆகியோரையும், வழக்கிறந்த நூலாசிரியர்களாகக் கடிய நன்னியார், காக்கைபாடினியார், சிறுகாக்கை பாடினியார், செய்யுளியலுடையார், நத்தத்தனார், பல்காப்பியனார், பல்காயனார் என்போரையும் காட்டுகிறார்.

தொல்காப்பியம் அகத்தியத்தின் வழிநூல்; இடைச் சங்க காலத்திலிருந்து வழக்கிலுள்ளது. பன்னிரு படலத்தின் வழிநூல் புறப்பொருள் வெண்பா மாலை; பல்காயனார் முதலியோர் எழுத்தும், சொல்லும், பொருளும் செய்திலர்; உவம இயல் பொருளைப் புலப்படுத்துவதற்கு எழுந்ததேயன்றி, அணியை உணர்த்துவதற்கு எழுந்ததன்று; உவமஇயல் செய்திகளையும், சொல்லதிகாரத்துள் சிலவற்றையும், செய்யுளியல் கூறுவனவற்றுள் சிலவற்றையும் வாங்கிக் கொண்டு அவற்றைச் செய்யுட்குரிய அணிகளாக இக்காலத்து ஆசிரியர் நூல் செய்தாரும் உளர் - எனத் தமிழிலக்கிய வரலாற்றுச் செய்திகள் பல இவருடைய உரையில் காணக்கிடைக்கின்றன. இவற்றுள் அலங்கார நூல் பற்றிப் பேராசிரியர் கூறுவது ஆழ்ந்து சிந்திக்கத் தக்கது (காண்க: **தண்டியலங்காரம்**).

தொல்காப்பியம், இறையனார் களவியல், புறப்பொருள் வெண்பா மாலை முதலான இலக்கணங்களையும், சங்கப் பாடல்கள், பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், சிலப்பதிகாரம், முத்தொள்ளாயிரம் போன்ற இலக்கியங்களையும் பேராசிரியர் மேற்கோளாகக் காட்டுகிறார். தக்க மேற்கோள் இல்லாத விடத்தும் தாமே புதியனவாக இயற்றி எடுத்துக்காட்டு தரும் முறையையும் இவர் மேற்கொண்டிருந்தார். சூத்திரம் 261 முதல் 266 வரையுள்ள பகுதிக்கு இவர் தரும் விளக்கத்தையும் உதாரணப் பாடல்களையும் சான்றாகக் காட்டலாம். இதே பாடல்களைப் பின்னர் நச்சினார்க்கினியரும் இலக்கண விளக்க உரைகாரரும் மேற்கோள்களாகக் காட்டுகின்றனர். இவ்வாறே செய்யுளியலில் 332 ஆம் நூற்பாவில் கூறப்படும் வஞ்சியுரிச் சீருக்கு உரிய இலக்கியமாகப் பேராசிரியரே நான்கு பாடல்களை இயற்றிக் காட்டியுள்ளார்.

இளம்பூரணர் உரையைப் போன்று பேராசிரியர் உரையும் பல இடங்களில் சிதைந்தும், பிறழ்ந்தும் இருக்கக் காண்கிறோம்.

பதிப்பாசிரியர்கள் சிதைந்தவிடங்கட்குப் பிறிதோர் உரையையோ, தாமே கருதியதையோ இட்டு நிரப்பியுள்ளனரோ என ஐயுற வேண்டியுள்ளது. சான்றாக, மெய்ப்பாட்டியல் முதல் மூன்று நூற்பாக்களில் கூறப்படும் எண்ணிக்கைகளுக்குத் தரப்பட்டுள்ள விளக்கங்கள் முன்னுக்குப் பின் முரணாக அமைந்துள்ளதைக் காணலாம். மேலும், மேலே குறிப்பிட்ட மெய்ப்பாட்டியல் நூற்பாக்களுக்குக் (261-266) காட்டப்பட்டுள்ள உதாரணச் செய்யுட்கள் இலக்கண விளக்கத்திலிருந்து எடுக்கப் பட்டனவாகக் குறிப்புகள் (இ.வி.ப. 232, 233, 234, 235) கூறுகின்றன (கழக பதிப்பு (1951) 1975). இவை பேராசிரியர் தாமே செய்து காட்டியவை என்பது அறிஞர் துணிபு (மு.அ. 13/206).

### பதிப்பு

1916-1917 பவானந்தம் பிள்ளை (ப.ஆ.) தொல்காப்பியம் - பொருளதிகாரம் - பேராசிரியம், சென்னை: லாங்மென்ஸ் கிரீன் அண்டு கம்பெனி.

1943 சி. கணேசையர் (ப.ஆ.) தொல்காப்பியம் - பொருள் - பேராசிரியம், (பின்னான்கு இயல்கள்), சுன்னாகம் : திருமகள் அழுத்தகம்.

1951 சென்னை : சைவசித்தாந்தக் கழகம்.

### தொல்காப்பியம் சொல் : சேனாவரையர் உரை

இளம்பூரணர், நச்சினார்க்கினியர் என்னும் இருவர் மட்டுமே தொல்காப்பியத்தின் மூன்று அதிகாரங்கட்கும் உரையெழுதி உள்ளனர். பேராசிரியர், சேனாவரையர், கல்லாடர், தெய்வச்சிலையார் போன்றோர் ஒவ்வோர் அதிகாரத்திற்கு மட்டுமே உரை வகுத்துள்ளனர். தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கு இளம்பூரணர், கல்லாடர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் மற்றும் பெயரிடப்படாத ஒருவர் ஆகிய அறுவர் உரையெழுதினர் என்று கூறப்படுகிறது. இவற்றுள் சேனாவரையரின் உரையே சொல்லதிகாரத்திற்குச் சிறந்தவுரை என்று பொதுவாகக் கருதப்படுகிறது. திணை, பால், வேற்றுமை, வினைப் பாகுபாடு, தொகைநிலை, சொற்றொடர் அமைப்பு, சொற்றொகை போன்ற தமிழின் அடிப்படையான சொல்லிலக்கணக் கூறுகளுக்கு இவர் கூறும் உரையிலிருந்து இக்கருத்து உறுதிப்படுகிறது. தொல்காப்பியரின் கோட்பாடுகள் ஏற்றம் பெறவும் இவருடைய விளக்கங்கள் பயன்படுகின்றன எனலாம்.

சேனாவரையர் என்பது சேனைத் தலைவர் என்று பொருள் படும் பட்டப்பெயர் என்றும், இவரது இயற்பெயர் அழகப்பிரான் இடைக்கரையாழ்வான் என்றும் சில அறிஞர்கள் (மு.அ. 13/220) கருதுகின்றனர். இவர் தென்பாண்டி நாட்டிலுள்ள ஆற்றூரைச் சேர்ந்தவர்; மாறவர்மன் குலசேகர பாண்டியன் (1268-1311) காலத்தில் வாழ்ந்தவர் என்பது சில கல்வெட்டுகளால் அறியப்படுகிறது. எனவே சேனாவரையுரைப் பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கு உரியவராகக் கொள்ளலாம்.

தாம் உரையெழுதத் துணிந்த நூலாசிரியர்களின் கருத்தை ஆதரித்துப் பேசுவது தமிழ் உரையாசிரியர்களின் பொதுமரபாகக் காணப்படுகிறது. கால இடையீட்டால் சமுதாய, சமய, இலக்கண, இலக்கியத் துறைகளில் மிக்க மாற்றங்கள் நிகழ்ந்திருந்த போதிலும், இவை தொடர்பான வேறுபாடுகளைச் சுட்டிக்காட்டி அவற்றொடு மாறுபடுவனவாக மூலநூல்களுள் காணப்படுவனவற்றை, "வழக்கு வீழ்ந்தன போலும்" என்றும் "நூல் செய்த காலத்து இருந்து பின்னர் அருகின" என்றும், "ஆசிரியன் தவறுபடச் சூத்திரம் செய்யானன்றே" என்றும் கூறுவது இவர்களின் பொதுப் பண்பாகக் காணப்படுகிறது. இம் மரபை ஒட்டிச் சேனாவரையரும் தொல்காப்பியரைப் போற்றியே உரை எழுதுகிறார். தொல்காப்பியர் கருத்து பொருத்தமற்றது எனச் சேனாவரையர் கருதுமிடத்திலும், நூலாசிரியர் கருத்தையே ஏற்றுக் கொள்ளும் மரபை இவரிடம் காணலாம். சான்றாக "எல்லே இலக்கம்" (269) என்னும் நூற்பாவுக்குச் சேனாவரையர் கூறும் உரையைக் காட்டலாம்: "எல் என்பது உரிச்சொல் நீர்மைத்து ஆயினும், ஆசிரியர் இடைச்சொல்லாக ஓதினமையான் இடைச்சொல் என்று கோடும்".

தமிழ், சமஸ்கிருதம் ஆகிய இருமொழிகளிலும் வல்லவராய் இருந்ததோடு, சேனாவரையர் தருக்கநூற் புலமையும் மிக்கவராக விளங்கினார் என்பதை இவர் உரையால் உணரலாம். பெரும்பாலான உரையாசிரியர்கள் தருக்கநூற் புலமை நிரம்பியவர்களாக இருப்பினும், சேனாவரையர்தான் தம் உரை விளக்கத்திற்குத் தருக்க முறையை மிகுதியாகப் பயன்படுத்துகிறார். தருக்கவியல் என்பது அனுமானங்களின் அடிப்படையில் நியாயங்களின் துணைகொண்டு வாதங்களை நிறுவும் ஓர் ஆய்வுமுறை. பண்டைக்காலந்தொட்டுப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிவரை தருக்க நெறியே நம்மிடையே ஆய்வு முறையாகப் பின்பற்றப்பட்டு வந்துள்ளது.

"முன்னோர் மொழிபொருளைப் பொன்னேபோல் போற்றுவோம்" என்பது தருக்க முறையின் அடிப்படைகளுள் ஒன்று. அதாவது ஆட்சி (authority) கடக்கவொண்ணாதது என்பது கருத்து. அதனால்தான், "உரிச்சொல்லாயினும் ஆசிரியர் இடைச்சொல்லாகக் கருதிப் பொருள் கூறியமையால் 'எல்' என்பதை இடைச்சொல் என்றே கொள்ளுவோம்" எனச் சேனாவரையரும், "ஆசிரியன் தவறுபடச் சூத்திரம் செய்யானன்றே" எனப் பேராசிரியரும் கூறுகின்றனர்.

நூற்பொருளுக்கு உரை கூறுமிடத்துப் பிறருடைய பாடங்களையோ கருத்துகளையோ மறுத்துரைக்க நேருங்கால் பெருந்தன்மையோடு மறுப்பது சேனாவரையரின் மிகச் சிறந்த பண்புகளில் ஒன்றாகக் காணப்படுகிறது. இளம்பூரணர் போன்றோரை மறுக்குமிடத்து, "அவர் உரை போலியுரை என்க. அவர்க்கது கருத்தன்றென்க. நூலாசிரியர்க்குக் கருத்தன்மையின் உரையாசிரியருக்கும் அது கருத்தன்று" என்று கூறுவது சேனாவரையரின் இயல்பு. இங்குப் போலியுரை என்பது, 'அவர் உரையன்று; அவர் உரையாகப் பிறர் கூறுவது' என்று பொருள்படும். 'அவர்க்கு அது கருத்தன்று' என்று கூறுவதன் பொருளும் அதுவே. இதனை, 'அறியாது கடாயினாய்' எனத் தம் மாணவரையும் கடா எழுப்புவாரையும் நோக்கிச் சேனாவரையர் கூறுவதனால் உணரலாம். இந்தக் கண்டன நயம் அல்லது நாகரிகம் சேனாவரையரின் புலமையோடு ஒக்க நின்று அவர்தம் புகழை விளங்கச் செய்கிறது.

யாப்பருங்கல விருத்தி, அடியார்க்கு நல்லார் உரை, இளம்பூரணர் உரை என்னும் பழம்பெரும் உரைகளைப் போலவே, சேனாவரையரின் சொல்லதிகார உரையும் இடைக்காலத் தமிழகத்தின் அரசியல், சமுதாய இலக்கியப் பண்பாட்டுக் கூறுகளையும், தமிழின் பல்வேறு கிளைமொழி வழக்குகளையும் அறிந்து கொள்ளப் பேருதவியாகத் திகழ்கிறது.

பதிப்பு

1868 (செப்டம்பர்) சி.வை. தாமோதரம்பிள்ளை (ப. ஆ.), சென்னை: கலாரத்நாகரம் அச்சுக்கூடம்.

1868 (நவம்பர்) கோமளபுரம் இராசகோபாலப்பிள்ளை (ப.ஆ.), சென்னை: வர்த்தமான தரங்கிணி அச்சுக்கூடம்

1923 சைவசித்தாந்தக் கழகம்., பல பதிப்புகள் (தேவநேயப் பாவாணர்: 1946) (ஆ. பூவராகம் பிள்ளை, 1954).

1938; 1955 சி.கணேசையர் (ப.ஆ.) சுன்னாகம்: திருமகள் அழுத்தகம்.

1966 திருப்பனந்தாள் கு. சுந்தரமூர்த்தி (ப.ஆ.)

# 9. நிகண்டுகள்

### *10ஆம் நூற்றாண்டு*

### *பிங்கல நிகண்டு*

ஒன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய திவாகர நிகண்டையடுத்துப் பத்தாம் நூற்றாண்டில் பிங்கல முனி என்பவரால் இயற்றப்பெற்ற நூல் பிங்கல உரிச்சொல் என்றும் பிங்கலந்தை என்றும் வழங்கப் பெற்றது. 'பிங்கலம் முதலா நல்லோர் உரிச்சொல்' என நன்னூல் (460) இதனைக் குறிக்கிறது. நிகண்டு என்னும் பெயர் வழக்கு பதினாறாம் நூற்றாண்டில் அகராதி நிகண்டோடு தொடங்குகிறது. (நிகண்டு என்னும் நூல்வகையின் அமைப்பு முறை, யாப்பு, பொருண்மை, பயன்பாடு போன்ற விவரங்களைத் திவாகர நிகண்டின்கீழ்க் கண்டுகொள்க). பிங்கல முனிவர் சோழநாட்டினர் என்றும் சைவசமயத்தைச் சார்ந்தவர் என்றும் அறிகிறோம். பிங்கல நிகண்டு பெரும்பாலும் திவாகர நிகண்டை ஒட்டியே அமைந்துள்ளது. சிற்சில மாறுதல்களும் விரிவும் பிங்கலத்துள் காணப்படுகின்றன. சிற்சில் வெண்பாக்கள் காணப்படினும், பிங்கலத்தின் பெரும்பகுதி நூற்பா யாப்பால் செய்யப்பட்டுள்ளது.

பிங்கல நிகண்டு 10 பகுதிகளையும்யும் 4181 சூத்திரங்களையும் கொண்டுள்ளது. பிங்கலத்திற்குப் பின்னர் எழுந்த உரிச்சொல், கயாதரம், சூடாமணி போன்ற நிகண்டுகள் நூல் அமைப்பிலும், பொருள் வரிசையிலும் திவாகர நிகண்டையே முற்றிலும் பின்பற்றியுள்ளன. இடைப்பட்ட இப்பிங்கல நிகண்டு மட்டும் அமைப்பில் 12க்கு மாறாகப் 10 பகுதிகளையும், வான்வகை, ஐயர் வகை போன்ற புதுப்பெருள் வரிசைகளையும் கொண்டுள்ளது. கி.பி. 17ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதெனக் கருதப்படும் (மு.அ. 10/196) கைலாச நிகண்டு மட்டும் பல நிலைகளில் பிங்கல நிகண்டைப் பின்பற்றிச் செய்யப்பட்டுள்ளது. எனவே தமிழ் நிகண்டு மரபிற்குத் திவாகரமே முன்மாதிரியாக அமைந்துவிட்டது எனலாம்.

புலனெறி வழக்கின் வரலாற்றை உணர்ந்துகொள்ள ஓரளவு பயன்படுகின்ற நிகண்டுகள், பண்பாட்டு வரலாற்றை உணர்ந்துகொள்ளப் பேரளவு பயன்படுகின்றன. இவ்வகையில் சொற்களின் வரலாறும் வெளிப்படும் வாய்ப்பு ஏற்படுகிறது. கணபதி, நாராயண சமயத்தோர், ஐயர், இலட்டுகம், தோசை, பூரிகை, கொசு போன்ற சொற்கள் இந்நிலையில் சிந்தித்து மகிழத் தக்கன.

சிலப்பதிகார அரும்பத உரைகாரரும், யாப்பருங்கல விருத்தி உரைகாரரும் பிங்கலத்தை மேற்கோளாகக் காட்டுதலாலும், திவாகரத்திற்குப் பின்னர்த் தோன்றியதாலும், இதன் காலம் பத்தாம் நூற்றாண்டெனத் துணியப்படுகிறது.

## பதிப்பு

*1890 தி. சிவன்பிள்ளை (பதிப்பு விவரம்?)*

*1917 சென்னை : ரிப்பன் அச்சியந்திரசாலை (ப.ஆ.?)*

## 10. தழுவல், மொழியாக்கம், மொழிபெயர்ப்பு

(அ) பிறமொழிகளிலிருந்து தமிழுக்குத் தழுவலாகவும் மொழியாக்கமாகவும் மொழிபெயர்ப்பாகவும் வந்தவை:

இலக்கியம்: சூளாமணி, குண்டலகேசி, நீலகேசி, வளையாபதி, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், உத்தரகாண்டம், நளவெண்பா, யசோதர காவியம், நம்பி திருவிளையாடல், அருள் நிலை விசாகன் பாரதம்.

இலக்கணம்: வீரசோழியம், தண்டியலங்காரம்.

பிறதுறை நூல்கள்: கனாநூல், சித்தராரூடம், உள்ளமுடையான் சோதிடநூல், பரமார்த்த தரிசனம்,

(ஆ) தமிழிலிருந்து பிறமொழிக்குப் பெரும்பாலும் மொழிபெயர்ப்பாகச் சென்றவை:

1. சீவகசிந்தாமணி–ஆங்கிலம்: **The Chintamani** (namagal Ilampagam), trans. Bower and Muttaiya Pillai, Madras: Christian Society, 1868.
2. சீவகசிந்தாமணி–பிரஞ்சு: **Un episode du poeme epique Sindamani.** (trans.) Julien Vinson, Paris, 1883.
3. நீலகேசி–ஆங்கிலம்: A. சக்ரவர்த்தி (மொ.பெ.), கும்பகோணம், 1936.
4. கம்பராமாயணம்–தெலுகு: R.R. ரெட்டி (மொ.பெ.), சித்தூர், 1950.
5. கம்பராமாயணம்–மலையாளம்: G. இராம கிருஷ்ணபிள்ளை (மொ.பெ.), திருவனந்தபுரம்: திருவிதாங்கூர் பல்கலைக்கழகம், 1954.
6. கம்பராமாயணம்–மலையாளம்: S.K. நாயர் (மொ.பெ.), பாலகாண்டம் 1963, அயோத்தியா காண்டம் 1969, ஆரண்ய காண்டம் 1971, சென்னைப் பல்கலைக்கழகம்.

7. கம்பராமாயணம்-சமஸ்கிருதம்: பாலகாண்டம், S.N. ஸ்ரீராமதேசிகன் (மொ.பெ.) சென்னை : 1964.

8. கம்பராமாயணம்-இந்தி: N.V. இராஜகோபாலன், பாட்னா.

9. கம்பராமாயணம்-ஆங்கிலம்: **The Forest Book of the Ramayana of Kamban.** George Hart and Hank Heifetz (trans.), Berkeley and Los Angeles: California Press, 1988.

10. கம்பராமாயணம்-ஆங்கிலம்: **The Kambaramayanam.** H.V. Hande (trans.) Bharatiya Vidya Bhavan, Bombay, 1996.

11. கம்பராமாயணம்-ஆங்கிலம்: (trans.) PS. Sundaram, Tamil University, Bala - 1989, Ayod - 1990, Aran, - 1990, Kish - 1992, Sundhar - 1992, Yudha - I & II 1994.

12. பெரியபுராணம்-தெலுகு: ஸ்ரீசிவபக்த சரிதமு. P. சூரிய நாராயண சர்மா (மொ.பெ.), சென்னை.

13. பெரியபுராணம்-கன்னடம்: **Tirumalai to Mummaiyal ulakanta carkam.** A. Shankar Kedilaya (trans.), Madras : University of Madras, 1974.

14. பெரியபுராணம்-ஆங்கிலம்: **The Grand Epic of Saivism.** Suddhananta Bharati (trans.), Madras : Kazhakam, 1970.

15. பெரியபுராணயம்-ஆங்கிலம்-(trans.) T.N. Ramachandran, Thanjavur; Part I 1990, Part II 1995.

16. பெரியபுராணம்-சமஸ்கிருதம்: சிவபக்த விலாசம் சீனிவாச கவி, கி.பி. 1532 (வெளியீடு-?)

17. வீரசோழியம்-சிங்களம் - தழுவல்-சித்தத் சங்கரவா (13ஆம் நூற்றாண்டு).

18. வீரசோழியம்-மலையாளம் - எம். இளையபெருமாள் (மொ.பெ) திருவனந்தபுரம்: சாமி புக் சென்டர், 1977.

19. ஒட்டக்கூத்தரின் கலிங்கப்பரணி-தெலுகு: வென்னில வேசவி, விஜயவாடா.

20. நீதிநூல்கள்-ஆங்கிலம்: **Nitinulkal** (Ten minor poems), S. Winfred (trans.), Madras Christian Vernacular Education Society, 1872.

21. நீதிநூல்கள்-ஆங்கிலம்: **Ten Tamil Ethics** (trans.), T.B. Krishnaswamy, Madras : Kazhakam, 1937.

22. அவ்வையார் நீதிநூல்கள்-சமஸ்கிருதம்: S.N. ஸ்ரீராம தேசிகன் (மொ.பெ.) சென்னை, 1971.

23. நன்னூல்-ஆங்கிலம்: ஹென்றி பவர், (மொ.பெ,) 1837, 1876, 1972.

24. நன்னூல்-ஆங்கிலம்: சாமுவேல் பிள்ளை, வால்ற்றர் ஜாயீஸ் (மொ.பெ.)1848, 1851.

25. நன்னூல்-ஆங்கிலம்: ஜான் லாசரஸ் (மொ.பெ.), 1878, 1977.

26. நன்னூல்-மலையாளம்: எம். இளையபெருமாள் - சொர்ணம் இளையபெருமாள் (மொ.பெ.), நாகர்கோயில் : செயகுமாரி ஸ்டோர்ஸ், 1967.

27. நளவெண்பா-ஆங்கிலம்: **Nalavenba, The Story of King Nala and Princess Damayanti.** Maurice Langton (trans.). Madras : CLS, 1950. Rpt. Madras : IITS, 1997.

28. இராமானுச நூற்றந்தாதி-தெலுகு: ஆசிரியர்? (மொழிபெயர்ப்பும் உரையும்), சென்னை: ஸ்ரீநிகேதனம் பிரஸ், 1904.

# 11. பிறதுறை நூல்கள்

## *10ஆம் நூற்றாண்டு*

### *சோதிட நூல்கள்*

*11-ஆம் நூற்றாண்டில் யாப்பருங்கலத்துக்கு விருத்தியுரை எழுதிய ஆசிரியர், சோதிடம், சகுனசாத்திரம், மந்திரவாதம், மருத்துவநூல், சாமுத்திரி சாத்திரம், நிலநூல், ஆயுதநூல், ஆரூடநூல், கணிதநூல், அருங்கல நூல் முதலிய பலவகை நூல்களைக் குறிப்பிடுகிறார். இதிலிருந்து இத்துறைகளில் இவருக்குமுன் நூல்கள் எழுந்திருக்கின்றன என்பதறியலாம். இவ்வாறான பலதுறை நூல்கள் பெரும் அளவில் கிடைக்காவிடினும் சோதிட நூல்கள் இரண்டு கிடைத்துள்ளன. அவை வருமாறு:*

### *சினேந்திரமாலை*

*இந்நூலின் ஆசிரியர் உபேந்திராசாரியர் என்னும் சைன மாமுனிவர் என்று அறிகிறோம். சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர் தரும் ஒரு மேற்கோள் பாடல் இந்நூலுக்குரியது. ஆசிரியர் பற்றிய வேறெந்தக் குறிப்பும் கிடைக்கவில்லை. எனவே 11-ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது எனலாம்.*

*இந்நூல் 464 வெண்பாக்களால் இயன்றது. பாயிரப்பகுதி 9 பாடலும், மற்றவை 23 காண்டங்களுமாக அமைந்துள்ளன. பாயிரத்தின் பின், காண்டப் பொழிப்பு 80 செய்யுட்கள் அடங்கிய பகுதி. அடுத்து 6 பாடல்களில் ஆரூடச் சக்கரம். அதன் பின்னரே நூல் தொடங்குகிறது.*

*இந்நூலின் பாடல்கள் மிகவும் நல்ல நடையில் இயன்றுள்ளன. செய்யுளிலக்கணம் பிழையாமல், ஆங்காங்கு அழகிய சொற்றொடர்களை அமைத்து, நூல் செய்யப் பெற்றுள்ளது. பாடல்தொறும், நாள், கோள், கிழமை, ராசி முதலியன வரவேண்டிய நிர்ப்பந்தம் இருந்தும் தளை தட்டாமல் நேரிசை வெண்பா அமைய வேண்டிய கட்டுப்பாடு இருந்தும்*

அழகாகப் பாடியிருப்பது சிறப்பான ஒன்றாகும். இந்நூல் வாழ்க்கையின் பல பகுதிகளையும் தழுவி எழுதப்பட்டுள்ளது.

சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவையில் அரும்பத உரையாசிரியர் வட்டப்பாலைக்குக் காட்டும் பின்வரும் பாடல் ஆருடச் சக்கரம் பகுதியில் வரும் முதற்பாடலாகும்.

**ஆழியும் ஆரும்போற் கீறிச் சிறுதிசைக்கண்**
**ஊழின் ஓரோவொன் றுடன்கீறிச் - சூடி**
**வெருதாதிக் கீழ்த்திசைக்கொண் டீராறும் எண்ணிக்**
**கருதி நிலக்கயிற்றைக் காண்**

## பதிப்பு

? "உபேந்திராசாரியார் என்னும் சைனமா முனிவர் செய்தருளிய சினேந்திரமாலை மூலமும் உரையும்" (ப.ஆ) தஞ்சை சி. சாமிநாத சோதிடர், சென்னை: இரத்தின நாயகர் வெளியீடு.

## திரையக்காணம்

யாப்பருங்கல விருத்தி உரைகாரர் ஒழிபியலில் நிரல்நிரைக்கு மேற்கோள் பாடல்களாக இரு சோதிடநூற் பாடல்களை எடுத்துக்காட்டுகிறார். மேற்கோள்பாடல் இறுதியில் 'இவ்விரண்டும் திரையக் காணம் ஓரிராசி மும்மூன்றாக ஒட்டிக் கொள்க' என்று கூறுவதன் மூலம், இந்நூலின் பெயர் அறியக் கிடக்கின்றது.

திரையக் காணம் என்பதன் திருந்திய வடிவம் திரேக்காணம் என்பதாகும். இது ஒரு இராசியில் மூன்றின் ஒரு பாகம் ஆகும். மும்மூன்றாகச் சேர்த்து ஒரு இராசியைப் பெறமுடியும். ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

இராசி, கிழமை, கோள் என்ற மூன்றையும் சோதிட நூலுக்குப் பொருந்த அமைத்துப் பாடப்பட்ட நூல். வீரசோழிய உரைகாரரான பெருந்தேவனார் எடுத்துக்காட்டும், இரண்டு சோதிடக் கலை நூற்பாடல்களும் இந்த திரையக் காணத்திற்குரியதாகலாம் என்று கருதப்படுகிறது.

## பிறதுறை நூல்கள்

சோழப் பேரரசர்களின் எழுச்சி மிகு காலம் 11ஆம் நூற்றாண்டு. அக்காலத்தில் பல்வேறு துறைகளிலும் நூல்

எழுந்திருக்கக் கூடும். எனினும் அதிக அளவில் நூல்கள் கிடைத்தில. அடியார்க்கு நல்லாரின் (12ஆம் நூற்றாண்டு) சிலப்பதிகார உரை, பல்வேறு கலைத்துறை நூல்களைக் குறிப்பிடுகின்றது. அவற்றில் பெரும்பான்மையான நூல்கள் கிடைத்தில. அவர் குறிப்பிடும் பிறதுறை நூல்களுள் கனாநூல், ஓவிய நூல் ஆகியனவும் உள்ளன. அவ்வகையில் கிடைத்த கனாநூல் ஒன்றுளது. ஓவிய நூலின் பகுதி மட்டும் அவர் உரை மூலமே அறியக் கிடக்கின்றது. அவற்றை இங்குக் காணலாம்.

### கனாநூல்

ஆசிரியர் பெயர் பொன்னவன். பிருகஸ்பதி முதலில் வடமொழியில் செய்த நூலை, அம்பரில் வாழ்ந்த கணபுரத்தேவன் என்பார் சொல்ல இந்நூலாசிரியர் தமிழில் எழுதியிருக்கலாம் என்று ஊகிக்கலாம்.

**கணிதரும் எந்தை கணபுரத்தேவன் தன்கட்டுரை**

என்றும்,

கட்டுரையார் மகப் பொன்னவன் சொன்ன கனவு நன்னூல்

என்றும் வரும் அடிகள் இதற்கு அடிப்படையாய் அமைகின்றன.

இது கட்டளைக் கலித்துறையில் மண்டலித்து வரும் அந்தாதியான 30 பாடல்களைக் கொண்ட சிறுநூலாகும். இந்நூலின் நான்கு பாடல்கள் அடியாக்குநல்லாரின் சிலப்பதிகார உரையில் இடம்பெற்றுள்ளன. பொதுவாக இலக்கிய நடையில் அன்றி, எளிய நடையில் உள்ளது இந்நூல். இலக்கியமில்லாத, பிறதுறை நூல் செய்தார் இவ்வாறு சாமானிய நடையில் செய்திருக்கலாம் என்பது அறிஞர் மு. அருணாசலம் அவர்களின் கருத்து.

### பதிப்பு

1920 பொன்னவன் கனாநூல், ரா. ராகவய்யங்கார் (ப. ஆ), மதுரைத் தமிழ்ச்சங்க வெளியீடு, இரண்டாம் பதிப்பு.

### ஓவிய நூல்

அடியார்க்கு நல்லாரின் சிலப்பதிகார உரையில் இப்பெயர் காணப்படுகிறது. வேனில்காதை யுரையில் ஓவிய நூலினையும்,

அதில் குறிக்கப்பெற்றுள்ள வேறுபாடுகளையும் குறிப்பிடும் முகத்தான் 'ஓவியநூலை'க் குறிப்பிடுகிறார். நூலும் கிடைக்கவில்லை. எழுதியவர் யாரென்பதும் தெரியவில்லை.

## சித்தராரூடம்

சிந்தாமணிக்கு எழுந்த நச்சினார்க்கினியர் உரையின் மூலம் சித்தராரூடம் என்னும் பெயரில் பாம்புகளைப் பற்றிய நூலொன்று இருந்ததென அறியப்படுகிறது. பதுமையார் இலம்பகம் 122ஆம் பாடலின் உரையில் பதுமையைத் தீண்டிய நாகத்தின் நஞ்சு எத்தன்மைத்து என்று அறிய, சித்தராரூடம் என்னும் நூல்கொண்டு வந்து கூறுதல் வேண்டுமெனக் குறிக்கிறார் நச்சினார்க்கினியர். இவருக்கு முன்னரே இந்நூல் இருந்தது குறித்து இது 13ஆம் நூற்றாண்டினது என்று கருதப்படுகிறது. 'தாமரைப் பொகுட்டில் உறைவோனாகிய பிரமனின் மகன் மாதவத்தோன்' என்று தன்னை ஆசிரியர் கூறிக் கொள்கிறார். இதனால் கௌசிக முனிவர் இதனை இயற்றியதாக ஏட்டில் கூறப்பட்டுள்ளது.

சிந்துப் பாட்டினால் ஆகிய 312 பாடல்கள் கொண்ட நூல் இது. தொடக்கத்தில் உள்ள 5 காப்புச் செய்யுள்கள் விருத்தத்திலும், பிற நொண்டிச் சிந்து வகையிலும் இயற்றப் பெற்றுள்ளன.

பாம்பின் பிறப்பு, அதன் வளர்ச்சி, பாம்பு வகைகள் ஆகியவற்றைக் கூறிப் பாம்பின் விஷத்தைப் பற்றியும், அதனை முறிக்கும் மருந்துகளைப் பற்றியும் இந்த நூல் விரிவாகக் கூறுகிறது. நச்சினார்க்கினியர் குறிப்பிட்டபடி பாம்பு மலர் மணம் நாறும் செய்தி இந்நூலின் பின்வரும் 23ஆம் பாடலில் இடம்பெறுகிறது.

அந்தணர் நாவி மணம் – இறையவர்
அலர்ந்த செந்தாழையி னலர்மணமாம்
வந்திடும் வசியர் மணம் – பாதிரிப்பூ
வகுத்த சூத்திரர் மணம் இலுப்பையின்பூ

சமுதாய விஷமாகிய சாதிப் பிரிவுகளைப் பாம்பின் பல்வேறு விஷவகைகளோடு பொருத்திக் காட்டியிருப்பது பொருத்தம் தானே?

### பதிப்பு

1916 குருசாமிக் கோனார், மதுரை.

## உள்ளமுடையான் சோதிடநூல்

இது சகஆண்டு 1200 (கி.பி. 1278)இல், 'வெண்பைக் குடிநாட்டு, பிரதேசப் பாண்டவன் மங்கலமான பஞ்சமாதேவிச் சதுர்வேதி மங்கலம் கடவூர் ஆரியன் திருக்கோட்டிநம்பி' என்பவரால் செய்யப்பட்ட சோதிட நூல் ஆகும். **உள்ளமுடையான் சோதிடநூல்** என்னும் பெயரினது. வேறு குறிப்புகள் ஏதும் தெரியவில்லை. இந்நூலின் இறுதியில், 'முன்னையோர் வடமொழியினர் செய்த சாத்திரத்தையெல்லாம் செந்தமிழினாலே செய்து முடித்தான்' என்று காணப்படுகிறது. "சித்தராரூடம் தன்னில் செப்பிய பொருள் ஆராய்ந்து... வித்தகர் அருளினாலே தமிழினில் விளம்பலுற்றேன்" என்னும் ஆசிரியர் கூற்றால் இது ஒரு மொழிபெயர்ப்பு நூல் என்பது உறுதியாகிறது.

# 12. மறைந்துபோன தமிழ் நூல்கள்
## (கி.பி. 901-1300)

கி.பி. பத்தாம் நூற்றாண்டு முதல் பதின்மூன்றாம் நூற்றாண்டு முடிய உள்ள காலப் பகுதியில் இயற்றப்பெற்றனவாக அல்லது வழக்கில் இருந்து மறைந்தனவாகப் பிற நூல்களிலும் இலக்கண, இலக்கிய உரைகளிலும் குறிப்பிடப்பெற்ற தமிழ் நூல்களின் பட்டியல் கீழே தரப்படுகிறது. இப் பட்டியலைத் தயாரிக்கப் பல்வேறு வரலாற்று நூல்கள் துணைநின்றன; குறிப்பாக மு. அருணாசலம் அவர்களின் 10, 11, 12, 13ஆம் நூற்றாண்டுகளின் இலக்கிய வரலாறுகளும் மயிலை சீனி வேங்கடசாமி அவர்களின் ‘மறைந்துபோன தமிழ் நூல்கள்’ என்னும் நூலும் பெரிதும் உதவின.

பத்தாம் நூற்றாண்டு

இலக்கியம்: நாரத சரிதை, அமிர்த பதி, பிங்கல சரிதை, குண்டலகேசி, வாமன சரிதை, தேசிக மாலை, திருமாற்பேறு.

பதினொன்றாம் நூற்றாண்டு

**இலக்கியம்:**

குண நாற்பது
குமர சேனாசிரியர் கோவை
தமிழ்முத்தரையர் கோவை
ஆசிரிய மாலை
தென்றமிழ் தெய்வப் பரணி
தமிழ் பரணி
பழைய இராமாயணம்
சந்தம்
செயன்முறை
முப்பேட்டுச் செய்யுள்
வாசுதேவனார் சிந்தம்
இசைத் தமிழ்ச் செய்யுள் துறைக் கோவை
புராண சாகரம்
அவினந்த மாலை
அரச சட்டம்
வருத்த மானம்
அறிவுடை நம்பியார் சிந்தம்
இராமாயண வெண்பா
இரும்பல் காஞ்சி
துரியோதனன் கலம்பகம்

பரிபாடை
பரிப்பெருமாள் காமநூல்
பிங்கல கேசி
அஞ்சன கேசி
கால கேசி
தத்துவ தரிசனம்
புட்கரனார் மந்திர நூல்
மாடலம்
மார்க்கண்டேயனார் காஞ்சி
குறுவேட்டுவச் செய்யுள்
லோக விலாசனி
பெருவள நல்லூர்ப் பாசண்டம்
கூடல் சங்கமத்துப் பரணி
கொப்பத்துப் பரணி
செம்பூட் சேயார் கூற்றியல்
பெரும்பொருள் விளக்கம்
இன்மணியாரம்
பொன்னவன் கனாநூல்
வீரணுக்க விசயம்
குலோத்துங்க சோழ சரிதை.

**இலக்கணம்**

அணியியல்
பரிப்பெருமாள் மொழியியல்
கையனார் யாப்பியல்
அவிநயம்
நாலடி நாற்பது என்னும் அவிநயப் புறனடை
கடிய நன்னியார் கைக்கிளைச் சூத்திரம்
கவி மயக்கறை
நக்கீரர் நாலடி நானூறு
நற்றத்தம் (நத்தத்தம்)
காக்கை பாடினியம்
நல்லாறன் மொழிவரி
பரிமாணனார் யாப்பிலக்கணம்
பல்காயம்
சங்க யாப்பு
சிறு காக்கை பாடினியம்
செய்யுளியல்
தக்காணியம்
நக்கீரர் அடிநூல்
பனம்பாரம்
பாடலம்
பாட்டியல் மரபு
புணர்ப்பாவை
போக்கியம்
கிரணியம்
வது விச்சை
பெரிய பம்மம்
பெரிய முப்பழம்
பேராசிரியர் இலக்கண நூல்
யாப்பியல்
பொருளியல் (அகம்)
பன்னிரு படலம்
மாபுராணம்.

**இசை**

வாய்ப்பியம், குலோத்துங்கன் இசை நூல், பதினாறு படலம்.

நாடகம்

செயிற்றியம், இராசராச விசயம்.

## பன்னிரண்டாம் நூற்றாண்டு

இலக்கியம்: வச்சத் தொள்ளாயிரம், கண்டன் அலங்காரம், ஓவிய நூல்.

இசை: இந்திர காளியம், பஞ்ச மரபு, பஞ்ச பாரதீயம், பெருநாரை, பெருங்குருகு.

நாடகம்: குண நூல், சயந்தம், கூத்த நூல், மதிவாணனார் நாடகத் தமிழ் நூல், பரத சேனாபதீயம்.

## பதின்மூன்றாம் நூற்றாண்டு

இலக்கியம்: காங்கேயன் பிள்ளைத் தமிழ், சித்தர் ஆரூடம், காரணை விழுப்பரையன் மடல், சிந்துப் பிரபந்தம், செஞ்சிக் கலம்பகம், கோயில் அந்தாதி, நறையூர் அந்தாதி, தில்லை அந்தாதி, மழவை எழுபது.

இலக்கணம்: அவிநய உரை.

## சத்திமுற்றப் புலவர்

நாராய் நாராய் செங்கால் நாராய்
பழம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்
நீயுநின் மனைவியும் தென்றிசைக் குமரியாடி
வடதிசைக் கேகுவீ ராயின்
எம்மூர்ச் சத்தி முத்தி வாவியுட் டங்கி
நனைசுவர்க் கூரைக் கனைகுரற் பல்லி
பாடுபார்த் திருக்கும் எம்மனைவியைக் கண்டு
எங்கோன் மாறன் வழுதி கூடலில்
ஆடை யின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலது தழிஇப்
பேழையுள் இருக்கும் பாம்பென வுயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டனம் எனுமே.

(தனிப்பாடல் திரட்டு I ப.203)

# பதிப்புகள்


| | | |
|---|---|---|
| தொல்காப்பியப் பதிப்புகள் | : | ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.) சென்னை:உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1992. |
| புறநானூறு (மூலமும் பழைய உரையும்) | : | சென்னை: உ.வே. சாமிநாதையர் (1894) 1963. |
| ஐங்குறுநூறு (மூலமும் பழைய உரையும்) | : | சென்னை: உ.வே. சாமிநாதையர் (1903) 1944 |
| பதிற்றுப்பத்து ( மூலமும் உரையும்) | : | சென்னை: உ.வே. சாமிநாதையர் (1904) 1949 |
| பத்துப்பாட்டு-திருமுருகாற்றுப் படை உரை | : | சென்னை: உ.வே. சாமிநாதையர் 1956 |
| பரிபாடல் மூலமும் பரிமேலழகர் உரையும் | : | சென்னை: உ.வே. சாமிநாதையர் (1918) 1935 |
| திருமுருகாற்றுப்படை உரைக் கொத்து | : | K.M. வேங்கடராமயா,வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர், (தொகுப்பு) திருப்பனந்தாள்: அன்னபூரணா பதிப்பகம் (1950), 1981. |
| திருத்தொண்டர் புராணம் | : | அ.ச. ஞானசம்பந்தன் (ப.ஆ.) சென்னை:சேக்கிழார் ஆராய்ச்சி மையம், 1993. |
| திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் பகுதி - 1 | : | பு.ரா. புருஷோத்தம நாயடு சென்னைப் பல்கலைக்கழகம், 1951. |
| நன்னூல் மூலமும் விருத்திரையும் | : | அ. தாமோதரன் (ப.ஆ.), சென்னை:உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1999. |
| சித்திர மீமாம்சா: உபமான நிருபணம் | : | அப்பய்ய தீட்சிதர், பம்பாய் : காவிய மாலா (KR) 38. |

## இலக்கிய வரலாற்று நூல்கள்


அருணாசலம், மு. : தமிழிலக்கிய வரலாறு (தமிழ்ப் புலவர் வரலாறு) பத்தாம் நூற்றாண்டு 1972 பதினொராம் நூற்றாண்டு 1971 பன்னிரெண்டாம் நூற்றாண்டு, (இரணடு பாகங்கள்) 1973 பதின் மூன்றாம் நூற்றாண்டு, 1970. திருச்சிற்றம்பலம்: காந்தி வித்தியாலயம்.

இராமசாமிப் புலவர், சு.அ. : தமிழ்ப் புலவர் வரிசை-பகுதி 5 (13 முதல் 15 புத்தகங்கள்), சென்னை: கழகம், 1956.

" " : தமிழ்ப்புலவர் வரிசை–பகுதி 6 (16 முதல் 18 புத்தகங்கள்) சென்னை: கழகம், 1958.

இளங்குமரன், இரா : கொங்கு நாட்டுப் புலவர்கள் சென்னை: கழகம், 1979.

கைலாசபதி, க. : ஈழத்து இலக்கிய முன்னோடிகள்: மக்கள் வெளியீடு, சென்னை: 1986

சண்முகம் பிள்ளை, மு. : சிற்றிலக்கிய வளர்ச்சி, சிதம்பரம்: மணிவாசகர் நூலகம், 1981.

சதாசிவ பண்டாரத்தார், தி.வை: பிற்காலச் சோழர் வரலாறு, அண்ணாமலை நகர்: அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1974.

" " : தமிழ் இலக்கிய வரலாறு, (13, 14, 15ஆம் நூற்றாண்டுகள்) அண்ணாமலை நகர்: அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1979.

சிவத்தம்பி, கார்த்திகேசு : தமிழில் இலக்கிய வரலறு, சென்னை: என்சிபிஎச், 1988.

சீனி. வேங்கடசாமி, மயிலை : பௌத்தமும் தமிழும், சென்னை: கழகம், (1940) 1972.

" " : சமணமும் தமிழும், சென்னை: கழகம், (1954) 1980.

" " : மறைந்துபோன தமிழ் நூல்கள் சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், (1959) 1983.

சுப்பிரமணிய பிள்ளை, இ.மு. : நெல்லைத் தமிழ்ப் புலவர்கள் (முதற் புத்தகம்) சென்னை: கழகம், 1952.

" " : நெல்லைத் தமிழ்ப் புலவர்கள் (இரண்டாம் புத்தகம்), சென்னை: கழகம், 1959.

சூரிய நாராயணன், பா. : தமிழ் நாட்டு வரலாற்றில் இலக்கிய ஆதாரங்கள், சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1998.

செயராமன், ந.வீ. : உலா இலக்கியங்கள், சிதம்பரம்: மணிவாசகர் நூலகம், 1966.

" " : சிற்றிலக்கியச் செல்வங்கள், சிதம்பரம்: மணிவாசகர் நூலகம், 1967.

சேதுராமன், என். : பாண்டியர் வரலாறு, கும்பகோணம்: ராமன் அண்டு ராமன் பிரைவேட் லிமிட், 1989.

சோம. இளவரசு : பரணி இலக்கியம், சிதம்பரம்: மணிவாசகர் நூலகம், 1978.

திருஞான சம்பந்த முதலியார் : சென்னைத் தமிழ்ப் புலவர்கள் (இரண்டாம் புத்தகம்), சென்னை; கழகம், 1951.

பழநியப்பன், வெ. : தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம் (தொகுதி மூன்று). அண்ணாமலை நகர்: அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1989.

பிள்ளை, கே.கே. : தமிழக வரலாறு: மக்களும் பண்பாடும். சென்னை: தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1981.

மாணிக்கம், வ.சுப. : தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம் பகுதி-1 அண்ணாமலை நகர்: அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1974.

முத்துச் சண்முகன்-நிர்மலா : சிற்றிலக்கியங்களின் மோகன் தோற்றமும் வகையும். மதுரை: முத்துப் பதிப்பகம், 1979.

முத்துராசன், கு. : பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள்–ஓர் ஆய்வு. தர்மபுரி: வசந்த செல்வி பதிப்பகம், 1992.

ராதாகிருஷ்ண பிள்ளை, எம். : தமிழும் வைணவமும் சென்னை: 1956.

வரதராசன், மு. : தமிழிலக்கிய வரலாறு, தில்லி: சாகித்திய அகாதெமி, (1972) 2000.

வளவன், சா. : பிள்ளைத் தமிழின் தோற்றமும் வளர்ச்சியும், சென்னை: 1997.

வையாபுரிப் பிள்ளை, எஸ். : காவிய காலம், சென்னை: வையாபுரிப் பிள்ளை நினைவு மன்றம், 1991.

Godakumbura, C.E. : SINHALESE LITERATURE Colombo: The Colombo Apothecaries Co. Ltd., 1955.

Keith, A.B. : **A History of Sanskrit Literature** (1928) rpt. Indian edition, New Delhi, 1993.

Sastri, K.A.N. : **The Colas**, Madras: University of Madras, rpt. 1984.

Sethuraman, N. : **Early Cholas**, Kumbakonam: Raman and Raman, Pvt. Ltd., 1980.

## ஆய்வு நூல்கள்

அறவேந்தன், இரா. : தமிழ் சிங்கள இலக்கண உறவு, வி. சாத்தனூர்: திருவரசு வெளியீடு, 1999.

கோபி நாத ராவ், து.அ. : செந்தமிழ்-தொகுதி 5, பக். 95-102.

சுந்தர மூர்த்தி, இ. (ப.ஆ.) : திருக்குறள் பரிமேலழகர் உரை நுண்பொருள் மாலை, கோவை: தேன்மொழி வெளியீடு, 1980.

" " : பரிமேலழகர் உரைத்திறன், சென்னை: ஐந்திணைப் பதிப்பகம், 1985.

ஞான சுந்தரம், தெ. : வைணவ உரை வளம், சென்னை: தாயம்மை பதிப்பகம், 1989.

பால சுந்தரம், ச. : தொல்காப்பியம்– ஆராய்சிக் காண்டிகையுரை, அகத்திணையியல், தஞ்சாவூர்: தாமரை வெளியீட்டகம், 1989.

புருஷோத்தம நாயடு, பு.ரா. : திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம், பகுதி-1, சென்னை: சென்னைப் பல்கலைக் கழகம், (1951) 1980

மணவாளன், அ.அ. : இராம காதையும் இராமாயணங்களும், சென்னை: தென்னக ஆய்வு மையம், 2005.

மாணிக்கம், வ.சுப. : தமிழ்க் காதல், சென்னை: பாரி நிலையம், 1962.

வசந்தாள், த. : தமிழிலக்கியத்தில் அகப்பொருள் மரபுகள்–ஒரு வரலாற்றுப் பார்வை, சென்னை:சென்னைப் பல்கலைக் கழகம், 1990.

ஐகந்நாத ராஜா, மு.கு. : வடமொழி வளத்திற்குத் தமிழரின் பங்கு, சென்னை: நியூ சென்சுரி புக் அவுஸ், 1994.

Manavalan, A.A. : **Epic Heroism in Milton and Kamban**, Coimbatore: Kamban Trust, 1984.

Sivakami, S. (ed) : **Bibliography on Translations,** Madras: IITS, 1983.

Sundaram, C.S. : **Contribution of Tamil Nadu to Sanskrit**, Chennai: Institute of Asian Studies, 1999.



# பின்னிணைப்பு ஒன்று

# கி.பி. 13ஆம் நூற்றாண்டு வரையிலான கல்வெட்டுச் சான்றுகள்

*சி. பத்மனாதன்*

## இலங்கைத் தமிழ்ச் சாசனங்கள்

இலங்கையிலே பிராகிருதம், சிங்களம், தமிழ் ஆகிய மொழிகளிலே எழுதப்பட்ட பெருந்தொகையான சாசனங்கள் உள்ளன. அவற்றுள் கணிசமான அளவிலுள்ளவை காலாகலம் படிமமெடுக்கப்பட்டு, வாசிக்கப்பட்டு விளக்க குறிப்புகளோடு வெளியிடப்பட்டுள்ளன. அம்மூன்று மொழிகளிலுமுள்ள சாசனங்களில் தமிழைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. பிராகிருத மொழிச் சாசனங்கள் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிற்கும் கி.பி. நான்காம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்டவை. அவை பிராமி எழுத்துக்களில் எழுதப்பட்டதால் பிராமிச் சாசனங்கள் என்று சொல்லப்படும். நான்காம் நூற்றாண்டு முதலாக எழுதப்பட்ட சாசனங்கள் பெரும்பான்மையும் சிங்கள மொழியில் அமைந்துள்ளன. சிங்கள மொழியின் வளர்ச்சிக்குப் பிராகிருதம் மூலமானது. இதுவரை காலமும் இலங்கையிலுள்ள தமிழ்ச் சாசனங்கள் எட்டாம் நூற்றாண்டுக்கும் பிற்பட்டவை என்று கருதப்பட்டது. தமிழர்கள் வாழும் கரையோரப் பகுதிகள் போர்த்துக்கே முதலிய ஐரோப்பியரின் ஆட்சியின் கீழ் அமைந்திருந்த காலத்தில் சாசனங்கள் இடம்பெற்றிருக்க கூடிய கோயில்கள் போன்ற நிறுவனங்கள் முற்றாக அழிக்கப்பட்டதனால் அப்பகுதிகளிலிருந்த தமிழ்ச் சாசனங்கள் எல்லாம் அழிந்தொழிந்துவிட்டன. ஆலயங்களின் அதிஷ்டானப் படைகளிலுள்ள கற்களையும் கற்றூண்களையும் இடித்தும் துண்டமாக்கியும் ஐரோப்பியர்கள் கோட்டைகளையும் மமளிகைகளையுங் கட்டுவதற்குப் பயன்படுத்தியுள்ளனர். இதுவரை கிடைத்துள்ள சாசனங்கள் புராதன நகரங்களான அனுராதபுரம், பொலனறுவை, பதிவிய, பானவாச நுவர முதலியவற்றின் கட்டட அழிபாடுகளிடையிற் கிடைத்துள்ளன.

பிராமிச் சாசனங்களிலே தமிழ்ப் பிராமி எழுத்துக்கள் காணப்படுகின்றமை குறிப்பிடத்தக்க ஓர் அம்சமாகும். தமிழ் எழுத்துக்களான றகரம், நகரம், ள கரம், டகரம் என்பவற்றை எழுதுவதற்குச் சமகாலத் தமிழகத்தில் பயன்படுத்தப்பட்ட

குறியீடுக்ள இலங்கைப் பிராமி சாசனங்களிற் காணப்படுகின்றன. அய், மருமகன், நகரர், வயல் போன்ற தமிழ்ச் சொற்கள் பிராமிச் சாசனங்களிலே காணப்படுவதால் தமிழ்மொழி இலங்கையில் பேச்சு வழக்கில் இருந்தது என்பதை உணர்ந்து கொள்ள முடிகின்றது. இக்கருத்து தமிழரைப்பற்றி பிராமிச் சாசனங்களில் வருங் குறிப்புகளிலே தமிழரை "மேட" என்று குறிப்பிட்டுள்ளனர். அனுராதபுரத்து அபயகிரி விகாரத்திற்கு அண்மையிலுள்ளதும் கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்ததுமான சாசனம் ஒன்றிலே தமிழ்ச் சங்கத்தார் பற்றியும் உபாசகர்களைப் பற்றியும் எழுதப்பட்டுள்ளது. உபாசகர் எழுவர் சங்கத்தாரின் பொருட்டு மண்டபம் ஒன்றினைக் கட்டி கல்லிலமைந்த ஆசனங்களையுஞ் செய்து கொடுத்தமை பற்றி அச்சாசனத்திலே கூறப்படுகின்றது. அவற்றில் அத்திருப்பணி செய்தவர்களது பெயர்கள் எழுதப்பட்டுள்ளன. எல்லோரின் பெயர்களும் பிராகிருத மொழிப்பெயர்களாக உள்ளன. இச்சாசனத்திலுள்ள ஒரு சொல்லைப் பிழையாக வாசித்தமையால் அதனைப்பற்றிச் சில தவறான விளக்கங்கள் தோன்றி நிலைபெற்று வருகின்றன அதிலே நாவிக என்ற சொல் இருப்பதாக ஒரு தவறான கருத்து ஏற்பட்டிருக்கின்றது. அதனால், இச்சாசனங் குறிப்பிடுந் தமிழர் மாலுமிகள் என்றும் வணிகரென்றுங் கருதப்படுகின்றனர். ஆனால், கல்வெட்டை நேரிலே சென்று ஆராய்ந்து பார்த்தபொழுது இத்தகைய விளக்கமானது ஆதாரமற்றதென்பது தெளிவாகின்றது. அனுராதபுரத்தில் கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலத்தில் பௌத்த சமயத்தைச் சேர்ந்த தமிழர் வாழ்ந்தமைக்கு இச்சாசனம் ஆதாரமாகின்றது. அவர்களிற் சிலர் சங்கத்தார் என்பதுங் குறிப்பிடத்தக்கது. வவுனியா மாவட்டத்தின் தென்பகுதியிலுள்ள பிராமிச் சாசனங்கள் இரண்டில் விஸாக என்ற பெயருடைய தமிழரைப்பற்றிய குறிப்புகள் உள்ளன. அம்பாறை மாவட்டத்திலுள்ள ஒரு சாசனம் தீகவாபியைச் சேர்ந்த திஸா என்னுந் தமிழ்ப் பெண்ணைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. அவள் சகோதரர் இருவரின் பொதுவான மனைவியாக இருந்தாள் என்ற குறிப்பு அதிற் கணப்படுகின்றது. கிழக்கிலங்கைத் தமிழ்ச் சமுதாயத்திற்குச் சிறப்பாகவுள்ள மருமக்கள் தாயமுறை மிகவும் பூர்வீகமான சமூகவழமைகளை ஆதாரமாகக் கொண்டது என்று கொள்ளுவதற்கு இச்சாசனம் ஏதுவாக அமைகின்றது.

மிக அண்மைக்காலத்திலே தமிழரின் பெயர்கள் பொறித்த நாணயங்கள் தென்னிலங்கையிலே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. திஸன், கஸபன், உதிரன், மகாசாத்தன் என்னும் பெயர்கள் நாணயங்களிலே பொறிக்கப்பட்டுள்ளன. இவ்விதமான பெயர்களைக் கொண்ட நாணயங்கள் எதுவும் தமிழகத்திலே

கிடைக்கவில்லை. இலங்கையின் தென்பகுதிலே செல்வாக்குப் பெற்றிருந்த தமிழ் அரசர்களினாலோ வணிகராலோ இவை வழங்கப்பெற்றன என்ற கருத்து அண்மைக்காலத்தில் அழுத்தம் பெற்றுள்ளது. மகாவம்சத்திலே துட்டகாமினி பற்றிய பகுதியிலே அவன் 32 தமிழரசர்களைத் தோற்கடித்தான் என்ற குறிப்பு வருகின்றது. **சீகளவத்துப் பகரண** என்ற நூலிலும் இவ்வாறு சொல்லப்படுகின்றது.

### அனுராதபுர காலத்துச் சாசனங்கள்

எட்டாம் நூற்றாண்டிற்கும் பத்தாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்து தமிழ்ச் சாசனங்கள் சில அனுராதபுரத்து அழிபாடுகளிடையே இருந்தும் கிடைத்துள்ளன. அவை சமூக நிலைகள் பற்றியும் பண்பாட்டு நிலைகள் பற்றியுஞ் சில முக்கியமான செய்திகளைக் கொண்டுள்ளன. 1998ஆம் ஆண்டு அபயகிரி விகாரத்து வளாகத்திலே ஆடி மாசம் பௌர்ணமி தினத்திலே தமிழ்ச் சாசனம் வரையப் பெற்ற கற்பலகையின் துண்டம் ஒன்றை அடையாளங் கண்டு படிவமெடுத்துப் படித்தோம். அதிலே அபயகிரி போதிபற்றியும் அதிலே அமைக்கப்பெற்ற பதினாறடி நீளமும் அகலமும் கொண்ட கற்படையென்றினைப் பற்றியுஞ் சொல்லப்படுகின்றது. சாசனம் தமிழிலும் அமைந்திருப்பதால் அதனைப் படித்தறிந்து கொள்ளக் கூடியவர்களான தமிழர் அனுதாரபுரத்தில் இருந்தனர் என்று கருதலாம். திருப்பணி செய்தவர்களும் தமிழராய் இருந்திருத்தல் கூடும்.

அனுராதபுரத்திலே காணப்பெற்ற தமிழ்ச் சாசனங்களில் ஆறு கல்வெட்டுக்கள் பௌத்த நிறுவனங்கள் அமைந்திருந்த தலங்களான பங்குலிய, புளியங்குளம், றுவான் வெலிசாய, அபயகிரி ஆகியவற்றிலே கிடைத்துள்ளன. றுவான் வெலி சாய என்னும் சேதியத்தின் வளாகத்திலுள்ள கற்பாளமொன்றிலே ஸ்ரீ ஜகதொப்ப கண்டன் பெரும்பள்ளி என்னும் சொற்றொடர்கள் கிரந்தமும் தமிழுங் கலந்த எழுத்துகளிற் பொறிக்கப்பட்டுள்ளன. இச்சொற்கள் சங்கத்தார் இல்லமான விகாரமொன்றினைக் குறிப்பிடுகின்றன. அதன்பெயர் தமிழில் அமைந்திருப்பதால் அதன் வாசிகளான சங்கத்தார் தமிழ்ச் சமூகத்தவர் என்று கருதலாம். ஜகதொப்ப கண்டன் என்பவனால் அமைக்கப்பட்டதன் காரணமாக அது சாசனங்கூறும் பெயரினைப் பெற்றது என்றுங் கொள்ளலாம்.

பங்குலியவிலுள்ள முதலாம் விகாரையின் அழிபாடுகளிடையில் மூன்று சிறிய சாசனங்கள் காணப்பெற்றன அவை சிதைவடைந்துள்ளமையால் அதன் முழுமையான

வாசகத்தை அறிய முடியவில்லை. கிரந்த எழுத்துகளில் கந்தகுடி, கேசரி என்னுஞ் சொற்கள் எழுதப்பட்டுள்ளன. இந்த விகாரத்தின் தூண் ஒன்றிலே கேசரி அரசி என்பவள் கொடுத்த தானம் பற்றித் தமிழில் எழுதப்பட்டுள்ளது. விகாரத்தைச் சேர்ந்த தாது கோபத்தின் பீடத்திலே ஸ்ரீ சாந்த சதி என்பவனைப் பற்றிய சுருக்கமான விவரம் சமஸ்கிருத மொழியில் கிரந்த எழுத்துகளில் எழுதப்பட்டுள்ளது.

புளியங்குளத்திலே நான்கு நாட்டார் என வழங்கிய தமிழ் வணிக கணத்தவர் அமைத்திருந்த பெரும்பள்ளி ஒன்றினைப் பற்றிய சில விவரங்கள் காணப்படுகின்றன. சமஸ்கிருதப் பகுதியினையும் தமிழ்ப்பகுதியினையும் உள்ளடக்கிய இச்சாசனம் சில இடங்களிலே எழுத்துகளை அடையாளங்காண முடியாத அளவுக்குச் சிதைவடைந்துள்ளது. அது சேனாவர்மன் என்னும் மன்னன் ஒருவனின் காலத்தில் எழுதப்பட்டது. அதன் வரிவடிவங்கள் ஒன்பதாம் பத்தாம் நூற்றாண்டுகளுக்குரியவை. அனுராதபுரத்திலே நான்கு நாட்டார் அமைத்த பெரும்பள்ளி மாக்கோதைப் பள்ளி என்னும் பெயரால் வழங்கியது. மாக்கோதை என்பது சேரமானுக்குரிய சிறப்புப்பெயர். அத்தோடு அது சேரமானின் இராசதானியாகிய வஞ்சிமாநகரினையுங் குறிக்கும். அனுராதபுரத்தில் பெரும்பள்ளியினை அமைத்த நான்கு நாட்டுத் தமிழர் சேரநாட்டவர், மாக்கோதையில் இருந்தும் இலங்கைக்குச் சென்றவர்கள் அங்கே தங்கி வாணிப நிலையங்களை அமைத்து வியாபாரஞ் செய்வதர்கள். பௌத்த சமயத்திற்கு ஆதரவு புரிந்தவர்கள் என்னும் விவரங்கள் இச்சாசனத்தினாலே உணரப்படுகின்றன. இச்சாசனத்தின் முடிவிலே வெண்பாவிலமைந்த ஒரு செய்யுள் காணப்படுகின்றனது. அது தர்மபாலர் என்னுந் துறவியைப் பற்றியதாகும். அது ஒரு மெய்க்கீர்த்தி வடிவில் அமைந்த செய்யுளாகும். அச்செய்யுள் மேல்வருமாறு உள்ளது,

**போதி நிழல் - அமர்ந்த புண்ணியன் போல்**
**எவ்வுயிர்க்கும்**
**தீதில் அருள் சுரக்கும் சிந்தையான்**
**ஆதிவரு தன்மன் குன்றாத மாதவன்**
**மாக்கோதை ஒரு தர்மபாலன் உளன்.**

இந்தச் சாசனம் பெரும்பள்ளியிலே வாழ்ந்த, சமஸ்கிருதம், தமிழ் மொழிகளிலுள்ள இலக்கண இலக்கியங்களைப் பயின்றவர் களினாலே உருவாக்கப்பெற்றது என்று கொள்ளத்தக்க வகையில் அமைந்திருக்கின்றது.

அனுதராதபுர காலத்தின் ஆரம்பம் முதலாக இலங்கையின் பல பகுதிகளிலே தமிழ்க் குடிகள் அமைந்திருந்த போதிலும்

அவர்கள் தொடர்பான இலக்கிய மரபு, கல்வி மரபு என்பனபற்றி முதல் முதலாக மாக்கோதை பள்ளி பற்றிய சாசனத்தின் மூலங்கிடைக்கின்றது. அதில் அனுராதபுரத்து பௌத்த நிறுவனங்கள் சில தமிழகத்திலுள்ள பௌத்த குருபீடங்களோடு நீண்ட காலமாக நெருங்கிய தொடர்புகளை ஏற்படுத்தியிருந்தன. நான்கு நாட்டார் அமைத்த மாக்கோதைப்பள்ளி பிரதிபலிக்குந் தமிழ்க் கல்வி மரபும் இலக்கிய மரபும் அந்த நெடுங்கால தொடர்புகளின் பிரதிபலனானவை என்றுங் கொள்ளலாம். அனுராதபுரத்தின் வடபகுதியிலே தமிழர் கட்டடங்களின் அழிபாடுகள் காணப்படும் பகுதியிலே ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த இரண்டு சாசனங்கள் கிடைத்துள்ளன. அவை இரண்டும் ஒரே கற்பலகையில் எழுதப்பட்டுள்ளன. நந்தாவிளக்கு எரிப்பதற்கு சேக்கிழான் சென்னி, சேக்கிழான் சங்கன் என்னுஞ் செட்டிகள் இருவர் முதலிருப்பாக ஈழக்காசு தானங்கொடுத்தமை பற்றி இச்சாசனங்களிலே சொல்லப் படுகின்றது. அறக்கட்டளைக்குப் பெறுப்பேற்றுக் கொண்ட குமாரகணத்துப் பேரூரார் சாசனங்களை எழுதிவைத்தனர். குமாரகணத்துப் பேரூரோம் என்னும் மொழித் தொடர் சாசனத்திலே வருகின்றது. குமாரகணம் என்னும் ஊரிலே பேரூர் என்னுங் கிராமசபை அமைந்திருந்தது என்பது இச்சாசனத்தினால் அறியப்படுகின்றது. இச்சாசனம் இந்துக் கோயில்களின் அழிபாடுகளிடையே காணப்பட்டதால் சைவக்கோயில் ஒன்றுக்கு வழங்கப்பெற்ற தானங்களை அவை பதிவு செய்கின்றன என்பது தெளிவாகும்.

### சோழராட்சிக் காலத்துச் சாசனங்கள்

பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே அனுராதபுர மன்னர்களின் ஆதிக்கம் நிலைதளர்ந்தது. படைக்கலகம் ஒன்றின் விளைவாக ஐந்தாம் மகிழ்ந்தன் அனுராதபுரத்திலிருந்து தென்னிலங்கைக்கு ஓடிவிட்டான். கலகம்புரிந்த படைத் தலைவர்கள் இலங்கையின் வடபகுதியிலே இங்குமங்குமாக ஆதிக்கஞ் செலுத்தினார்கள். இவற்றை அறிந்து கொண்ட முதலாம் இராஜராஜ சோழன் இலங்கைக்கு ஒரு படையை அனுப்பி வைத்தான். அவனது எட்டாம் ஆட்சியாண்டளவில் (993) இலங்கையின் வடபாகத்திலே சோழராட்சி ஏற்பட்டது.

இலங்கையின் வடபகுதியைக் கைப்பற்றிய சோழர் அதனைச் சோழ இராச்சியத்தின் ஒரு மண்டலமாக அமைத்து ஆட்சிபுரிந்தனர். இராஜராஜனின் காலத்துச் சாசனங்கள் சில இலங்கையில் மாதோட்டம், பதவிய, கோகர்ணம் ஆகிய இடங்களில் இருந்தன. முதலாம் இராசேந்திர சோழனது ஆட்சிக்

காலத்தில் (1014-1044) ஜயங்கொண்ட சோழ மூவேந்த வேளான் என்னுஞ் சேனாதிபதி தென்னிலங்கை மீது படையெடுத்துச் சென்று இலங்கை வேந்தனான ஐந்தாம் மகிந்தனையும் அவனுடைய தேவியையும் அவர்களின் முடி முதலான அணிகலன்களையுங் கைப்பற்றிச் சென்றான். முன்பு இலங்கை மன்னனிடம் பாண்டியன் அடைக்கலமாக வைத்துவிட்டுச் சென்ற முடியினையும் இந்திரன் ஆரம் என்னும் பட்டமாலையினையும் அவன் அகப்படுத்திக் கொண்டு திரும்பிச் சென்றான். சோழ சேனாதிபதி தான் கைப்பற்றிச் சென்ற பொருட்களையும் மன்னனையும் சோழச் சக்கரவர்த்தியிடம் ஒப்படைத்தான். இவ்விடயங்களை சோழமன்னர்களது மெய்க்கீர்த்திகளின் மூலமாகவும் இலங்கையரசர்களின் வரலாற்றினைக் கூறும் மகாவம்சம் மூலமாகவும் அறிந்து கொள்ள முடிகின்றது. இந்தப் படையெடுப்பின் மூலமாக இலங்கையிலே சோழராதிக்கம் வலுப்பெற்று விரிவடைந்தது. அது கி.பி. 1070 வரை நிலைபெற்றது. சோழராட்சி நிலவிய காலத்திலே கோயில்களிலும் வேறிடங்களிலும் நிறுவப்பெற்ற **தமிழ்ச்சாசனங்கள் பல கிடைக்கின்றன.** அவற்றிலே சிலவற்றின் பகுதிகள் சிதைவடைந்து காணப்படுகின்றன. முன்பு அடையாளங் காணப்பட்ட சாசனங்களிற் சில போதிய பாதுகாப்பின்மையால் அண்மைக் காலங்களில் மறைந்துவிட்டன.

சோழர் காலத்துச் சாசனங்கள் மூலமாக ஈழமான மும்முடிச் சோழமண்டலத்தின் நிர்வாக அமைப்பு கோயில்கள், குடியிருப்புகள், சமய விவகாரங்கள், வாணிபம், தென்னிந்திய கலாசாரச் செல்வாக்கு முதலிய விடயங்களைப் பற்றி அறிந்து கொள்ளலாம். அத்துடன் தமிழகத்திலே காணப்படுகின்ற சோழ மன்னர்களின் மெய்க் கீர்த்திகளிலும் இலங்கை விவகாரங்களைப் பற்றிய அரிய செய்திகள் காணப்படுகின்றன. சோழராட்சியிற் தமிகமும் ஈழமும் ஒரே அரசியலமைப்பில் அடங்கியிருந்தமையால் அரசியல், சமூகம், சமயநெறிகள், கலைகள், கல்வி முறை முலான பிரதானமான துறைகளிலே தென்னிந்தியச் செல்வாக்கு இலங்கையில் ஏற்படலாயிற்று. சோழர்கள் பாண்டிநாடு, கங்கபாடி என்பவற்றிற் போல இலங்கையிலும் முதலாம் இராசேந்திர சோழன் காலம் முதலாக இராசப்பிரதிநிதி ஒருவனை நியமனஞ் செய்தனர். இராசேந்திரனின் குமாரனையே இலங்கேஸ்வரனாக பட்டஞ் சூட்டி அவனுக்கு சோழ இலங்கேஸ்வரன் என்னும் பட்டப்பெயரை வழங்கினார்கள். கால் நூற்றாண்டு காலத்திற்கு முன்பு, சோழ இலங்கேஸ்வரனுடைய ஆட்சியாண்டுகளிலே எழுதப்பெற்ற சாசனங்கள் இரண்டு திருகோணமலை

மாவட்டத்திலுள்ள கந்தளாய், மானாங்கேணி என்னும் ஊர்களிலே காணப்பெற்றன. இலங்கையிலுள்ள சாசனங்கள் மூலமாக மும்முடிச் சோழமண்டலத்து நிர்வாக அமைப்பினைப் பற்றிச் சில விவரங்களை அறிந்து கொள்ளலாம். தென்னிந்தியாவிலுள்ள மண்டலங்களைப் போல ஈழமும் சோழராட்சிக் காலத்திலே வளநாடு என்னும் பிரிவுகளாக அமைந்திருந்தது. நித்த வினோத வளநாடு (மாத்தோடம்) நிகரிலிச் சோழ வளநாடு (பொலநறுவை), அபயாஸ் சிறய வளநாடு, இராஜேந்திரசோழவளநாடு, இராஜ விச்சாதிர வளநாடு (திருகோணமலை), இராஜ இராஜ வளநாடு, விக்கிரம சோழவளநாடு (கொட்டியாரம் பற்று) என்னும் பெயர்கள் இலங்கையிலுள்ள கல்வெட்டுக்களிலே காணப்படுகின்றன அவற்றிலே காணிக்கடன், நெல்முதல், இலுப்பைப்பால் (இலுப்பெண்ணெய்), நூலாயம், தறியாயம், சுங்கம் முதலான இறைகடமைகளான வருமான வரிகளைப்பற்றியும் அவற்றிலே குறிப்பிடப்படுகின்றது. சோழர் இறைகடமைகளைச் சேர்த்தார்கள் என்று கொள்ளத்தக்க வகையில் மகாவம்சத்திலுங் குறிப்புண்டு.

பதினோராம் நூற்றாண்டிலே பெருந்தொகையான தமிழர் நிர்வக சேவையாளராகவும் படைவீரராகவும் வணிகராகவும் தொழில் வினைஞராகவும் இலங்கைக்குச் சென்று அங்கு குடிகளாக வாழ்ந்தனர். பூர்வீக குடிகளாக இருந்த தமிழர்களோடு அவர்கள் காலப்போக்கிலே கலப்புற்று விட்டனர். அவர்கள் மூலமாகத் தமிழகத்தில் விருத்திபெற்ற சோழர் காலத்துக் கலைமரபுகள் இலங்கையிலே பெருஞ் செல்வாக்குப் பெற்றன. இலங்கைக்குச் சென்றிருந்த வணிகரும் படையிலாரும் பிறரும் வழிபாட்டு நிலையங்களான கோயில்களை உருவாக்கினார்கள். அவர்களிற் பௌத்தராயினோர் பெரியகுளம் என்னுமிடத்திலுள்ள வெல்காமப்பள்ளி என்னும் பௌத்த விகாரத்தைப் புனரமைத்தார்கள். திராவிடக் கலைப் பாணியின் அமைப்பில் அப்பெரும்பள்ளி புனராக்கம் பெற்றது. அதன் அழிபாடுகளிடையே பதினாறு தமிழ்ச் சாசனங்கள் கிடைத்துள்ளன. அவை பெரும்பான்மையுந் தான சாசனங்கள், முதலாம் இராசேந்திரனுடைய காலத்திற் குரியவை; மெய்க்கீர்த்திப் பகுதிகளைக் கொண்டவை. வெல்காமப்பள்ளி இராஜராஜப் பெரும்பள்ளியென்ற புனர் நாமத்தைப் பெற்றிருந்தது. அது சுற்றாடலில் வாழ்ந்த தமிழ்ப் பௌத்தர்களின் ஆதரவிலமைந்த பெரும்பள்ளியாக விளங்கியது.

மாதோட்டத்திலே, திருக்கேதீஸ்வரத்திலே மூன்று சாசனங்கள் காணப்பட்டன. அவற்றுள் ஒன்று முதலாம் இராஜராஜன் காலத்துச் சாசனமாகும். அது திருக்கேதீஸ்வரம்

என்னும் பாடல்பெற்ற தலத்திலே இராஜராஜேஸ்வரம் என்னும் பெயரால் தாழி குமரன் என்னுஞ் சோழப் பிரதானி இராஜ ராஜேஸ்வரம் என்னுங் கோயிலை எடுப்பித்து அதற்கு நிவந்தங்கள் வழங்கியமை பற்றி வர்ணிக்கின்றது. அவன் மாதோட்டத்திலுள்ள நிலங்கள் சிலவற்றையும் அரசுக்குரிய வருமானங்களையும் கோயிலுக்கு மானியமாக வழங்கினான். அரசன் ஒருவனுக்குரிய அதிகாரங்களை அவன் பயன்படுத்தியுள்ளமையால் சோழராட்சியின் ஆரம்பத்தில் அவன் இலங்கையில் இராசப் பிரதிநிதியாக விளங்கினான் என்று கருதலாம். அவனைச் சோழ மண்டலத்து க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டு சிறுகூற்ற நல்லூர் கிழவன் என்று சாசனம் வர்ணிக்கின்றது.

மற்றைய இரண்டு சாசனங்களும் முதலாம் இராஜேந்திர சோழனின் காலத்தவை. அவை திருவிரமீஸ்வரம் என்னுஞ் சிவாலயத்தைக் குறிப்பிடுகின்றன. வெற்றிலை வாணியர், வாழைக்காய் வாணியர் என்னும் வியாபாரிகளைப் பற்றி அவற்றிலே சொல்லப்படுகின்றது. ஆலயத்திலே விளக்கெரிப்பதற்கு அவர்கள் தானம் வழங்கியிருந்தார்கள். அந்தத் தானங்களைப் பொறுப்பேற்ற எண்ணெய் வாணிபரான சங்கரபாடியர் தானமாகப் பெற்ற முதலை ஆதாரமாகக் கொண்டு நாள்தோறும் விளக்கெரிப்பதாக உறுதியளித்தார்கள்.

### பொலனறுவையிலுள்ள சோழரின் சாசனங்கள்

ஈழமான மும்முடிச் சோழ மண்டலத்தின் பிரதான நிர்வாக நிலையமாகப் பொலனறுவை அமைந்திருந்தது. அதற்கு ஜனநாத மங்கலம் என்று சோழர் பெயரிட்டனர். ஜனநாத மங்கலம் நிகரிலிச் சோழவளநாடு என்னும் பிரிவினுள் அடங்கியிருந்தது என்று சோழரின் சாசனங்களால் அறிய முடிகின்றது. அந்நகரிலே சோழர்கள் பாதுகாப்பு அரண்களை அமைத்திருந்தனர். அவற்றைப்பற்றிய குறிப்புகள் மகாவம்சத்தில் உள்ளன. பொலனறுவையில் திசையாயிரத்து ஐஞ்ஞூற்றுவர் முதலான வணிக கணத்தவரின் படைகளைச் சேர்ந்தவர்களும் வேறு சமூகப் பிரிவினரும் அக்காலத்திலே தங்கியிருந்தனர், அவர்களின் வழிபாட்டுத் தேவைகளுக்கென சிவாலயங்கள், பெருமாள் கோயில்கள், பௌத்தப்பெரும்பள்ளிகள் என்பன புதிதாக அமைக்கப்பட்டன. பொலனறுவையிலே எல்லாமாக பதினான்கு இந்துக் கோயில்களின் அழிபாடுகள் அடையாளங் காணப்பட்டுள்ளன. அவற்றுள் இரண்டாஞ் சிவாலயம் என்று சொல்லப்படும் வானவன் மாதேவீஸ்வரம், ஐந்தாஞ் சிவாலயம் ஆறாஞ் சிவாலயம் என்பவற்றில் மட்டுமே சாசனங்கள்

கிடைத்துள்ளன. அவற்றுள் வானவன் மாதேவி ஈஸ்வரத்தில் முதலாம் இராசேந்திர சோழன், அதிராஜேந்திர சோழன் ஆகியோரின் காலத்துச் சாசனங்கள் காணப்படுகின்றன. கோயில் நிர்வாகம் அறக்கட்டளைகள், ஆலய வழிபாடு என்பன பற்றிய விவரங்கள் அவற்றிலே காணப்படுகின்றன. தமிழகத்து வழிபாட்டு முறைகளும் கோயில் நிர்வாக முறையும் இலங்கையிலே வழங்கியமைக்கு இச்சாசனங்கள் ஆதாரமாயுள்ளன. வானவன் மாதேவி ஈஸ்வரத்திற் பட்டர், பதிபாத மூலத்தார், பட்டுடை பஞ்சாசரிய தேவகன்னிகள் முதலான வேதியரும் தேவரடியார், பரிசாரகர், உவச்சர் போன்ற பணியாளருங் கோயிற்கருமங்களைச் செய்வதற்கு அங்கு நியமிக்கப்பட்டிருந்தனர். அக்கோயிலுக்கு வழங்கிய தானங்களைப் பதிவு செய்த சிலா சாசனங்களின் துண்டங்கள் கோயிலின் சுற்றுப்புறங்களிலே காலாகாலம் கண்டெடுக்கப்பெற்றன.

வானவன் மாதேவி ஈஸ்வரம் இலங்கையில் அமைந்துள்ள கட்டடங்களிலே மிகச் சிறப்பு வாய்ந்த ஒன்றாகும். கற்றளியான இக் கோயில் பத்தாம் நூற்றாண்டுக்குரிய சோழர் கலைப்பாணியின் சிறப்பம்சங்களை உன்னதாமான முறையிலே பிரதிபலிக்கின்றது. அதனைக்காட்டிலும் அளவிற் பெரிதான ஐந்தாஞ் சிவாலயம் செங்கல்லினால் அமைந்த மண் தளியாகும். அது சோழநாட்டுப் பிரதானிகளால் அமைக்கப்பெற்ற தென்பது அதன் அத்திபாரக்கற்களிலே காணப்படுங் கல்வெட்டுக்களால் அறியப்படுகின்றது. கட்டடம் முற்றாக இடிந்து அழிந்துவிட்டது. சோழர் காலத்து வெண்கலப் படிமங்கள் பல அதன் வளாகத்திலே புதைக்கப்பட்டிருந்தன. நடராசர், ரிஷபவாகனர், கௌரி, தேவார முதலிகள், சண்டேஸ்வரர் முதலியோரின் படிமங்கள் அவற்றிலே குறிப்பிடத்தக்கவை. அளவிற் சிறியதான ஆறாஞ் சிவாலயமும் சோழர் கலத்திருப்பணியாகும். அதன் அழிபாடுகளிலே கிடைத்த வெண்கல மணி ஒன்றிலே **ஆண்பிள்ளை பெருமாள்** என்ற பதினோராம் நூற்றாண்டு எழுத்துகளில் அமைந்த வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது.

பொலனறுவையிலே சிவாலயம் ஒன்றின் இடிபாடுகளிடையே பதினோராம் நூற்றாண்டிற்குரிய தமிழ்ச் சாசனமொன்றிலே திசையாயிரவர் ஐஞ்னூற்றுவரைப் பற்றிய குறிப்பு வருகின்றது. அவர்களால் அமைக்கப்பட்ட பௌத்த கோயில் ஒன்றைப் பற்றி அச்சாசனங் குறிப்பிடுகின்றது. இலங்கையில் ஐஞ்னூற்றுவர் பௌத்த சமயத்தோடு கொண்டிருந்த தொடர்பினைப் பற்றிய சாசனக் குறிப்புகளில் இதுவே

முதலானதாகும். அது சோழராட்சிக்குரியது என்பதுங் கவனித்தற்குரியதாகும்.

## இரவிகுல மாணிக்க ஈஸ்வரத்துச் சாசனங்கள்

இலங்கையின் ஐஞ்னூற்றுவர் என்னும் வணிக கணத்தின் செல்வாக்கு ஏற்பட்ட இடங்களிலே பதவியா நகரம் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். வணிகரின் குடியேற்றங்கள் காலப்போக்கிலே பதவியாவிலே வணிக நகரமொன்று அபிவிருத்தி அடைவதற்கு ஏதுவாயிருந்தன. மத்தியகால இலங்கையிற் பதவியா நகரம பெருநகரமாக விளங்கியது. அங்கு வணிக கணங்களின் செல்வாக்கு மேலோங்கியிருந்தது. அந்நகரத்திலே பௌத்தர்களும் இந்துக்களும் வாழ்ந்தமைக்கான சான்றுகள் தொல்பொருட் சின்னங்களிற் கிடைக்கின்றன.

முதலாம் இராஜராஜனுடைய ஆட்சியிலே பதவியாவிலுள்ள முதலாஞ் சிவாலயமான இரவிகுல மாணிக்க ஈஸ்வரம் அமைக்கப்பட்டது. அந்தக் கோயிலை அமைத்தவர்கள் பலர் வணிக கணங்களைச் சேர்ந்தவர்கள். அதற்குத் தானம் வழங்கியவர்களுள் ஒருவன் கோணவில் வெண்காடன் என்னும் நானாதேசி வணிகன் என்பது குறிப்பிடற்குரியது.

திருகோணமலை மாவட்டத்தில் சோழராட்சிக் காலத்துச் சாசனங்கள் குறிப்பிடத்தக்க அளவிலே கிடைத்துள்ளன. கந்தளாய், மானாங்கேணி என்னுமிடங்களிலுள்ள சாசனங்கள் பற்றி முன்பு கவனித்தோம், நிலாவெளியிலே கிடைத்துள்ள சாசனம் திருக்கோணேஸ்வரத்தைப் பற்றியதாகும் அதிலே கோணபர்வதம், திருகோணமலை, மத்ஸ்யகேஸ்வரமுடைய மகதேவர் என்னுந் தொடர் வருகின்றது. மச்சகேஸ்வரம் என்பது திருக்கோணேஸ்வரத்தின் மறுபெயர்களில் ஒன்று என்பதை ஸ்ரீதக்ஷிணகைலாய புராணயம் முதலிய நூல்கள் வாயிலாக அறிய முடிகின்றது. சோழர் காலமளவிற் கோயிலை மச்சகேஸ்வரம் என்று குறிப்பிடுவது பொதுவழக்காகிவிட்டது போல தெரிகின்றது. அண்மைக்காலம் வரை மட்டக்களப்பு தேசத்து மக்கள் தேசத்துக் கோயிலாக் கொண்ட கோணேசர் கோயிலை மச்சகேஸ்வரம் என்று சொல்லுவது வழமை. இச்சாசனம் கோயிலின் நித்த நிவந்தங்களுக்கு கிரிகாமம், கிரிகண்ட கரிகாமம் என்பவற்றிலுள்ள 260 வேலி நிலம் தானமாக வழங்கப்பட்டமை பற்றிக் குறிப்பிடுகின்றது. மாளாங்கேணிச் சாசனத்திலும் மச்ச கேஸ்வரத்தின் மூலஸ்தானம் பற்றிய குறிப்புண்டு. முதலாம் இராஜராஜனின் ஆட்சியின் ஆரம்ப

காலத்து மெய்க்கீர்த்தி அடங்கிய சாசனப் பகுதியொன்று கடலின் அடிமட்டத்தில் இருந்து எடுக்கப்பட்டு திருக்கோணேஸ்வர வளாகத்திலே வைக்கப்பட்டுள்ளது. திருக்கோணேஸ்வரம் பற்றிய இலக்கிய மரபிலுள்ள குளக்கோட்டன் தொடர்பான கதைகளையும் விளங்கிக் கொள்வதற்குச் சாசனங்கள் பெரிதும் பயன்படுகின்றன.

இலங்கையில் சோழராட்சிக் காலத்தில் எழுதப்பெற்ற சாசனங்கள் எல்லாம் தமிழ்ச் சாசனங்களாகவே உள்ளன. அவை பெரும்பாலும் சோழராட்சியோடு தொடர்புடைய சமுதாயப் பிரிவுகளைச் சேர்ந்தவை. சாசனங்களின் மொழிநடையும் சொல் வழமும் தமிழகச் சாசனங்களிலுள்ளவற்றை ஒத்தனவாகும். இச்சாசனங்கள் இந்து கலாசார அம்சங்களையும் பௌத்த கலாசார அம்சங்களையும் பிரதிபலிக்கின்றன. பூர்வ குடிகளான இலங்கைத் தமிழரது சமுதாய வழமைகளும் பண்பாட்டு மரபுகளும் சோழர் காலத் தமிழகத்துப் பண்பாட்டு மரபுகளோடு கலப்புற்றமையினை இச்சாசனங்கள் பிரதிபலிக்கின்றன.

### பொலனறுவைக் காலத்துச் சாசனங்கள் (1070–1250)

முதலாம் விஜயபாகு 1070ஆம் ஆண்டிலே சோழரைத் தோற்கடித்துப் பொலனறுவையைக் கைப்பற்றி, அதனை இராசதானியாகக் கொண்டு நெடுங்காலம் ஆட்சிபுரிந்தான். பொலனறுவை இராசதானியில் கலிங்க வம்சத் தொடர்புள்ளவர்களும் பாண்டிய வம்சாவளியினருஞ் செல்வாக்கு பெற்றிருந்தனர். கி.பி.1215ஆம் ஆண்டில் கலிங்க மாகன் பொலனறுவை மீது படையெடுத்துச் சென்று அந்நகரைக் கைப்பற்றிக் கொண்டான். அங்கு அரசனாகவிருந்த பராக்கிரம பாண்டியனை அகற்றிவிட்டு மாகன் அரச பதவியைப் பெற்றான். 1255இல் அவனுடைய ஆட்சி முடிவுற்றது. அதன் பின்பு பொலனறுவை நகரமும் அதன் சுற்றுப்புறங்களுங் காடாகிவிட்டன.

முற்காலங்களைக் காட்டிலுங் கூடுதலான அளவிலே பொலனறுவைக் காலத்திற் சாசனங்கள் எழுதப்பட்டன. அவற்றிலே பல நன்கு பேணப்பட்ட நிலையிலும் உள்ளன. அச்சாசனங்கள் பெரும்பாலும் பேச்சு வழக்கிலுள்ள மொழியைப் பிரதிபலிக்கின்றன. இலங்கை மொழி வழக்கின் அடையாளங்களை இவற்றிலே கண்டு கொள்ளலாம். சாசனச் செய்யுள்கள் பல அவற்றிலே கணப்படுகின்றமையும் பொலனறுவைக் காலத்துச்

சாசனங்களின் சிறப்பம்சங்களில் ஒன்றாகும். இலங்கையில் வாழ்ந்த தமிழரிற் கணிசமான தொகையினர் பௌத்த சமயத்தவர் என்பதும் இச்சாசனங்களின் மூலம் தெளிவாகின்றது.

வணிக கணத்தவரின் சாசனங்கள், வேளைக்காறர் போன்ற படைப்பிரிவினரின் சாசனங்கள், பிரம்மதேயங்களின் சாசனங்கள், அரசரின் கட்டளைகள், தானங்கள் என்பன பற்றிய சாசனங்கள் என நான்கு வகைகளுக்குரியனவாக பொலனறுவைக் காலத்துச் சாசனங்களைப் பாகுபாடு செய்து கொள்ளலாம். அக்காலத்துச் சாசனங்களும் வரலாற்று மூலங்கள் என்ற வகையில் இலங்கை வரலாறு தொடர்பாகவும் தமிழக வரலாறு தொடர்பாகவும் மிகுந்த முக்கியத்துவம் பெறுகின்றன. தமிழ் வணிக கணங்களைப் பொறுத்தவரையில் இந்தியாவிற்கு வெளியே அவர்களால் நிறுவப்பெற்ற சாசனங்களில் மிகக் கூடுதலானவை இலங்கையிற் கிடைக்கின்றன. இதுவரை அடையாளங் காணப்பெற்ற கல்வெட்டுக்களில் இருபது வணிக கணங்களைப் பற்றியனவாகும். முற்காலத்தில் ஏற்பட்ட வணிகரின் குடியிருப்புகள் அபிவிருத்தியடைந்து நகரங்களாக வளர்ச்சி பெற்றன. வணிக கணத்தவர் பற்றிய சாசனங்கள் பழைய இராசதானிகளிலும் வேறு சில நகரங்களிலும் உள்ளூர்ப்பகுதிகளிலும் கரையோரப் பகுதிகளிலும் காணப்பட்டன. நானாதேசிகள், ஐஞ்னூற்றுவர், வீரவளஞ்செயர், பேரிழமையார் என்போர் இலங்கையிலே செல்வாக்குப் பெற்றிருந்தனர். இலங்கையின் உள்நாட்டு வாணிபத்திலும் அயல்நாட்டு வாணிபத்திலும் தமிழ் வணிக கணங்களின் செல்வாக்கு மேலோங்கியிருந்தது.

அனுராதபுரம், பொலனறுவை, பதவிய ஆகிய பெருநகரங்களிலே வணிகரின் நரகங்கள் அமைந்திருந்தன. வாகல்கட, விஹாரே ஹின்ன, மாகல், கல்தம்பிட்டி, தெதியமுல்ல ஆகிய இடங்களில் ஐஞ்னூற்றுவர் அமைத்த நகரங்கள் பற்றிச் சாசனங்களிலே கூறப்படுகிறது. வணிகரின் கட்டுப்பாட்டிலிருந்த நகரங்கள் பற்றிய சாசனங்கள் எல்லாவற்றிலும் ஆரம்பத்திலே ஐஞ்னூற்றுவரின் பிரஷஸ்தி காணப்படுகின்றது. மரபு வழியான விவரங்கள் அதில் அடங்கிருக்கும். வணிக கணத்தவரின் உற்பத்தி, அவர்களின் சிறப்புரிமைகள், அவர்களின் சமுதாய உறவுகள் வாணிப வலயங்கள், சமயாசாரங்கள், ஆலயதருமங்கள், துறவோருக்கும் கவிவாணருக்கும் அவர்கள் வழங்கிய ஆதரவு முதலிய விடயங்கள் அவற்றிலே சுருக்கமாகச் சொல்லப்படும். இலங்கையிலுள்ள வணிக நகரங்களைச் சில சாசனங்கள்

வீரபட்டினம் என்றும் வீர்தளம் என்றுங் குறிப்பிடுகின்றன. அவற்றுட் பெரும்பாலானவை பெருங்குளங்களின் கரையோரத்திலும் விவசாயிகள் குடியிருப்புகளின் மத்திய நிலையங்களிலும் அமைந்திருந்தன. உள்ளூர்ப்புறங்களிலுள்ள உற்பத்தியாளரோடும் தூரதேசங்களில் உற்பத்தியான அரும்பொருள்களை விநியோகஞ் செய்கின்ற வணிகர் குழாங்களோடும் சங்கிலித் தொடர்பான உறவுகளை ஏற்படுத்தும் நிலையங்களாக அவை அமைந்திருந்தன. வணிக நகரங்களின் பெயர்களெல்லாம் சாசனங்கள் மூலமாகவே அறியப்படுகின்றன. வாகல்கட என்னும் இடத்து நகரத்தினை கட்டனேரியான நானாதேசிய வீரபட்டினம் என்று அங்குள்ள சாசனம் குறிப்பிடுகின்றது. பதவியாவிலுள்ள நகரம் ஐயம்பொழில் பட்டினம் என வழங்கியது. விஹாரே ஹின்ன சாசனம் தன்ம சாகரப் பட்டினம் பற்றியதாகும். அதேபோல மாகல் என்னும் ஊரிலுள்ள ஐஞ்னூற்றுவரின் நகரம் விக்கிரம சலாமேகபுரம் என வழங்கியது. வணிகணத்தவரின் படைகளான வேளைக்காறார், வீரமாகாளர், வீரக்கொடி, எறிவீரர் முதலியோரைப் பற்றியும் சாசனங்கள் வர்ணிக்கின்றன. பொலனறுவையிலுள்ள சாசனம் ஒன்றில் வேளைக்காறரைப் பற்றி விரிவான விவரங்கள் அமைந்துள்ளன. அத்தகைய விவரங்கள் தமிழகத்துச் சாசனம் எதிலுங் காணப்படவில்லை. அதேபோல புதுமுத்தாவையிலுள்ள சாசனம் வீரமாகாளம் என்னும் படைப்பிரிவொன்றினைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. தென்னிந்திய சாசனங்களில் அந்தப் பெயர் காணப்படவில்லை. ஆயினும், வீரமாகாளர் வருபடலம் என்ற பிரிவொன்று கந்தபுராணத்திலுள்ளது கவனித்தற்குரியது.

வணிக கணத்தவரின் சாசனங்கள் சில மிக அண்மையில் இந்தியா, இலங்கை, ஜப்பான் ஆகிய நாடுகளைச் சேர்ந்த அறிஞர்களின் கூட்டு முயற்சியல் புதிதாக படிவமெடுக்கப்பட்டு படிக்கப்பட்டு ஆராயப்பட்டுள்ளன. அதி முக்கியத்துவம் வாய்ந்த வரலாற்றுச் செய்திகள் அதன் பயனாகக் கிடைத்துள்ளன. அரசரின் படைகளிலும் வணிக நகரங்களின் படைகளிலும் சேவை புரிந்த வேளைக்காறரும் வீரக்கொடியோரும் பிறரும் நிறுவியுள்ள பல சாசனங்கள் அத்தகையனவாகும். படைப்பிரிவினர் சைவக் கோயில்களோடும் பௌத்தப் பெரும் பள்ளிகளோடும் கொண்டிருந்த தொடர்புகளைச் சாசனங்கள் விவரிக்கின்றன. முதலாம் விஜயபாகுதேவரின் 42ஆம் ஆண்டில் எழுதப்பெற்ற விக்கிரம சலாமேகத் தெரிந்த வலங்கை வேளைக்காறப் படை பற்றிக் குறிப்பிடுகின்றது. கந்தளாய்ப் பிரமதேயத்து விக்கிரம சலாமேக

ஈஸ்வரம் என்னுங் கோயிலுக்கு நங்கை சானி என்னும் பிராமணப் பெண் வழங்கிய தானங்களைப் பொறுப்பேற்ற வேளைக்காறர் அதனைப்பற்றிய அறக்கட்டளையை நிறைவேற்றும் பொறுப்பினையும் ஒப்புக்கொண்டனர்.

பௌத்த நிறுவனங்களோடு வேளைக்காறர் கொண்டிருந்த தொடர்புகள் குறிப்பிடத்தக்கவை. பொலனறுவையிலுள்ள வேளைக்காறரின் சாசனம் அதி முக்கியத்துவம் வாய்ந்த விவரங்களை கொண்டுள்ளது. விஜயபாகுவின் காலத்து வரலாறு பற்றிய அம்சங்கள் அதிலே சொல்லப்படுகின்றன. பௌத்த சமய வரலாறு பற்றிய சில விவரங்கள் அதிலே இடம்பெறுகின்றன. அந்த விவரங்கள் வேறெங்குங் காணப்படுவதில்லை. வேளைக்காறப் படையின் அமைப்பு அதன் சமூக உறவுகள் போன்றன பற்றிய விவரங்கள் அதிலுள்ளவாறு வேறெங்குங் காணப்படவில்லை. சாசனங் குறிப்பிடும் வேளைக்காறப் படை வீர வளஞ்செயர் அமைத்திருந்த நகர மொன்றின் சேவையில் இருந்தது என்பது இப்பொழுது தெளிவாகியுள்ளது. விஜயபாகு இறந்தபின்பு அரசுரிமை குறித்து இராசதானியிலே தகராறு ஏற்பட்ட பொழுது பௌத்த சங்கத்தின் குருபீடம் ஒன்றின் தலைவரும் அமைச்சர்களிற் சிலரும் வேளைக்காறரை அழைத்து தளதாய்ப் பெரும்பள்ளியினையும் பிற கோயில்களையும் அவற்றின் சொத்துடைமைகளையும் பாதுகாக்கும் பொறுப்பினை அவர்களிடம் ஒப்படைத்தனர். திருகோணமலை மாவட்டத்தில் மைலன் குளம் என்னுமிடத்திலே, கிடைத்த சாசனமொன்றிலே விக்கிரம சலாமேகன் நாற்படைபற்றிக் கூறப்படுகின்றது. அதன் தலைவனான கணவதி என்னுந் தண்டநாயக்கன் பெரும்பள்ளியொன்றினை அமைத்து, அதற்கு விக்கிரம சலாமேகன் பெரும்பள்ளியென்று பெயரிட்டு, அதன் காவலராக வேளைக்காறரை நியமித்தான் என்று குறிப்பிடுகின்றது. 13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே பதவியாவில் இருந்த வேளைக்காறர் பௌத்தப் பள்ளியொன்றுடன் பந்தப்பட்டிருந்தனர். லோகநாத தண்டநாயகன் என்னும் படைத் தலைவன் ஸ்ரீபதி என்னுங் கிராமத்திலே ஒரு பெரும் விகாரத்தை அமைத்து அதற்கு வேளைக்காற விகாரம் என்று பெயரிட்டான் என்று ஒரு சாசனஞ் செப்புகின்றது.

பொலனறுவையில் கலாசார முக்கோணத்தினால் றங்கொத் விகாரையின் சமீபமாக கண்டுபிடிக்கப்பட்ட இரு சாசனங்கள் இலங்கை மீது படையெடுப்பு நடத்திய வேளைக்காறன் பற்றியும்

மண்டலநாயகராக நியமனம் பெற்ற வேளைக்காறப் பிரதானிகள் பற்றியுஞ் சில விவரங்களைக் கொண்டுள்ளன. இந்த விவரங்கள் கலிங்க மாகனது காலத்திற்குரியனவாக கொள்ளப்படுமிடத்து பொலனறுவையின் இறுதிக் கட்டங்களைப் பற்றிய ஆய்வுகளில் புதிய பரிமாணங்கள் ஏற்படும்.

## ஆதார நூல்கள்

1. H.C.P. Bell. Archaeological Survey Ceylon, Annual Report, 1911-12, H.C. Cottle, Colombo 1914, pp.113-115.

2. வேலுப்பிள்ளை, ஏ.,சாசனமுந் தமிழும், பேராதனை, 1971, பக்.131-133.

3. H.C.P. Bell. Archaeological Survey of Ceylon, Annual Report, 1909, pp.26-27;ASCAR, 1906, pp.26-27.

4. South Indian Inscriptions 4th ed., H. krishna Sastri, Nos. 1388-1415, pp.489-496.

5. K. Kanapathipillai, "A pillar Inscription from Maraghawela", University of Ceylon Review (UCR) 18 (1960), pp.46-49; "Mankani Inscription Gajabaahu II", UCR 18, Nos.3&4, (1960), pp.157-62.

6. K.G. Kirshan, S. Paranavitana, "Notes on the Tamil Inscription from Panduvasnuvara" UCR 20 No.1 (1962), pp.15-18.

7. K. Indrapala, "The Ninativu Tamil Inscription of Parakramabahu I", UCR 21 No.1 (1963) pp.63-70.

8. கா. இந்திரபாலா, "அனுராதபுரத்து நான்கு-நாட்டார் கல்வெட்டு", சிந்தனை-1 (1968), பக்.31-35 "ஈழநாட்டுத் தமிழச் சாசனங்கள் 3; கிழக்கிலங்கைச் சாசனங்கள்", சிந்தனை மலர், இதழ் 1, பதிப்பாசிரியர் கா. இந்திரபாலா, பேராதனை, 1966, ப.40.

9. Epigraphia Tamilica, Part I, ed., K. Indrapala (Jaffna Archaeological Soceity, Peradeniya, 1971) 72 pages.

10. கா. இந்திரபாலா, "கந்தளாயிற் கண்டுபிடிக்கப்பட்டுள்ள சோழ இலங்கேஸ்வரன் காலத்துக் கல்வெட்டு, பாவலர் துரையப்பாப்பிள்ளை நூற்றாண்டு விழா மலர் (1972), பகுதி 2, பக்.1-9.

11. A. Velupillai, Ceylon Tamil Inscriptions (Ct); Peradeniya, 1971-77, pages; A. Velupillai, Ceylon Tamil Inscriptions, Peradenya, 1972, 94 pages.

## பின்னிணைப்பு - இரண்டு

### (இ) கி.பி. 9ஆம் நூற்றாண்டு முதல் 13ம் நூற்றாண்டு வரை

– மனோன்மணி சண்முகதாஸ்

சிங்கள இலக்கிய வரலாற்றினை எழுதிய சி.இ. கொடகும்புர (1955:5)

> "நாம் மேலே குறிப்பிட்ட புலமையாளர் பன்னிரண்டாம் பதின்மூன்றாம் நூற்றாண்டுகளில் தம்முடைய இலக்கிய முயற்சிகளை மேற்கொண்டனர். காலத்தால் முற்பட்ட சிங்களக் கவிதைகள் இக்காலத்தக்குரியனவே. லீலாவதியும் அமைச்சர் கீர்த்தியும் (கி.பி. 1197-1200) ஆண்ட சிறப்பான காலத்திலே சசதர்வத்த, முவதெவ்தாவத்த என்பன இயற்றப்பட்டன. தொடக்க கால சிங்கள உரை இலக்கியத்தின் எடுத்துக்காட்டுகளாக அமையும் சில பகுதிகளைக் கொண்ட கருலுகோமியும் இக்காலத்திலேயே எழுந்திருக்கலாம். . .

மேற்காட்டிய வரலாற்றுக் குறிப்பு சிங்கள இலக்கிய வரலாறே 12ஆம் நூற்றாண்டிலேயே தொடங்குகின்றதெனக் கொள்வதற்கு இடமளிக்கின்றது. புத்தசமயத்தின் செல்வாக்குக் காரணமாக பாளி மொழியிலேயே இலங்கையின் தொடக்க கால நூல்கள் எழுதப்பட்டன. இதன் காரணமாகவும், சிங்கள மொழியின் வளர்ச்சி பிற்காலத்திலேயே ஏற்பட்டதாலும் சிங்களமொழி இலக்கியத்தின் தோற்றமும் பிற்காலத்திலே ஏற்பட்டிருக்கலாம். ஆனால், பேராசிரியர் மல்லசேகர போன்றவர்கள் கி.பி. 12ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட சிங்கள இலக்கியங்கள் இன்று கிடையாமலிருப்பதற்குரிய காரணத்தை விளக்குதற்குத் தமிழர் முதலிய அந்நியர் படையெடுப்புக்களின்போது அவை அழிந்திருக்கவேண்டுமெனக் கூறுவர். இலங்கைத் தமிழ் இலக்கியங்களும் இவ்வாறான முறையிலே அழிந்தொழிந் திருக்கலாம் எனவும் எண்ணக்கூடியதாயுள்ளது (வேலுப்பிள், ஆ., 1988:3).

பின்வருவம் சாசன இலக்கியங்கள் முக்கியமானவை

1) திருகோணமலை, வவுனியா, அனுராதபுரம் முதலிய மாவட்டங்களில் எல்லையிலே அமைந்துள்ள பதவியாவிலே

அமைந்த கல்வெட்டுச் செய்யுள் கி.பி. 12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது:

உத்தமார்தங் கோயில் வலகழி எனலும்
நித்தநியமம் நெறிவளர்
சித்தமுடன் சீரிளமை சேர்ந்த
பதியில் விளையாரம்ப பேரிளமையார்த்துகள்
போதா வாயிரங் கொண்டுரைப்பார் திரு
சூத்தமாக முயன்றான் முயன்ற திரு

2) பிற்காலத்திலே தமிழ் இலக்கிய முயற்சிகள் நடைபெற்ற தம்பதனியாவுக்கு அண்மையில் அமைந்த இடம் பண்டுவஸ்நுவர என்பதாகும். இவ்விடத்திலிருந்து கிடைத்த இச்சாசனச் செய்யுளின் காலம் கி.பி. 13ஆம் நூற்றாண்டாகும்:

தென்னிலங்கைக் கோன்பராக்ரமபாகு
நிச்சங்கமல்லற் கியாண்டஞ்சிற்
தினகரன் கறவி லனைந்தவத் தையிலுத்
திரட்டாதி யேழ்பக்கம்
பொன்னவன் தினதற்சாத் யோகத்தில்
ஊர்தரு போதிமாதவர்தம்
பொற்பமர்கோயில் முனிவராலயத்
தேனறந்திகழ் சாலையும் செயித்தம்
அன்னவை திகழ ஐவர்கண்டன் வனுபேரி
இலங்கை அதிகாரி அலகுதபுயன்
தென்பராக்ரமன் மேனைச்செனெவி
நாதன் திருப்பியரன்
மன்னிய சிறப்பில் மலிதருமழகாற்
பராக்ரம அதிகாரிப்பிரிவுன வளர்தர
அனமத்தான் ஸ்ரீபுர நகருள் மதிமான்
பஞ்சரன் மகிழ்ந்தே

சோழர்கள் கி.பி. 1029இல் இலங்கையைக் கைப்பற்றி சுமார் 47 ஆண்டுகள் ஆண்டனர். அவ்வாட்சிக் காலத்திலே தமிழ் இலக்கிய நூல்கள் இலங்கையிலே பரவலாக வியாபித்தமையும், சிங்கள மொழிக்கும் இலக்கியத்துக்கும் தமிழ் இலக்கிய வளம் கிடைத்தமையும் இக்காலத்தில் நிகழ்ந்த முக்கிய விடயங்களாக சிங்கள இலக்கிய விமர்சகரான ஹிஸ்ஸல்லே தம்மரத்ன தேரர் கூறுகிறார் (1963: பக்.13). அவர் தன்னுடைய நூலில் இன்னோரிடத்தில் சோழர்காலக் கவிசிரேட்டர்களில் ஒருவரான ஒட்டக்கூத்தர் இலங்கைக்கு வருகை தந்தது பற்றிப் பாரம்பரியக் கதை யொன்று இருப்பதாகக் குறிப்பிடுகிறார் (பக்.39).

ஹிஸ்ஸல்ல தம்மரத்ன தேரர் (பக்.30) கி.பி. 1137க்கும் 1157க்கும் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்ட "பொலநறுவ வேளைக்கார சன்னச" என்னும் தமிழ்க் கல்வெட்டுப் பற்றிக் குறிப்பிடுகிறார். இக்கல்வெட்டு சமஸ்கிருதம் கலந்த தமிழ்மொழியிலேயே எழுதப்பட்டது.

**நமோ புத்தாய, ஸ்ரீலங்கா தீபத்து**
**சூர்ய வம்சத்து இக்ஷ வாகுவின்**
**வழிவந்த அநேக சத்ரான் விஜயம்**
**பண்ணி அனுராதபுரம் புக்கு புத்த சாசனம்**
**ரக்ஷிக்க வேண்டி சங்க நியோகத்தில்**
**திருமுடி சூடி**

என்பது அக்கல்வெட்டின் ஒருபகுதியாகும். இதே போன்ற பல தமிழ்க் கல்வெட்டுக்கள் இக்காலகட்டத்திலே எழுதப்பட்டன.

சோதிடம், வைத்தியம் சார்பன நூல்கள் பலஆரியச் சக்கரவர்த்திகள் காலத்திலே தோன்றின. ஆனால், இதே காலப்பகுதியில் செலெந்திர சிங்க என்பவர் வைத்திய சிந்தாமணி பைஸஜ்ய சங்கிரக என்னும் நூலை மொழிபெயர்ப்பாக வெளியிட்டார். இந்நூல் வைத்திய சிந்தாமணி என்னும் தமிழ் நூலிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டதாகும். வைத்திய சிந்தாமணி முந்திய காலத்திலே தமிழில் எழுதப்பட்ட வைத்திய நூலாகும் (Godakumbura, p.336-37).

கி.பி. 900க்கும் கி.பி. 1300க்குமிடைப்பட்ட காலத்தில் பல தமிழ்க் கல்வெட்டுச் செய்யுள்கள் எழுதப்பட்டிருக்கலாம். அவை யாவும் கிடைக்கவில்லை.

சிங்கள இலக்கிய வரலாற்றாசிரியர்கள் (எடுத்துக்காட்டாக, Godakumburaவின் சிங்கள இலக்கிய வரலாறு) தமது மொழியிலே தோன்றிய பல நூல்கள் தமிழிலேயுள்ள நூல்களின் மொழிபெயர்ப்பாக அல்லது அவற்றை அடியொற்றி அமைந்தன எனக் கூறுகின்றனர். எடுத்துக்காட்டாக,

1. கண்டி மாவட்டத்தைச் சேர்ந்த சிங்கள மொழிபெயர்ப்பாளர் ஒருவர் (கொப்பேகடுவ என்னும் கிராமத்தைச் சேர்ந்த ஒரு பௌத்த குரு) **மகாபத்ரங்க ஜாதகய** என்னும் நூலுக்குப் பாயிரம் எழுதும் போது போதிசத்துவர் பற்றிய ஒரு நூல் தமிழ்மொழியிலே எழுத்தப்பட்டிருந்ததாகக் கூறுகின்றார். இந்நூல் பற்றிய விவரம் கிடைக்கவில்லை. ஆனால், கொப்பேகடுவ பௌத்த குரு தான் அத்தமிழ் நூலை சிங்களக் கவிதைக்கு மாற்றுவதாகக் கூறுகிறார். (Godakumkura, p.179)

2. தொட்டகமுலே ஸ்ரீ ராகுல தம்முடைய **பஞ்சிகாப்ரதீபய** என்னும் கலைச்சொற்களஞ்சிய நூலிலே **மெதல ஜாதக கடபதய** என்னும் தமிழ் நூலைக் குறிப்பிடுவதுடன், அந்நூலிலிருந்து மேற்கோளும் காட்டுகிறார். இந்நூலும் ஜாதக் கதைகளுக்கான கலைச் சொற்களஞ்சியமாக அமையலாம் என ஊகிக்கப்படுகின்றது. நூல் தற்போது கிடைக்கவில்லை (Godakumkura, p.37)

3. தம்பதெனிய காலப்பகுதியில் **சிதத் சங்கரவ** என்னும் இலக்கண நூல் இயற்றப்பட்டது. இது எலு மொழியில் எழுதப்பட்ட எலு இலக்கணமாகும். இந்நூல் புத்தமித்திரனாரின் வீரசோழிய புலமைக்குழுவின் இலக்கண நெறிமுறைகளை அடிப்படையாகக் கொண்டது எனக் குறிப்பிடப்படுகின்றது (Godakumkura, p.318).

4. 17ஆம் நூற்றாண்டளவில் வேதாளன் கதாவ என்னும் நூல் சிங்களத்திலே எழுதப்பட்டது. தமிழிலே **வேதாளன் கதாவ** என்னும் நூல் இருந்து வந்ததாகவும் அதனையே தான் சிங்களக் கவிதையிலே மொழிமாற்றுச் செய்திருப்பதாகவும் கூறியுள்ளார் (Godakumkura, p.182)

5. கடுவானே திசாநாயக்க **வள்ளியம்மா கதாவ** என்னும் சிங்களக் கவிதை நூலை எழுதினார். இந்நூலை ஒரு தமிழ் நூலை அடிப்படையாகக் கொண்டே அவர் எழுதினார் எனக் கருதப்படுகின்றது (Godakumkura, p.285)

தமிழ் இலக்கியங்களை மட்டுமே பார்த்த நாம், சிங்கள இலக்கியங்களூடாகவும் இலங்கைத் தமிழ் இலக்கிய வரலாற்றை நோக்குவதால் பயனுண்டு என நம்பக்கூடியதாயுள்ளது.

## உசாத்துணைகள்


கணபதிப்பிள்ளை, பண்டிதமணி, சி. (1964) இலக்கியவழி, யாழ்ப்பாணம்.

கணபதிப்பிள்ளை, தென்புலோலியூர், மு. (1967) ஈழநாட்டின் தமிழ்ச்சுடர் மணிகள், சென்னை.

கணேசையர், சி. (1939) ஈழநாட்டுத் தமிழ்ப் புலவர் சரிதம், சென்னை.

சதாசிவம், ஆ. (1966) (தொகுப்பு) ஈழத்துத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம், யாழ்ப்பாணம்.

சிவத்தம்பி, கா. (1978) 'ஈழத்தில் தமிழ் இலக்கியம்', சென்னை.

நடராசா, க.செ. (1982) ஈழத்துத் தமிழ் இலக்கிய வளர்ச்சி, கொழும்புத் தமிழ்ச் சங்கம்.

நடராச, F.X.C. (1970) ஈழத்துத் தமிழ்நூல் வரலாறு, கொழும்பு.

பூலோகசிங்கம், பொ. (1974) "ஈழத்துத் தமிழ் இலக்கியம் (பதினெட்டாம் நூற்றாண்டுவரை)".

நான்காவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாடு நினைவு மலர். அனைத்துலகத் தமிழாராய்ச்சி மன்றம் (இலங்கைக் கிளை), யாழ்ப்பாணம்.

முத்துத்தம்பிப்பிள்ளை, ஆ (1922) ஈழமண்டல புலவர் சரித்திரம், யாழ்ப்பாணம்.

வேலுப்பிள்ளை, ஆ (1985) 'கோணேசர்கல்வெட்டுப் பற்றி நுண்ணாய்வு" சிவத்தமிழ் ஆராய்ச்சிக் கட்டுரைகள், தெல்லிப்பழை, யாழ்ப்பாணம்.

(1988), "தொடக்ககால ஈழத்து இலக்கியங்களும் அவற்றின் வரலாற்றுப் பின்னணியும்", தொடக்கப் பேருரை, யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.

(1988), "அரசகேசரியின் இரகுவம்சமும் அது எழுந்த இந்துப் பண்பாட்டுச் சூழலும்", சேர். பொன். இராமநாதன் நினைவுப் பேருரை, யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.

Godakumbura, C.E.. (1955) Sinhalese Literature, The Colombo Apothecaries Co. Ltd. Colombo

Hissala Dhammaratna Himi, (1963), Sinhalaye Dravida Balapam, Saraswathi Vishvavidyalayas Privene, Divilupitiya.

History of Ceylong (1960), Vol.I, University of Ceylon, Colombo.

Malalasekara, G.P., (1922) Pali Literature of Ceylon, Colombo.

இக்கட்டுரை எழுதுவதற்குப் பல தகவல்களைத் தந்துதவிய யாழ்ப்பாணப் பல்கலைக்கழகச் சிங்களமொழி விரிவுரையாளர் திரு. விமல் சுவாமிநாதனுக்கு என்னுடைய நன்றிகள்.



# சிறப்புப்பெயர் அகராதி


## அ

அகநானூறு - பழைய உரை 191
அகப்புறம் 259
அகப்பொருள்
விளக்கம் 244-246
அகலக்கவி 85
அடிமறிமண்டிலம் 248
அடியார்க்கு நல்லார்
உரை 184-187
அடியார்கள் தலை மாந்தர் 40
அணியதிகாரம் 234
அதிவீரராம பாண்டியன் 47
அநுராதபுரச் சாசனம் 69
அப்பர் 42
அப்பைய தீட்சிதர் 235, 236
அபப்பிரம்ஷம் 65
அம்பிகாபதிக் கோவை 139
அமிதசாகர முனிவர் 227
அமைச்சன் ஐயநம்பி 164
அர்ச்சுனன் 175
அர்த்த நாரீசுவரர் 248
அர்த்த மாகதி 65
அரசவைப் புலவர் 9
அரசியல் சூழல் 1
அருங்கலச் செப்பு 141
அருங்கல நூல் 272
அருண்மொழி 156
அருண்மொழித் தேவர் 38
அருள்நந்தி சிவாசாரியார் 158
அருணாசலம், மு. 46
அரும்பைத் தொள்ளாயிரம் 131
அருள்நிலை விசாகன்
பாரதம் 170
அருளாளப் பெருமான்
எம்பெருமானார் 147
அவ்வையார் நீதிநூல்கள் 132-135
அவிநயம் 241
அறநெறிச்சாரம் 148
அன்னச் சேவல் தூது 153
அனந்தாழ்வார் தனியன் 145

## ஆ

ஆத்தி சூடி 133
ஆத்திரையன் பேராசிரியன் 261
ஆயுத நூல் 272
ஆயுள்வேதம் 214
ஆரிய சேகரன் 90
ஆரியம் 258
ஆருகதம் 217
ஆரூடச் சக்கரம் 273
ஆரூட நூல் 272
ஆளுடைய பிள்ளையார்
திருஉலாமாலை 119
ஆளுடைய பிள்ளையார்
திருக்கலம்பகம் 119
ஆளுடைய பிள்ளையார்
திருக்கணிய விருத்தம் 118
ஆளுடைய பிள்ளையார்
திருத்தொகை 119
ஆளுடைய பிள்ளையார்
திருமும்மணிக் கோவை 118
ஆளுடைய பிள்ளையார்
திருவந்தாதி 118
ஆறகழூர் மகதேசன் 171

## இ

இடைச் செருகல்கள் 71, 80, 186
இதிகாசங்கள்
பெருங்காப்பியங்களா? 44
இந்திய ராமாயணங்கள் 36
இந்திரகாளியம் 238
இந்திரன் 175
இந்து கலாசார அம்சங்கள் 69
இயேசு காவியம் 36
இரட்சணிய யாத்திரிகம் 36
இரண்டாம் இராசராசனின்
மெய்க்கீர்த்தி 167
இரண்டாம் குலோத்துங்கன் 80
இரண்டாம் நக்கீர
தேவநாயனார் 101
இரணியன் கதை 77

இரணிய வதைப் பரணி 152
இராகவையங்கார், ரா. 191, 223
இராசகோபாலார்யன் 191
இராசசிம்ம பல்லவன் 234
இராசராச விசயம் 165
இராசராசனுலா 129
இராசராசேசுவர நாடகம் 166
இராமகாதை 34
இராமசரிதம் 27, 76
இராமன் திருமாலின் அவதாரம் 76
இராமானுச நூற்றந்தாதி 143
இராமாநுசர் 7
இராமாநுசர் தனியன்கள் 121
இராமாநுசர் தாலாட்டு 147
இராமானுசார்ய திவ்ய சரிதை 121
இராமாயண வெண்பா 260
இராவண காவியம் 35
இராஜராஜ விஜயம் 7
இருபா இருபஃது 160
இலக்கண உரைகள் 59-62, 247-266
இலக்கணக் கொத்து 241
இலக்கண நூல்கள் 53-57, 223-246
இலக்கிய உரைகள் 58-60, 173-222
இலக்கியக் குடியேற்றம் 37
இலக்கியப் பாரம்பரியம் 28
இலங்கைத் தமிழ்ச் சாசனங்கள் 69
இலங்கைத் தமிழிலக்கியம் 70
இலங்கை மன்னர்கள் 8
இலட்டுகம் 268
இளங்கோவடிகள் 26
இளம்பூரண அடிகள் 253
இளம்பூரணப் பொருளதிகாரப் பதிப்புகள் 255
இளம்புரணர் 7
இளம்பூரணர் உரை 253, 254
இளம்பூரணரின் பாடம் 254
இறையனார் களவியல் 53

ஈ

ஈசுவர முனிதனியன் 108
ஈடு - பெயர்க்கரணம் 199-200

உ

உசிதக் கோட்படு 259
உண்மை விளக்கம் 160
உத்தர காண்டம் 130
உத்தர மாபுராணம் 49, 94
உதயண குமார காவியம் 29
உபதேச ரத்தின மாலை 197
உபேந்திராசாரியர் 272
உமாபதி சிவாசாரியார் 39
உய்யக் கொண்டார் தனியன் 107
உய்யவந்த தேவநாயனார் 45
உரிச்சொல் 267
உரைச் சூத்திரக் காரிகை 252
உரைப்பாயிரம் 208, 211
உரையாசிரியர் 253
உரைவேந்தர் 198
உலகாரியர் 198
உள்ள முடையான் சோதிட நூல் 276

எ

எட்டுத்தொகை உரைகள் 188
எதிர்த் தாக்கக் கூறுகள் 37
எதிர்நூல் 35, 132
எம்பார் தனியன் 145
எழுத்துப் பெயர்ப்புக் கோட்பாடு 242
எழுவகைப் பருவ ஆடவர் 226
ஏரெழுபது 140

ஐ

ஐங்குறுநூறு - பழைய உரை 189
ஐஞ்சிறு காப்பியங்கள் 24, 86
ஐந்திணைக்குரிய பெயர்க்காரணம் 192
ஐந்திணைக் கோவை 149
ஐந்திலக்கண நூல்கள் 56-57

ஐந்திலக்கணம் 244, 257
ஐந்திலக்கண மரபு 230
ஐம்பெருங்காப்பியம் 24, 33
ஐயர் 268

ஒ

ஒக்கை காவலன் 207
ஒட்டக் கூத்தர் 9
ஒட்டக் கூத்தர் பிரபந்தங்கள் 126-132
ஒன்பதாம் திருமுறைப் பாடல்கள் 96
ஓவிய நூல் 274

க

கடிய நன்னியார் 263
கண்டராதித்தர் பதிகம் 98-99
கண்டன் அலங்காரம் 137
கண்டன் கோவை 138
கண்டன நயம் / நாகரிகம் 266
கணிகண்ணன் பாடல் 236
கணித நூல் 272
கபிலதேவ நாயனார் பிரபந்தங்கள் 103
கம்பநாட்டாழ்வார் தனியன்கள் 147
கம்பராமாயண ஆய்வுகள் 35
கம்பராமாயணச் செல்வாக்கு 36
கம்பராமாயணப் பதிப்புகள் 35
கம்பராமயணம் 33, 76-79
கம்பரின் புதுமை 34
கம்பரின் மொழியாளுமை 79
கம்பன் கழகங்கள் 35
கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி 100
கருத்து வரலாறு 64
கருவூர்த் தேவர் திருவிசைப்பா 115
கல்லாடதேவர் பிரபந்தம் 104
கல்லாடம் 111-112
கல்லாடர் 264
கல்வி 21
கல்வெட்டு இலக்கியங்கள் 52, 163-172
கல்வெட்டு உரைநடை 169
கலாவியல் 223
கலிங்கத்துப் பரணி 123-126
கலிங்கப் பரணி 128
கவிதையியல் 63, 235
கவிராசமாணிக்கம் 235
களப்பிரத் தன்மை 46
களவியற் காரிகை உரை 150
கன்னர தேவன் 2
கனா நூல் 274

காங்கேயன் பிள்ளைத் தமிழ் 170
காந்தி மகான் கதை 36
காப்பிய உத்திகள் 31
காப்பியங்களின் பாடுபொருள் 39-41
காப்பியச் சிறப்புகள் 35
காப்பியப் பண்புகள் 32
காப்பியம் 24-49
காப்பிய வீரம் 30
கார் எட்டு 102
காரி இரத்தின கவிராயர் 220
காரிகை குளத்தூர் 227
காரைக்கால் அம்மையார் 42
காலிங்கர்-குறள் உரை 203-205
காவ்யாலங்கார சூடாமணி 235
காவியாதரிசம் 54, 234

கிடாம்பி ஆச்சான் தனியன் 145
கிரந்தம் 193
கிருஷ்ணாவதார நிகழ்ச்சிகள் 76
கிரேக்கக் கோட்பாடு 44
கிளையிலக்கணங்கள் 63
கீமாயணம் 35

குண்டலகேசி 32, 85-86
குணசாகரர் 229, 249
குணவீர பண்டிதர் 10, 190, 237
குணாட்டியர் 28
குந்தவையார் 5
குமார குலோத்துங்கன் 149
குருகைக் காவலப்பன் தனியன் 108
குருகைப்பிரான் பிள்ளான் தனியன் 144

குருபரம்பரா பிரபாவம் 161
குலோத்துங்க சோழனுலா 129
குலோத்துங்க சோழன் கோவை 149
குலோத்துங்க சோழன் சரிதை 167
குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ் 127
குவலையானந்தம் 233, 234
குறிஞ்சிப் பாட்டு 232

கூட்டுத் தலைமை 44, 83
கூடல் சங்கமத்துப் பரணி 7, 123
கூரத்தாழ்வார் தனியன் 144

கொங்குச் சோழர் 8
கொச்சைத் தேவர் 101
கொசு 268
கொப்பத்துப் பரணி 7, 122
கொன்றை வேந்தன் 133

கோப்பெருஞ்சிங்கன் 171
கோப்பெருஞ்சோழன் 153
கோபப் பிரசாதம் 101
கோயிலந்தாதி 150
கோயில் திருப்பண்ணியர் விருத்தம் 117
கோயில் நான்மணி மாலை 106
கோனேரி தாஸ்யை 201

கௌசிக முனிவர் 275
கௌடல்யரின் பொருள் நூல் 217

ச

சகலாகம பண்டிதர் 158
சகுன சாத்திரம் 272
சங்கர நமச்சிவாயர் 241
சங்கர நாராயணர் 248
சங்கரரின் அத்வைதம் 158
சடகோபரந்தாதி 140
சடையப்ப வள்ளல் 77
சத்திமுற்றப் புலவர் 152
சந்தான பரம்பரை 154
சந்திர வாணன் 150
சந்திரன் சுவர்க்கி 90
சந்திராலோகம் 234
சம்பந்தர் 42
சமண இலக்கியங்கள் 141-142
சமணக் கோயில்கள் 22
சமயப்பொறை 248, 250, 257
சமஸ்கிருத இலக்கணக் கூறுகள் 54
சமஸ்கிருதம் 65
சமஸ்கிருதம் உயர்ந்தோர் மொழி 22
சமுதாய அகழ்வாய்வு 239
சமுதாய ஆவணம் 35
சமுதாய ஒருமைப்பாடு 83
சமுதாயக் காரணிகள் 35
சமுதாயத்தின் மேல்தட்டு 21
சமுதாய விஷம் 275
சமூகவியல் ஆய்வாளர்கள் 55
சயங்கொண்டார் 9, 123
சரஸ்வதி அந்தாதி 138
சரஸ்வதி பண்டாரம் 14
சனகாபுரம் 240

சாங்கியம் 217
சாட்விக் 28
சாதிகள் 22
சாதிகளின் முறைவைப்பு 248
சாதிப் பிரிவுகள் 275
சாதியுணர்வு 83
சாதிவேறுபாடுகள் 248
சாமிநாதையர், உ.வே. 219
சாமுத்திர சாத்திரம் 272
சாரசமுச்சயம் 49, 94
சாவகம் 258

சிங்களம் 258
சித்தத் சங்கரவா 233
சித்தாந்த நூல்கள் 7
சித்தராரூடம் 275
சித்திர மீமாம்சை 235
சிந்து இலக்கியம் 170
சிரவண பெள்குளம் 73
சிராமலை அந்தாதி 163

சிருங்காரப் பிரகாசம் 209
சிலப்பதிகார அரும்பதவுரை 177-179
சிவஞான சித்தியார் 158-159
சிவஞான சுவாமிகள் 157
சிவஞான போதம் 158
சிவஞான முனிவர் 241
சிவதீட்சை 21
சிவபக்த விலாசம் 66
சிவபெருமான் திருவந்தாதி 103, 104
சிவபெருமான் திருஇரட்டை மணிமாலை 103
சிவனின் 64 திருவிளையாடல் 94
சிற்றட்டகம் 109
சிற்றிலக்கியங்கள் 49, 96-153
சிற்றிலக்கிய வகைகள் 50
சிறுகாப்பியங்கள் 85-95
சிறுகாப்பியம் 24
சின்னமனூர்ச் செப்பேடு 27
சின்னூல் 190, 238
சினேந்திர மாலை 272

சீயகங்கன் 240
சீராமப் பிள்ளை தனியன் 145
சீவகசிந்தாமணி 71-72
சீனிவாச கவி 66

சுக்கர நீதி 217
சுந்தர மூர்த்தி நாயனார் 38, 42
சுப்பராயச் செட்டியார் 100
சுபக்கம் 159

சூதாடலின் தீமைகள் 91
சூளாமணி 73-75

செங்கண் நெடியான் சரிதம் 73
செந்தமிழுக்கோர் ஆதாரமன்னவன் 149
செம்பியன் மாதேவியார் 5
செய்யுளியலுடையார் 263
செருக்கள வஞ்சி 122
செல்வாக்குக் கோட்பாடு 36

சேக்கிழார் 10
சேக்கிழார் பிள்ளைத்தமிழ் 40
சேக்கிழார் புராணம் 39
சேதிராயர் திருவிசைப்பா 115
சேந்தனார் பதிகங்கள் 97
சேனாவரையர் 264, 265, 266
சேனாவரையரின் பண்பு 266

சைவ சித்தாந்த நூல்கள் 154
சைவ மடங்கள் 15

சொக்கப்ப நாவலர் 150
சொட்டை நம்பிகள் தனியன் 121

சோதிட நூல்கள் 272
சோதிடம் 248
சோமாசியாண்டான் தனியன்கள் 146
சோழ அரசர் மரபுவழிப் பட்டியல் 16-17
சோழர் கால வரிப் பெயர்கள் 22
சோழர் குடிவழி அரசர் பட்டியல் 18
சோனகம் 258

ஞ

ஞானசம்பந்தன், அ.ச. 39
ஞான சமுத்திரம் 14
ஞானசாரம் 147
ஞானாமிர்தம் 156

த

தக்க யாகப் பரணி 129-130
தக்கை ராமாயணம் 36
தகடூர் அதியன் ராஜ ராஜ அதிகமான் 171
தகடூர் யாத்திரை 25
தச்ச நூல் 257
தசரூபகம் 180
தஞ்சாக்கூர் 150
தஞ்சைவாணன் கோவை 149, 246
தண்டமிழ்ச் சிந்தாமணி 149

தண்டியலங்கார உதாரணப் பாடல்கள் 236
தண்டியலங்காரம் 233-237
தத்துவ நூல்கள் 51-52, 154-162
தமிழ்ச் சங்கத்தார் 69
தமிழ்ச் சாசனங்கள் 52
தமிழ் நாவலர் சரிதை 131
தமிழ் நெறி விளக்கம் 53
தமிழ்ப் பிரபந்தங்கள் ஐம்பத்தாறு 239
தமிழ்ப் பிராமி 69
தமிழ் வணிகக் கணம் 70
தமிழகத்தில் போசளர்கள் 13
தமிழாராய்ச்சி 34
தமிழிலக்கிய வரலாற்றின் நடுப்பகுதி 24
தமிழுக்குக் கதி 33
தமிழுக்கு வடசொல்லால் விளக்கம் 178
தருக்கம் 248
தருக்கவியல் 265
தல வரலாற்றுக் களஞ்சியம் 42
தழுவல், மொழிபெயர்ப்பு 269
தனஞ்சய கவி 180

தாரணை நூல் 260
தாரா புரம் 6

திணை நிலைப் பாடல்கள் 25
திணைமயக்கம் 74
திராவிட வேதம் 162
திருஈங்கோய் மலை எழுபது 102
திரு ஏகம்பமுடையார் திருஅந்தாதி 106
திருக்கச்சி நம்பி தனியன்கள் 120
திருக்கண்ணப்ப தேவர் திருமறம் 103, 104
திருக்கண்ண மங்கை ஆண்டான் தனியன் 109
திருக்கழுமல மும்மணிக் கோவை 106
திருக்களிற்றுப்படியார் 45, 155
திருக்குருகைப் பிரான் பிள்ளான் 193
திருக்குலத்தார் 83
திருக்குறள் பதின்மர் உரை 173
திருக்குறளை விளக்க வடமொழிக் கதைகள் 182
திருக்கோவையார் உரை 192
திருச்சிற்றம்பலக் கோவையார் 149
திருஞான சம்பந்தர் 75
திருத்தக்க தேவர் 71
திருத்தொண்டத் தொகை 3, 38
திருத்தொண்டர் திருவந்தாதி 38, 117
திருத்தொண்டர் புராணம் 80
திருநறையூர் அரையர் தனியன்கள் 146
திருநாராயண பட்டன் 167
திருநாரையூர் விநாயகர் திருஇரட்டை மணிமாலை 117
திருநாவுக்கரசு தேவர் ஏகாதச மாலை 119
திருப்பாவை ஈராயிரப்படி 195
திருப்புகலூர் அந்தாதி 136
திருப்புளியங்குடி 244
திருமலை நம்பி தனியன் 121
திருமால் நெடுஞ்சேந்தன் 73
திருமாலின் அவதாரம் 21
திருமாளிகைத் தேவர் பதிகங்கள் 96
திருமுத்தமிழ் 112
திருமுருகாற்றுப் படை உரைக்கொத்து 222
திருமுருகாற்றுப்படை- பரிமேலழகர் உரை 222
திருமுனைப் பாடியார் 148
திருவலஞ்சுழி மும்மணிக் கோவை 102
திருவள்ளுவ மாலை 113-114, 175
திருவாய்மொழி ஆறாயிரப்படி 193
திருவாய்மொழி இருபத்து நாலாயிரப்படி 196-197
திருவாய்மொழி ஈடு 198-200
திருவாய்மொழி ஒன்பதினாயிரப்படி 195
திருவாய்மொழி முப்பத்தாறயிரப்படி 198-200

திருவாய்மொழி வாசக
மாலை 201
திருவாய்மொழி
வியாக்கியானங்கள் 189
திருவாலி அமுதனார்
பதிகங்கள் 98
திரு.வி.க. 39
திருவிசைப்பா 96
திருவிடை மருதூர் மும்மணிக்
கோவை 105
திருவியலூர் உய்யவந்த தேவர்
154
திருவிளையாடல் 48
திருவுந்தியார் 154
திருவெழுகூற்றிருக்கை 100
திருவொற்றியூர் ஒருபா
ஒருபஃது 107
திரையக் காணம் 273
திரைலோக்ய சுந்தரம் 115
தில்லை அந்தாதி 151
தில்லை உலா 135-136
திவாகர நிகண்டு 267
திவாகரம் 64
திவாகர முனிவர் 64
திறனாய்வாளரின் பணி 212
தீபங்குடிப் பத்து 142

துர்வி நீதன் 28
துலாபாரம் ஏறுதல் 15
துலாபாரம் செய்த
பாண்டியன் 172
துளுநாட்டு மன்னர் 8
தூமாண் தமிழின் கிழவன் 73
தெய்வச் சிலையார் 264
தெய்வசிகாமணிக்
கவுண்டர் 222
தெலுங்கச் சோழன் விசயகண்ட
கோபாலன் 208
தெலுங்கு 258
தெள்ளாறெறிந்த நந்திவர்மன் 3
தெற்காசிய இராமாயணங்கள் 36
தென்புல வழக்கு வான்மீகம் 37
தேவரடியார்கள் 6
தேன் உறை தமிழ் 112
தொகைப் பெயர் இலக்கணம்
221
தொண்டர் அடிப்பொடி 41
தொண்டை மண்டல சதகம்
149, 174
தொல்காப்பிய உரைகள் 62
தொல்காப்பிய மரபிலிருந்து
விலகுதல் 244
தொல்காப்பியரின்
கோட்பாடு 236
தொன்மக் கதைகள் 186
தோசை 268
தோலாமொழித் தேவர் 73

ந

நக்கீர தேவ நாயனார்
பிரபந்தங்கள் 100
நக்கீரர் 248
நகுஷன் 175
நச்சினார்க்கினியர் 253
நஞ்சீயர் 195
நம்பகத் தன்மை 254
நம்பி திருவிளையாடல்
45, 47-49, 93-95
நம்பிள்ளை ஈடு 199
நம்பியகப் பொருள் 246
நம்பியகப் பொருளின்
புதுமைகள் 244
நம்பியாண்டார் நம்பிகள் 6, 38
நம்பியாண்டார் நம்பி
பிரபந்தங்கள் 116-119
நம்பூர் வரதர் 198
நரலோக வீரன் 9, 168
நல்வழி 134-135
நளவெண்பா, 46, 89-92
நளோபாக்கியானம் 90
நறையூர் அந்தாதி 151
நன்னூல் 240-243
நன்னூல் பாயிரம் 240

நன்னூலாரின் திணைக்கோட்பாடு 242
நன்னூலாரின் மொழியியல் அக்கறை 242
நன்னூலின் பெருமை 241

நாடகக் காப்பியம் 82
நாடக நிருத்த மாராயர்கள் 6
நாராயண சமயத்தோர் 268
நாராயண பட்டாதித்தன் 165
நாரைவிடு தூது 152-153
நால்வகைச் சாதிகள் 239
நாலாயிரக் கோவை 131
நாலாயிர திவ்வியப் பிரபந்த தனியன்கள் 107-109, 120-121
நாற்கவியின் சொற்பதம் தேர்பவன் 149
நாற்கவி ராச நம்பி 244
நான்காம் தமிழ்ச் சங்கம் 33
நானில வருணனை 74,87
நிகண்டுகள் 63-64

நிரல்நிறை 248
நில நூல் 272
நீலகேசி 32, 86, 87
நீலகேசித் தெருட்டு 86
நீலங்கன் 211

நூற்றெட்டுத் திருப்பதிக் கோவை 109

நெசவு 257
நெஞ்சம் களிக்கும் தமிழ் 112
நேமிநாதம் 190, 237
நைடதம் 47

ப

பக்தி இயக்கம் 27
பக்தி இலக்கியம் 38
பக்திக் காப்பியம் 39
பகவத் கீதை 160
பகவத் கீதை வெண்பா 161
பஞ்ச தந்திரம் 26
பஞ்சமப் பண் 98, 99
பஞ்சவன் பிரம்மாதிராயன் 14
பட்டினத்தடிகள் நூல்கள் 105
படி 193
பண்பாட்டு வரலாறு 64
பத்தாவது சுவை 40
பதவியா 70
பதிற்றுப் பத்து-பழைய உரை 190
பதின்மர் உரை 59
பதினோராம் திருமுறை 99
பப்பரம் 258
பயணங்கள் 186
பரஞ்சோதி திருவிளையாடல் 95
பரஞ்சோதி முனிவர் 48
பரணதேவ நாயனார் பிரபந்தம் 104
பரணி இலக்கியம் 124
பரபக்கம் 159
பரமார்த்த தரிசனம் 160
பராசர பட்டர் தனியன்கள் 144
பரிப்பெருமாள்-குறள்உரை 179-183
பரிமேலழகர்-குறள் உரை 205-218
பரிமேலழகர் நுண்பொருள் மாலை 220
பரிமேலழகர்-பரிபாடல் உரை 218-221
பரிமேலழகரின் உரைநெறிகள் 211-217
பரிமேலழகரையர் 206
பரிமேலழகியார் 206
பல் காப்பியனார் 263
பல் காயனார் 263
பல்லவர்களின் ஆட்சிமொழி 3
பவணந்தி முனிவர் 240
பழைய அவிழ் 97
பழைய உரைகள் 59
பழையாறை 152
பன்மொழிச் சூழல் 54
பன்னிரு படலத் தோற்றம் 255
பன்னிரு படலம் 263
பன்னிரு பாட்டில் 223-226

பாக்களுக்குரிய சாதி 239
பாகவத சேவையே சிறந்தது 148
பாகவதம் 48
பாட்டியல் 223
பாண்டவர் சரிதை 27
பாண்டிக் கோவை 149
பாண்டியர் குடிவழி அரசர் பட்டியல் 18-19
பாம்பின் மலர் மணம் 275
பாம்பு வகைகள் 275
பாமகர் 235, 236
பாரத வெண்பா 260
பாலி 65
பாவனைத்தும் கோதே பிரித்தெறி கோமான் 149
பாவிகப் பண்பு 43
பாவியல் 223
பாளி மொழி 70
பிங்கலந்தை 267
பிங்கல நிகண்டு 267
பிங்கல முனி 267
பிசிராந்தையார் 153
பிம்பிசாரக் கதை 25
பிரபந்த இலக்கணம் 225
பிரபந்தங்கள் 49
பிரம்ம சூத்திரம் 160
பிரமேய சாரம் 147
பிரயோக விவேகம் 233
பிராகிருதம் 65, 250
பிருகத் கதா 28
பிழையான இலக்கண வரலாறு 245
பிள்ளான் ரகசியம் 144
பிள்ளை உலகாரியர் 52
பிள்ளை உறங்காவில்லி தாசரின் பாடல் 146
பிள்ளை லோகஞ்சீயர் 147
பிற்காலப் பாண்டியர் 19-20
பிற்சேர்க்கை 186
பிறதுறை நூல்கள் 66-67, 272
பின்பழகிய பெருமாள் ஜீயர் 161, 201
புகழேந்தி 89
புட்பதந்தன் 93
புத்தமித்திரர் 230, 257
புத்தன் இராச சிங்கன் 164
புருடோத்தம நம்பி திருவிசைப்பா 114
புருஷோத்தம நாயடு 200
புலனெறி வழக்கு 268
புவனேக வீரன் 15
புறத்திரட்டு 85
புறநானூற்றுப் பழைய உரை 183
புறப்பொருள் வெண்பா மாலை 53
பூங்கோயில் நம்பி 166
பூந்துருத்தி நம்பி காடநம்பி திருவிசைப்பா 114
பூரிகை 268

பெரிய புராணம் 38-45, 80-83

பெரியமுப்பழம் 260
பெரியவாச்சான்பிள்ளை 196-198

பெருங்கதை 25
பெருங்கதையின் செல்வாக்கு 72
பெருங்காப்பியம் 24
பெருந்தமிழ் அமுது 112
பெருந்தேவ பாணி 101
பெருந்தேவனார் 232, 257
பெருந்தொகை 11, 208, 219
பெரும்பொருள் விளக்கம் 109-110
பேராசிரியர் 261-263
பைசாசம் 65
பொய்கையார் 248
பொய்யாமொழிப் புலவர் 149
பொருட்குற்றமே பெருங்குற்றம் 259
பொருண்மை வேறுபாடு 228
பொருள்கோள் ஏழு 260
பொல்லாப் பிள்ளையார் 158
பொன்னவன் 274

போசராசன் 209
போசளர்கள் 8
போர் வஞ்சி 170

போர் வீரம் 30
போலியுரை 266
போற்றிக் கலிவெண்பா 101
போற்றிப் பாடல்கள் 25
பௌத்தக் காப்பியம் 85
பௌத்த கலாசார அம்சங்கள் 69
பௌரா 28

ம

மகடூஉ முன்னிலை 228
மகாபாரதத் தலைவன் யார் 44
மகாபுராணம் 71
மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை 100
மணக்கால் நம்பி தனியன் 107
மணக்குடவர் உரை 173-176
மணக்குடவரின் உரை இயல்புகள் 174
மண நூல் 71
மணவாள மாமுனி 199
மணவிற் கூத்தன் காலிங்கராயன் 11
மணிப் பிரவாளம் 60, 193-194
மதுரைத் திருவிளையாடல் 48
மயிலை நாதர் 24, 33, 240
மரபு வேறுபாடு 228
மருட்பா 248
மழவை எழுபது 151
மள்ளுவ நாடு 90
மற்றொன்று விரித்தல் 251
மறைந்து போன தமிழ் நூல்கள் 67, 277-279
மனவாசகம் கடந்தார் 160
மாணிக்க வாசகர் 4
மாணிக்க வாசகரைப் பாடாதது ஏன் 45
மார்க்கண்டேயன் 175
மாறனலங்காரம் 233, 234
மில்டன் 36

முத்து வீரியம் 234
முதல் நினைப்புக் காரிகை 252
முதல் மொழிப் பொருத்தங்கள் 239
முதலிகள் 162
முதலியாண்டான் தனியன் 145
முதற்குலோத்துங்கன் 9
முனிச் சந்திரன் 87
மூத்த நாயனார் திருஇரட்டை மணிமாலை 103
மூதுரை 134
மூலபாட ஆய்வு 179
மூலபாட ஆராய்ச்சி 183
மூலபாடத் திறனாய்வு 61
மூலபாடப் பிழைகள் 184
மூல வான்மீகம் 37
மூவருலா 128
மூவாயிரவர் 136

மெய்க்கீர்த்திகள் 164
மெய்கண்ட சாத்திரங்கள் 154
மெய்கண்டார் 158
மேற்கணக்கு, கீழ்க்கணக்கு 225
மொழிபெயர்ப்பு 26, 64
மொழியாக்கப் படைப்பு 34
மொழியாளுமை 262
மொழியியல் 180

ய

யசோதர காவியம் 45, 92-93
யாப்பருங்கலக் காரிகை 6, 228-229
யாப்பருங்கலக் காரிகை உரைக் குழப்பங்கள் 253
யாப்பருங்கலக் காரிகை (பாட நுண்பதிப்பு) 252
யாப்பருங்கலக் காரிகை பாட பேதங்கள் 253
யாப்பருங்கலக் காரிகையுரை 249
யாப்பருங்கலம் 6, 227-228
யாப்பருங்கலம்-காரிகை வேறுபாடு 227-228
யாப்பருங்கல விருத்தியுரை 247
யாப்பியல் மரபுகள் 54

ரீமக் 28
லெவின் 28

வ

வச்சணந்தி மாலை 237-239
வச்சத் தொள்ளாயிரம் 137-138
வடக்குத் திருவீதிப் பிள்ளை 198
வடநூன் முறைமை மறுப்பு 217
வடபுல வழக்கு வான்மீகம் 37
வடமொழி 250
வடமொழித் தண்டியார் 235
வடமொழிப் பயிற்சி 52
வடமொழிப் பயிற்சி மிக்கவர் 182
வடுகு 258
வண்துவரைப் பெருமாள் 206
வரலாற்றுக் களஞ்சியம் 81
வரலாற்றுக் காப்பியம் 83
வரலாற்றுச் சான்றுகள் 41
வரலாற்றுப் பெட்டகம் 42
வரலாற்று மூலங்கள் 41
வரலாற்று மொழியியல் 179
வ.வே.சு. ஐயர் 36
வழக்கதிகாரம் 259
வள்ளுவப் பாக்கம் 170
வளையாபதி 32, 88-89
வஜ்ரநந்தி மாலை 238
வாகீச முனிவர் 156
வாணகோவரையன் பொன் பரப்பினான் 171
வாதபுரி நாயகர் 4
வாதவூரர் சரிதம் 95
வாதிகேசரி 161
வாதிராச சூரி 92
வாமனர் 235, 236
வார்த்தா மாலை 201-203
வாஸ்து நூல்கள் 7
விக்கிரம சோழனுலா 129
விசயாலயன் 1
விசிஷ்டாத் வைதம் 121
வியாக்கியானங்கள் 60
வியக்கியான சக்கரவர்த்தி 198
வியாச பாரதம் 27
விவரண சதகம் 201
வின்னகோட பெத்தன 235
வீரசோழிய உரை 257
வீரசோழிய உரையியல்பு 258
வீரசோழியம் 7, 230-233, 247
வீரசோழியம் தோன்றிய சூழல் 232
வீரணுக்க விசயம் 166
வீர ராசேந்திரன் 230

வெண்பாப் பாட்டியல் 238
வெண்பாவிற் புகழேந்தி 47

வேங்கடசாமி நாட்டார், ந.மு. 250
வேங்கடசாமி, மயிலை. சீனி. 67
வேணாட்டடிகள் பதிகம் 99
வேம்பையர்கோன் நாராயணன் 163
வைசேடிகம் 217
வைணவ சிற்றிலக்கியங்கள் 142-147
வைணவ தரிசனம் 161
வைணவ வரலாற்று நூல் 161
வைணவ வரலாற்றுப் பெட்டகம் 162
வைணவன் யார் 196
வைத்தியநாத தேசிகர் 241
வைஸ்டைன் 28

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ண பாதர் 196
ஸ்ரீபட்டனார் 160
ஸ்ரீபுராணம் 71
ஸ்ரீ வீஜயன் 235
ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் 65
ஹோமர் 36
க்ஷத்திர சூடாமணி 71

❁❁❁❁❁

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை-600 113

## அண்மை வெளியீடுகள்

| | | ரூ. பை. |
|---|---|---|
| பேராசிரியர் எம்.எஸ். பூரணலிங்கம் பிள்ளை | .. | 30.00 |
| பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் | .. | 40.00 |
| பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும் | .. | 40.00 |
| தொல்காப்பியப் பொருளதிகாரம் (அகம்-புறம்) - ஆங்கில மொழிபெயர்ப்பு | .. | 50.00 |
| தமிழ் ஆய்வு இதழ்கள் | .. | 50.00 |
| வேதாத்திரியத்தில் சமூகவியல் இறையியல் சிந்தனைகள் | .. | 130.00 |
| மக்கள் நேயச் சுயமரியாதை | .. | 30.00 |
| ஏ.என். சிவராமனின் பத்திரிகை உலகம் | .. | 30.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 3 | .. | 150.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 2 | .. | 115.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 1 | .. | 130.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள் - அறிவியல்-தொழில் நுட்பம் II | .. | 100.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள் - அறிவியல் - தொழில் நுட்பம் I | .. | 90.00 |
| மௌனத்தின் அதிர்வுகளும் மொழியும் - பெண் | .. | 40.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851 - 2000 | .. | 180.00 |
| தமிழர் கண்ட தாவரவியல் | .. | 40.00 |
| இதழாளர் பெரியார் | .. | 160.00 |
| திராவிட இயக்க இதழ்கள் தொகுதி 1 | .. | 60.00 |
| சைவசித்தாந்தத்தில் ஆன்மக் கொள்கை | .. | 65.00 |
| பெரியபுராணம் - திருமுறைகளின் கவசம் | .. | 55.00 |
| காஞ்சிபுரம் கி.பி. 6-ஆம் நூற்றாண்டுக்கு முன் | .. | 65.00 |
| திருவாவடுதுறைப் புராணம் | .. | 250.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | .. | 30.00 |
| சித்தாந்தச் செல்வர் க. வெள்ளைவாரணனார் | .. | 25.00 |
| தமிழ் உரைநடையும் கிறித்தவர் பங்களிப்பும் | .. | 20.00 |
| திருக்குறளில் பொதுநிலை உத்திகள் | .. | 30.00 |
| தமிழிலக்கியத்தில் மனித நேயம் | .. | 115.00 |
| தமிழ்க்கடல் இராய சொக்கலிங்கம் | .. | 30.00 |
| தமிழில் பிறதுறைக் கோட்பாட்டாய்வுகள் வரலாறும் மதிப்பீடும் | .. | 25.00 |
| வ.உ.சி. ஒரு பன்முகப் பார்வை | .. | 25.00 |



**உலகத் தமிழிலக்கிய வரலாறு (கி.பி. 901 - கி.பி. 1300) .. 100.00**